OSHO

# பாதை சரியாக இருந்தால்...

## WHEN THE SHOE FITS



ஓஷோ

கவிதா வெளியீடு

# பாதை
# சரியாக இருந்தால்...

**ஓஷோ**

தமிழாக்கம்:

**வரலொட்டி ரெங்கசாமி**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

பாதை சரியாக இருந்தால்...

முதற் பதிப்பு : டிசம்பர், 2010

இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 2019

விலை : ₹ 400/-

**Paathai Sariyaaga Irunthaal**

Originally published in English as
**When The Shoe Fits**



| | | |
|---|---|---|
| Translated by | : | **Varalotti Rengasamy** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December, 2010 |
| Second Edition | : | December, 2019 |
| Pages | : | 448 |
| **Price** | : | **₹ 400/-** |
| ISBN | : | 978-81-8345-283-0 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**

8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044-42161657, Whatsapp : 91-7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com.
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

1. செருப்பு சரியாக இருந்தால்... ..... 4
2. ஆன்மாவின் அரண் ..... 61
3. தன் நிழலை வெறுத்தவன் ..... 102
4. அசைவற்ற நிலை... ..... 138
5. உங்களிடம் உள்ள சிறப்புகளை நம்பாதீர்கள்! ..... 180
6. கடற்பறவைக்காக சேர்ந்திசை ..... 229
7. இலையுதிர்காலத்து வெள்ளம் ..... 269
8. ஷுவாங் ட்சுவும் ஆமையும் ..... 309
9. இதை வார்த்தையில் சொல்ல முடியாது ..... 349
10. மனிதன் தாவோவில் பிறந்தவன் ..... 393

வரைகருவியால் வரைவதைவிட தன் கையால் இன்னும் துல்லியமான வட்டங்களை ஷுயியால் வரையமுடியும்.

அவன் விரல்கள் இயல்பான உருவங்களை எங்கிருந்தோ கொண்டு வந்து விடும்.

அவன் மனம் எப்போதும் பூரண அமைதி நிலையில் இருக்கும்.

செய்யும் வேலையைக் குறித்து அவன் மனதில் கவலை இருக்காது.

அவன் மனதை அமைதியாக்க அவனுக்கு எந்தப் பயிற்சியும் தேவைப்படவில்லை.

அவன் மனம் எளிமையாக இருந்தது. அது எந்தத் தடையையும் அறியவில்லை.

செருப்பு சரியாக இருந்துவிட்டால் கால்களை மறந்துவிடுவோம்.

பெல்ட் சரியாகப் பொருந்திவிட்டால் நாம் வயிறை மறந்துவிடுவோம்.

இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்துவிடுவோம்.

உந்துதல் இல்லை.

வற்புறுத்தல் இல்லை.

**தேவைகள் இல்லை.**

**ஈர்ப்புகள் இல்லை.**

**உங்கள் விவகாரங்கள் உங்கள் அதிகாரத்தில்**

**நீங்கள் ஒரு சுதந்திர மனிதர்.**

❑

**சுலபமாக இருப்பதே சரி.**

**சரியான இடத்திலிருந்து தொடங்குங்கள்.**

**எளிதாக இருப்பீர்கள்**

**தொடர்ந்து எளிமையாக இருங்கள்**

**நீங்கள் சரியாக இருப்பீர்கள்**

**எளிதாய் இருக்கச் சரியான வழி**

**சரியான வழியை மறப்பதும்**

**பயணம் சுலபம் என்பதை மறப்பதும்தான்.**

ஷுவாங் ட்சு எப்போதாவது அபூர்வமாகப் பூக்கும் குறிஞ்சி மலரைப் போன்றவர். ஏசுநாதர், புத்தர் போன்றவர்களைவிடவும் அபூர்வமானவர். காரணம், புத்தரும் ஏசுநாதரும் நாம் செய்ய வேண்டியதை வலியுறுத்தினார்கள். அதைச் செய் இதைச் செய் என்று செயலின் மேல் கவனம் செலுத்தினார்கள். ஆனால் ஷுவாங் ட்சுவோ செயலின்மையை வலியுறுத்துகிறார். செயலின் மூலம் பல விஷயங்களைச் சாதிக்கலாம் என்பது உண்மைதான். செயலின்மையின் மூலம் இன்னும் அதிகமாகச் சாதிக்கலாம்.

மனத் திட்பத்தின் மூலம் பல சாதனைகளைச் செய்யலாம். ஆனால் திடமின்மையின் மூலம் இன்னும் அதிகமாகச் சாதிக்கலாம். மனத் திட்பத்தின் மூலம் விளையும் சாதனைகள் உங்களுக்கு ஒரு பாரமாகப் போய்விடும். அது உங்களுக்குள் ஒரு முரணையும் ஓர் அழுத்தத்தையும் உண்டாக்கும்.. இதனால் நீங்கள் உங்கள் மனத்திட்பத்தை நீங்கள் எந்த நேரமும் இழக்கலாம். மனத் திட்பத்தை நீங்கள் தொடர்ந்து பராமரித்து வர

வேண்டும். அதற்கு அதிகமான சக்தி ?தேவைப்படும். இறுதியில் அதுவே உங்கள் சக்தியைச் சிதற அடித்து விரயமாக்கும்.

எனவே செயலினால் பெறப்படுவது எல்லாமே இறுதியில் உங்களுக்கு ஒரு சுமையாகப் போய்விடுகிறது. செயலின்மையால் பெறுவது ஒரு நாளும் சுமையாக இருக்காது. எது சுமையாக இல்லையோ அதுதான் நிரந்தரமாக இருக்கும். எது இயல்பாக வருகிறதோ அது தான் நாள்பட இருக்கும்.

நீங்கள் மெய்ப்பொருளை தெய்விக நிலையை, இருப்பு நிலையின் சாரத்தைப் பெற வேண்டுமென்றால் உங்களை நீங்களே இழக்க வேண்டும். அதை அடையும் முயற்சியே ஒரு தடைக்கல்லாகிவிடும். அதன்பின் உங்களை நீங்களே இழக்க முடியாது. உங்களை இழக்க முயற்சிப்பதும் ஒரு முட்டுக் கட்டையாகிவிடும்.

உங்களை இழக்க நீங்கள் எப்படி முயற்சி செய்ய முடியும்? எல்லா முயற்சியும் அகந்தையிலிருந்துதான் பிறக்கிறது. முயற்சியின் மூலமாகத்தான் அகந்தை வலுக்கிறது. அகந்தை ஒரு வியாதி. அதனால் எல்லா முயற்சியையும் கைவிட வேண்டும். நாம் செய்ய வேண்டிய்து ஒன்றும் இல்லை. இருப்புநிலையில் நம்மை நாமே பரிபூரணமாக இழந்துவிட வேண்டும்.

நாம் மீண்டும் குழந்தையாக வேண்டும். பிறந்து சிறிது நேரமே ஆன குழந்தைக்கு எது சரி எது தவறு என்று தெரியாது. அந்தக் குழந்தையால் எந்த வேறுபாட்டையும் உணர முடியாது. வேற்றுமைகள் உள்ளே நுழைந்துவிட்டால், எது சரி எது தவறு என்று உங்களுக்குத் தெரிந்துவிட்டால் உங்களை நோய் பீடித்துவிட்டது என்று பொருள். நீங்கள் உண்மையை விட்டு விலகி வெகுதூரம் சென்றிருப்பீர்கள்.

ஒரு குழந்தை இயல்பாக, முழுமையாக வாழ்கிறது. அது எந்த முயற்சியையும் மேற்கொள்வதில்லை. முயற்சி என்பது என்ன? செயல் என்பது என்ன? உங்களுக்குள் நடக்கும் ஒரு போராட்டமே முயற்சி. உங்களில் ஒரு பகுதி உங்களுக்குச் சாதகமாக இருக்கிறது. மற்றொரு பகுதி உங்களை எதிர்க்கிறது.

அதனால்தான் முயற்சி தேவைப்படுகிறது. முயற்சியால் நீங்கள் நிறைய சாதிக்கலாம். முயற்சியின் மூலம் நீங்கள் சாதனையாளரா ராகலாம்.

முயற்சி என்பது ஒருவகையான தாக்குதல். ஒரு வகையான வன்முறை. அது போட்டியின் சின்னம். ஆனால் அதெல்லாம் இந்த உலகத்தில்தான். மறுமையில் முயற்சியின் மூலம் ஒன்றுமே செய்ய முடியாது. எனவே முயற்சியிலிருந்து தங்கள் ஆன்மிகப் பயணத்தைத் தொடங்குபவர்கள் அதனை ஒரு நாள் கைவிட்டே யாக வேண்டும்.

புத்தர் ஆறு வருடங்கள் தொடர்ந்து முயன்று கொண் டிருந்தார். தியானம் செய்ய முயன்றார். மனதை ஒருமுகப்படுத்த முயன்றார். துறவியானார். ஒரு மனிதனால் என்னவெல்லாம் செய்யமுடியுமோ அதையெல்லாம் செய்தார். எதையும் விட்டு வைக்கவில்லை. தன் ஆன்மாவையே பணயம் வைத்து முயற்சி செய்தார். எவ்வளவு சிறப்பாக இருந்தாலும் அதுவும் முயற்சி தானே. அதனால்தான் அவர் இறுதியில் தோல்வியைத் தழுவினார்.

மறுமையில் அகந்தை தோற்பது போல் வேறு எதுவுமே தோற்பதில்லை. பொருள் உலகில் அகந்தை ஜெயிப்பது போல் வேறு எதுவுமே ஜெயிப்பதில்லை. அருள் உலகில் அகந்தையைப் போல் வேறு எதுவும் மோசமாகத் தோற்பதில்லை. அருள் உலகில் அதாவது உணர்வுகளின் உலகில் எல்லாமே மாறாக இருக்கும். அப்படித்தான் இருக்க வேண்டும். ஏனென்றால் அங்கே இருக்கும் பரிமாணங்கள் எல்லாம் இவ்வுலகப் பரிமாணங்களுக்கு நேர் எதிரானவை.

புத்தரைப் போல் யாருமே முழுமையாகத் தோற்றிருக்க முடியாது. ஆறு வருட முயற்சிக்குப் பின் அவர் உச்சகட்ட வெறுப் பில் இருந்தார். நம்பிக்கையை முற்றிலுமாக இழந்திருந்தார். அந்த நிலையில் எல்லா முயற்சிகளையும் கைவிட்டார்.

அவர் ஏற்கனவே இந்த உலகத்தைத் துறந்திருந்தார். தன் நாட்டையும் உறவையும் குடும்பத்தையும் துறந்திருந்தார். நாம் கண்ணால் பார்க்கும் உலகத்தில் உள்ள அனைத்தையும் அவர் துறந்திருந்தார்.

ஆறு வருட முயற்சிக்குப் பின் மறுமையோடு தொடர்புடைய அனைத்தையும் துறந்தார். அவர் ஒரு முழுமையான சூன்ய நிலையில் இருந்தார். அன்று இரவு அவர் நன்றாக உறங்கினார். அந்த மாதிரி ஒரு தூக்கத்தை அவர் அன்றுவரை அனுபவித்ததில்லல. ஏனென்றால் அந்தத் தூக்கத்தில் இம்மியளவுகூட அகந்தையில்லை. அந்த அமைதி வித்தியாசமாக இருந்தது அது முயற்சியால் விளைந்தது இல்லை.

அன்று அவர் தன் இருப்புநிலையின் மற்றொரு தன்மையைக் கண்டார். ஏனென்றால் அன்று அவருக்குக் கனவுகளே வரவில்லை.

முயற்சியில்லையென்றால் கனவுகளுக்கு அங்கு வேலையில்லை. முயற்சி இல்லாத நிலையில் எல்லாமே முழுமையாகத்தான் இருக்கிறது. அந்த நிலையில் கனவுகளுக்கு வேலையே இல்லை.

கனவு ஏன் வருகிறது? நாம் காலையில் எதை முடிக்காமல் விட்டோமோ அதை முடித்து வைக்கத்தான் கனவு வருகிறது. தொடங்கிய எதையும் முடித்துவிட நினைப்பது மனதின் இயல்பு. தொடங்கியது முடியவில்லை என்றால் மனம் ஒரு நிலையில் இல்லாமல் தவிக்கிறது. பல விஷயங்களில் நாம் முயற்சி செய்கிறோம். எல்லாமே முடியாமல் அரைகுறையாக நிற்கின்றன. அப்போது கனவுகள் தேவைப்படுகின்றன மனதில் ஆசையிருந்தால் நிச்சயமாகக் கனவு வரும். ஆசைப்படுவதும் கனவு காண்பதும் ஒன்றுதான். கனவின் வேறு ஒரு படிவம் ஆசை.

அன்று இரவு இனி செய்வதற்கு ஒன்றும் இல்லை என்ற நிலையில், இந்த உலகும் பயனில்லை அந்த உலகும் பயனில்லை என்ற நிலையில் புத்தருக்கு இயங்குவதற்கான தூண்டுதலே இல்லாமல் போய்விட்டது. போவதற்கு எந்த இடமும் இல்லை. அப்படியே ஒரு இடம் இருந்தாலும் யார் போவதாம்? புத்தரின் அன்றைய இரவுத் தூக்கம் சமாதிநிலைக்குச் சமமானது. அதுதான் ஜென் துறவிகள் போற்றும் சடோரி என்னும் ஞானோதயம். அதுதானொரு மனிதனின் ஆன்மிக வளர்ச்சியின் உச்சகட்டம்.

புத்தர் அன்று இரவு மலர்ந்தார். மறுநாள் காலை அவர் ஞானம் பெற்றார். கண்களைத் திறந்தார். வானத்தில் அப்போது மறைந்து கொண்டிருந்த கடைசி விண்மீனைப் பார்த்தார். அங்கே எல்லாம் இருந்தன. முதலில் இருந்தே எல்லாம் அங்கேயேதான் இருந்து வருகின்றன. புத்தர் வெகு முனைப்பாகத் தேடிக் கொண் டிருந்ததால் கண்ணுக்கு முன்னால் இருந்ததைக் கூட அவரால் சரியாகப் பார்க்கமுடியவில்லை. அவை எல்லாம் அங்கேயேதான் இருந்தன. என்றாலும் புத்தர் மனதில் ஆசையுடன் வருங்காலத்தை நோக்கிப் பயணித்துக் கொண்டிருந்ததால் கண் முன் இருப்ப வற்றைக் காணத் தவறிவிட்டார்.

அன்று இரவு அவரிடம் ஆசை இல்லை. எதையும் அடைய வேண்டும் என்ற லட்சியம் இல்லை. எங்கேயாவது போக வேண்டும் என்று அவர் நினைக்கவில்லை. போவதற்கு ஆளும் இல்லை. எல்லா முயற்சியும் நின்று போனது. திடீரென்று தன்னைப் பற்றிய ஒரு விழிப்புணர்வு அவருக்கு ஏற்பட்டது.

ஷுவாங் ட்சு சொல்கிறார். ''முதலில் இருந்தே முயலா தீர்கள்.'' அவர் சொல்வது சரிதான். ஏனென்றால் உங்களால் புத்தரைப் போல் முழுமையாக முயற்சி செய்ய முடியாது. முழுமையாக முயற்சி செய்யாவிட்டால் புத்த பகவானுக்கு வந்த விரக்தி பாவம் உங்களுக்கு வராது. அந்த விரக்தியின் உச்சத்தில் தான் உங்கள் முயற்சி தானாகவே நிற்கும். முயற்சி எப்போதுமே முழுமையற்ற ஒரு நிலையில்தான் இருக்கும்.

உங்கள் மனம் உங்களை சதா நச்சரித்துக் கொண்டே யிருக்கும். ''இன்னும் கொஞ்ச நேரம்தான் இன்னும் சிறிது தூரம்தான். ஏதோ ஒன்று நடக்கப் போகிறது. இன்னும் ஒரே ஒரு படிதான். லட்சியம் அருகில் இருக்கும் போது நீ என் விரக்தி யடைய வேண்டும். இன்னும் கொஞ்சம் முயற்சி இருந்தால் போதுமானது. நாளுக்கு நாள் லட்சியம் அருகில் வந்து கொண் டிருப்பது உனக்குத் தெரியவில்லையா என்ன?

நீங்கள் முழுமையாக முயலமாட்டீர்கள் என்பதால் நீங்கள் எந்தக்காலத்திலும் நம்பிக்கை இழக்கமாட்டீர்கள். இந்த அரை

வேக்காட்டு முயற்சியை நீங்கள் பல பிறவிகளில் தொடர்ந்து செய்யலாம். அதைத்தான் உங்கள் முந்தைய பிறவிகளில் செய்து

வந்திருக்கிறீர்கள். இதோ நீங்கள் என் முன்னால் இருப்பது உங்களுக்கு முதல் முறை அல்ல. ஞானம் பெற நீங்கள் செய்யும் முதல் முயற்சியல்ல இது. நீங்கள் ஏற்கனவே பல முறை முயற்சி செய்திருக்கிறீர்கள். பல லட்சம் முறை முயற்சி செய்திருக் கிறீர்கள்.

ஷுவாங் ட்சு சொல்கிறார். ''முதலில் இருந்தே முயலா தீர்கள்.'' முயற்சியைக் கைவிட்டேயாக வேண்டும். முதலில் கைவிடவில்லையென்றால் முடிவில் கைவிட்டேயாக வேண்டும். ஆனால் முடிவு அவ்வளவு சீக்கிரம் வந்துவிடாது.

உங்கள் முன்னால் இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று பரிபூரணமாக முயற்சி செய்யுங்கள். அப்படிச் செய்யும் போது புத்தருக்கு ஆனதைப் போல் ஒரு கட்டத்தில் உங்கள் மனதில் இருக்கும் நம்பிக்கையெல்லாம் சிதறடிக்கப்படும். ,முயற்சியால் எதையும் அடைய முடியாது என்பதை உணர்வீர்கள். மனதில் இருக்கும் நம்பிக்கையெல்லாம் போய்விடும். உங்கள் உணர் வின்மை நிலையில் கூட நம்பிக்கையின் சாயல் இருக்காது. 'இன்னும் கொஞ்சம் செய்தால் போதும். அடைந்துவிடலாம்; என்று உங்களை அந்த நம்பிக்கை தூண்டாது. முழுமையாக முயற்சி செய்யுங்கள். பின் நம்பிக்கை இழந்து அந்த முயற்சி தானாகவே இற்றுக் கீழே விழுந்துவிடும்.

இல்லாவிட்டால் முதலில் இருந்தே எந்த முயற்சியும் செய்யாதீர்கள். முயற்சியின் தன்மையைப் புரிந்து கொள்ளுங்கள். ஆனால் முயலாதீர்கள்.

முயற்சியினுள்ளே நுழைந்துவிட்டால் அது முழுமை பெறாமல் அதிலிருந்து திரும்பி வர முடியாது. தொடங்கிவிட்டால் அதை முடித்துவிட வேண்டும். அதுதான் மனதின் இயல்பு. இந்த இயல்பு விலங்குகளுக்கும் உண்டு. ஒரு கரும்பலகையில் ஒரு அரை வட்டத்தை வரையுங்கள். அதை ஒரு கொரில்லா பார்த்தால் அந்த வட்டத்தை அதன் பாணியில் முழுவட்டமாக்கிவிடும் - சாக்பீஸ் அருகே இருந்தால்

முழுமையில்லாத எதுவும் மனதிற்கு அழுத்தத்தைக் கொடுக்கிறது. நீங்கள் சிரிக்க விரும்புகிறீர்கள். ஆனால் சூழ்நிலை காரணமாக உங்களால் சிரிக்க முடியவில்லையென்றால் உங்களுக்கு மன அழுத்தம் உண்டாகிறது. அதே போல் அழ நினைக்கும் போது அழ முடியவில்லையென்றால் உங்களுக்கு மன அழுத்தம் உண்டாகிறது. உங்கள் கோபத்தைக் காட்ட முடியாமல் போனாலும் மன அழுத்தம் தோன்றுகிறது.

அதனால் தான் நீங்கள் வியாதியின் மொத்த உருவமாக நீங்கள் இருக்க்கிறீர்கள். உங்கள் வாழ்க்கையில் எதுவுமே முழுமையில்லாமல் இருக்கிறது. உங்கள் அழுகை, சிரிப்பு, கோபம், விருப்பு, வெறுப்பு, அன்பு; காதல் எதுவுமே முழுமை யாக இல்லை. நீங்கள் எதையும் முழுமையாகச் செய்யவில்லை. எல்லாவற்றிலும் விட்ட குறை தொட்டகுறை இருக்கிறது. உங்கள் மனதில் ஒரே சமயத்தில் பல விஷயங்கள் இருக்கின்றன. அதனால்தான் நீங்கள் இயல்பாக இல்லை. சுகமாக வாழவில்லை.

ஷுவாங் ட்சு சொல்கிறார்: ''தொடங்காமல் இருப்பதே நல்லது. தொடங்கிவிட்டால் அதை முடித்தாக வேண்டும் இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால் புலி வாலைப் பிடித்த கதையாகிவிடும்.''

அதனால்தான் நான் ''ஷுவாங் ட்சு எப்போதாவது அபூர்வமாகப் பூக்கும் குறிஞ்சி மலரைப் போன்றவர். ஏசுநாதர், புத்தர் போன்றவர்களைவிட அபூர்வமானவர்.'' என்று சொன் னேன். அவர் எந்த முயற்சியும் செய்யாமல் தன் புரிந்துணர் வாலேயே ஞானம் பெற்றார்.

ஷுவாங் ட்சு எந்த முறையையும் பின்பற்றவில்லை. எந்தத் தியானத்தையும் செய்யவில்லை. அவர் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்

''முயற்சி வீண் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.. நீங்கள் இந்த உலகத்தில் பிறக்க ஏதாவது முயற்சி செய்தீர்களா? பிறந்தபின் வளர்ந்தீர்கள். வளர்வதற்கு எந்த வகையில் முயன்றீர்கள்? நீங்கள் சுவாசிக்கிறீர்கள். அதற்கு ஏதாவது முயற்சி

செய்கிறீர்களா என்ன? எல்லாமே தானாக நடக்கிறது. பிறகு எதற்காகக் கவலைப் பட வேண்டும்? வாழ்க்கை ஒரு தெளிந்த நீரோடை போல் அதன் போக்கில் போகட்டும். எதையும் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதீர்கள். எந்தப் போராட்டமும் தேவையில்லை. எதிர்நீச்சல் போடவும் அவசியம் இல்லை. நீந்தக் கூடத் தேவையில்லை. நீரோடு சேர்ந்து அதன் போக்கி லேயே மிதந்து கொண்டு செல்லுங்கள். நீரோட்டம் உங்களை எங்கு கொண்டு செல்கிறதோ அங்கே செல்லுங்கள். வானில் நகர்ந்து கொண்டிருக்கும் ஒரு வெள்ளை மேகத்தைப் போல் இருங்கள். அதற்கு ஒரு இலக்கு கிடையாது. போக்கிடமும் கிடையாது. காலமெல்லாம் அது தன் போக்கில் மிதந்து கொண்டே இருக்கிறது. அந்த மிதத்தல்தான் உச்சகட்ட ஞானத்தின் மலர்ச்சி.''

ஷுவாங் ட்சுவின் சூத்திரங்களிற்குள் நுழைவதற்கு முன்னால் நாம் புரிந்து கொள்ள வேண்டியது இதுதான். எந்த நிலையிலும் இயல்பாக இருக்க வேண்டும். இயல்பிற்குப் புறம் பான எதையும் தவிர்க்க வேண்டும். இயற்கையே போதுமானது. அதை நீங்கள் எந்தக் காலத்திலும் மேம்படுத்த முடியாது. ஆனால் 'உங்கள் இயல்பு நிலையை மேம்படுத்தலாம் என்று உங்கள் அகந்தை சொல்கிறது. நம் இயல்பு நிலையை மேம்படுத்தும் முயற்சியில்தான் நாகரிகமும் கலாசாரமும் பிறந்தது. இயல்புநிலையை மேம்படுத்தும் முயற்சியே நாகரிகம். நாகரிகம் என்பது ஒரு வியாதி. நாகரிகமான மனிதன் ஆபத்தானவன்.

ஒரு முறை ஒரு ஐரோப்பிய வேட்டைக்காரர் ஆப்பிரிக்கா காட்டில் வழியைத் தொலைத்துவிட்டு அலைந்து கொண்டிருந்தார். அந்த நடுக்காட்டில் சில குடிசைகளைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தார். அந்த இடத்தில் ஒரு கிராமம் இருக்கும் என்று அவர் கேள்விப்பட்டதேயில்லை. அந்த கிராமம் எந்த வரைபடத்திலும் இல்லை. அந்தக் கிராமத்தலைவனிடம் அவர் சொன்னார். ''என்ன பரிதாபம்! இப்படி நாகரிகம் இல்லாமல் இருக்கிறீர்களே!''

''நீங்கள் எங்களைக் கண்டுபிடித்துவிடுவீர்களோ என்று பயந்து கொண்டிருக்கிறோம். உங்கள் நாகரிகம் உள்ளே நுழையும்போது எங்கள் நிலமை பரிதாபகரமாக இருக்கும்.''..

இயற்கையை மேம்படுத்துகிறேன் பேர்வழி என்று நீங்கள் முயற்சி செய்யும் போது இயற்கை தொலைந்துவிடுகிறது. இயற்கையை மேம்படுத்துவது என்பது இருப்பு நிலையை மேம்படுத்துவதற்குச் சமம்.

மதங்கள் எல்லாமே இதைத்தான் செய்து கொண்டிருக் கின்றன. ஷுவாங் ட்சு இதனைக் கடுமையாக எதிர்க்கிறார். இயற்கையும் இயல்புநிலையும்தான் உச்ச நிலை என்பது அவர் கோட்பாடு. அந்த உச்சகட்ட இயல்பு நிலையை அவர் தாவோ என்று அழைக்கிறார். தாவோ என்றால் இயற்கையின் உச்சகட்ட நிலை என்று பொருள். அதை மேம்படுத்த முடியாது.

இயற்கையை மேம்படுத்தச் செய்யும் முயற்சியில் அதனை ஊனமாக்கிவிடுகிறோம். அப்படித்தான் ஒவ்வொரு குழந்தையை யும் மனதளவில் ஊனமாக்கிவிடுகிறோம்.

ஒவ்வொரு குழந்தையும் தாவோ நிலையில்தான் ஜனிக் கிறது. அதன் பின் நாம் சமுதாயம் நாகரிகம், ஒழுக்கம், மதம் முதலியவற்றால் அந்தக் குழந்தையை ஊனமாக்குகிறோம். அந்தக் குழந்தை உயிருடன் இருக்கிறது. ஆனால் அதனிடம் உயிர்ப்பு இல்லை.

ஒரு நான்கு வயதுச் சிறுமி தன் தோழியின் பிறந்த நாள் விழாவிற்குச் சென்றிருந்தாள்.. அவள் தன் தாயைப் பார்த்துக் கேட்டாள்: ''அம்மா நீ உயிருடன் இருந்தபோது இது போன்ற விழா நடனங்கள் கொண்டாட்டங்கள் எல்லாம் இருந்ததா?''

கலாசாரமும் நாகரிகமும் வளரும்போது மனிதன் பிணத்தைப் போல் ஆகிவிடுகிறான். வாழ்ந்து கொண்டிருக்கும்போதே முற்றிலும் இறந்த மனிதனைப் பார்க்க வேண்டுமானால் சன்னியாசி மடங்களுக்குச் செல்லுங்கள். அங்கே இருக்கும் துறவி களைப் பாருங்கள். தேவாலயங்களில் வாழும் பாதிரிமார்களைப் பாருங்கள். வேடிகன் நகரில் இருக்கும் போப்பாண்டவரைப் பாருங்கள். அவர்கள் உயிருடன் இல்லை. அவர்கள வாழ்க் கையைப் பார்த்துப் பயப்படுகிறார்கள். அதனால் வாழ்க்கையை வெளியேவிடாமல் உள்ளேயே அமுக்கி வைத்துவிட்டார்கள். அவர்கள் கல்லறைகளில்தான் வாழுகிறார்கள். நீங்கள் கல்லறை

களின் மேல் அழகான வர்ணங்கள் பூசலாம். பளிங்கினால் கல்லறைகள் செய்யலாம். என்ன செய்தால் என்ன? உள்ளே இருக்கும் மனிதன் செத்துவிட்டான் என்பதை உங்களால் மாற்ற முடியுமா என்ன?

ஒரு குடிகாரன் நகரின் கல்லறைப் பகுதி வழியாக நடந்து கொண்டிருந்தான். வெண்பளிங்கினால் ஆடம்பரமாகக் கட்டப்பட்ட ஒரு கல்லறையைப் பார்த்தான். அதன் மேல் எழுதப்பட்டிருந்த பெயரைப் படித்தான். ரோத்ஸ்சைல்டு என்ற யூத செல்வந்தரின் கல்லறை அது. சத்தம் போட்டுச் சிரித்தான் குடிகாரன். ''இந்த செல்வந்தர்களுக்கு வாழ்க்கையை எப்படி ரசிக்க வேண்டும் என்று நன்றாகத் தெரிந்திருக்கிறது. என்ன கலைநயம்! என்ன ஆடம்பரம்!''

கலாசாரம் உங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்று விடுகிறது. அது மெல்லக் கொல்லும் நஞ்சு. தவணை முறையில் நீங்கள் செய்து கொள்ளும் தற்கொலை.

ஷுவாங் ட்சு மற்றும் அவருடைய குரு லாவோ ட்சு இருவருமே நாகரிகத்தை எதிர்த்தார்கள். இயல்பு நிலையை ஆதரித்தார்கள். தூய்மையான நாகரிகம் கலக்காத இயல்பு நிலையை ஆதரித்தார்கள்.

மரங்கள் உங்களை விடச் சிறந்த நிலையில் இருக்கின்றன. பறவைகள், ஆற்றில் வாழும் மீன்கள் கூட உங்களைவிடச் சிறந்த நிலையில் இருக்கின்றன. ஏனென்றால் அவை துடிப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. இயற்கையின் இசைக்கு ஏற்ற வகையில் அவை நடனமாடிக் கொண்டிருக்கின்றன. உங்களுக்குத்தான் இயற்கை அடியோடு மறந்து போய்விட்டது. இயற்கையை வேரோடு பிடுங்கி வெளியே எறிந்து விட்டீர்கள்.

இவர்கள் இயற்கையை எப்படிச் சாடுகிறார்கள்? முதலில் பாலுணர்வைச் சாடுகிறார்கள். ஏனென்றால் இயற்கையின் சக்தி பாலுணர்விலிருந்து தோன்றியது.. பாலுணர்வின் சக்தி இயற்கை முழுவதும் வழிந்தோடிக் கொண்டிருக்கிறது. காதலின் சக்தி இயற்கையை முழுவதுமாக வியாபித்துக் கொண்டிருக்கிறது.

பறவைகள் பாடுகின்றன. மலர்கள் மலர்கின்றன. இவையெல்லாம் பாலுணர்வின் வெளிப்பாடுகள்தான். மலர்கள் பாலுணர்வின் சின்னங்கள். பறவைகளின் பாட்டில் பாட்டும் பாலுணர்வின் வெளிப்பாடே. தாவோ பாலுணர்வின் சக்தியன்றி வேறொன்றும் இல்லை. இயற்கை மொத்தமும் தன்னைத்தானே பெருக்கிக்கொண்டிருக்கிறது. தன்னைத்தானே ஆழமாகக் காதலிக்கிறது. அந்தக் காதலின் பரவச நிலைக்குள் அடிக்கடி சென்று இருப்புநிலையின் அடியாழத்தைத் தொடுகிறது.

இயற்கையை அழிக்க வேண்டும் என்று நினைத்தால் பாலுணர்வைச் சாடுங்கள். காதலைக் குறை சொல்லுங்கள். வாழ்க்கையைச் சுற்றி ஒழுக்கவிதிகளை உருவாக்குங்கள். அந்த ஒழுக்க விதிகள் பார்க்க அழகாக இருக்கலாம். என்றாலும் அவை பளிங்கினால் ஆன கல்லறைகளே. அந்தக் கல்லறைக்குள் அடைப்பட்டிருப்பது நீங்கள்தான். வயிறு முட்டக் குடித்துவிட்டு உங்கள் பக்கம் வரும் குடிகாரன் உங்களுக்கு 'வாழ்க்கையை ரசிக்கத் தெரிந்திருக்கிறது' என்று சொல்லிவிட்டுப் போகலாம்.

ஆனால் விழிப்புநிலையில் இருக்கும் யாரும் நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பதாகச் சொல்ல மாட்டார்கள். உங்கள் ஒழுக்க விதிகள் கூட ஒரு வகை மரணம்தான். நீங்கள் சாவதற்கு முன்பே சமுதாயம் உங்களைச் சாகடித்து விடுகிறது.

இந்தப் பின்னணியில் பார்த்தால் ஷுவாங் ட்சுவின் செய்தி மிகவும் ஆபத்தானது. புரட்சிகரமானது. காரணம் அவர் ''இயற்கையை அனுமதியுங்கள்'' என்று கூக்குரலிடுகிறார்.

இயற்கையை அதன் போக்கிற்கு விட்டால் போதும். அதன் இலக்கையோ லட்சியத்தையோ நிர்ணயம் செய்யாதீர்கள். இயற்கையின் நோக்கங்களையும் இலக்குகளையும் நிர்ணயம் செய்ய நீங்கள் யார்?

நீங்கள் இயற்கையின் மிகச் சிறிய பகுதி. இயற்கையின் பிரம்மாண்டத்திற்கு முன்னால் நீங்கள் ஒரு சிறிய அணு. அவ்வளவுதான். உங்கள் எண்ணப்படி மொத்த இயற்கையும் செயல்பட வேண்டும் என்று நினைப்பது என்ன நியாயம்?

ஷுவாங் ட்சுவின் செய்தி மதவாதிகளுக்கும். ஒழுக்கவாதி களுக்கும் மதத்தின் போர்வையில் ஒளிந்து கொண்டிருக்கும் ஆஷாட பூதிகளுக்கும் ஆபத்தானது.

ஏனென்றால் ஷுவாங் ட்சு எல்லாத் தடைகளையும் உடைத்தெறியுங்கள் என்று சொல்கிறார். இயற்கையை அதன் போக்கில் வெடித்துக்கொண்டு கிளம்ப அனுமதியுங்கள் என்று சொல்கிறார். அது ஆபத்தானது.

அந்தப் பெண் அப்போதுதான் செவிலியர் படிப்புப் படித்து விட்டு அந்த மருத்துவமனையில் வேலைக்குச் சேர்ந்திருந்தாள். செவிலியர்களின் தலைவி அவளுக்கு மருத்துவமனையைச் சுற்றிக் காட்டினாள். ''இது புற்று நோய்ப் பிரிவு'' ''இது காச நோய்ப் பிரிவு'' என்று ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்தாள். கடைசியில் ஒரு பெரிய அறைக்குள் வந்ததும் கிசுகிசுப்பான குரலில் சொன்னாள்.

''இந்த மருத்துவமனையிலேயே இதுதான் மிகவும் ஆபத் தான பிரிவு. கவனமாக இருக்க வேண்டும். மறந்து விடக்கூடாது. புரிகிறதா?''

புதிதாகச் சேர்ந்த பெண் சுற்றிலும் பார்த்தாள். எந்த ஆபத் தையும் அவள் பார்க்கவில்லை. ,

''புரியவில்லையே! புற்று நோய் அறையையும் காச நோய் அறையையும் விட்டுவிட்டு இதைப் போய் ஆபத்தான அறை என்று சொல்கிறீர்களே? இங்கே இருக்கும் நோயாளிகள் நன்றாகத்தானே இருக்கிறார்கள்?''

''ஆபத்தே அதில்தான் இருக்கிறது. இவர்கள் ஏறக்குறைய குணமாகிவிட்டவர்கள். அதனால்தான் ஆபத்தானவர்கள். ஆரோக்கியம் எப்போதும் ஆபத்தானது.''

பாதிரியார்களுக்கு ஆரோக்கியத்தைக் கண்டால் பயம். ஏனென்றால் அவர்கள் பார்வையில் ஆரோக்கியமாக இருப்பதே ஒருவகையான ஒழுக்கக் கேடுதான்.

இருபதாம் நூற்றாண்டில் இருந்த சிறந்த ஜெர்மன் சிந்தனையாளரைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள்.

அவர் பெயர் கெய்சர்லிங். அவர் பிரபலமானவர். அவர் ஒரு மதம் சார்ந்த தத்துவவாதி. அவர் தன்னுடைய டயரியில் எழுதியிருப்பதைப் பாருங்கள்.

''இருப்பதிலேயே மிகவும் ஒழுக்கக்கேடான விஷயம் ஆரோக்கியம்தான்.''

காரணம் உடல் நலம் சக்தியைக் குறிக்கும். சக்தி மகிழ்ச்சியைக் குறிக்கும். சக்தி தான் பரவச நிலை. சக்திதான் காதல். சக்திதான் பாலுணர்வு. இயல்பாக இருக்கும் எதுவுமே சக்தியின் வெளிப்பாடுதான். அந்த சக்தியை அழிக்கத்தான் மதவாதிகளும் ஒழுக்கவாதிகளும் முயன்று கொண்டிருக்கிறார்கள். பாலுணர்வின் உன்னதமான சக்தியை மங்கவைத்து அதைப் பூண்டோடு அழிக்கத்தான் எல்லாரும் சதித்திட்டம் தீட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

அதனால்தான் எல்லா மதங்களிலும் பல வகையான விரதங்கள் இருக்கின்றன. வழிந்து காட்டாற்று வெள்ளம் போல் ஓடிக் கொண்டிருக்கும் அந்தப் பாலுணர்வு சக்தியை ஒடுக்கத்தான் கட்டுப்பாடுகளும் விரதங்களும் வலியுறுத்தப்படுகின்றன.

மதவாதிகள் அனைவருமே ஆரோக்கியமாக இருப்பது ஆபத்தானது என்றுதான் சொல்கிறார்கள். நோயாளியாக வாழ்வதுதான் ஆன்மிக லட்சியம் என்பதே அவர்கள் கருத்து.

புரட்சிக்காரரான ஷுவாங் ட்சு சொல்வதைக் கேளுங்கள்:

''இயற்கை, சக்தி, அது கரைபுரண்டு ஓடும் போது மனதில் தோன்றும் பரவசம், இயல்பாகத் தோன்றும் சமச்சீர் நிலைமை''

முயற்சியே தேவையில்லை. முயற்சி இல்லாமலேயே இயற்கை முழுவதும் அவ்வளவு அழகு கொட்டிக் கிடக்கிறது. எந்த முயற்சியும் செய்யாமலேயே ரோஜா அழகாக இருக்கிறது. முயற்சி செய்யாம்லேயே குயில் அழகாகப் பாடுகிறது. மானைப் பாருங்கள். அதன் சக்தியைக் கவனியுங்கள். முயலைப் பாருங்கள். என்ன ஒரு விழிப்புணர்வு!. புத்தனையே பொறாமைப்பட வைக்கும் விழிப்பு நிலையில் இருக்கிறது முயல்.

இயற்கையைப் பாருங்கள். எல்லாமே மிகச்சரியாக பூரணமான நிலையில் இருக்கிறது. உங்களால் ஒரு ரோஜா மலரை மேலும் அழகுபடுத்த முடியுமா?

மனிதனிடம் மட்டும் ஏதோ தப்பு நடந்திருக்கிறது. ரோஜா வால் முயற்சி செய்யாமலேயே அழகாக இருக்க முடியும் என்றால் மனிதனால் முடியாதா என்ன? வானில் இருக்கும் விண்மீன்கள் பதஞ்சலியின் யோகசூத்திரங்களைப் படிக்காமலேயே அழகாக இருக்க முடியும் என்றால் மனிதனால் இருக்க முடியாதா என்ன?

அதனால்தான் ஷுவாங் ட்சு சொல்கிறார். :''இயல்பாக இருந்தல் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நீங்கள் மலர்ச்சி அடைவீர்கள்.''

இந்தப் புரிதல் உங்களுக்குள் ஆழமாகச் சென்றுவிட்டால் பின் எல்லா முயற்சிகளும் அர்த்தமற்றவையாகிவிடும். அதன் பின் வருங்கால வாழ்க்கைக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கமாட்டீர்கள். நிகழ்காலத்தில் முழுமையாக வாழ்ந்து கொண்டிருப்பீர்க்ள்.

அதன்பின் இந்த நிகழ்கால கணம்தான் எல்லாம் என்ற நிலைக்கு வந்துவிடுவீர்கள் இந்த நிகழ்காலக் கணம்தான் பேரூழிக்காலம் என்பதை உணர்வீர்கள். நீங்கள்தான் புத்தர் என்பதையும் அறிவீர்கள்.

பிரச்சினை என்னவென்றால் நீங்கள் உங்கள் இயல்புநிலை விரிந்து மலர எந்த வாய்ப்பையும் கொடுக்கவில்லை. உங்கள் திட்டங்களிலேயே மூழ்கிக் கிடக்கிறீர்கள். ஒரு மலர் எந்தவித முயற்சியும் இல்லாமல் மலர்கிறது. ஏனென்றால் மலரின் சக்தி அது போடும் திட்டங்களில் விரயமாவதில்லை. எந்த மலரும் வருங்காலத்தைத் திட்டமிடுவதில்லை. மலர் இங்கே இப்பொழுது என்றுதான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. மலரைப் போல் இருங்கள். பறவையைப் போல் இருங்கள். மரத்தைப் போல், ஓடும் ஆறினைப் போல், பொங்கும் கடலைப் போல் இருங்கள். மனிதனைப் போல் இருக்காதீர்கள். மனிதனின் வளர்ச்சியில் எங்கோ தவறு நடந்திருக்கிறது.

எந்த முயற்சியும் இல்லாமல் முற்றிலும் இயல்பாக இருப்பது - அதுதான் ஷுவாங் ட்சு நமக்குச் சொல்லித்தரும் முக்கியமான பாடம்.

இப்போது அவரது சூத்திரத்திற்குள் நுழையப் போகிறோம். ஒவ்வொரு சொல்லையும் ஊன்றிக் கவனியுங்கள். ஏனென்றால் உங்கள் மனம் தடைக்கற்களை உருவாக்கும். உங்கள் மனம் உங்களைக் கவனிக்கவிடாது. உங்கள் மனம் என்பது உங்களுக்குள் இருக்கும் இந்தச் சமுதாயம்தான்.

இது ஒரு சூழ்ச்சிக்கார சமுதாயம். சமுதாயம் உங்களுக்கு வெளியே மட்டும் இல்லை உங்களுக்கு உள்ளேயும் இருக்கிறது. உள்ளே இருக்கும் சமுதாயம்தான் உங்கள் மனம்.. அதனால்தான் ஞானிகள் அனைவரும் மனதை எதிர்க்கிறார்கள்.. இயற்கையை ஆதரிக்கிறார்கள். உங்கள் மனம் என்பது ஒரு செயற்கைக் கருவி. அதை இந்தச் சமுதாயம்தான் உங்களுக்குள் மாட்டி வைத்திருக்கிறது.

ஆகவே ஷுவாங் ட்சு பேசுவதைக் கேட்கும் போது உங்கள் மனம் தடைகளை ஏற்படுத்தும். உங்கள் மனதிற்கு அவர் பேச்சு பிடிக்காது. ஏனென்றால் அவர் மனதிற்கு எதிராகத்தான் எப்போதும் பேசுவார்., உங்கள் மனதைப் புறம் தள்ளிவிட்டு அவர் பேச்சைக் கேட்டால் அதுவே ஒரு சிறந்த தியானப் பயிற்சியாகிவிடும். அந்தக் கேட்டலே உங்களைப் புரட்டிப் போட்டுவிடும். வேறு ஒன்றும் செய்யத் தேவையில்லை.

ஷுவாங் ட்சு தியானத்தைவிட புரிந்துணர்வையே அதிகம் நம்புகிறார். நான் உங்களைத் தியானம் செய்யச் சொல்லி வற்புறுத்தக் காரணம். இந்த நிலையில் உங்களுக்குப் புரிதல் கடினமாக இருக்கும். தியானம் உங்களை இலக்கு நோக்கி அழைத்துச் செல்லாது. எந்த வழியுமே உங்களை இலக்கு நோக்கிக் கொண்டு செல்லாது. மெய்ஞ்ஞானம் பெற எந்த வழியும் இல்லை; எந்த உத்தியும் இல்லை. என்பதைப் புரிந்து கொள்ள தியானம் உதவும். அது மெய்ஞ்ஞானத்திற்கு அழைத்துச் செல்லாது. தியானம் உங்கள் மனதை அழித்துவிடும்.

அப்போதுதான் என்றாவது ஒரு நாள் உங்கள் முன் உண்மை தோன்றினால் அதை உங்களால் பார்க்க முடியும்.

**வரைகருவியால் வரைவதைவிட தன் கையால் இன்னும் துல்லியமான வட்டங்களை ஷூயியால். வரையமுடியும்.**

வட்டம் வரைய வட்டம் வரைகருவி (Compass) ஏன் தேவைப்படுகிறது?. வட்டம் தப்பாகிவிடுமோ என்று உங்களுக்கு உள்ளூர பயம். உங்கள் மனதில் பயம் இல்லையென்றால் எந்தக் கருவியின் துணையும் இல்லாமல் வட்டம் வரையலாம்.

இயற்கையைப் பாருங்கள். வட்ட வடிவங்கள் எல்லா இடத்திலும் நிரம்பியிருக்கின்றன. கோள்கள் கூட ஒரு வட்டத்தைத்தான் சுற்றுகின்றன. இயற்கையின் மிக எளிதான படிவம் வட்டம்தான். அவ்வளவு பெரிய வட்டத்தை வரைய இயற்கைக்கு வட்டம் வரையக் கருவி தேவைப்படவில்லை. விண்மீன்கள் வரைபடத்தைப் பார்த்து நகர்வதில்லை. அவை வரை கருவிகளைச் சுமந்து கொண்டு திரிவதில்லை. என்றாலும் தொடர்ந்து வட்ட வடிவமாகவே பயணிக்கின்றன. விண்மீன் களின் கைகளில் வரைபடங்களையும் கருவிகளையும் கொடுத் தால் அவை வழி தவறிவிடும்.. கையில் அந்தக் கருவிகளை வைத்துக்கொண்டு எங்கே போவது என்ன செய்வது என்று தெரியாமல் முழித்துக் கொண்டிருக்கும்.

நூறுகால் பூச்சியின் கதை உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். ஒரு பூச்சி தன் நூறு கால்களாலும் மெதுவாக நடந்து போய்க் கொண்டிருந்தது. தத்துவஞானியான ஒரு தவளை நூறுகால் பூச்சி நடப்பதை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தது. தவளைக்கு வியப்பு. ''நமக்கு நான்கு கால்களில் நடப்பதே கஷ்டமாக இருக்கிறது இது நூறுகால்களைக் கொண்டு எப்படி நடக்கிறது? இது அற்புதமான நிகழ்வு அல்லவா? எந்தக் காலை முன்னே வைப்பது எந்தக் காலை அடுத்து வைப்பது என்பதைப் பூச்சி எப்படி நினைவில் வைத்துக் கொள்கிறது?''

சுகமாக நடைபயின்று கொண்டிருந்த நூறுகால் பூச்சியை வழிமறுத்தி நிறுத்தியது தவளை.

''நான் ஒரு தத்துவ ஞானி. உன் போக்கு எனக்குப் புதிராக இருக்கிறது. என்னால் தீர்வு காணமுடியாத ஒரு பிரச்சினை இது. நீ எப்படி நடக்கிறாய்? நூறு கால்களை வைத்துக் கொண்டு எப்படி சமாளிக்கிறாய்? எனக்கு அதைப் பார்க்கும்போதே குழப்பமாக இருக்கிறதே?''

நூறுகால் பூச்சி அமைதியாகச் சொன்னது. ''நான் பிறந்ததி லிருந்தே இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறேன். இதுவரை இதைப்பற்றி நான் நினைத்துப் பார்த்ததேயில்லை. இப்போது நீ எப்படி என்று கேள்வி கேட்பதனால் நான் ஒருமுறை நினைத்துப் பார்த்துவிட்டுச் சொல்கிறேன்..''

முதல் முறையாக அந்த நூறுகால் பூச்சியின் உணர்வு நிலையில் சிந்தனை தோன்றியது. அந்தத் தவளை சரியான கேள்வியைத்தான் கேட்டிருக்கிறது. எந்தக் காலை முன்னே வைப்பது? சில நிமிடங்கள் அந்தப் பூச்சி ஒன்றும் செய்யாமல் அந்த இடத்திலேயே ஸ்தம்பித்துப் போய் நின்று கொண்டிருந்தது. சில நிமிடங்கள் கழிந்தன. அந்தப் பூச்சியால் இப்போது சரியாக நிற்கக்கூட முடியவில்லை. தலை சுற்றிக் கீழே விழுந்துவிட்டது. விழுந்தபின் தவளையிடம் பரிதாபமாகச் சொன்னது

''தத்துவ ஞானியே உன்னைக் கையெடுத்து கும்பிட்டுக் கேட்டுக் கொள்கிறேன். என்னிடம் கேட்ட இதே கேள்வியை வேறு ஒரு நூறுகால் பூச்சியிடம் கேட்டுவிடாதே. நான் வாழ்நாள் முழுவதும் எந்த சிரமமும் இல்லாமல் நடந்து கொண்டிருந்தேன். ஒரு முறை கூடத் தடுமாறியது இல்லை. இப்போது உன் கேள்வியின் மூலம் என்னைக் குழப்பிக் கொன்றுவிட்டாய். என்னால் இப்போது நகர முடியவில்லை. நான் எப்படி நூறு கால்களை நகர்த்துவேன்? எப்படிச் சமாளிப்பேன்.?''

வாழ்க்கை ஒரு பூரணமான வட்டத்தில் துல்லியமாக நகர்ந்து கொண்டிருக்கிறது. வாழ்க்கையின் இயக்கத்தில் எந்தவித பிரச்சினையும் இல்லை.

ஷுயி பற்றி ஷுவாங் ட்சு சொல்வதைக் கவனியுங்கள். **வரைகருவியால் வரைவதைவிட தன் கையால் இன்னும் துல்லியமான வட்டங்களை ஷுயியால் வரையமுடியும்.**

உங்களுக்கு நம்பிக்கை இல்லாதபோதுதான் வரைகருவி தேவைப்படுகிறது. நம்பிக்கை இல்லாதபோதுதான் ஒழுக்க விதிகள், போதனைகள், கொள்கைகள், கோட்பாடுகள், பைபிள்கள், குரான்கள், கீதைகள் எல்லாமே தேவைப்படு கின்றன. உங்களுக்கே உங்கள் மேல் நம்பிக்கையில்லை. உள்ளே இருந்து உங்களை இயக்கிக் கொண்டிருக்கும் உயிர்ச் சக்தியின் மேல் நம்பிக்கையில்லை. பைபிள்களும் குரான்களும் பகவத் கீதைகளும் உங்களுக்கு என்ன செய்தன? நூறுகால் பூச்சிக்குத் தவளை என்ன செய்ததோ அதையேதான் அவை உங்களுக்குச் செய்திருக்கின்றன.

அப்பப்பா! எத்தனை போதனைகள்! எத்தனை கொள்கைகள்! எத்தனைக் கோட்பாடுகள்! உங்கள் மேல் எத்தனை விஷயங்கள் திணிக்கப்பட்டிருக்கின்றன! உங்கள் உள் வாழ்க்கை இயல்பாக இருக்கவே முடியாது. நீங்கள் வழி தவறிச் செல்கிறீர்கள். காரணம் தீமையின் சக்தியில்லை. நன்மை செய்கிறேன் பேர்வழி என்று உங்களிடம் வந்தவர்களால் நீங்கள் சரியான பாதையிலிருந்து விலகிச் செல்கிறீர்கள்.

சாத்தான் உங்களைத் தப்புச் செய்யத் தூண்டவில்லை. உங்கள் தலைவர்கள் மத குருமார்கள் நீங்கள் புனிதர்கள் என்று யாரைப் பாராட்டுகிறீர்களோ அவர்கள்தான் உங்களைத் தவறு செய்யத் தூண்டுகிறார்கள்.

இதைப் புரிந்து கொள்வது கொஞ்சம் கடினம். ஒரு சாத்தான் இருப்பதைப் புரிந்து கொள்வது எளிது. நம் பொறுப்பை எல்லாம் சாத்தான் தலையில் போட்டுவிடலாம்.. ஆனால் சாத்தான் என்ற ஒன்று கிடையவே கிடையாது. இதைத்தான் நானும் சொல்கிறேன். ஷுவாங் ட்சுவும் அடித்துச் சொல்கிறார்.

அவர் சொல்வதைக் கேளுங்கள். ''கடவுளும் இல்லை. சாத்தானும் இல்லை. வாழ்க்கை மட்டும்தான் இருக்கிறது.''

மதகுருமார்கள்தான் கடவுளையும் சாத்தானையும் உருவாக்கினார்கள். அவர்கள்தான் எது சரி எது தவறு என்பதற்கு இடையே வேறுபாடுகளை உருவாக்கினார்கள். அந்த வேறுபாடு களின் அடிப்படையில் கடவுளையும் சாத்தானையும் உருவாக்கி

னார்கள். அந்த வேறுபாடுகள் உங்கள் மனதில் புகுந்துவிட்டால் உங்களால் நிம்மதியாக வாழவே முடியாது.

இயற்கை எப்போதும் சரியாகவே இருக்கும். சரி-தவறு வேறுபாடுகள் புகுந்துவிட்டால் உங்களால் இயல்பாக இருக்க முடியாது. மன அழுத்தம் இல்லாமல் வாழ முடியாது.

அதன்பின் நீங்கள் எது செய்தாலும் அது தவறாகவே இருக்கும். காரணம் சரி-தவறு பாகுபாடு உங்கள் மனதைக் குழம்பச் செய்யும். உயிரினங்கள் எல்லாம் அமைதியாக தியான நிலையில் செயல்படும் போது உங்களுக்கு மட்டும் ஏன் அவ்வளவு முயற்சி தேவைப்படுகிறது? சரி-தவறு பாகுபாடு உங்கள் மனதில் புகுந்துவிட்டது.

***வரைகருவியால் வரைவதைவிட தன் கையால் இன்னும் துல்லியமான வட்டங்களை ஷுயியால் வரையமுடியும்.***

நீங்கள் சுய உணர்வு இல்லாமல் செயல்படும்போது வாழ்க்கை இயல்பாக ஓடிக்கொண்டிருந்தது. அந்தச் சுய உணர்வுதான் வரைகருவி. சுய உணர்வின் அடிப்படையில் செய்யும் எதுவும் குழப்பத்தில்தான் முடியும்.

நீங்கள் நாள் முழுவதும் உங்கள் நண்பர்களுடன் அரட்டை அடித்துக் கொண்டிருப்பீர்கள். தங்குதடையில்லாமல் பேசிக் கொண்டிருப்பீர்கள். எந்தப் பிரச்சினையும் இருக்காது. ஆனால் நான் உங்களை இங்கே உள்ள மேடைக்கு அழைத்து இந்த இருக்கையில் உட்காரவைத்து இங்கே கூடியிருக்கும் அதே நண்பர்களுடன் பேசச் சொன்னால். உங்களுக்குப் பிரச்சினையாகி விடும். நூறுகால் பூச்சியின் நிலையில்தான் நீங்கள் இருப்பீர்கள். வாழ்க்கை முழுவதும் பேசிக்கொண்டிருப்பீர்கள். எந்தப் பிரச்சினையும் இருக்காது. ஆனால் ஐந்து நிமிடம் மேடையில் பேசச் சொன்னால். ஊரில் உள்ள பிரச்சினை எல்லாம் சேர்ந்து வரும்.

ஏன்? ஏனென்றால் மேடையில் பேசும் போது சுய உணர்வுடன் செயல்படுகிறீர்கள். நீங்கள் மேடையில் இருக்கும்

போது பலர் உங்களைப் பார்க்கிறார்கள். நீங்கள் என்ன பேசுகிறீர்கள் என்று கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த நிலையில் உங்களால் இயல்பாக இருக்க முடியாது.

இப்போது நீங்கள் அவர்கள் முன் எப்படிக் காட்சியளிக்க வேண்டும் என்று திட்டமிடுகிறீர்கள். மேடையில் இருக்கும்போது மக்கள் உங்களை விரும்ப வேண்டும் என்று நினைக்கிறீர்கள். உங்கள் பேச்சினால் அவர்களைக் கவர வேண்டும் என்று விரும்புகிறீர்கள். சுய உணர்வின் அடிப்படையில் செயல்படத் தொடங்குகிறீர்கள்.

இந்தச் சுய உணர்வு மட்டும் இல்லாவிட்டால் யாராலும் மேடையில் பேச முடியும். நாம் எல்லாருமே பிறவிப் பேச்சாளர்கள்தான். எந்தப் பிரச்சினையும் இல்லாமல் வாழ்நாள் முழுவதும் பேசிக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் நம்மை மேடைக்கு அழைத்து முன்னால் கூடியிருக்கும் கூட்டத்திற்குப் பேசச் சொன்னால் ஏதோ தவறு நடந்துவிடுகிறது. அது என்ன? நீங்கள் மாறவில்லை. மாறாக உங்களுக்குள் சுய உணர்வு புகுந்துவிட்டது. அதுதான் பிரச்சினை.

**வரைகருவியால் வரைவதைவிட தன் கையால் இன்னும் துல்லியமான வட்டங்களை ஷுயியால் வரையமுடியும்.**

**அவன் விரல்கள் இயல்பான உருவங்களை எங்கிருந்தோ கொண்டு வந்து விடும்.**

**அவன் மனம் எப்போதும் பூரண அமைதி நிலையில் இருக்கும்.**

**செய்யும் வேலையைக் குறித்து அவன் மனதில் கவலை இருக்காது.**

**அவன் மனதை அமைதியாக்க அவனுக்கு எந்தப் பயிற்சியும் தேவையில்லை.**

**அவன் மனம் எளிமையாக இருந்தது. அது எந்தத் தடையையும் அறியவில்லை.**

**அவன் விரல்கள் இயல்பான உருவங்களை எங்கிருந்தோ கொண்டு வந்து விடும்.**

எங்கிருந்தோ என்று சொல்லும்போது அது எல்லா இடங்களையும் குறிக்கிறது. எங்கிருந்தோ என்பது வாழ்வின் மூலாதாரத்தைக் குறிக்கிறது.

எங்கிருந்து வருகிறது உங்கள் சுவாசம்? சரியாகச் சுவாசிக்கும் வல்லமை எங்கிருந்து வருகிறது? 'நீங்கள் சுவாசிக்கவில்லை. அதுதான் உங்களைச் சுவாசிக்கிறது. என்று 'ஷுவாங் ட்சு சொல்கிறார்.

நீங்கள் சுவாசிக்கவில்லை. நீங்கள் சுவாசம் குறித்து என்ன செய்கிறீர்கள்?ஒன்றும் இல்லை. 'நான் சுவாசிக்கிறேன்' என்பது அடிப்படையில் தவறான கருத்து. சரியாகச் சொல்ல வேண்டு மென்றால் 'அது - இயற்கை என்னைச் சுவாசிக்கிறது' என்றுதான் சொல்லவேண்டும்.

அப்படிச் சொல்லும்போது மூல அமைப்பே மாறிவிடுகிறது. இப்போது முக்கியத்துவம் உங்களுக்கு இல்லை. உங்கள் அகந்தைக்கும் இல்லை. பரந்து விரிந்து இருக்கும் அந்த முடிவற்ற முழுமைக்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

நீங்கள் காதல் வயப்படுகிறீர்கள் என்று ஒரு பேச்சுக்கு வைத்துக் கொள்வோம். உண்மையிலேயே நீங்கள் காதலில் விழுகிறீர்களா? நிச்சயமாக இல்லை 'அது'தான் (அந்தப் பரந்து விரிந்து கிடக்கும் முடிவற்ற பரிபூரணம் - இயற்கை) உங்கள் மூலம் காதலில் விழுகிறது.

உங்களைக் கோபம் ஆட்கொள்ளும் போது கோபப்படுவது நீங்களா என்று கொஞ்சம் சிந்தித்துப் பாருங்களேன். ஏனென்றால் கோபம் இருக்கும்போது அந்த இடத்தில் நீங்கள் இருக்க மாட்டீர்கள். காதல் மிகும் போது அங்கு காதல்தான் இருக்குமே தவிர நீங்கள் இருக்க மாட்டீர்கள். எந்தத் தீவிரமான உணர்ச்சி யிலும் நீங்கள் இருக்கமாட்டீர்கள். உயிர்ப்புடன் இருக்கும் எந்த நிலையிலும் நீங்கள் இருக்க மாட்டீர்கள். அந்த அது - அதனை தாவோ என்றும் சொல்லலாம் ஆன்மா என்றும் சொல்லலாம்

கடவுள் என்றும் சொல்லலாம் இயற்கை என்றும் சொல்லலாம் - மட்டுமே இருக்கும்.

தாவோவைப் புரிந்து கொண்டவன் 'நான்' என்ற எண்ணம் எதற்கும் உதவாத குப்பை என்பதைப் புரிந்து கொள்கிறான். நான் என்ற உணர்வினால்தான் எல்லாப் பிரச்சினையும் உண்டாகிறது. அதனால் அவன் அந்த எண்ணத்தையே உதறித் தள்ளி விடுகிறான்.

இன்னும் ஆழமாகப் பார்த்தால் அதை உதறவேண்டிய அவசியம் கூட அவனுக்கு இருக்காது. அதன் தன்மையைப் புரிந்து கொண்டால் அதுவே தானாக விழுந்துவிடும்.

அத்தகைய மனிதன் வாழ்வான், உண்பான், காதலிப்பான், உறங்குவான். எதிலும் நான் என்ற எண்ணம் இருக்காது. 'அது' அவன் மூலம் வாழ்கிறது.

அவனுக்குச் சுமை இருக்காது, அழுத்தம் இருக்காது, பயம் இருக்காது. அதன்பின் அவன் குழந்தையாகிவிடுவான். அவன் மனம் மிகவும் லேசாகிவிடும். அதில் கவலை இருக்காது.

'நான்' என்ற நிலையில் வாழ்பவன் மனக்கவலை இல்லாமல் எதையுமே செய்ய முடியாது. அவன் என்ன செய்தாலும் அகந்தை வந்துவிடும். அதைத் தொடர்ந்து கவலையும் மன அழுத்தமும் வந்துவிடும்.

இந்த உதாரணத்தைக் கவனியுங்கள். ஒரு அறுவை சிகிச்சை நிபுணர் இருக்கிறார். அவர் தொழிலில் பெரிய விற்பன்னர். ஆயிரக்கணக்கில் அறுவை சிகிச்சை செய்திருக்கிறார். அனைத்திலும் வெற்றி பெற்றிருக்கிறார். ஆனால் அவர் மனைவிக்கு அறுவை சிகிச்சை செய்யும்போது அவர் கை நடுங்குகிறது. அவர் மனம் தடுமாறுகிறது. அதுவரை ஒரு இயந்திரத்தைப் போல் துல்லியமாகச் செயல்பட்டுக்கொண்டிருந்த அவரால் அந்த சமயத்தில் சரியாகச் செயல்படமுடியவில்லை. வேறு ஒரு நிபுணரை அழைக்க வேண்டியிருக்கிறது. ஏன்?

அவர் மனதில் கவலையும் பயமும் புகுந்துவிட்டது. வேறு நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யும் போது அவருக்கு எந்தக் கவலையும் இல்லை. பற்றற்ற நிலையில் இருந்தார். வெற்றி

தோல்வியைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவர் ஒரு அறுவை சிகிச்சை நிபுணர் என்ற இயல்பு நிலையில் மட்டுமே இருந்தார். அந்த நிலையில் மனம் இல்லை. அவர் குற்றமற்ற செம்மை நிலையில் இருந்தார்.

ஆனால் தன் மனைவியை நோயாளியாகப் பார்த்த மாத்திரத்தில் அவர் மனதில் பயமும் கவலையும் புகுந்துவிட்டது. 'இந்த அறுவை சிகிச்சையில் வெற்றி காண்பேனா? என்னால் என் மனைவியைக் காப்பாற்ற முடியுமா முடியாதா?' போன்ற சிந்தனைகள் அவர் மனதில் புகுந்துவிட்டன.

இப்போது பிரச்சினை வந்துவிட்டது. மனதில் கவலை. கைகளில் நடுக்கம்.

உங்கள் மனதில் இது போல் பல கவலைகள் இருப்பதால் நீங்கள் ஒரு நடுக்கத்துடன்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அதன்பின் உங்களால் ஒரு துல்லியமான வட்டத்தை வரைய முடியாது.

உங்கள் கையெழுத்தை வைத்து உங்கள் மனதை அறியும் ஒரு கலை இருக்கிறது. அதற்கு விஞ்ஞானரீதியான ஆதாரங்களும் இருக்கின்றன.

உங்கள் பெயரை எழுதிக் கையெழுத்துப் போடும்போது உங்கள் மனம் கவலையில் இருந்தால் அது துல்லியமாகத் தெரிந்துவிடும். உங்கள் கவலை நடுக்கமாக வெளிப்படும். உங்கள் கையெழுத்தில் உள்ள நடுக்கத்தைப் பூதக் கண்ணாடி மூலம் ஆராய்ந்து நீங்கள் எப்படிப்பட்ட ஆள் என்பதைச் சொல்லி விடலாம்.

ஒரு புத்தர் கையெழுத்துப் போட்டால் அது முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும். அதில் எந்தவிதமான நடுக்கமும் இருக்காது. இருக்கவும் முடியாது. அவர் மனதில் எந்தக் கவலையும் இல்லையே.! ஒரு கையெழுத்தைப் பார்த்தே அதைப் போட்டது ஒரு புத்தனா இல்லை சாதாரண மனிதனா என்று சொல்லிவிடமுடியும். நீங்கள் என்ன செய்தாலும் இந்த நடுக்கம் உங்களை ஒரு நிழல் போலப் பின் தொடர்ந்துவரும்.

யார் இந்த நடுக்கத்தை உண்டாக்கினார்கள்?

என்னிடம் வருபவர்கள் ''என் மனதில் அமைதியில்லை. ஏதாவது செய்யுங்களேன்'' என்று சொல்கிறார்கள்.

உங்கள் மனதில் அமைதி எப்படி இருக்க முடியும்? மனதில் கவலை இருக்கும் வரை அமைதி இருக்காது. உங்கள் மனம் அமைதியாக, தெளிவாக, சுத்தமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள். கவலையை விட்டாலொழிய இந்த நிலையை நீங்கள் அடைய முடியாது.

மனக்கவலையை விடுவதுதான் அமைதிக்கு ஒரே வழி.

கவலையையும் என்னால் விடமுடியாது. ஆனால் ஏதாவது செய்தேயாக வேண்டும் என்று நினைத்தால் உங்கள் நடுக்கத்தை பிறர் காணாதவாறு மறைத்து வைக்கலாம். உங்களுக்குள்ளேயே அமுக்கி வைக்கலாம். பலர் அப்படித்தான் செய்துகொண்டிருக் கிறார்கள்.

மேலோட்டமாகப் பார்க்கும் போது எல்லாமே அமைதியாக இருப்பது போல் தோன்றும். ஆனால் உள்ளே மனதின் அடி ஆழத்தில் நடுக்கம் இருக்கும். அந்த நடுக்கம் கவலையில் ஜனித்தது. மனக்கவலையை ஒழிக்காமல் அந்த நடுக்கத்தை ஒழிக்க முடியாது.

மனக்கவலை என்பது என்ன? மற்றவர்கள் நம்மைப் பற்றி என்ன நினைக்கிறார்களோ என்பதுதான். நீங்கள் ஏன் மற்றவர் களைப் பற்றிக் கவலைப்பட வேண்டும். அவர்கள் உங்களைப் பற்றி என்ன நினைத்தாலும் அது அவர்கள் பிரச்சினை. எல்லாருமே மற்றவர்கள் தங்களைப் பற்றி என்ன நினைத்து கொண்டிருக்கிறார்களோ என்ற கவலையிலேயே வாழ்நாளைக் கழிக்கிறார்கள். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ என்று அவர்கள் கவலைப்படுகிறார்கள். அவர்கள் என்ன நினைக்கிறர்களோ என்று நீங்கள் கவலைப்படுகிறீர்கள். என்ன கொடுமை இது?

முல்லா நசிருதீன் காட்டுவழிப் பாதையில் போய்க் கொண்டிருந்தார். இருள் கவியத் தொடங்கியிருந்தது. எதிரே

கூட்டமாகச் சில மனிதர்கள் வருவதைப் பார்த்ததும் அவர் மனதில் அச்சம் வந்துவிட்டது. 'இவர்கள் வழிப்பறிக் கொள்ளையர்களோ? ஆஹா! இந்தச் சாலையில் வேறு யாரும் இல்லையே! இவர்களிடம் தனியாக மாட்டிக் கொண்டுவிட்டேனே!' என்று பயத்தில் நடுங்கினார். பக்கத்தில் இருந்த ஒரு சுவரைத் தாண்டி உள்ளே குதித்தார்.

அவர் குதித்த இடம் ஒரு கல்லறைத் தோட்டம். புதிதாகத் தோண்டப்பட்டிருந்த ஒரு புதைகுழிக்கு அருகில் சென்று அமர்ந்து கொண்டார். அவர் மனம் கொஞ்சம் அமைதிப்பட்டது. கண்களை மூடிக்கொண்டு அந்தக் 'கொள்ளையர்கள்' அந்த இடத்தைக் கடந்து போகும்வரைக் காத்திருந்தார்.

இதில் வேடிக்கை என்னவென்றால் அவர்களும் முல்லாவைப் பார்த்துவிட்டார்கள். முல்லா திடீரென்று சுவரேறிக் குதிப்பதையும் பார்த்தார்கள். அவர்களுக்கும் பயம் வந்து விட்டது. உள்ளே வேறு யாரோ இருக்கிறார்களோ? சதித்திட்டம் எதையாவது தீட்டிக் கொண்டிருக்கிறார்களோ? சரி அதையும் ஒரு கை பார்த்துவிடுவோம் என்று அவர்களும் சுவரைத் தாண்டிக் குதித்தார்கள்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த முல்லா அவர்கள் தப்பான ஆசாமிகள் என்று நினைத்தார்.

''நான் நினைத்தது சரிதான். இவர்கள் ஆபத்தானவர்கள். இனிமேல் இவர்களிடமிருந்து தப்பி ஓட முடியாது. எனவே இறந்துவிட்டதைப் போல் நடிப்போம்.''

முல்லா அந்தப் புதைகுழியில் குதித்தார். முல்லா கண்களை மூடிக்கொண்டு பேச்சு மூச்சில்லாமல் கிடந்தார். யாருமே செத்த மனிதரைத் தாக்கமாட்டார்கள் என்று நினைத்தார் முல்லா.

அவர்கள் முல்லா கீழே விழுந்து கிடப்பதைப் பார்த்தார்கள். சற்று நேரத்துக்கு முன்னால் சுவரேறிக் குதித்த ஆசாமிதான் அது என்பதைக் கண்டுபிடித்துவிட்டார்கள். 'இப்போதுதான் குதித்தான். இவன் ஏன் இப்படிப் பிணம் போல் கிடக்கிறான்?'

முல்லாவைப் பார்த்துக் கேட்டார்கள்.

''இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன் மனதில் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்?''

முல்லா கண்களைத் திறந்து அவர்களைப் பார்த்தார். பக்கத்தில் பார்த்தபோதுதான் அவர்கள் தப்பான ஆசாமிகள் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டார். அவர்கள் மூலம் தனக்கு எந்த ஆபத்தும் வராது என்பதைத் தெரிந்து கொண்டார் முல்லா. பெரிதாகச் சிரித்தார்.

''இது ஒரு தத்துவார்த்தமான பிரச்சினை. நான் ஏன் இங்கே இருக்கிறேன் என்று நீங்கள் கேட்கிறீர்கள். அதே கேள்வியை நான் உங்களிடம் கேட்கிறேன். உங்களால்தான் நான் இங்கே இருக்கிறேன். என்னால்தான் நீங்கள் இங்கே இருக்கிறீர்கள்.

இது ஒரு தீய சுழல். நீங்கள் மற்றவர்களைக் கண்டு பயப்படு கிறீர்கள். மற்றவர்கள் உங்களைக் கண்டு பயப்படுகிறார்கள். அதனால் உங்கள் மொத்த வாழ்க்கையுமே குழப்பத்தில் மாட்டிக் கொள்கிறது. இந்த முட்டாள் தனத்தை விட்டு விலகி வெளியே வாருங்கள். மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். உங்களைப் பற்றி நினைக்கவே உங்களுக்கு நேரம் இருப்ப தில்லை. இதில் மற்றவர்களைப் பற்றிய கவலை எதற்கு?

ஒன்றை மட்டும் என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும் நீங்கள் கவலையில்லாமல் வாழத் தொடங்கினால் உங்கள் வாழ்க்கையில் ஒரு மலர்ச்சி ஏற்படும். அந்த மலர்ச்சியை மற்றவர்கள் பகிர்ந்து கொள்ளலாம். அந்த சமயத்தில் நீங்கள் பகிர்ந்து கொடுக்க உங்களிடம் நிறைய இருக்கும். ஆனால் அதற்கெல்லாம் முதல் படி.- மற்றவர்கள் உங்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

''உங்களைப் பற்றி'' இந்த ''பற்றி'' என்ற சொல் ஆபத்தானது. இதனால்தான் யாருமே நிம்மதியாக இல்லை. யாருமே இயல்பு நிலையில் இல்லை. ஒவ்வொரு மனிதனும் அடுத்தவர்களைத் தொடர்ந்து துரத்திக் கொண்டேயிருக்கிறான். வாழ்க்கை நரகமாகி விட்டது.

**அவன் விரல்கள் இயல்பான உருவங்களை எங்கிருந்தோ கொண்டு வந்து விடும்.**

**ஆனால் அவன் மனம் எப்போதும் அமைதியாக இருக்கும்.**

**செய்யும் வேலையைக் குறித்து அவன் மனதில் எந்தத் கவலையும் இருக்காது.**

என்ன செய்கிறீர்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். செய்வதை முழுமனதுடன் செய்யுங்கள். செய்வதே பரவச அனுபவமாகிவிடும். பிரம்மாண்டமான விஷயங்களைப் பற்றி யோசிக்காதீர்கள். பெரியது சிறியது என்று எதுவும் இல்லை. பெரிய சாதனைகளைச் செய்வதாக நினைத்துக் கொண்டிருக்கா தீர்கள். பிரம்மாண்டமான இசையை உருவாக்குவதாக நினைக் காதீர்கள்., கண்ணையும் கருத்தையும் கவரும் ஓவியங்களை வரைய நினைக்காதீர்கள். ஒரு பிக்காசோவாக வேண்டும், வேன் கோவாக வேண்டும் என்று கனவு காணாதீர்கள். ஷேக்ஸ்பியரைப் போன்ற எழுத்தாளராகவோ மில்டனைப் போன்ற கவிஞ னாகவோ புகழ் பெற வேண்டும் என்று நினைக்காதீர்கள். செயலில் சிறிது பெரிது என்று ஒன்றும் இல்லை. மாமனிதர்கள் இருக்கிறார்கள். சிறுமனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் பொருள்களிலும் செயல்களிலும் சிறிது பெரிது இல்லை.

யார் மாமனிதன்? தான் செய்யும் சின்ன விஷயத்திற்குக் கூட பெருமையைச் சேர்ப்பவன்தான் மாமனிதன். அவன் செய்யும் எல்லாச் செயல்களிலும் பெருமை பரிமளிக்கிறது. உண்பது, நடப்பது ஏன் தூங்குவதில் கூட அவன் பெருமை வெளிப்படும். அந்தப் பெருமைதான் என்ன? இயற்கை. இயற்கையைவிடப் பெரியது வேறொன்றும் இல்லை. ஒரு சக்கரவர்த்தியைப் போல் உணவு உண்ணுங்கள். அது உணவைப் பொறுத்த விஷயம் அல்ல. உண்பவனைப் பொறுத்தது. அவன் எப்படி உணவைக் கொண்டாடுகிறான் என்பதைப் பொறுத்தது. ஒரு சிறிய ரொட்டித் துண்டு கொஞ்சம் வெண்ணெய் ஒரு கல் உப்பு - இவற்றைக் கூட ஒரு சக்கரவர்த்தியைப் போல் உண்ணலாம்.

ஏதன்ஸ் நகருக்கு அருகே எபிக்யூரஸ் என்பவரின் தோட்டம் இருந்தது. எபிக்யூரஸும் ஷுவாங் ட்சுவைப் போல ஒரு அற்புதமான மனிதர். அவர் கடவுளை நம்பவில்லை. எதையுமே நம்பவில்லை. எந்த நம்பிக்கையும் முட்டாள்தனம் என்பதுதான் அவர் கொள்கை. முட்டாள்கள்தான் நம்புவார்கள் என்பது அவர் வாதம். புரிந்து கொண்டவனுக்கு உணர்வு இருக்கிறது வெறும் நம்பிக்கை இல்லை. உணர்வு வேறு நம்பிக்கை வேறு. உணர்வு என்பது வாழ்க்கையை மொத்தமாக நம்புவது. அதனுடன் எங்கும் செல்லத் தயாராக இருப்பது.

எபிக்யூரஸ் ஒரு சிறிய தோட்டத்தில் தன் சீடர்களுடன் வசித்து வந்தார். மக்கள் அவரை ஒழுங்கம் கெட்டவர். கடவுள் நம்பிக்கையில்லாதவர் என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர் வாழ்க்கை உன்னதமாக இருந்தது. அவரும் அவர் சீடர்களும் ஏழைகள்தான். அவர்களிடம் செல்வம் இல்லை. என்றாலும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தார்கள். அந்த நாட்டு அரசன் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவரும் சீடர்களும் எப்படி கடவுள் நம்பிக்கை இல்லாமல் மகிழ்ச்சியாக வாழ் கிறார்கள் என்று அறிய ஆசைப்பட்டான். கடவுள் நம்பிக்கை உள்ளவர்களே மகிழ்ச்சியாக வாழ முடியாத போது இந்த நாத்திகவாதி மட்டும் எப்படி அவ்வளவு மகிழ்ச்சியாக வாழ்கிறார் என்று அறிய ஆவல் கொண்டான்.

ஒரு நாள் மாலை எபிக்யூரசின் தோட்டத்திற்கு மன்னன் வந்தான். அவனுக்கு ஒரே வியப்பு. அங்கே ஒரு மகா அற்புதம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அவர்களிடம் ஒன்றுமே இல்லை. என்றாலும் அவர்கள் சக்கரவர்த்தியைப் போல் வாழ்ந்தார்கள். தேவலோகத்தில் இருப்பவர்கள் போல் வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்க்கையே ஒரு கொண்டாட்டமாக இருந்தது..

அவர்கள் ஆற்றில் குளிக்கப் போனால் அது சாதாரணக் குளியலாக இருக்காது. ஆற்றின் போக்கோடு இசைந்த ஒரு நடனமாக இருக்கும். குளிக்கும்போது அவர்கள் ஆடினார்கள்; பாடினார்கள். குதித்தார்கள். அம்பு போல் நீரில் பாய்ந்தார்கள்.

அவர்கள் உண்பதும் ஒரு திருவிழாவாகத்தான் நடந்தது. இத்தனைக்கும் அவர்களிடம் இருந்ததெல்லாம் காய்ந்து போன ரொட்டியும் கொஞ்சம் உப்பும்தான். வெண்ணெய் கூட இல்லை. ஆனால் அந்த எளிய உணவிற்கும் அவர்கள் நன்றி உடையவர்களாக இருந்தார்கள். இருப்பதே ஆனந்தம் என்னும் அளவில் அவர்கள் மனநிலை இருந்தது. அவர்களுக்கு எதுவுமே தேவைப்படவில்லை.

சக்கரவர்த்திக்கு ஆச்சரியம். அவர் எபிக்யூரஸைப் பார்த்துக் கேட்டார். ''அடுத்த முறை வரும்போது உங்களுக்குச் சில பரிசுகள் கொண்டுவரலாம் என்று இருக்கிறேன். எந்த மாதிரிப் பரிசுகள் வேண்டும்?''

''கொஞ்சம் அவகாசம் கொடுங்கள் யோசிக்க வேண்டும். ஏனென்றால் இதுவரை யாருமே எங்களுக்குப் பரிசுப் பொருள்கள் கொடுத்ததில்லை.. இயற்கைதான் எங்களுக்கு அள்ளி அள்ளிக் கொடுத்திருக்கிறதே. வேறு என்ன வேண்டும்?''

''..........''

''சரி, சரி, நீங்கள் வற்புறுத்திக் கேட்பதால் சொல்கிறேன். அடுத்த முறை வரும்போது கொஞ்சம் வெண்ணெய் கொண்டு வாருங்கள். அது போதும்...''

கவலை இல்லாமல் வாழ்ந்தால் வாழ்க்கையே ஒரு கொண்டாட்டம்தான். கவலையோடு வாழ்ந்தால் வாழ்க்கையே ஒரு வியாதி. அந்த வியாதிக்கு ஒரே மருந்து மரணம்தான்.

***அவன் மனம் எப்போதும் பூரண அமைதி நிலையில் இருக்கும்.***

***செய்யும் வேலையைக் குறித்து அவன் மனதில் கவலை இருக்காது.***

***அவன் மனதை அமைதியாக்க அவனுக்கு எந்தப் பயிற்சியும் தேவைப்படவில்லை.***

***அவன் மனம் எளிமையாக இருந்தது. அது எந்தத் தடையையும் அறியவில்லை.***

நீங்கள் இயல்புநிலையை மறந்து விட்டீர்கள். அதனால் ஒவ்வொன்றையும் நீங்கள் புதிதாகக் கற்க வேண்டியிருக்கிறது. காதல் செய்யக் கூடப் பயிற்சி தேவைப் படுகிறது என்று மனவியல் வல்லுனர்கள் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். மனிதர்களுக்கு காதல் செய்வது என்றால் என்னவென்றே மறந்துவிட்டது. இப்போது காதல் செய்வதைக் கற்றுக் கொடுக்கப் புத்தகங்கள் வந்துவிட்டன. சமைத்துப் பார் வரிசையில் புத்தகங்கள் வந்த மாதிரி காதல் கலை, காதல் செய்வது எப்படி என்று விளக்கும் நூல்கள் வந்துவிட்டன. .

உடலுறவில் உச்சம் என்பதை மக்கள் மறந்தே போய் விட்டார்கள். உடலுறவில் பரவச நிலை அடைவது எப்படி என்று பலருக்கும் தெரியாமலேயே போய்விட்டது. எந்த விலங்கிற் காவது உடலுறவு விஷயத்தில் பயிற்சி தேவைப்படுகிறதா என்ன? அந்த விஷயத்தில் மரங்களுக்குக் கூட உங்களைவிட அதிகம் அறிவு இருக்கும் என்றே தோன்றுகிறது.

இப்போது எல்லாவற்றையும் கற்றுத்தர வேண்டியதிருக் கிறது. அதுதான் கொடுமை. நாம் வேர்களை இழந்து விட்டோமோ என்று அஞ்சத் தோன்றுகிறது. இயற்கையுடன் நமக்குத் தொடர்பு இல்லாமல் போய்விட்டது.. இயற்கைக்கும் நமக்கும் ஒரு இடைவெளி தோன்றிவிட்டது.

எப்படி காதலிப்பது என்று உங்களுக்கு யாராவது கற்றுக் கொடுத்தால் உங்கள் காதல் போலியானது என்று என்னால் அடித்துச் சொல்ல முடியும் உண்மையான காதல் இயல்பாக வர வேண்டும். அதை எப்படிக் கற்றுத் தருவதாம்? உங்களுக்குக் காதலை யாராவது கற்றுக் கொடுத்தால் அது தன்னிச்சையாக வராது. ஏதோ விதிமுறைகளின்படி நீங்கள் செயல்படுவீர்கள். உங்கள் காதலில் இயல்பான ஓட்டம் இருக்காது.

உங்கள் விதிகளின்படி இயற்கை நடப்பதில்லை. இயற் கைக்கென்று சில விதிகள் இருக்கின்றன. நீங்கள் இயற்கையுடன் இயைந்து இருந்தால் போதும். இயற்கை எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளும். இதே ரீதியில் போனால் ஒரு நாள் மூச்சு விடுவது எப்படி என்று மக்களுக்குச் சொல்லித் தர வேண்டிய

திருக்கும். இப்போது இதைக் கேட்டால் உங்களுக்குச் சிரிப்பு வரும்.

ஆனால் நீங்கள் கால இயந்திரத்தில் பின்னோக்கிச் சென்று எபிக்யூரஸிடம் போய் ''உடலுறவில் உச்சத்தைத் தொடுவது எப்படி என்று மக்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் காலம் வருமா?'' என்று கேட்டால் அவர் வாய்விட்டுச் சிரித்திருப்பார். ஏனென்றால்; விலங்குகள் எந்த போதனையும் இல்லாமல் உடலுறவில் உச்சத்தை அநாயாசமாகத் தொடுகின்றன. விலங்குகளுக்கு உடலுறவு பற்றிய புத்தகங்கள் தேவையில்லை. அவை குறித்த வல்லுனர் அறிவுரை தேவையில்லை.

அமெரிக்காவில் சில இடங்களில் உடலுறவில் உச்சத்தைத் தொடுவது எப்படி என்று சொல்லித் தருகிறார்கள். பயிற்சியின் மூலமாகவும் போதனையின் மூலமாகவும் நீங்கள் உடலுறவில் உச்சநிலையை அடைந்தால் அது நிஜமான நிலையில்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் அதனைக் கட்டுப் படுத்துகிறீர்கள். உங்கள் மனம் போல் மாற்றியமைக்கிறீர்கள். ஏதோ ஒரு வழியில் அதனைக் கட்டாயப்படுத்துகிறீர்கள். எல்லாவற்றையும் அதனதன் போக்கில் விட்டுவிடும் போதுதான் உண்மையான உச்சம் வரும். அந்த விட்டுவிடும் மனப்பான்மை சொல்லிக் கொடுத்து வராது.

எப்படித் தூங்கவேண்டும் என்று யாருக்காவது சொல்லித்தர முடியுமா என்ன? தூக்கம் சொல்லிக் கொடுத்தா வரும்? அப்படியே நீங்கள் யாருக்காவது சொல்லிக்கொடுக்க முயன்றால் அவர்களுக்கு இடைஞ்சலாகத்தான் இருப்பீர்கள். அவர்களால் அதன்பின் சரியாகத் தூங்கமுடியாது. தூங்க முயன்றால் தூக்கம் வராது.. தலையைத் தலையணையில் வைத்துத் தூங்க வேண்டியதுதான். அதைவிட்டுவிட்டு வேறு எதாவது செய்தால் சத்தியமாகத் தூக்கம் வராது. வாழ்க்கையும் தூக்கத்தைப் போலத்தான். வாழ்க்கை சுவாசிப்பதைப் போலத்தான். இப்படித்தான் சுவாசிக்க வேண்டும் என்று யாருக்கும் கற்றுத்தர முடியாது. அது போல் இப்படித்தான் வாழ வேண்டும் என்று யாருக்கும் சொல்லித்தர முடியாது.

***அவன் மனதை அமைதியாக்க அவனுக்கு எந்தப் பயிற்சியும் தேவைப்படவில்லை.***

***அவன் மனம் எளிமையாக இருந்தது. அது எந்தத் தடையையும் அறியவில்லை.***

உங்கள் மனம் தெளிவாக இருக்கும்போது நீங்கள் எந்த விதிமுறைகளையும் பின்பற்றத் தேவையில்லை. உங்கள் மனதில் எந்த வேதாகமப் புத்தகங்களையும் சுமக்க வேண்டாம். நீங்கள் பார்த்தால் போதும். எல்லாமே தெளிவாகத் தெரியும்.

***செருப்பு சரியாக இருந்துவிட்டால் கால்களை மறந்துவிடுவோம்.***

***பெல்ட் சரியாகப் பொருந்திவிட்டால் நாம் வயிறை மறந்துவிடுவோம்.***

***இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்துவிடுவோம்***

இது ஒரு முக்கியமான சூத்திரம்

***செருப்பு சரியாக இருந்துவிட்டால் கால்களை மறந்துவிடுவோம்.***

நீங்கள் நல்ல உடல்நலத்துடன் இருக்கும் போது உங்களுக்கு உங்கள் உடலைப் பற்றி ஒன்றுமே தெரியாது. உடல் என்று ஒன்று இருப்பதையே மறந்துவிடுவீர்கள். ஆனால் உடலில் நோய் வந்துவிட்டால் உங்களால் உடலை மறக்க முடியாது. உடலைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியாது.

தலைவலி இல்லாதபோது உங்கள் தலையை எப்போதாவது நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா? தலைவலி வந்துவிட்டால் உங்களால் தலையை மறக்க முடியாது. செருப்புக் கடித்தால் அது சரியில்லை என்றுதானே பொருள்? தலைவலி இல்லாவிட்டால் தலை எங்கே இருக்கிறது என்று கூட உங்களுக்குத் தெரியாமல் போய்விடும். அதை முற்றிலுமாக மறந்து போயிருப்பீர்கள். எது நன்றாக் இருக்கிறதோ எது குற்றம் குறை இல்லாமல் இருக் கிறதோ அதை மறந்துவிடுவோம். எதில் வியாதி இருக்கிறதோ

அதை சதா நினைத்துக் கொண்டேயிருப்போம். குறை உள்ளதும் நோயுள்ளதும் மனதில் எப்போதும் இருக்கும். மனதை எப்போதும் அழுத்திக் கொண்டேயிருக்கும்.

தாவோவில் ஆழ்ந்திருக்கும் பரிபூரண மனிதனுக்குத் தன்னைப் பற்றி எதுவும் தெரியாது. தன்னைப் பற்றிய நினைவே இருக்காது.

ஆனால் உங்களுக்கு உங்களைப் பற்றித் தெரியும். உங்களைப் பற்றிய நினைப்பு இருக்கும். காரணம் நீங்கள் நோய்வாய்ப்பட்டிருக்கிறீர்கள்.

உங்கள் அகந்தைதான் உங்களுடைய மிகப்பெரிய நோய். அந்த வியாதியின் காரணமாக நீங்கள் எந்த நேரமும் உங்களையே நினைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. உங்கள் நோய் தீவிரமாக இருக்கிறது..

நல்ல ஆரோக்கியத்துடன் இயல்பாக வாழ்பவன் தன்னை முழுமையாக மறந்துவிடுகிறான். அவன் ஒரு மேகத்தைப் போல், தென்றலைப் போல், ஒரு கல்லைப் போல், ஒரு மரத்தைப் போல் ஒரு பறவையைப் போல் இருக்கிறான். ஒரு மனிதனைப் போல் இருப்பதில்லை. நோயையும் காயத்தையும்தான் நாம் நினைவில் கொள்ள வேண்டும். நன்றாக உள்ள உடலையல்ல.

நினைவு என்பது இயற்கை நமக்குக் கொடுத்த ஒரு பாதுகாப்பு வளையம். காலில் முள் குத்திவிட்டால் அதனை நீங்கள் மறந்துவிடக்கூடாது. அந்த முள்ளைப் பிடுங்கி எறியும் வரை உங்கள் மனம் மீண்டும் மீண்டும் அந்த இடத்திற்கே உங்களை இழுத்துக் கொண்டிருக்கும். காரணம் நீங்கள் உங்கள் காலில் முள் இருப்பதை மறந்துவிட்டால் அது உங்களுக்கே வினையாகிவிடும். அதனால் புண் புரையோடிப்போய் காலையே எடுக்க வேண்டிய நிலை வரலாம். தலைவலி வந்துவிட்டால் உங்கள் உடல் 'தலையை மறந்துவிடாதே' என்று சதா எச்சரித்துக் கொண்டேயிருக்கிறது. அதை மறந்துவிட்டால் தலைவலி உங்கள் உயிருக்கே உலை வைத்துவிடும்.

உங்கள் உடலில் ஏதாவது குற்றம் குறை இருந்தால் அதை உங்கள் உடலே உங்களுக்குச் சுட்டிக் காட்டுகிறது. உங்கள்

கவனத்தை ஈர்க்கிறது. ஆனால் உடலில் குற்றம் குறை இல்லா விட்டால் வலி வேதனை இல்லாவிட்டால் உங்களுக்கு உடல் என்று ஒன்று இருப்பதையே மறந்துவிடுவீர்கள்.. எல்லாம் நன்றாக இருக்கும்போது உடல் என்ற ஒன்று இருப்பதே உங்களுக்குத் தெரியாது. இதுதான் பூரண உடல் நலத்தின் இலக்கணம்:: உங்களுக்கு உடல் பற்றிய சிந்தனை இல்லை என்றால் நீங்கள் நலமாக இருக்கிறீர்கள் என்று பொருள். உங்கள் உடலின் எந்தப் பகுதியைப் பற்றியாவது சிந்தனை வந்தால் அந்தப் பகுதியில் ஏதோ வியாதியோ வலியோ இருக்கிறது என்று புரிந்து கொள்ளுங்கள்.

இது மனதிற்கும் பொருந்தும். நம் உணர்வுநிலை நன்றாக இருந்தால் நம்மிடம் அகந்தை இருக்காது. அப்போது உங்களைப் பற்றி உங்களுக்கு எதுவுமே தெரியாது. ''நான் அப்படியாக்கும்..'' ''நான் இப்படியாக்கும்'' என்று சதா சொல்லிக்கொண்டு திரிய மாட்டீர்கள். இயல்பாக இருப்பீர்கள். நீங்கள் மட்டுமே இருப்பீர்கள். இருப்புநிலை மட்டுமே இருக்கும். நான் என்ற மனோபாவம் இருக்காது. தான் என்ற என்னம் இருக்காது. அகந்தை அறவே இருக்காது.

***செருப்பு சரியாக இருந்துவிட்டால் கால்களை மறந்துவிடுவோம்.***

***பெல்ட் சரியாகப் பொருந்திவிட்டால் நாம் வயிறை மறந்துவிடுவோம்.***

***இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்துவிடுவோம்***

இது மிகவும் ஆழமானது.. இதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். ***இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்துவிடுவோம்***

இதயம் தப்பாக இருந்தால் உங்களுக்கு அது சுமையாக பெருங்கவலையாக இருக்கும். இது சரி. இது தவறு. சரியானதைக் கடைப்பிடிக்க வேண்டும் தவறானவற்றைத் தவிர்க்க வேண்டும். உங்கள் வாழ்க்கையே ஒரு போராட்டமாகிவிடும். தவறைத்

தவிர்த்து சரியானதை அடைவது ஒரு போராட்டமாகிவிடும். இது வழியல்ல. இந்த வழியில் போனால் சரியானவற்றைத் தவற விட்டுவிடுவோம்.

உங்களுக்குக் கோபம் இருக்கிறது, பாலுணர்வு இருக்கிறது. பேராசை இருக்கிறது. இதில் கோபம் தவறென்று சொன்னால் உங்கள் மொத்த வாழ்க்கையும் கோபநிலையிலே கழிந்துவிடும். சில நேரங்களில் உங்களுக்குக் கோபம் வரும் சில நேரங்களில் உங்கள் கோபம் மேலேயே உங்களுக்குக் கோபம் வரும். எந்த நிலையிலும் உங்களிடம் கோபம் இருக்கும்.

முதலில் கோபம். அது போனபின் ஐயோ இப்படிக் கோபப்பட்டுவிட்டோமே என்ற கோபம். அதுதான் குற்ற உணர்வு. குற்ற உணர்வு மிகும்போது என்ன செய்வீர்கள்? இனிமேல் கோபமே படமாட்டேன் என்று உறுதிமொழி எடுத்துக் கொள்வீர்கள். மீண்டும் கோபம் வரும். கோபப்பட்டாலும் சரி, ஐயோ கோபப்படுகிறேனே என்று கழிவிரக்கப்படாலும் சரி, இனிமேல் கோபப்படவே மாட்டேன் என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டாலும் சரி - நீங்கள் எப்போதும் கோப நிலையில்தான் இருப்பீர்கள்.

உங்கள் மனதில் தோன்றும் பாலுணர்விற்கும் இதே நிலைமைதான். மனதில் பாலுணர்வு தோன்றும். பின் பாலுணர்வு தவறு என்று நினைப்பீர்கள் சொல்வீர்கள். உலகமே அப்படித் தான் சொல்கிறது. மீண்டும் பாலுணர்வு வரும். அதை உங்களால் தடுக்க முடியாது. அந்தப் பாலுணர்வு வடிந்தபின் மனதில் குற்ற உணர்வு வரும். அந்த குற்ற உணர்வில் மீண்டும் மீண்டும் பாலுணர்வைப் பற்றியே நினைப்பீர்கள். இப்போது பாலுணர்வு உங்கள் பிறப்புறுப்புகளிலிருந்து உங்கள் மூளைக்கு இடம் மாறிவிட்டது. இது ஒரு விநோதமான நிலை. சில நேரங்களில் நீங்கள் உடல் ரீதியாகப் பாலுணர்வில் திளைத்திருப்பீர்கள். சில நேரங்களில் அறிவுரீதியாக.

உங்களுக்குள் ஒரு போராட்டம் தோன்றிவிட்டால், ஒரு முரண் ஏற்பட்டுவிட்டால் பாகுபாடுகள் வந்துவிடும்.

ஒரு முறை நான் முல்லா நசிருதீனுடன் தங்கியிருந்தேன். ஒரு அழகான இளம் விதவை அவரிடம் அறிவுரை கேட்க வந்திருந்தாள். அவள் சொன்னாள்:

''பெரிய குழப்பத்தில் இருக்கிறேன் முல்லா. நீங்கள்தான் எனக்கு உதவ வேண்டும். நான் என்னை விட வயதில் குறைந்த ஒரு அழகான இளைஞனைக் காதலிக்கிறேன். அவன் ஏழை. ஒரு வயதான அசிங்கமான பணக்காரக் கிழவன் என்னைக் காதலிக் கிறான். நான் யாரைத் திருமணம் செய்து கொள்வது என்று ஒரே குழப்பமாக இருக்கிறது.''

முல்லா கண்ணை மூடிக்கொண்டு சில நிமிடங்கள் யோசித்தார்.

''பணக்காரக் கிழவனைத் திருமணம் செய்து கொள். அந்த இளைஞனின் உறவை விட்டுவிடாதே.''

இப்படித்தான் முரண்பாடுகள் தோன்றுகின்றன. இதுவா அதுவா என்று குழப்பம் வரும்போது இப்படித்தான் நாம் இரண்டு சாத்தியக்கூறுகளையும் ஒரே சமயத்தில் தேர்ந்தெடுக்கிறோம். நமக்குள் பிரிவுகள் தோன்றுகின்றன. ''இது சரி. இது தவறு'' என்று சொல்லும் போது உங்களுக்குள் பிரிவு ஏற்கனவே உண்டாகி விடுகிறது. மொத்த வாழ்க்கையும் ஒரு போராட்டமாகிவிடுகிறது. பழைய கால கடிகாரத்தில் இங்கும் அங்கும் ஆடிக் கொண் டிருக்கும் ஊசலியைப் போல் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்கு சதா ஊசலாடிக்கொண்டேயிருக்கிறோம்.

எதையும் எதிர்க்காதீர்கள். எதற்காக எதிர்க்க வேண்டும்? எதையாவது எதிர்த்தால் உங்கள் மனதின் அடியாழத்தில் அதை விரும்புகிறீர்கள் என்று பொருள். இல்லாவிட்டால் எதற்கு அதனை எதிர்க்கவேண்டும்?

மனதின் ஆழத்தில் கோபம் இல்லாதவன் கோபத்தை எதிர்க்கமாட்டான். மனதின் ஓரத்தில் பேராசையில்லாதவன் எதற்காகப் பேராசையை எதிர்க்க வேண்டும்? பேராசையினால் அவனுக்குப் பிரச்சினை இல்லை. இந்த விஷயத்தில் அவன் எதையும் தெரிவு செய்யவில்லையே! எந்த வேறுபாட்டையும்

பார்க்கவில்லையே! மனதில் பேராசை உள்ளவர்கள்தான் பேராசையை மூர்க்கத்தனமாக எதிர்ப்பார்கள். காமத்தின் வயப்பட்டவர்கள்தான் காமத்தை எதிர்ப்பார்கள். பாலுறவுக்கு எதிராகக் கூக்குரலிடுவார்கள். மனதில் கோபம் இருந்தால்தான் கோபத்தை எதிர்ப்பார்கள். மனதின் வன்முறை இருப்பவர்கள் தான் வன்முறைக்கு எதிராகக் கொடி பிடிப்பார்கள்.

அவர்கள் என்ன செய்கிறார்கள்? ஒரு எதிர் இலக்கை உருவாக்குகிறார்கள்.

உங்களுக்குள் வன்முறை இருந்தால் அகிம்சையை இலக் காகக் கொள்வீர்கள். அதுசரி ஆனால் ஒரு வன்முறையாளன் எப்படி அகிம்சாவாதியாக முடியும்? அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அவன் தன்மேலேயே அந்த வன்முறையைத் திருப்பிவிடுவான். கோபப்படுபவன் எப்படி கோபத்தை விட முடியும்? சினம் கொண்டவன் சாந்தமாக இருக்க முயற்சித்தால் அந்த சாந்தம் கூட ஒரு வகைக் கோபமாகத்தான் இருக்கும்.

உங்களைச் சுற்றிப் பாருங்கள். அகிம்சையை தங்கள் கொள்கையாக வைத்திருப்பவர்களைவிட மோசமான வன்முறை யாளர்கள் இல்லை என்பதை உணர்வீர்கள். பிரம்மச்சரியத்தைத் தங்கள் இலக்காக வைத்திருப்பவர்களிடம்தான் பாலுணர்வு அதிகமாக இருக்கும். அதிலும் வக்கிரமான பாலுணர்வு இருக்கும்.

ஷுவாங் ட்சு சொல்கிறார்: ''வேறுபாடுகளைப் புகுத்தா தீர்கள். அப்படிச் செய்தால் உங்களிடம் பிரிவினை வந்துவிடும்.''

அதன்பின் நீங்கள் இரண்டாகிவிடுவீர்கள். உங்களுக்குள் பிளவுகள் புகுந்துவிடும்.

பிளவு வந்தபின் ஒரு மனிதனால் இயல்பாக இருக்க முடியாது. இயற்கை ஒருமைப்பாட்டில் இருக்கிறது. இயற்கையில் ஒரு ஆழமான இசைவு இருக்கிறது. இயற்கையில் எந்தவிதமான முரண்களும் இல்லை. இயற்கை அனைத்தையும் அப்படியே ஏற்றுக் கொள்கிறது. இயற்கை எந்தத் தெரிவும் செய்வதில்லை. இயற்கை தெரிவில்லாத அனைத்தையும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு நிலை.

எந்தத் தெரிவும் செய்யாதீர்கள். கோபம் வரும்போது கோபப்படுங்கள். கோபம் போகும் போது அதை விட்டு விடுங்கள். அதற்காக வருத்தப்படாதீர்கள். குற்ற உணர்வை வளர்த்துக் கொள்ளாதீர்கள். வருத்தமும் குற்ற உணர்வும் இருந்தால் ஏதோ ஒரு வடிவத்தில் கோபம் உங்கள் மனதில் தொடர்ந்து இருந்துகொண்டேயிருக்கும்.

உங்கள் மனதில் உள்ள கோபத்தைத் தொடர்கதை யாக்காதீர்கள். அதற்கு எதிராக எண்ணங்களை ஓடவிடாதீர்கள். கோபம் வரும்போது என்ன செய்யமுடியும்? அது வந்துவிட்டது. அவ்வளவுதான். அது வரவில்லை என்றால் வரவில்லை. இதில் உங்கள் தெரிவிற்கு என்ன வேலை இருக்கிறது?

இந்த நிலையில் ஒரு அற்புதம் நிகழ்வதை உணர்வீர்கள். தெரிவு செய்யவில்லையென்றால் உங்கள் விழிப்புணர்வு அதீதமாக இருக்கும். உங்கள் சக்தியில் பிரிவினை இருக்காது. உங்கள் சக்தி ஒருமைப்பாட்டுடன் இருந்தால் அது, அபரிமிதமாக இருக்கும். - அந்த் நிலையில் சினம் அசாத்தியம். காரணம் சினம் பலவீனத்தின் சின்னம்.. உங்கள் பலவீனம் அதிகமானால் உங்கள் கோபம் அதிகமாகும். உங்கள் பலம் அதிகமானால் கோபம் குறையும். உங்கள் பலம் முழுமையாக இருந்தால் உங்களுக்குக் கோபமே வராது.

அதே போல் உங்கள் பலவீனம் மிகுந்திருந்தால் உங்கள் பேராசை அதிகமாக இருக்கும். பலவீனமானவர்கள் தங்களு டைய பேராசையால்தான் தங்களைப் பாதுகாத்துக் கொள் கிறார்கள். உங்கள் வலிமை அதிகமாகும்போது பேராசை தானாகவே குறைந்துவிடும்.

உங்கள் சக்தி முழுமையாக இருந்தால், உங்களுக்குள் ஒருமையும் இசைவும் இருக்கும். அந்த ஒருமையின் வலிமையில் பேராசை மறைந்துவிடும். ஏனென்றால் பேராசை என்பது ஒரு பலவீனமான, பிளவுபட்ட மனதின் வெளிப்பாடு. நீங்கள் பிளவுபட்டிருந்தால் அங்கே சினம் இருக்கும். அந்த சினத்தை எதிர்த்துப் போராடிக் கொண்டிருப்பீர்கள். அதனால் பிளவு

இன்னும் பெரிதாகும். உங்கள் சக்தி இன்னும் அதிகமாக விரயமாகும். உங்களுக்குள் கொந்தளிப்பு இருக்கும், குழப்பம் இருக்கும், போராடாம் இருக்கும். இசைவு இருக்காது.

தொலைந்த இசைவை மீண்டும் கொண்டு வர முயற்சிக்கும் போது குழப்பம் இன்னும் அதிகமாகும். நீங்கள் முதல் கட்டத்தில் தவறு செய்துவிட்டீர்கள். கடைசிவரை தவறுகள் நடந்துகொண்டே யிருக்கும். முதல் கட்டம் என்ன?

### இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்துவிடுவோம்

சரி இப்போது என்ன செய்வது? நேர், எதிர் இரண்டையும் மறந்துவிடுங்கள். உங்கள் இதயம் அமைதிப்படட்டும். ஒன்று மட்டும் நிச்சயம். நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுவதும் சினத்தை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிறீர்கள். இன்னும் கோபப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறீர்கள். ஒரு முறை ஷுவாங் ட்சு சொல்வதைக் கேட்டுத்தான் பாருங்களேன். அதனால் ஒன்றும் இழப்பு வந்துவிடாது.

பாலுணர்வைத் தவிர்க்க வேண்டும் என்று நினைத்தீர்கள். பாலுணர்வு அதிகமானதுதான் கைகண்ட பலன். அது மட்டும் இல்லாமல் இந்தப் போராட்டத்தின் காரணமாக தூய்மையான பாலுணர்வுகூட இப்போது வக்கிரமாகிவிட்டது. அதில் விஷம் புகுந்துவிட்டது. எனவே ஷுவாங் ட்சு சொல்வதைக் கேளுங்கள் உங்களுக்கு ஒன்றும் நஷ்டம் இல்லை.

பாலுணர்வு தோன்றும் போது பாலுணர்வோடு இருங்கள். பசி வந்தால் உண்பது போல் பாலுணர்வு வரும்போது அதை ஆற்றிக் கொள்ளுங்கள். எதையும் தெரிவு செய்யாதீர்கள். ''இது சரி அது தப்பு'' என்று தீர்ப்பு சொல்லாதிர்கள்.

இயற்கையின் ஒரு பகுதியாக அதனை ஏற்றுக் கொள் ளுங்கள். அந்த ஏற்றலின் ஒரு கட்டத்தில் உங்களுக்குள் ஒரு ஒருமை இருப்பதை உணர்வீர்கள். பாலுணர்வும் காதலாக மாறிவிடும்.

இந்த ஒருமையை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு ஆணிற்குள்ளும் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் இருக்கிறார்கள். அதே போல் ஒவ்வொரு பெண்ணிற்குள்ளும் ஒரு பெண்ணும் ஒரு ஆணும் இருக்கிறார்கள். வெறும் ஆணா கவோ வெறும் பெண்ணாகவோ யாருமே இருப்பதில்லை. அப்படி இருக்கவும் முடியாது. காரணம் நமது பெற்றோரில் ஒருவர் ஆண் மற்றவர் பெண். அந்த இருவருமே நம்முள் சரி பாதியாக இருக்கிறார்கள். உங்கள் தகப்பனில் பாதியையும் உங்கள் தாயில் பாதியையும் உங்களுக்குள் உள்ளடக்கி வைத் திருக்கிறீர்கள். அதனால் நீங்கள் ஆணாகவும் இருக்கிறீர்கள். பெண்ணாகவும் இருக்கிறீர்கள். இரண்டும் சரிபாதி. இது ஒரு ஆழமான பிளவு. இதில் மேலும் பிரிவினை வந்தால் இந்தப் பிளவு இன்னும் ஆழமாகிவிடும். பிளவுகளையும் பிரிவினை களையும் விட்டுத் தள்ளுங்கள். உங்களுக்குள் போராட்டம் வேண்டாம். எதையும் தெரிவு செய்யாதீர்கள். சினமோ, பேராசையோ பாலுணர்வோ - உங்களுக்குள் தோன்றும் உணர்வுகளை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள்.

உங்களால் என்ன செய்ய முடியும்? இயற்கை இந்த உணர்வுகளை உங்களுக்குக் கொடுத்திருக்கிறது. அவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். அவற்றின் விளைவுகளோடு ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் கோபப்பட்டால் வேறு யாரோ கோபப்படுவார்கள். அது கோபத்தின் இயல்பான விளைவு அதையும் ஏற்றுக்கொள்ளுங்கள். அப்படிச் செய்யும்போது உங்களுக்குள் இருக்கும் பிளவு மறையும். ஒருமை தோன்றும். உங்களுக்குள் இருக்கும் பாதித் தகப்பனுக்கும் பாதித் தாய்க்கும் இடையே ஒரு இசைவு ஏற்படும். ஒரு வட்டம் உருவாகும். உள்ளூர ஒரு உச்ச நிலையை அடைவீர்கள். உங்களுக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் உள்ளேயே சந்தித்துக் கொள்வார்கள். சேர்ந்து கொள்வார்கள். அந்தச் சந்திப்பில் அந்த சேர்தலில் உங்கள் ஒருமை தோன்றும். உங்களுக்குள் இருக்கும் பிரிவுகள் மறையும். ஒரு புது இருப்புநிலை பிறக்கும்.

அப்படித் தோன்றும் அந்த ஒருமையின் நிழல்தான் அன்பு. இந்த ஒருமை இல்லாமல் உங்கள் மனதில் தோன்றும் அன்பும்

காதலும் நிஜமானதல்ல. இந்த ஒருமை இல்லாமல் உங்களால் காதலிக்க முடியாது. உங்கள் காதல் ஒரு மாயத் தோற்றம். அது ஒரு பசப்பு வேலை அது ஒரு சூழ்ச்சி. பாலுறவில் சில சலுகைகளைப் பெற நீங்கள் செய்யும் சூழ்ச்சி. அதனால்தான் உங்களுக்கு பாலுறவு கிடைக்கும்போது உங்கள் மனதில் காதல் செத்துவிடுகிறது.

ஒரு பெண்ணோடு (இல்லை ஒரு ஆணோடு) உடலுறவு கொண்டபின் காதல் மறைந்துவிடுகிறது. இருபத்திநான்கு மணி நேரம் கழித்து அந்தச் சக்தி மீண்டும் உங்களிடம் ஊறுகிறது. நீங்கள் அந்தச் சக்தியைச் சேகரிக்கிறீர்கள். மீண்டும் உடலுறவு கொள்கிறீர்கள். அப்போது உங்களிடம் காதல் இருக்கிறது. எனவே உடலுறவு கொள்ள அன்பும் காதலும் ஒரு கருவி. அவ்வளவுதான்.

இதனால்தான் உங்களால் உங்கள் மனைவியையோ கணவனையோ காதலிக்க முடியவில்லை. அது மிகவும் கடினமான காரியமாக இருக்கிறது. எப்படிக் காதலிப்பது? அந்தத் தேவை மறைந்துவிட்டது. காதல் என்பது உடலுறவிற்கு முன்னால் நடக்கும் ஒரு ‘முன் விளையாட்டாக' ஒரு சீண்டலாக மட்டுமே இருக்கிறது.

கணவனிடமோ மனைவியிடமோ அந்த முன் விளையாட்டிற்கு அவசியம் இல்லை. எனக்கு உடலுற்வு வேண்டும் என்று கேட்கும் உரிமை கணவனிடமும் இருக்கிறது. மனைவியிடமும் இருக்கிறது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். காதலியிடம் உடலுறவு கொள்ள வேண்டும் என்றால் அவளைக் கொஞ்ச வேண்டும் தாடையைப் பிடித்துக்கொண்டு கெஞ்ச வேண்டும் பரிசுகள் தர வேண்டும். உடலுறவிற்கு முந்தைய அந்த நிலையைத்தான் நாம் ''தெய்விகக் காதல்'' என்று தப்பாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் மனைவியிடம் அதெல்லாம் தேவையில்லை. நேரடியாக உடலுறவுதான்.

மனைவியைத் தாஜா செய்யத் தேவையில்லை. அவளுக்கும் கணவன் முன் நாணிக் கோணி நிற்க வேண்டிய அவசியம்

இல்லை. அதனால்தான் தம்பதிகள் இடையே காதலே இல்லாமல் போய்விட்டது.

காதல் இருப்பது போல் பாசாங்கு செய்கிறார்கள். அந்தப் பாசாங்கு ஒரு கட்டத்தில் மனதை அழுத்துகிறது.. அதன்பின் உங்கள் வாழ்க்கை அர்த்தமில்லாமல் போய்விடுகிறது.

அதனால்தான் மனிதர்கள் திருமணத்திற்கு வெளியே உறவுகளைத் தேடுகிறார்கள். அதில் ஒரு ஊக்கமும் உற்சாகமும் கிடைக்கிறது. உங்கள் மனதில் மீண்டும் காதல் அரும்ப ஆரம்பிக்கிறது. புதுக் காதல் உறவை லேசாக எடுத்துக் கொள்ள முடியாது. புதுக் காதலியைக் கவரும்படி எதையாவது செய்ய வேண்டும். அவர்களைக் காதலுக்குத் தூண்ட வேண்டும். அவர்களை மயக்கும் முன் கொஞ்சமாவது தூண்டுதல் தேவை. கடைசியில் கூட்டிக் கழித்துப் பார்த்தால் காதல் இந்தத் தூண்டுதலில்தான் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

அப்படித்தான் இருக்க வேண்டும். உங்களுக்குள் ஒருமை மலர்ந்தபிறகுதான் உண்மையான காதல் மலரும். அதற்கு முன்னால் நிஜமான காதல் வர வாய்ப்பேயில்லை. பாலுணர்வு என்ற வார்த்தை மிகவும் நுட்பமானது. அதன் ஆணி வேர் உங்களுக்குள் இருக்கும் பிரிவுதான்.. பாலுணர்வு பிரிவைத்தான் குறிக்கிறது. ஆண்பால் பெண்பால் என்ற பிரிவு அழுத்த மாகும்போதுதான் பாலுணர்வு ஏற்படுகிறது.

உங்களுக்குள்ளே பிளவுகள் இருந்தால் பாலுணர்வு இருக்கும். நீங்கள் ஆண் துணைக்கோ அல்லது பெண் துணைக்கோ ஏங்குகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது என்ன நிகழ்கிறது? உங்களில் ஒரு பகுதி மற்றொரு பகுதியைச் சந்திக்க விழைகிறது. ஆனால் அந்த இன்னொரு பகுதியை உங்களுக்கு வெளியே சந்திக்க விரும்புகிறீர்கள்.

ஒரு சில கணங்களுக்கு அப்படி வெளியே சந்திக்கலாம். மீண்டும் உங்களைத் தனிமை சூழ்ந்து கொண்டுவிடும். காரணம் வெளியில் நடக்கும் சந்திப்பு நிரந்தரமாக இருக்காது. எனவே பாலுறவு தாற்காலிகமாத்தான் இருக்கும். ஏனென்றால் வெளியில்

இருப்பது எப்போதும் வெளியில்தான் இருக்கும். என்றுமே அது உங்களுக்கு வேற்றிடம்தான்.

ஆனால் உங்கள் காதலனையோ காதலியையோ உங்களுக்குள்ளேயே சந்தித்தால் .. அந்தச் சந்திப்பு நிரந்தரமாக இருக்கும். அந்த உன்னதமான சந்திப்பில் உங்கள் மனதில் இருக்கும் பிரிவுகளும் பிளவுகளும் அழிந்துவிடும். உங்களுக்குள் ஒரு ரசவாத மாற்றம் நிகழும். உங்களுக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் சந்தித்தால் நீங்கள் ஒன்றாகிவிடுவீர்கள். அந்த ஒருமையில் உண்மையான காதல் மலரும். அன்பு தழைக்கும்.

அந்த அன்பு புத்தரின் தன்மை. ஏசுநாதரின் தன்மை. ஷுவாங் ட்சுவின் இயல்பு. இப்போது அது உங்களிடம் இல்லை. போலி நாணயங்களை வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களால் நிஜமாகக் காதலிக்க முடியாது. இதைப் புரிந்து கொள்வது நல்லது. இல்லாவிட்டால் நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொண்டிருப்பீர்கள். மற்றவர்களையும் ஏமாற்றுவீர்கள்.

இதயம் சரியாக இருந்தால் ''நேர்'' ''எதிர்'' வாதங்களை மறந்து விடுவோம்.

***உந்துதல் இல்லை***

***வற்புறுத்தல் இல்லை***

***தேவைகள் இல்லை***

***ஈர்ப்புகள் இல்லை.***

***உங்கள் விவகாரங்கள் உங்கள் அதிகாரத்தில்***

***நீங்கள் ஒரு சுதந்திர மனிதர்.***

இப்போது உங்களிடம் சில உந்துதல்கள், மன உறுத்தல்கள் சிலவற்றைச் செய்யவேண்டும் என்ற கருத்து வெறி எல்லாமே இருக்கிறது. உங்கள் உடலும் மனமும் உங்களைச் சில செயல்கள் செய்யச் சொல்லித் தூண்டுகின்றன. அதைச் செய்யாமல் இருக்கும் போது உங்களுக்கு ஒரு மாதிரியான இருப்புக்

கொள்ளாத நிலை ஏற்படுகிறது. அதைச் செய்தாலோ குற்ற உணர்வு வந்துவிடுகிறது. இதிலிருந்து எப்படி தப்பிப்பது?

காமம் அதிகமாகும் போது பாலுறவை நாடினால் மனதில் குற்ற உணர்வு உண்டாகிறது. ஏதோ தவறு செய்துவிட்டோம் என்ற கசப்பான உணர்வே மிஞ்சுகிறது. சரி என்று உணர்வுகளை அடக்கிவைத்தால் உங்களிடம் உள்ள சக்தி அதிகரித்துக் கொண்டே போகிறது. சக்தி ஒரு இடத்தில் தேங்கி நிற்காது. அதற்கு ஒரு வடிகால் வேண்டும். உங்களுக்கு உள்ளே சேகரிக்கப்படும் சக்தி உங்களைத் தூண்டுகிறது. வற்புறுத்துகிறது. வற்புறுத்தல்களும் மன உறுத்தல்களும் நிறைந்ததாகவே உங்கள் வாழ்க்கை இருக்கிறது. நீங்கள் செய்தாலும் செய்யாவிட்டாலும் மாட்டிக் கொள்வீர்கள். உடலுறவு கொண்டாலும் சலிப்பு வந்துவிடுகிறது. கனவுகள் கலைகின்றன. நீங்கள் எதையும் சாதிக்கவில்லையோ என்ற வெறுமை உணர்வு மிஞ்சுகிறது. உடலுறவைப் பற்றி நீங்கள் பலகாலம் கனவு கண்டிருக்கிறீர்கள். பல வகைகளில் அதனைக் கற்பனை செய்து பார்த்திருக்கிறீர்கள். யதார்த்தத்திற்கும் உண்மை நிலைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. உடலுறவில் நீங்கள் கனவு கண்டது வேறு. நேரில் நடந்தது வேறு. இரண்டிற்கும் ஏணி வைத்தாலும் எட்டாது.

உடலுறவைப் பற்றிய கனவுகளும் கற்பனைகளும் அதிக மாக அதிகமாக யதார்த்தம் இன்னும் அதிகம் சலிப்பூட்டுவதாகவே இருக்கும். பின் ஒரு கட்டத்தில் விரக்தியடைந்து ''நாம் ஏன் இப்படி நேரத்தையும் சக்தியையும் வீணடிக்க வேண்டும்? தேவையில்லாத குழப்பங்கள் உள்ள உறவை ஏன் நாட வேண்டும்?'' என்று நினைக்கத் தொடங்குவீர்கள். உறவு என்று வந்துவிட்டால் இன்னொருவரை உள்ளே அனுமதிக்க வேண்டி யிருக்கிறது. அந்த இன்னொருவர் தன்னுடைய பிரச்சினை களையும் உள்ளே கொண்டு வருவார். அதனால் ஒவ்வொரு உறவும் ஒரு சுமையாகிவிடுகிறது. உறவுகளில் சுதந்திரம் இல்லை. ஒவ்வொரு உறவும் ஒருவிதமான உந்துதலினாலும் வற்புறுத்தலினாலும் ஏற்படுகிறது.

யாருடைய இதயம் இயல்பான ஒருமைப்பாடுடன் விளங்கு கிறதோ அவனே சுதந்திரமான மனிதன். அந்த ஒருமைப்

பாட்டைப் பெற அவன் இமயமலைக்கோ திபெத் நாட்டுக்கோ ஓட வேண்டிய அவசியம் இல்லை.. அவனும் இங்கேதான் இருப்பான். அவன் தன்மை மாறுபட்டதாய் இருக்கும். அவனிடம் அன்பு, கருணை, காதல் எல்லாமே இருக்கும். உறவுகள் இருக்கும். ஆனால் இவை யாவும் அவனைப் பந்தப்படுத்தாது. எந்த உறவும் உந்துதலின் காரணமாக ஏற்பட்ட உறவாக இருக்காது.

அவன் உறவுகள் எல்லாமே பகிர்ந்து கொள்ளும் முயற்சியாக இருக்கும். அவன் தன் இருப்புநிலையைப் பகிர்ந்து கொள்வான். அவனிடம் அன்பு அதிகமாக இருப்பதால் அதனைப் பகிர்ந்து கொள்வான். அவனிடம் கொடுக்க நிறைய இருக்கிறது. அதனால் கொடுக்கிறான். அவன் கொடுக்கும் பரிசை நீங்கள் ஏற்றுக் கொண்டால் உங்களுக்கு நன்றி உடையவனாக இருப்பான்.

நீங்கள் காட்டும் அன்பு ஒரு உத்திதான். உடலுறவைப் பெற கையாளப்படும் உத்தி. அவன் அன்பில் எந்தவித உள்நோக்கமும் இருக்காது. உங்களிடமிருந்து எதையும் பெற வேண்டும் என்பது அவன் நோக்கமாக இருக்காது. அவனுடைய அன்பு ஒரு பகிர்வு மாத்திரமே.

அவன் உங்களிடம் அன்பைக் கொடுக்கிறான். அவன் கொடுக்கக் கொடுக்க அவனிடம் அவன் மனதில் அன்பு இன்னும் அதிகமாகச் சுரக்கிறது. அவனுடைய இருப்புநிலை வேறு ஒரு பரிமாணத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது.

மலர்த் தோட்டத்தைப் பாருங்கள். மலர்கள் செடியிலேயே இருந்துவிட்டால் மேலும் மலர்கள் தோன்றாது. இதை நான் கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். ஒரு ரோஜாச் செடியில் ஐந்து ரோஜாக்கள் மலர்கின்றன. அதனை யாருமே பறிக்கவில்லை. அதற்கு மேல் அந்தச் செடியில் மலர்கள் மலராது. மலர்ந்த ஐந்தும் விரைவில் வாடி வதங்கிவிடும். ஆனால் ஐந்து மலர்களைப் பறித்தால் விரைவில் அதே இடத்தில் பத்து மலர்கள் மலரும். அந்தப் பத்தையும் பறித்தால் இன்னும் இருபது மலர்கள் மலரும். பறிக்கப் பறிக்க மலர்கள் இன்னும் அதிகமாகத் தோன்றும்.

நீங்கள் ஒருமை நிலையில் இருந்து செயல்படும் போது ஒரு மலர்ச்செடியாகத்தான் இருக்கிறீர்கள். நீங்கள் உங்கள் அன்பின் மலர்களைப் பிறருக்குக் கொடுக்கக் கொடுக்க இன்னும் அதிகமாக உங்களுக்குள் மலரும். ஆனந்தம் அதிகமாகும். பரவசம் பன்மடங்காகிப் பெருகும். பகிர்ந்து கொள்ளாவிட்டால் எல்லாமே விரைவில் வாடிவிடும்.

அடிப்படைத் தத்துவம் என்னவென்றால் எதற்கும் ''நேர்'' ''எதிர்'' நிலைகளை எடுத்துக் கொள்ளாதீர்கள். அப்போதுதான் சுதந்திரமான மனிதனாக இருப்பீர்கள்.

**சுலபமாக இருப்பதே சரி.**

நீங்கள் இதற்கு நேர்மாறாகத்தான் செய்கிறீர்கள். நீங்கள் கடினமானதையே தேர்ந்தெடுக்கிறீர்கள். கடினமானதுதான் சவாலாக இருக்கிறது. ஒரு சவாலைச் சந்திக்கும்போதுதான் நம் அகந்தை தோன்றுகிறது. உங்களைப் பொறுத்தமட்டில் கடினமாய் இருப்பதே சரி. சுலபமாக இருப்பது சரியில்லை. சுலபமாக இருப்பதை எதிர்த்து வெற்றிக்கொள்வதில் பெருமிதம் இல்லை. அதனால் உங்கள் அகந்தை நிறைவு பெறாது. செய்யும் வேலை கடினமாக இருந்தால்தான் உங்கள் அகந்தை அதைச் செய்து முடிக்கும் போது பரவசமடையும். அதைச் செய்தேயாக வேண்டும் என்ற உத்வேகம் இருக்கும். எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டுவிட வேண்டும். நிலவில் கால் பதிக்க வேண்டும். அதுதான் சாதனை.

எவரெஸ்ட் சிகரத்தை முதலில் தொட்ட எட்மண்ட் ஹிலாரியிடம் கேட்டார்கள்.:

''ஏன்? எதற்காக இவ்வளவு முயற்சி? இவ்வளவு கஷ்டம்? நூறு வருடங்களாக பல மனிதர்கள் இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். பலர் இறந்தும் போயிருக்கிறார்கள். அந்த முயற்சியில் ஈடுபட்ட பலர் திரும்பி வரவில்லை. எவரெஸ்டைத் தொட வேண்டும் என்ற அந்த விபரீத ஆசையின் பின்னணி என்ன? அந்த சிகரத்தின் உச்சியில் அப்படி என்ன பிரமாதமாக இருக்கிறது?''

இதில் வேடிக்கை என்னவென்றால் எவரெஸ்ட் சிகரம் இந்திய எல்லைக்கு வெகு அருகில் இருந்தாலும் இந்தியர்கள் அதன் உச்சியைத் தொட வேண்டும் என்று முயற்சி செய்ய வில்லை. அது திபேத் நாட்டின் எல்லைக்கு அருகில் இருந்தாலும் அவர்களும் அதைப் பற்றி அதிகம் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

ஒவ்வொரு ஆண்டும் மேலை நாடுகளிலிருந்து பல குழுக்கள் இதற்காகவே வரும். எட்மண்ட் ஹிலாரி வெற்றி கரமாகச் சிகரத்தின் உச்சியைத் தொட்டுவிட்டுத் திரும்பியவுடன் அவரை இதே கேள்வியைத்தான் கேட்டார்கள்.

அவர் சொன்னார்:

''எவரெஸ்ட் அங்கே நின்று கொண்டிருக்கிறது. அதை வெல்லாவிட்டால் நமக்கு ஒருமாதிரியாக இருக்கிறது. அது வெல்லப்படாமல் அங்கே அவ்வளவு பெரிதாக நிற்பது நமது அகந்தைக்கு விடப்பட்ட சவாலாகத் தோன்றியது. எவரெஸ்ட் அங்கே நிற்கும் ஒரே காரணத்திற்காகத்தான் அதன் மேல் ஏறி அதனை வென்றேன்.''

கடினமான செய்கை நம்மை ஈர்க்கிறது. செயலின் கடினம் அதிகமாக அதிகமாக அதன் ஈர்ப்பும் அதிகமாகிறது. அந்த முயற்சி மதிப்புமிக்கதாகிறது. ஒரு வேளை நீங்கள் அந்த சிகரத்தைத் தொட்டுவிட்டால் உங்கள் அகந்தை இன்னும் விரிவடையும் ஒரு வேளை அந்த முயற்சியில் தோல்வியுற் றாலும் உங்கள் அகந்தை அதிகமாகத்தான் இருக்கும். காரணம் நீங்கள் சிகரத்தைத் தொட வேண்டும் என்று முயன்றீர்களே! மற்றவர்கள் அதைக்கூடச் செய்யவில்லையே!

சுலபமான ஒரு விஷயத்தைச் செய்வது சாதனையே இல்லை.. எளிதான விஷயத்தில் தோற்றுவிட்டால் இன்னும் மோசம். ''இதைக் கூடவா உன்னால் செய்யமுடியவில்லை?'' என்று ஊரார் பழிப்பார்கள். அதனால்தான் சொல்கிறேன் கடினமான செயல் உங்கள் மனதைத் தன் பால் இழுக்கிறது. - காந்தம் இரும்பை ஈர்ப்பது போல் ஈர்க்கிறது.

சுலபமாக இருப்பதே சரி.

அதனால் சரியான எதுவும் அகந்தையைக் கவர்வதில்லை. தப்பான விஷயங்கள்தான் அகந்தையைக் கவர்கின்றன.

ஒரு மனிதன் குற்றவாளி ஆகிறான். - காரணம் குற்றம் புரிவது பின் போலீசாரிடம் மாட்டாமல் தப்பிப்பது எல்லாமே கடினமான காரியம். அரசியல்வாதியாக ஆசைப்படுகிறான். ஏனென்றால் அரசியல் இன்று கடினமான காரியமாகிவிட்டது. பணம் சம்பாதிக்கவேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறான். ஏனென்றால் இன்றைய தேதியில் பணம் சம்பாதிப்பது கடினமான செயல். கடுமையான செயல்களுக்கு ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது அவற்றை உடனே செய்ய வேண்டும் என்று மக்கள் பைத்தியக்காரத்தனமாகப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பெரிதாக ஒன்றும் சாதிப்பதில்லை. ஆனால் எவரெஸ்ட் அங்கே நின்று கொண்டிருப்பதை ஒரு சவாலாக நினைத்து அதனை வெல்லப் பாடுபடுகிறார்கள்.

வாழ்க்கையில் வெற்றி பெற்ற மனிதர்களைப் பாருங்கள். சாதித்தவர்களைப் பாருங்கள். அவர்கள் என்ன சாதித்திருக் கிறார்கள்?

அவர்கள் எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டுவிட்டார்கள் சரி. ஆனால் அந்த சிகரத்தில் உச்சியில் ஒன்றும் இல்லையே! சில நிமிடங்கள் சிகரத்தின் உச்சியில் இருந்துவிட்டு அவர்கள் திரும்பி வரத்தானே வேண்டும்? நாட்டின் தலைவர்கள், ஜனாதிபதிகள், பிரதம மந்திரிகளைப் பாருங்கள். கோடிக் கணக்கில் பணம் சம்பாதித்தவர்களைப் பாருங்கள். அவர்கள் அப்படி என்ன சாதித்துவிட்டார்கள்? ஒன்றுமே இல்லை. அது அவர்களுக்கே தெரியும். தங்களுக்குள் ஆழமாகப் பார்த்துக்கொண்டால் தாங்கள் செய்தது ஒன்றும் இல்லை எந்தக் கோடீஸ்வரனும், புரிந்து கொள்வான். வெற்றி பெற்ற எல்லா அரசியல் தலைவர்களுக்கும் இது தெரியும்.

ஆனால் அவர்கள் ஒரு சாதனையைச் செய்திருக்கிறார்கள். அது இருப்பதிலேயே மிகவும் கஷ்டமான சாதனை. இந்த ஒரு

சாதனைக்காகவே வரலாறு அவர்களை நினைவில் வைத் திருக்கும். சரித்திரம் எப்போதும் முட்டாள்களை நினைவில் வைத்திருக்கும். காரணம் முட்டாள்கள்தான் வரலாறு படைக் கிறார்கள். முட்டாள்கள்தான் வரலாறு எழுதுகிறார்கள். ஷுவாங் ட்சு வரலாறு படைக்கவில்லை. காரணம் - சுலபமாக இருப்பதே சரி.

சுலபமாக இருப்பதையே செய்துகொண்டு போனால் உங்களால் எப்படி வரலாறு படைக்க முடியும்? லட்சக்கணக்கான பேரைக் கொன்று ஒரு போரில் வெற்றி பெற்றால் நீங்கள் சரித்திரம் படைக்கலாம்.

காலையில் எழுந்தவுடன் நீங்கள் பல் விளக்கினால் அது வரலாறு ஆகுமா? சரி. காலையில் ஒரு பாடலைப் பாடிக் கொண்டே குளிக்கிறீர்கள். அது எப்படி வரலாறு ஆகும்? உணவு உண்டபின் உறங்கச் செல்கிறீர்கள். கனவுகள் இல்லாத நிம்மதியான தூக்கம். அது எப்படி வரலாறு ஆகும்?

எதையும் எளிதாக எடுத்துக் கொள்பவர்களையும் இயல்பாக வாழ்பவர்களையும் வரலாறு கண்டுகொள்ளாது. வரலாறு பைத்தியக்காரர்களையும் வெறி பிடித்தவர்களையும்தான் கண்டு கொள்ளும். ஒரு வகையான கருத்து வெறி உள்ளவர்களையும் பிரச்சினையை உண்டாக்குபவர்களையும் பற்றித்தான் எழுதும்.

கடினமாக இருப்பது தவறாக இருக்கும்.

***சுலபமாக இருப்பதே சரி.***

எளிதாக இருங்கள். எதையும் எளிதாக எடுத்துக் கொள்ளுங்கள். வரலாற்றில் இடம்பிடிக்க முயற்சி செய்யாதீர்கள். அந்த வேலையை பைத்தியக்காரர்களிடமும் முட்டாள்களிடமும் விட்டுவிடுங்கள். வரலாற்றுக்கு வெளியே இருங்கள்.

வரலாறு வாழ்க்கை என்று இரண்டுக்குமே ஆசைப்படா தீர்கள். நன்றாக வாழ வேண்டுமா இல்லை வரலாற்றில் இடம் பிடிக்க வேண்டுமா? இதில் ஒன்றை மட்டும்தான் உங்களால் தேர்ந்தெடுக்க முடியும். வாழ்க்கையைத் தெரிவு செய்யுங்கள். வரலாறு வேண்டாம்.

நீங்கள் வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்தால் நீங்கள் ஒரு எளிய அமைதியான மனிதராக இருப்பீர்கள். சிறு சிறு விஷயங்களில் ஆனந்தம் காணும் சிறந்த மனிதராக இருப்பீர்கள். உங்களால் யாருக்கும் எந்தப் பிரச்சினையும் வராது. உங்களை யாரும் கண்டுகொள்ள மாட்டார்கள். நீங்கள் இருப்பதே யாருக்கும் தெரியாது. யாருக்கும் உங்களைப் பற்றித் தெரியாது. தெரியவும் வேண்டாம். நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள் வாழ்க்கையை அனுபவிப்பீர்கள். பரவசத்தின் உச்சத்தைத் தொடுவீர்கள்.

**எளிதாக இருப்பது சரி.**

**சரியான இடத்திலிருந்து தொடங்குங்கள்.**

**எளிதாக இருப்பீர்கள்.**

இதுதான் அடையாளம். எதை வேண்டுமானாலும் செய் யுங்கள். அதைச் செய்யும் போது எளிதாக, இயல்பாக, சுலபமாக இருக்கிறதா? நீங்கள் செய்வது சரி. அது எளிதாக இல்லை யென்றால் அதில் ஏதோ தவறு இருக்கிறது. நீங்கள் அழுத்தத் துடன் வாழ்ந்தால் கடினமான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள். உங்களால் தூங்க முடியவில்லையா? தளர்வாக இருக்கமுடியவில்லையா, எல்லா வற்றையும் விட்டுவிட்டு ஹாயாக இருக்க முடியவில்லையா? அப்படியென்றால் நீங்கள் கடினமான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள். கடினமான, செயற்கரிய செயல்களைச் செய்ய முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள்.

உங்கள் வாழ்க்கை முறையை மாற்றுங்கள் நீங்கள் தவறான பாதையில் இருக்கிறீர்கள்.

**சரியான இடத்திலிருந்து தொடங்குங்கள்.**

**எளிதாக இருப்பீர்கள்**

சரியான இடத்திலிருந்து தொடங்குங்கள் எப்போதும் ஓய்வு நிலையில் இருப்பீர்கள். அதுதான் அடையாளம். நீங்கள் என்ன செய்தாலும் பரவாயில்லை. என்ன நிகழ்கிறது என்று

கவனியுங்கள். நீங்கள் அமைதியாக ஓய்வாக, அழுத்தமில்லாமல் இருந்தீர்களென்றால் நீங்கள் செய்வது சரி. இது ஒன்றுதான் அடையாளம். இது ஒன்றுதான் அளவுகோல். எது உங்களுக்குச் சரியோ அது மற்றவர்களுக்குச் சரியாக இருக்காது. என்பதையும் மறந்துவிடக்கூடாது. அதனால் எல்லாருக்கும் ஒரே விதி பொருந்தாது. ஒவ்வொரு தனிமனிதனும் தனக்கு எளிதானது எது, சரியானது எது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். அதைக் கண்டுபிடித்துவிட்டால் போதும். அதன்பின் இந்த உலகம் என்ன சொல்கிறது என்பதைக் கவனிக்காதீர்கள். தங்கள் விதிகளை உங்கள் மேல் புகுத்த வேண்டும் என்று ஒரு கூட்டமே காத்துக்கொண்டிருக்கிறது. இவர்கள் உங்கள் பகைவர்கள். இவர்கள் குற்றவாளிகள். இவர்களை அருகில் சேர்க்காதீர்கள்.

வாழ்க்கையைப் புரிந்து கொண்ட யாருமே உங்கள் மேல் எதையும் திணிக்க வேண்டும் என்று நினைக்க மாட்டார்கள். அவர்கள் உங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொள்ள உங்களுக்கு உதவி செய்வார்கள்.

***தொடர்ந்து எளிமையாக இருங்கள்.***

***நீங்கள் சரியாக இருப்பீர்கள்.***

அதன்பின் எளிதான வாழ்க்கையைத் தேர்ந்தெடுங்கள்.. சிறு குழந்தையைப் பாருங்கள். சந்தோஷமாகத் தூங்குகிறது. மகிழ்ச்சியாக உண்கிறது, நடனமாடுகிறது. எந்த நேரத்திலும் அபரிமிதமான சக்தியுடன் ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் எதையும் மிகவும் சுலபமாக எடுத்துக் கொள்கிறது. ஆனால் இந்த அணுகுமுறையைப் பின்பற்றினால் உங்களை யாரும் கண்டுகொள்ள மாட்டார்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இல்லை ஒரு படி மேலே போய் மக்கள் உங்களை ஒரு பைத்தியக்காரன் என்று நினைக்கலாம். நீங்கள் எப்போதும் முகத்தை உம் என்று வைத்துக் கொண்டு சீரியஸ் சிக்கந்தராக இருந்தால் உங்களால் பயன் பெறலாம் என்று நினைப்பார்கள். நீங்கள் எப்போதும் சிரித்துக் கொண்டேயிருந்தால் - வாழ்க்

கையை ஒரு விளளயாட்டாக எடுத்துக் கொண்டால் - உங்களை ஒரு முட்டாள் என்று நினைப்பார்கள். நினைத்துவிட்டுப் போகட்டும்.

முட்டாளாக இருங்கள். ஆனால் எளியவராக இருங்கள். புத்திசாலியாக இருந்து கடினமான வழியைத் தேர்ந்தெடுக் காதீர்கள். எளிமையில்லாத வாழ்க்கையில் எந்த ஞானமும் மலர வாய்ப்பில்லை. அப்படியே மலர்ந்தாலும் அது போலி ஞானமாகத்தான் இருக்கும். இரவல் ஞானமாகத்தான் இருக்கும். எளிமையாக இருப்பது அப்படி ஒன்றும் கடினமான காரியம் இல்லையே? இதைப் புரிந்து கொண்டால் உங்கள் பாதையைக் கண்டுபிடிப்பது சுலபம்.

***தொடர்ந்து எளிமையாக இருங்கள்.***

***நீங்கள் சரியாக இருப்பீர்கள்.***

ஷுவாங் ட்சுவின் வார்த்தைகள் அழகானவை. அவருக்கு இணையாக யாருமே இப்படி ஒரு தத்துவத்தை இவ்வளவு எளிதாகச் சொன்னதில்லை. அவரைப் போல் ஒரு தனித்தன்மை வாய்ந்த ஞானி இதுவரை பிறந்ததில்லை. அவர் சொல்வதைக் கவனியுங்கள்.

***தொடர்ந்து எளிமையாக இருங்கள்.***

***நீங்கள் சரியாக இருப்பீர்கள்.***

நன்றாகக் கேளுங்கள் அகிம்சையைக் கடைபிடியுங்கள் அப்போதுதான் சரியாக வாழமுடியும் என்று அவர் சொல்ல வில்லை. உண்மையாக இருந்தால்தான் சரியாக இருப்பீர்கள் என்றும் சொல்லவில்லை. கோபம் கொள்ளாதீர்கள். அது தவறான வழி என்றும் அவர் சொல்லவில்லை. பாலுணர்வு கூடாது என்று சொல்லவில்லை.

எளிய வழியைத் தேர்ந்தெடுங்கள். தொடர்ந்து எளிமையாக இருங்கள். சரியாக இருப்பீர்கள் என்றுதான் சொல்கிறார்.

அதன்பின் உங்கள் பாதையைத் தேர்ந்தெடுங்கள் என்று சொல்கிறார். அவர் உங்களிடம் சாரத்தைத் தருகிறார். வழிகாட்ட

வில்லை. எப்போதும் உண்மையாக இருக்கும் தத்துவத்தைச் சொல்கிறார்.

***எளிதாய் இருக்கச் சரியான வழி***

***சரியான வழியை. மறப்பது***

ஏனென்றால் சரியான வழியில் போகிறோமோ இல்லையோ என்று அதிகமாகக் கவலைப்பட்டால் நீங்கள் எளிமையைத் தொலைத்துவிடுவீர்கள்.. ஷுவாங் ட்சுவிடம் இருக்கும்போதும் எளிதாக இருங்கள் எளிமையைத் தொலைப்பது மிகவும் சுலபம். அதனால் உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறார் ஷுவாங் ட்சு.

கடினமான வாழ்க்கையைத் தேர்ந்தெடுப்பதில் நீங்கள் கில்லாடியாயிற்றே! விட்டால் ஷுவாங் ட்சுவையே குழப்பி விடுவீர்களே!

***எளிதாய் இருக்கச் சரியான வழி***

***சரியான வழியை மறப்பது***

***எளிதாய் இருக்கச் சரியான வழி***

***சரியான வழியை மறப்பதும்***

***பயணம் சுலபம் என்பதை மறப்பதும்தான்.***

ஆமாம் பயணம் சுலபம் என்பதையும் மறந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் எளிமையின்மேல் ஒரு பற்று ஏற்பட்டு அதனால் பின்னால் எளிமையே ஒரு கல்லைப் போல் உங்கள் நெஞ்சை அழுத்தத் தொடங்கிவிடும்.

ஷுவாங் ட்சுவிடம் போய் ''நான் இப்போது எளிதாகி விட்டேன்'' என்று நீங்கள் பீற்றிக் கொண்டால் அவர் என்ன சொல்வார் தெரியுமா?

''போ இதனையும் தூக்கியெறி. இதை ஏன் இன்னும் சுமந்து கொண்டிருக்கிறாய்?''

நீங்கள் எளிமையாக இருக்கிறீர்கள். எளிதானவற்றைச் செய்கிறீர்கள். அதில் எந்தவித கொள்கையோ கோட்பாடோ இல்லை. சரி, எளிமையாக இருந்தால் அதை ஏன் சொல்ல வேண்டும்? அதை ஏன் சுமக்க வேண்டும்? அதைச் சுமக்க ஆரம்பித்தால் கூடிய சீக்கிரம் அதுவே ஒரு புண்ணாகிவிடும்.

எளிமையாக இருப்பவன் மிகவும் சாதாரணமாக இருப்பான். கொஞ்சம் மறதிக்காரனாகக் கூட இருப்பான். தான் எளிதாக இருக்கிறோம் என்பதே அவனுக்குத் தெரியாது. அதுகூடத் தெரியாமல் சாதாரண வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

அப்படி வாழும் மனிதனைப் எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம். எளிமைக்கென்று ஒரு வாசனை இருக்கிறது. எப்படி அழுத்தத்துக்கு ஒரு வாசனை இருக்கிறதோ அதே போல் எளிமைக்கென்று ஒரு பிரத்தியேக வாசனை இருக்கிறது. ஆனால் எளிமையின் வாசனை உங்களை அவ்வளவாகக் கவராது.

நீங்கள் அழுத்தத்துடன் வாழ்கிறீர்கள். அழுத்தத்துடன் வாழ்பவர்கள்தான் உங்களைக் கவர்கிறார்கள். செயல் வீரர்கள், சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பவர்கள், சிலையைப் போல் இருப்பவர்கள்தான் உங்களை ஈர்க்கிறார்கள். அப்படி இருப்பது கஷ்டமான காரியம். ஒரு குழந்தை உங்களைக் கவர்கிறதா? குழந்தை விளையாடுவதைப் பார்த்தால் உங்களுக்குச் சலிப்புத் தட்டிவிடும். ஷுவாங் ட்சு உங்களைக் கவர மாட்டார். உண்மையிலேயே எளிய வாழ்க்கை வாழும் ஒருவர் உங்கள் மேல் எந்தவித தாக்கத்தையும் ஏற்படுத்தமாட்டார்.

ஆனால் இதைப் புரிந்து கொண்டால் எளிமையாக வாழ்பவரிடம் நீங்கள் வேறுவிதமான அதிர்வுகளை உணரலாம். எளிமையாக இருப்பவர் முன்னால் நீங்கள் இன்னும் லேசாகி விட்டதாக உணர்வீர்கள்.

பதற்றமில்லாமல் ஒய்வு நிலையில் இருக்கும் ஒருவர் உங்களைச் சாந்தப்படுத்துவார். மன அழுத்தத்துடன் வாழும் ஒருவர் உங்களுக்கு அதே மன அழுத்தத்தைக் கொடுப்பார்.

இயல்பாக வாழும் ஒரு மனிதரிடம் இருக்கும் போது உங்கள் வீட்டில் இருப்பதைப் போன்ற ஒரு அமைதி இருக்கும். . அவர் உங்களை எந்த விதத்திலும் வற்புறுத்தமாட்டார். உங்களை எந்த விதத்திலும் மாற்ற முயற்சிக்க மாட்டார். அவர் உங்களை உள்ளபடியே ஏற்றுக் கொள்வார். அவர் உங்களை ஏற்றுக் கொண்டதனால் நீங்களும் உங்களை முழுமையாக ஏற்றுக் கொள்வீர்கள். அதன் பின் இயற்கை எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளும். இயற்கை வந்துவிட்டால் அதன் பின் ஓடும் நதியாகிய நீங்கள் சேர வேண்டிய கடல் வெகு தூரத்தில் இல்லை என்பதை உணர்வீர்கள்.

இன்று இது போதும்.

ஆன்மாவிற்கு ஒரு அரண் உண்டு

கண்ணுக்குத் தெரியாத ஒரு பாதுகாவலன் அதைக் காக்கிறான்

அதை எந்த ஆபத்தும் அணுக முடியாது

பாதுகாவலனின் செயல்கள் தன்னுணர்வற்றவை

அவன் திட்டமிட்டு, சிந்தித்து ஒரு நோக்கத்துடன் செயல்பட்டால் அவன் செயல்கள் சிதறும். வழிதவறிப் போகும்.

தன்னுணர்வோடு செய்யப்படும் ஆர்ப்பாட்டம்

தாவோவின் தன்னுணர்வற்ற நிலையையும் அதன் நேர்மைப்பண்பையும் பாதிக்கும்.

அந்த ஆர்ப்பாட்டங்கள் பொய்களே.

இந்த இரண்டுங்கெட்டான் வழியில் ஒருவன் ஆர்ப்பரித்தால்

உலகம் வெகுண்டெழுந்து அவனைச் சிறைப் படுத்தும்.

அதன்பின் தாவோவின் நேர்மை அவனைக் காப்பாற்றாது.

ஒவ்வொரு புதுச் செயலும் ஒரு புதுத் தோல்வியே.

அந்தச் செயல்கள் பகிரங்கமாகப் பட்டப்பகலில் நிகழ்ந்தால் அவன் மனிதர்களால் தண்டிக்கப் படுவான்.

**ரகசியமாகத் தனியறையில் நடந்தால் ஆவிகள் அவனைத் தண்டிக்கும்.**

**நேர்மையின் பொருளை ஒவ்வொருவரும் புரிந்துகொள்ளட்டும்.**

**வேஷம் போடுவதைத் தவிர்க்கட்டும்.**

**ஆன்மாவின் அரணில் அவன் தனித்திருக்கும் போது அவன் மனிதர்களுடனும் ஆவிகளுடனும் நல்லுறவுடன் இருப்பான்.**

**சரியான வழியில் நடப்பான்.**

மனிதன் மட்டும்தான் துன்பத்தில் உழலுகிறான். மனிதனின் இதயத்தைத் தவிர வேறு எங்கும் துன்பமும் துயரமும் இல்லை. மொத்த இயற்கையும் மகிழ்ச்சியில் திளைத்திருக்கிறது. மொத்த இயற்கையும் எந்த அச்சமும் கவலையும் இல்லாமல் கொண் டாடிக் கொண்டிருக்கிறது. இருப்புநிலை இருந்து கொண்டே இருக்கிறது. மனிதனுக்குத்தான் பிரச்சினை. ஏன்?

சில மனிதர்களுக்கு மட்டும் பிரச்சினை என்றால் ஏதோ வியாதி என்று ஒதுக்கிவிடலாம். ஆனால் சில மனிதர்கள்தான் - வெகுசில மனிதர்கள்தான் - பிரச்சினை இல்லாமல் இருக் கிறார்கள். புத்தர், ஏசு, ஷுவாங் ட்சு போன்றவர்கள் அபூர்வமாகத் தான் தோன்றுகிறார்கள். அவர்கள் எப்போதும் இயல்பு நிலையி லேயே இருக்கிறார்கள். அவர்களின் வாழ்க்கை பரவசநிலையி லேயே இருக்கிறது. எந்தத் துன்பமும் கவலையும் இல்லாமல் அவர்கள் வாழ்கிறார்கள். மற்றவர்கள் எல்லாம் துன்பம் என்னும் நரகத்தில் கிடந்து உழல்கிறார்கள்.

எங்கோ ஒரு பெரிய தவறு நடந்திருக்கிறது. ஆமாம், மனிதன் தவறு செய்துவிட்டான். இங்கே நான் ஒரு குறிப்பிட்ட மனிதனைப் பற்றிச் சொல்லவில்லை. மொத்த சமுதாயமே தவறு செய்திருக் கிறது. அது வேர்கள் வரை சென்று பரவியிருக்கிறது. ஒரு குழந்தை பிறந்தவுடன் சமுதாயம் அந்தக் குழந்தையை இயல்புக்குப் புறம்பான வழியில் இழுத்துச் செல்கிறது. எந்த

வழியில் போய் மற்றவர்கள் எல்லாம் சித்திரவதையை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்களோ அந்த வழியில் அந்தக் குழந்தையை இழுத்துச் செல்கிறது.

மனவியல் நிபுணர்கள் எந்தக் காலகட்டத்தில் ஒரு குழந்தை தவறான பாதையில் செல்லத் தொடங்குகிறது என்று ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். நான்கு வயதில் அந்தப் பயணம் தொடங்குகிறது என்று அவர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். நான்கு வயதாகும் போது அந்தக் குழந்தை சமுதாயத்தின் ஒரு அங்கமாக மாறுகிறது. ஏறக்குறைய அந்த சமயத்தில் குழந்தை தன் இயல்புத்தன்மையை இழந்துவிடுகிறது.

நான்கு வயதாகும் வரை மரங்கள் மலர்கள் பறவைகள் விலங்குகள் நிறைந்திருக்கும் ஒரு உலகின் அங்கமாக இருக்கிறது குழந்தை. அந்த வயது வரும் வரை குழந்தையிடம் ஒரு வகையான 'காட்டுத்தன்மை' இருக்கிறது.

அதன்பின் அதனைப் பழக்கிவிடுகிறோம். சமுதாயம் உள்ளே வந்துவிடுகிறது. அதன்பின் அந்தக் குழந்தை தன் வாழ்க்கையை ஒழுக்க விதிமுறைகள் சரி - தவறு கோட்பாடுகளுக்கு ஏற்ற வகையில் மாற்றியமைத்துக் கொள்கிறது..

அதன்பின் அந்தக் குழந்தை முழுமையாக இருப்பதில்லை. அனைத்திலும் பிளவு வந்துவிடுகிறது. நகரும் போது எப்படி நகர வேண்டும் என்று யோசிக்கத் தொடங்குகிறது. என்ன செய்ய வேண்டும் என்ன செய்யக்கூடாது என்ற குழப்பத்தில் ஆழ்கிறது. ''செய்ய வேண்டியது'' என்ற தாத்பர்யம் அதன் மனதினுள் புகுந்துவிடுகிறது. அந்த ''வேண்டியது:'' என்ற தாத்பர்யம் ஒரு வியாதி. குழந்தையின் மனதில் வேற்றுமை உணர்வு புகுந்துவிடுகிறது. குழந்தையின் தெய்விகத்தன்மை போய்விடுகிறது. அருள் நிலையிலிருந்து குழந்தை கீழே விழுந்துவிடுகிறது

இதுதான் ஆதாம் கீழே விழுந்த கதை. அறிவு என்ற மரத்தின் பழத்தை உண்ணும் வரை ஆதாம் இயல்பாக இருந்தான். இறைவனின் தோட்டத்தில் ஒரு குழந்தையாக இருந்தான். அந்த இறைவனின் தோட்டம் இன்னும் இங்கே இருக்கிறது. அதில்

இன்னும் மரங்கள் இருக்கின்றன. விலங்குகள் அதில் வாழ்கின்றன. சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் அந்தத் தோட்டத்தில்தான் இயங்கிக் கொண்டிருக்கின்றன

இறைவனின் அந்தத் தோட்டம் (ஏதேன் தோட்டம் - Garden of Eden) இங்கேதான் இருக்கிறது. நிகழ்காலத்தில் இருக்கிறது. ஆனால் நீங்கள் அதற்கு வெளியே இருக்கிறீர்கள். ஆதாம் ஏன் அந்தத் தோட்டத்திலிருந்து துரத்தியடிக்கப்பட்டான்? அறிவு என்னும் மரத்தின் பழத்தை உண்டதால். நான்கு வயதாகும் போது ஒவ்வொரு ஆதாமும் ஒவ்வொரு ஏவாளும் இறைவனின் தோட்டத்திலிருந்து விரட்டியடிக்கப்படுகிறார்கள்..

ஆதாம் ஏவாள் கதை இறந்தகாலத்தில் நடந்த கதை இல்லை. ஒவ்வொரு குழந்தையும் பிறக்கும் போதும் அது நடக்கிறது. ஒவ்வொரு குழந்தை பிறக்கும் போதும் ஒரு ஆதாமோ ஒரு ஏவாளோ தோன்றுகிறார்கள். நான்கு வயதுவரை அவர்களுக்கு எந்த அறிவும் இல்லை. நான்கு வயதாகும்போதுதன் அந்தக் குழந்தை எது என்னவென்று புரிந்துகொள்ளத் தொடங்குகிறது. அதன்பின் அது பாதையைத் தவறவிடுகிறது. அதன்பின் அது இயல்புநிலையில் இருக்காது. தன்னிச்சையாக செயல்படும் தன்மையை இழக்கிறது. அதன் பின் அந்தக் குழந்தை விதிமுறைகளின்படி வாழத் தொடங்குகிறது.

விதிமுறைகளின்படி வாழத் தொடங்கிவிட்டால் துன்பம் தான். உங்களால் தன்னியல்பாக அன்புகாட்ட முடியாது, உங்களால் வாழ்க்கையை அனுபவிக்க முடியாது, ஆட முடியாது பாட முடியாது. ஒரு குறிப்பிட படிவத்தில்தான் போக வேண்டும் என்று சமுதாய விதிமுறைகள் சொல்கின்றன.. வாழ்க்கையை ஒரு படிவத்திற்குள் அடக்கிவைக்க முடியாது. வாழ்க்கை ஒரு நீரோட்டம் போல் தங்குதடையின்றி ஒடிக் கொண்டிருக்க வேண்டும்.

விதிகளின்படி வாழ ஆரம்பித்தால் நீங்கள் எதை நோக்கிச் செல்கிறீர்கள் என்று தெரியும். ஆனால் அடியாழத்தில் இயக்கம் நின்றுவிட்டது. அதனால் நீங்கள் உள்ளூர சாக ஆரம்பித்து

விட்டீர்கள். ஒரு படிவம் உங்களைச் சிறைப்படுத்திவிட்டது. அந்த சிறைத்தண்டனை நுட்பமானது. அதீத விழிப்புணர்வுடன் இருந்தால் ஒழிய நீங்கள் சிறைப்பட்டிருப்பதே உங்களுக்குத் தெரியாது. உங்களைச் சுற்றி ஒரு கவசம் இருக்கும்..

இந்தக் காலத்தின் மிகச் சிறந்த சிந்தனையாளர்களில் ஒருவரான வில்ஹெம் ரெய்ச் (Wilhelm Reich) எதேச்சையாக இந்தக் கவசம் இருப்பதைக் கண்டுபிடித்தார். ஆனால் சமுதாயம் அவரைப் பைத்தியம் என்று சாடியது. அவரைச் சிறையில் அடைத்தார்கள். சிறையில் பெருங்கவலையில் மாண்டார். அவருடைய கவலை எல்லாம் இதுதான். அவர் சொன்னது முற்றிலும் உண்மை.. ஆனால் அவர் சொன்னதைக் கேட்க யாரும் இல்லை. ஷுவாங் ட்சு இந்தச் சூத்திரத்தில் என்ன சொன்னாரோ அதைத்தான் அவரும் சொன்னார்.

வில்ஹெம் ரெய்ச்சின் முக்கியமான கண்டுபிடிப்பு இதுதான். ஒவ்வொரு மனநோய்க்கும் காரணம் குறிப்பிட்ட உடற்பாகத்தில் இருக்கிறது. உடலில் ஏதோ ஒரு பகுதி இறந்துவிட்டது. மரத்து விட்டது. இல்லை இறுகிப்போய் விட்டது. அந்த இறுக்கத்தைத் தளர்த்தவில்லை என்றால் அந்த அடைப்பை அகற்றவில்லை என்றால் மீண்டும் உங்கள் உடலின் சக்தி ஓடுவதற்கு வழியை ஏற்படுத்தவில்லையென்றால் உள்ளே இருக்கும் ஆன்மாவிற்கு விடுதலை கிடைக்காது. அந்த சிறையின் சுவர்களை உடைத் தெறிய வேண்டும். அந்தக் கவசம் கடாசப்பட வேண்டும்.

உதாரணமாக இரண்டு வயதுக் குழந்தையை அதன் பிறப்புறுக்களோடு விளையாடவிடாமல் தடுத்துவிடுகிறோம். தன் உடலின் பாகங்களோடு விளையாடுவதால் ஒரு குழந்தைக்கு இயல்பான மகிழ்ச்சி கிடைக்கிறது இயல்பான பரவசநிலையை அது அடைகிறது.

சிறுகுழந்தைகளைக் கூர்ந்து கவனித்தால் இந்த உண்மை விளங்கும். ஆண் குழந்தையும் சரி பெண் குழந்தையும் சரி தன் உடல் பாகங்களோடு விளையாடுகிறது. தன் கட்டைவிரலை வாயில் வைத்துச் சப்புகிறது. அந்த நிலையில் குழந்தையைப்

பார்த்தால்தான் பரவசநிலை என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியும். பரவசத்தின் நடுக்கம் அதன் உடல் முழுவதும் பரவுகிறது. பரவச அலைகள் பரவுவதைக் கண்கூடாகப் பார்க்கலாம். குழந்தை ஒரு கிறுக்குத்தனமான பரவசநிலையில் இருக்கிறது. ஆனால் நமக்கு அது காட்டுத்தனமாகத் தோன்றுகிறது. மிருகத்தனமாகத் தோன்றுகிறது. ஏனென்றால் அந்த இயல்பு நிலையை நாம் அடியோடு மறந்து விட்டோம். அதனால்தான் நாம் குழந்தையை விளையாட விடாமல் தடுத்துவிடுகிறோம்.

இப்படித் தடுப்பதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. ஒன்று அந்த மாதிரி இயல்பான இன்பத்தை அந்தக் குழந்தையின் பெற்றோர்கள் அனுபவித்திருக்கவில்லை. எனவே பெற்றோர் களின் மனதில் ஒரு லேசான பொறாமை உணர்வு இருக்கிறது. இரண்டாவது காரணம் பெற்றோர்கள் குழந்தைகளாக இருந்த போது அவர்கள் அப்படிச் செய்ததை யாரோ தடுத்திருப்பார்கள். மனிதனின் மனம் செய்ததையே திருப்பித் திருப்பிச் செய்யும் ஒரு இயந்திரம். அவர்கள் பெற்றோர்கள் அவர்களுக்கு என்ன செய்தார்களோ அதையே அவர்கள் தங்கள் குழந்தைக்கும் செய்வார்கள்.

அவர்கள் மனதில் ஒரு குற்ற உணர்வு தோன்றுகிறது. ஐயோ, குழந்தை சந்தோஷமாக இருக்கிறதே! அப்படியென்றால் ஏதோ தப்பு செய்கிறது என்றுதான் அவர்கள் நினைக்கிறார்கள். இதை மட்டும் நன்றாக நினைவில் கொள்ளுங்கள். குழந்தை சந்தோஷமாக இருக்கும் போது அதன் மனதில் தவறு என்ற கோட்பாட்டை விதைக்காதீர்கள். சந்தோஷமாக இருப்பதே தவறு என்ற ஆபத்தான எண்ணம் அதன் மனதில் பதிந்துவிடும்.

இந்த குதர்க்க வேலைதான் காலம் காலமாக நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போதெல் லாம் உங்கள் மனதில் குற்ற உணர்வு தோன்றும் நீங்கள் வருத்தப் படும்போதெல்லாம் குற்ற உணர்வு இல்லாமல் மனது லேசாகிவிடும்.

உள்ளத்தில் மகிழ்ச்சியின் துள்ளல் மிகும்போது 'எங்கோ ஏதோ தப்பு நடந்து கொண்டிருக்கிறது' என்று நீங்கள் நினைக்கிறீர்கள். வருத்தமாக இருந்தால் அந்த குற்ற உணர்வு உங்களுக்குத் தோன்றுவதில்லை. ஒரு குழந்தை மகிழ்ச்சியாக இருக்கும் போது. சமுதாயம் கூடாது என்று தடுக்கிறது. குழந்தைக்கு எது சரி எது தவறு என்பதே தெரியாது. எந்தக் குழந்தைக்கும் ஒழுக்க விதிகள் தெரியாது. குழந்தைக்கு ஒழுக்கம் என்று ஒன்றும் இல்லை. குழந்தைக்குத் தெரிந்ததெல்லாம் சந்தோஷமும் வருத்தமும்தான். அந்த வகையில் குழந்தை ஒரு காட்டு விலங்கைப் போல்தான் செயல்படுகிறது.

''நிறுத்து'' என்று சொன்னால் குழந்தை என்ன செய்கிறது? அந்த சமயத்தில் பரவச அலைகள் அதன் உடலில் தலை முதல் கால்வரை நகர்ந்து கொண்டிருக்கின்றன. பாலுணர்வு என்ற முதல் நிலையில் இருந்து ஸஹஸ்ராரம் என்ற ஏழாவது நிலைவரை பரவச அலைகள் பரவிக்கொண்டிருக்கின்றன. குண்டலினி சக்தி விழித்துக் கொண்டுவிட்டது. இயக்கநிலலயில் இருக்கும் குண்டலினியுடன்தான் ஒவ்வொரு குழந்தையும் இந்த உலகத்தில் வருகிறது. நீங்கள் நிறுத்து என்று சொல்லிவிட்டீர்கள். குழந்தை என்ன செய்யும்? உடனே சுவாசிப்பதை நிறுத்திவிடும். எதையாவது நிறுத்த வேண்டுமென்றால் முதலில் சுவாசத்தை நிறுத்த வேண்டும்.

குழந்தை சுவாசத்தை நிறுத்திவிட்டு வயிறை உள்ளே எக்கிக் கொள்ளும். அப்படிச் செய்தால்தான் அந்தப் பரவச அலைகளை நிறுத்த முடியும். குழந்தையின் மார்பிற்கும் வயிறுக்கும் இடையே உள்ள தசைச்சுவர் கல்லைப் போன்று ஆகிவிடும். மேலும் மேலும் அது வயிறை எக்கிக் கொள்ளும். அதனால் ஆழமான சுவாசம் இருக்காது. அந்தத் தசைச்சுவர் ஒரு கவசமாகிவிடும். சுவாசம் அந்தச் சுவரைத் தாண்டி போகாது. காரணம் சுவாசம் இப்போது நீண்டதாக இல்லை. ஆழ்ந்த நீண்ட சுவாசம் நம் உடலின் பாலுணர்வு மையம் வரை சென்று திரும்பும். சுவாசம் பாலுணர்வு மையத்தைத் தொடும்போது நீங்கள் இயல்பாகவே மகிழ்ச்சியடைவீர்கள். சுவாசம் பாலுணர்வு மையத்தைத் தொட்டு

விட்டால் அலைகள் உடலெங்கும் கிளம்பும். சக்தி நீரோட்டம் போல் ஓட ஆரம்பிக்கும்.

ஆனால் யாருமே ஆழமாகச் சுவாசிப்பதில்லை.

நான் மக்களிடம் கன்னா பின்னாவென்று மூச்சு விடுங்கள் என்று சொல்கிறேன். அவர்கள் அது ஆபத்தானது என்று என்னிடம் புகார் சொல்கிறார்கள். ''எங்களுக்குப் பயமாக இருக்கிறது'' என்று சொல்கிறார்கள். என்ன பயம்? கன்னா பின்னாவென்று மூச்சுவிட ஆரம்பித்தால் நீங்கள் மறுபடியும் காட்டுத்தனத்தைப் பெறுவீர்கள். காட்டுத்தனம் திரும்பிவிட்டால் உங்கள் மார்பிற்கும் வயிறுக்கும் இடையே கவசமாக இயங்கும் தசைச்சுவரைத் தாண்டி உங்கள் சுவாசம் போகும். உங்கள் பாலுணர்வு மையத்தைத் தொடும்.

இப்படித்தான் இந்தச் சமுதாயம் உங்களை அமுக்கி வைத்திருக்கிறது. உங்கள் சுவாசம் பாலுணர்வு மையத்தைத் தொடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறது. உங்கள் சுவாசம் உங்கள் பாலுணர்வு மையத்தைத் தொடவில்லை என்றால் இன்பத்தின் ஊற்றுக்கண் அடைக்கப்படுகிறது.

உங்கள் வயிறு பாறையைப் போல் இறுகிவிடுகிறது. அது எதையும் கீழே போகவிடாமல் தடுத்துவிடுகிறது. உங்கள் உடல் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. நீங்கள் உங்கள் உங்கள் உடலின் கீழ்ப்பகுதியை ஒதுக்கித் தள்ளிவிடுகிறீர்கள். கீழே இருப்பது கீழ்மையானது என்று நினைக்கிறீர்கள். இப்போது உங்கள் மனதில் மதிப்பீடு வந்துவிட்டது. மேலே இருக்கும் பகுதி மேலானது. சிறந்தது, நல்லது என்று நினைக்கிறீர்கள். கீழே இருக்கும் பகுதி கெட்டது என்று நினைக்கிறீர்கள். உடலின் கீழே இருக்கும் பகுதியில் கெட்ட ஆவி இருப்பதாக நினைக்கிறீர்கள். அது தவறு.

ஆதாமை இறைவனின் தோடத்திலிருந்து துரத்திவிட்டார்கள். ஏவாளையும் துரத்திவிட்டார்கள். ஏன்? அவர்கள் அறிவென்ற மரத்தின் பழத்தை உண்டுவிட்டார்கள். அறிவின் பலன் நச்சுத்தன்மை வாய்ந்தது. பாகுபாட்டையும் பிரிவினைகளையும் நீங்கள் தூக்கி எறிய வேண்டுமென்றால் அறிவையும் சேர்த்தே

கடாச வேண்டும். மீண்டும் குழந்தைகளாக வேண்டும். அப்போதுதான் அந்தக் கவசத்தை உடைக்க முடியும் ஊடுருவ முடியும். ஆனால் அதை உடைக்கும் போது உங்களுக்கு வேதனையாக இருக்கும். காரணம் உங்கள் அகந்தைதான் அந்தக் கவசம்.

அகந்தை இருப்பது உங்களுக்கு ஒரு வகையில் சுகமாகத் தான் இருக்கிறது. நீங்கள் ஒழுக்கமாக இருக்கிறீர்கள். அதனால் மற்றவர்களைவிட மேல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

அந்தக் கவசத்தை உடைத்து எறிந்தால் குழப்பம் ஏற்படும். முதலில் உங்களுக்குக் கிறுக்குப் பிடிக்கும். பின் கிலி பிடிக்கும். பயம் வந்துவிட்டால் உள்ளே இருப்பதை அமுக்கி வைக்க விரும்புவீர்கள். அதனால் மீண்டும் கவசத்தை அணிவீர்கள். இப்போது கவசத்தை இன்னும் பலமுள்ளதாகச் செய்வீர்கள். உங்கள் சிறைத்தண்டனை நுட்பமானது. வெளியே போகவே உங்களுக்கு அச்சமாக இருக்கிறது அந்தச் சிறைதான் உங்களைப் பாதுகாப்பது போன்ற ஒரு பிரமையை ஏற்படுத்துகிறது.

ஒரு ஆரம்பப் பள்ளியில் ஆசிரியை தன் மாணவர்களுக்குப் புவியீர்ப்பு விதிகளைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தார். முடிவாக, புவியீர்ப்பு விதி என்று ஒன்று இருப்பதால்தான் நம்மால் இந்த பூமியில் இருக்க முடிகிறது என்று சொன்னார். ஒரு மாணவன் - சிறு குழந்தை அவன் - சற்றே புதிரோடு எழுந்து நின்றான்.

''என்னப்பா உன் சந்தேகம்?''

''நீங்கள் சொன்னதில் ஒன்றே ஒன்று புரியவில்லை. புவியீர்ப்பு விதியால்தான் நாம் பூமியில் இருக்கிறோம் என்று சொன்னீர்கள். புவியீர்ப்பு விதி சட்டமாக்கப்படுவதற்கு முன்னால் நாம் எப்படி இந்த பூமியோடு ஒட்டிக் கொண்டு இருந்தோம்?''

சமுதாயத்தின் காரணமாகத்தான் நீங்கள் இங்கே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒழுக்க விதிகளாலும் அவற்றோடு சேர்ந்த அபத்தங்களாலும்தான் நீங்கள் இங்கு

இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். பைபிள், குரான், பகவத் கீதை போன்ற புனித நூல்களினால்தான் நீங்கள் இங்கே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அபத்தம்! இயற்கைக்கு எந்த விதிகளும் சட்டங்களும் கிடையாது. அதற்கே உரித்தான சில உள்விதிகள் இருக்கின்றன. ஆனால் அந்த விதிகளை மனிதன் நிர்ணயிக்கவில்லை. அந்த விதிகளுக்கும் மனிதர்களின் அங்கீகாரம் தேவையில்லை. வாழ்க்கையும் உயிர்களும் அந்த விதிகளைப் பின்பற்றுகின்றன. நீங்கள் உள்ளே புகுந்து குழப்பம் செய்யாவிட்டல் உங்கள் இலக்கை எளிதாக அடைவீர்கள். உங்கள் குறுக்கீடு இருந்தால் பிரச்சினைதான். அதனால் உங்களுக்குப் பிரச்சினையோ துன்பமோ வேதனையோ இருந்தால் நீங்கள் அந்த விதிகளின் செயல்பாட்டில் குறுக்கிடு கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அந்தக் குறுக்கிடுதலை நிறுத்தும் வரை எதுவுமே சாத்தியம் இல்லை.

ஷுவாங் ட்சு நமக்குச் சொல்லும் செய்தி இதுதான். ''இயற்கையின் செயல்பாட்டில் குறுக்கிடாதீர்கள்.'' இயற்கையை அதன் வேலையைச் செய்ய அனுமதியுங்கள். அதனோடு சேர்ந்து இயங்குங்கள். அதனை நம்புங்கள். நீங்கள் இயற்கையி லிருந்துதான் தோன்றினீர்கள். இயற்கைதான் உங்கள் தாய். இயற்கையே உங்கள் மூலாதாரம். ஒருநாள் மீண்டும் நீங்கள் இயற்கைக்குத்தான் திரும்புவீர்கள். அதுதான் நம் இறுதி இலக்கு. இதற்கிடையில் ஏன் இந்தக் குறுக்கீடும் சண்டையும்?

இந்தச் சண்டை நம்முடனே பிறந்தது. நீங்கள் உங்கள் குழந்தைப் பருவத்திற்குப் பின்னோக்கிச் செல்ல வேண்டும். எந்தக் காலகட்டத்தில் இந்தச் சமுதாயம் உள்ளே புகுந்து உங்களை இயற்கையின் செயல்பாட்டில் குறுக்கிட வைத்தது என்பதைப் பார்க்க வேண்டும். ஒரு அடிப்படையான விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள்: உங்கள் வாழ்க்கைப் பாதையில் ஏதாவது தவறு நிகழ்ந்தால் அதனை அறிவுபூர்வ மாகப் புரிந்து கொள்வதன் மூலம் திருத்த முடியாது. காரணம் அந்தத் தவறு உங்கள் வாழ்க்கைப் பாணியாக மாறிவிட்டது. அந்தத் தவறு உங்கள் உடலில் உங்கள் தசைகளில் உங்கள் எலும்புகளில் ஆழப் பதிந்திருக்கிறது.

நீங்கள் பின்னோக்கிச் செல்ல வேண்டும். தியானமுறைகள் எல்லாமே நீங்கள் பின்னோக்கிச் செல்வதற்கு உதவுகின்றன. நீங்கள் இயல்புநிலைக்குத் திரும்ப வேண்டுமென்றால் நீங்கள் உங்கள் இறந்தகாலத்தை மீண்டும் ஒரு முறை வாழ்ந்தாக வேண்டும்

தினமும் இரவு படுக்கையில் படுத்ததும் இந்தப் பின் னோக்கிச் செல்லும் பயிற்சிக்காக ஒரு மணி நேரம் ஒதுக்குங்கள். முதலில் கொஞ்சம் சிரமப்பட்டு முயல வேண்டும். ஆனால் போகப்போக முயற்சி தேவைப்படாது. நீங்கள் மகிழ்ச்சியை அனுபவிக்கத் தொடங்குவீர்கள். நீங்கள் பின்னோக்கிச் செல்லச் செல்ல உள்ளத்தில் ஒரு குதூகலம் ஏற்படும். பரந்து விரிந்து கிடப்பது இயற்கை. மனிதன் இயற்றிய விதிகள் எல்லாம் மிகவும் குறுகலானவை.

அந்த விதிகள் எல்லாம் குகைகள் போன்றவை. உள்ளே செல்லச் செல்ல இன்னும் குறுகலாகும். இப்படியே போனால் கடைசியில் இரு இடத்தில் போய் முட்டிக் கொள்ளும். அது ஒரு முட்டுச்சந்தாக இருக்கும். அதற்கு மேலே போக முடியாது. பின் அந்தக் குகையே உங்கள் கல்லறையாகிவிடும். இப்படித்தான் ஒவ்வொருவரும் மாட்டிக் கொள்கிறார்கள்.

நீங்கள் அப்படி மாட்டிக் கொள்ளக் கூடாது என்று நினைத்தால் இரவு உறங்கச் செல்லும் முன் கண்களை மூடிக் கொண்டு பின்னோக்கிச் செல்ல முயலுங்கள். உங்கள் கடந்த காலத்தை மீண்டும் வாழ முயலுங்கள். முயற்சி மென்மையாக இருக்கட்டு.ம் அவசரப்பட வேண்டாம். இது ஒருநாளில் முடியும் செயலல்ல. மூன்று மாதங்கள்கூட ஆகலாம். மெதுவாக நகருங்கள். கடந்தகாலத்தை நினைத்துப் பார்த்தால் மட்டும் போதாது. அந்தக் காலத்தை மீண்டும் ஒரு முறை கற்பன்னயில் வாழ்ந்தாக வேண்டும். நினைத்துப் பார்ப்பதால் எந்தப் பயனும் இல்லை. ஏனெனில் நினைத்து பார்ப்பதும் ஒரு அறிவு சார்ந்த செய்கையே. மீண்டும் ஒரு முறை உணர்வுபூர்வமாக வாழ்ந்து பாருங்கள்.

அந்த நிகழ்வுகள் எல்லாம் மீண்டும் நடப்பது போல் உணருங்கள். முதலில் வெறும் நினைவுகளாக இருக்கும். பின் நிகழ்வுகளை அசைபோடுவதைப் போன்று இருக்கும். பின் அந்த நிகழ்வுகளில் மீண்டும் ஒரு முறை வாழ்வது போன்ற ஒரு உணர்வு ஏற்படும்.

போகப் போக அதுவே நிஜமாகிவிடும். காரணம் அமுக்கிவைக்கப்பட்ட முழுமையற்ற உங்கள் ஆன்மா அங்கே இருக்கிறது. அது வெளியே வரத் துடிக்கிறது. பின்னோக்கிச் செல்லுங்கள். மூன்றே வாரங்களில் உங்களுக்கு தெரிந்துவிடும் : ''இதுதான் தடுப்புச்சுவர். இதற்கு முன்னால் நான் இயல்பாக சுதந்திரமாக இருந்தேன். இந்தத் தடுப்புச்சுவர்தான் என் பிரச்சினைகளுக்கு மூலகாரணம்.''

ஒரு காலகட்டத்தில் உங்கள் தாய் தந்தையை அந்தத் தடுப்புச்சுவருக்கு அருகில் பார்ப்பீர்கள். அதனால்தான் அந்தச் சுவரை நீங்கள் முற்றிலுமாக மறந்துவிட்டீர்கள்.

நீங்கள் பின்னோக்கிச் செல்லும் போது உங்களால் நான்கு வயதிற்கு முன்னால் செல்ல முடியாது. தடுப்புச்சுவரைத் தாண்டிச் செல்ல முடியாது. அது பெரிதாக இருக்கும். உங்களை முற்றிலுமாகத் தடுத்து நிறுத்திவிடும். உங்களால் ஏன் நான்கு வயதிற்கு முன்னால் செல்ல முடியவில்லை என்று பார்க்க வேண்டும். ஏன் இந்த அபரிமிதமான மறதி? உங்கள் மனம் இருந்தது. நீங்கள் மகிழ்ந்தீர்கள். துன்பப்பட்டீர்கள். இன்னும் பலவிதமான அனுபவங்களைப் பெற்றீர்கள். ஏன் அதையெல்லாம் இப்போது மறந்துவிட்டீர்கள்?

உண்மையில் நீங்கள் எதையும் மறக்கவில்லை. தடுப்புச் சுவரின் காரணமாக அந்த அனுபவங்களை உங்கள் உணர்வின்மை நிலையில் புதைத்து வைத்துவிட்டீர்கள். அதனால்தான் ஒவ்வொருவரும் 'குழந்தைப் பருவம் இனிமையாக இருந்தது' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அது ஒரு சொர்க்கம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது சொர்க்கம் இல்லை. ஆனால் உங்களுக்கு அது நினைவில்லை. அந்த இடத்தில் உங்கள் மனம் வெற்றிடமாக இருக்கிறது.

மெதுவாகப் பின்னோக்கிச் செல்லுங்கள். மேலும் பல விஷயங்கள் மேலே வரலாம். பழைய குப்பை முழுவதையும் கிளறியாக வேண்டும். உங்களுக்கு வியர்க்கும். உடல் நடுங்கும். பயமாக இருக்கும். உங்கள் மனம் உங்களைப் பார்த்துக் கூச்சல் போடும். ''இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வருங்காலத்திற்கு வா'' என்று மனம் கத்தும். மனம் எப்போதுமே அப்படித்தான். உங்கள் மனம் எதிர்காலத்தில் இருந்தால் கடந்தகாலம் சேதாரமில்லாமல் பத்திரமாக இருக்கும் அல்லவா?

ஆனால் நீங்கள் உண்மையிலேயே தியானிக்க விரும்பினால் முதலில் உங்காள் கடந்த காலத்திற்குச் செல்லுங்கள். பல வழிகள் பிரிந்து செல்லும் ஒரு சந்திப்பில் தவறான வழியின் சென்று விட்டீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அதை எப்படிச் சரி செய்வீர்கள்? மீண்டும் அந்தச் சந்திப்புக்குச் சென்று இந்த முறை சரியான பாதையைத் தேர்ந்தெடுத்துச் செல்ல வேண்டும். இதைத் தவிர வேறு எந்த வழியிலும் நீங்கள் பாதை மாறிய தவறைச் சரிசெய்ய முடியாது. நீங்கள் இருக்கும் இடத்திலிருந்து சரியான பாதையில் போக முடியாது.

தவறான பாதையில் கொஞ்ச தூரம் பயணம் செய்து வந்துவிட்டீர்கள். நீங்கள் இருக்கும் இடத்தில் சரியான பாதை கிடையாது. அதனால் நீங்கள் வந்தவழியில் போயேயாக வேண்டும்.

உங்கள் கடந்த காலத்தை மீண்டும் வாழுங்கள் என்று சொல்லும் போது அதை உங்கள் உடலில் நிகழ விடுங்கள் என்பதுதான் பொருள். உங்கள் பிறப்புறுகளை நீங்கள் முதன் முதலில் தொட்ட அந்த நாள் நினைவில் இருக்கிறதா? அன்று உங்கள் தாயோ தந்தையோ ''சீச்சீ! அதைத் தொடாதே! அசிங்கம். கையை எடு!'' என்று கத்தியிருப்பார்கள். அவர்களின் முகபாவம், கண்பார்வை, உடலசைவு எல்லாமே உங்களைக் கண்டித் திருக்கும். உங்கள் தந்தை அதே முகபாவத்துடன் அதே பார்வையுடன் அதே சைகையுடன் அதே கண்டிக்கும் குரலுடன் நின்று கொண்டிருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அதோடு நிற்காமல் நீங்கள் அன்று எப்படி இருந்தீர்கள்

என்பதையும் கற்பனை செய்து கொள்ளுங்கள். உங்களை நீங்களே சுருக்கிக் கொண்டு உங்கள் உணர்வு நிலையை இன்னும் குறுக்கிக் கொண்டு, நீங்கள் பட்ட காயம் அனுபவித்த வலி, வேதனை எல்லாவற்றையும் கற்பனை செய்து கொள்ளுங்கள்.

ஒரு குழந்தை எதிர்த்து நிற்க முடியாத பரிதாபகரமான நிலையில் இருக்கிறது. நீங்கள் என்ன சொன்னாலும் அதை அது கேட்டேயாக வேண்டும். நீங்கள் சொல்வது அதன் இயல்பு நிலைக்கு எதிராக இருந்தாலும் அதைக் கேட்டேயாக வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறது. ஏனென்றால் நீங்கள் இல்லாமல் உங்கள் குழந்தையால் வாழமுடியாது. அது உங்களைச் சார்ந்திருக்கிறது.

அந்தக் குழந்தையின் கையறுநிலையைப் பாருங்கள். அதை உங்கள் உடலில் உணருங்கள். இதை நினைக்கும் போது நீங்கள் அழலாம். விம்மி விம்மி அழலாம். காலை உதைத்துக் கொண்டு குழந்தையைப் போல அழலாம். உங்கள் தந்தையை அடித்தால் என்ன என்று கூடத் தோன்றும். அன்று நீங்கள் உங்கள் தந்தையை அடிக்கவில்லை. அதனால்தான் அந்த அனுபவம் முழுமை பெறாமல் போய்விட்டது.

அந்தக் கடந்தகாலத்தை மீண்டும் வாழ நீங்கள் முற்படும் போது உங்கள் தந்தையை மானசீகமாக அடித்துவிடுங்கள். அப்படி அடித்தால்தான் பிறகு அவரை நீங்கள் மன்னிக்க முடியும்.

அதனால்தான் எந்தக் குழந்தையாலும் தன் பெற்றோர்களை மன்னிக்க முடிவதில்லை. உங்கள் கடந்தகாலத்திற்குத் திரும்பிச் செல்லுங்கள். அந்தக் கணங்களில் மீண்டும் வாழுங்கள். அப்போதுதான் உங்களுக்குள் இன்னும் ஆழமாகச் செல்ல முடியும்.

ஆழமாகப் போகப் போக ஒரு நாள் அந்த குகை காணாமல் போய்விடும். இப்போது நீங்கள் பரந்துவிரிந்த வானத்தின் அடியில் இருப்பீர்கள். மீண்டும் குழந்தையாகியிருப்பீர்கள். அந்த நிலையில் மீண்டும் வாழ்க்கையைத் தேர்ந்தெடுங்கள். அப்போதுதான் ஷுவாங் ட்சுவை உங்களால் புரிந்து கொள்ள முடியும். வில்ஹெம் ரெய்ச்சின் சிகிச்சை முறை உங்களுக்கு

உதவக் கூடும். ஷுவங் ட்சுவின் பாதையில் வில்ஹெம் ரெய்ச்சின் முறையை அழகாகப் பயன்படுத்தலாம்,.

இப்போது சூத்திரத்தைப் பார்ப்போம்.

**ஆன்மாவிற்கு ஒரு அரண் உண்டு**

**கண்ணுக்குத் தெரியாத ஒரு பாதுகாவலன் அதைக் காக்கிறான்**

**அதை எந்த ஆபத்தும் அணுக முடியாது**

**பாதுகாவலனின் செயல்கள் தன்னுணர்வற்றவை**

**அவன் திட்டமிட்டு, சிந்தித்து ஒரு நோக்கத்துடன் செயல்பட்டால்**

**அவன் செயல்கள் சிதறும். வழிதவறிப் போகும்.**

உங்கள் ஆன்மாவை இயற்கையே பாதுகாக்கிறது. அது குறித்து நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்கள் மனதில் அச்சமும் பாதுகாப்பின்மை உணர்வும் எழத் தேவையில்லை. காரணம், மொத்த இருப்புநிலையும் உங்களைப் பாதுகாக்கிறது. அண்ட சராசரங்களும் உங்களைப் பாதுகாக்கின்றன.

ஆனால் அந்த காவலும் உதவியும் உணர்வின்மை நிலையிலிருந்து வருகிறது. அது திட்டமிட்டு நடப்பதில்லை. அதனை நீங்கள் மாற்றியமைக்க முடியாது. எல்லாவற்றையும் விட்டுவிடும் மனப்பாங்கில் இருந்தால்தான் பிரபஞ்சத்திலிருந்து பாதுகாப்பு கிடைக்கும். எதையும் நிறுத்தி நிதானித்துத்து திட்டமிட்டு அறிவின் மூலம் செய்ய முற்பட்டால் அழுத்தம்தான் மிஞ்சும். மன அழுத்தம் உங்களைக் குறுகச் செய்துவிடும். நீங்கள் குறுகிவிட்டால் பிரபஞ்சத்தின் முடிவற்ற சக்தி உங்கள் மூலம் வெளிப்பட முடியாது. நீங்கள் பயப்படும் போதெல்லாம் சுருங்குகிறீர்கள். அப்படிச் சுருங்குதல் உடலளவிலும் நிகழ்கிறது. மன அளவிலும் நிகழ்கிறது.

'உள்ளே நீங்கள் என்றும் நிலைத்திருக்கும் ஒரு சாசுவதப் பிறவி' என்று ஷுவாங் ட்சு சொல்கிறார். மரணம் அதனை அழிக்க முடியாது. அதற்கு அச்சம் தெரியாது.

நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்.? ஆன்மாவின் கண்ணுக்குப் புலப்படாத அந்த அரணில் நீங்கள் இல்லை. நீங்கள் சமுதாயத்தின் சட்ட திட்டங்களுக்குள் முடங்கிக் கிடக்கிறீர்கள்.

அந்தச் சட்ட திட்டங்களால் உங்களைக் காப்பாற்ற முடியாது. அவை காப்பதைப் போன்ற ஒரு பிரமையை ஏற்படுத்தலாம். ஆனால் உண்மையில் காப்பாற்றாது. ஒரு பொய்யான பாதுகாப்பு உணர்வைத் தரலாம். கடைசியில் மரணம் வந்து உங்கள் பாதுகாவலைத் தகர்த்துவிடுகிறதே!

உங்களின் மூலாதாரத்திற்குள் செல்லும் வரை ஆன்மாவின் அரணிற்குள் புகும் வரை நீங்கள் பயத்தில் நடுங்கிக் கொண்டிருப்பீர்கள்.

அது என்ன அரண்? அது எப்படிச் செயல்படுகிறது?

அது உணர்வின்மை நிலையிலிருந்து செயல்படுகிறது.

கருவில் ஒரு குழந்தை உருவாகிக் கொண்டிருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதற்கு எப்படி ஒன்பது மாதங்கள் முடிந்துவிட்டன. நாம் இப்போது கருவறைக்குள் இருந்து வெளியே வர வேண்டும் என்று தெரியும்? குழந்தையிடம் நாட்காட்டியோ கடிகாரமோ கிடையாது. ஆனால் சரியாக ஒன்பது மாதங்கள் கழித்துக் குழந்தை வெளியே வருகிறதே! அது வெளியே வரத் துடிக்கிறது. அந்தத் துடிப்பைத்தான் பிரசவ வலியாகத் தாய் உணர்கிறாள். அது ஒரு போராட்டம். அதில் முதல் முரண் தோன்றுகிறது. வலி வருமே என்ற பயத்தில் தாய் தன்னைத்தானே சுருக்கிக் கொள்கிறாள்.

எனவே குழந்தையின் துடிப்பை எதிர்க்கிறாள். அந்த எதிர்ப்பும் வெளியே வர வேண்டும் என்ற குழந்தையின் துடிப்பும் சேர்ந்துதான் வலியை உண்டாக்குகிறது. தாய் குழந்தையின் துடிப்பை எதிர்க்கவில்லையென்றால் பிரசவ வலியே இருக்காது. நாகரிகம் உள்ளே புகாத பழங்குடி மக்களுக்கு பிரசவ வலியே தோன்றுவதில்லை. நாகரிகம் அதிகமாக அதிகமாக வலியும் அதிகமாகிறது. ஏனென்றால் நாகரிகத்தில் வாழும் பெண் சமுதாய விதிமுறைகளின்படி வாழ்கிறாள். அதனால் அவள் வாழ்க்கையே போலியாகிவிட்டது.

தனது நேரம் வந்துவிட்டது என்று குழந்தைக்கு எப்படித் தெரியும்? ஒரு விதைக்குத் தான் முளைக்கும் நேரம் வந்துவிட்டது என்று எப்படித் தெரியும்? சரியான தருணத்திற்காக அந்த விதை ஒரு வருடம் கூடக் காத்திருக்கலாம். ஆனால் எந்தக் காலத்திலும் ஒரு ஜோசியரிடமோ கைரேகை பார்ப்பவனிடமோ போய் 'நான் எந்த நேரத்தில் முளைத்தால் நன்றாக இருக்கும்?' என்று கேட்பது இல்லை. சரியான தருணத்தில் அந்த விதை பூமியைக் கீறிக்கொண்டு தன்னை இழந்து தனக்கிருக்கும் பாதுகாவலை அழித்துக்கொண்டு வெளியே கிளம்புகிறது.

மலர்கள் எப்படிச் சரியான காலத்தில் மலர்கின்றன? விண்மீன்கள் எப்படி நகர்கின்றன? மேலே விரிந்து கிடக்கும் ஆகாசத்தைப் பாருங்கள். அப்பப்பா! எத்தனை கிரகங்கள்? எத்தனை துணைக் கோள்கள்? எத்தனை விண்மீன்கள்? எத்தனை வால் நட்சத்திரங்கள்? எவ்வளவு குழப்பம்! எத்தனைப் பெரிய புதிர்! எத்தனை பெரிய மர்மம்! என்றாலும் எந்த முயற்சியும் இல்லாமல் எளிதாக தங்கள் போக்கில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. தாவோ அவற்றைப் பாதுகாக்கிறது. இயற்கை அவற்றைக் காக்கிறது. இயற்கையின் ஆன்மா அவற்றைக் காக்கிறது.

இருப்பதிலேயே பெரிய முட்டாள் மனிதன்தான். ஏனெனில் அவன்தான் தன்னை புத்திசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

பிறந்த குழந்தை வளர்கிறது. ஒவ்வொரு குழந்தையும் அதன் இயல்பில் அழகாக இருப்பதைக் கவனித்திருக்கிறீர்களா? அந்த அழகு எங்கிருந்து வருகிறது? குழந்தை வளர்ந்து பெரியவனாகி விட்டால் நூறில் ஒரு குழந்தையிடம் கூட அந்த அழகை நம்மால் பார்க்க முடிவதில்லை அது ஏன்?

தொடக்கத்தில் அந்த நூறு பேரும் அழகாகத்தான் இருந்தார்கள். அதற்குப் பின் அந்த 99 பேருக்கு என்ன ஆயிற்று? அவர்கள் ஏன் தங்கள் அழகினை இழந்தார்கள்? ஏன் எல்லாக் குழந்தைகளும் அழகாக இருக்கின்றன? காரணம் ஒரு குழந்தையின் இயக்கமும் போக்கும் இயல்பாக இருக்கின்றன.

இயற்கையே அழகு. அழகே இயற்கை. செயற்கை வந்து விட்டால் அழகு போய்விடும்.

குழந்தை உணர்வின்மை நிலையிலேயே வாழ்கிறது. பசி எடுத்தால் அழுகிறது. தூக்கம் வந்தால் தூங்குகிறது. ஆனால் நாம் அதன் மேல் விதிமுறைகளையும் சட்டங்களையும் திணிக்கிறோம்.

ஒரு குழந்தை தன் வீட்டிற்கு வெளியே நின்று அழுது கொண்டிருந்தது. அந்த வழியாகப் போய்க்கொண்டிருந்த ஒரு வயதான பெண்மணி குழந்தையைப் பார்த்துக் கரிசனத்துடன் கேட்டாள்.

''என்ன ஆயிற்று ஏனப்பா அழுகிறாய்?''

''குழந்தை வளர்ப்பது எப்படி என்ற புத்தகத்தை என் அம்மா தொலைத்துவிட்டாள். இப்போது அவள் மனம் போன போக்கில் என்னை வளர்க்கிறாள். அதனால்தான் அழுகிறேன்..''

இப்போது அனைத்திற்கும் புத்தகங்கள் வந்துவிட்டன. குழந்தை வளர்ப்பது எப்படி? தாயாக இருப்பது எப்படி? தந்தையாக இருப்பது எப்படி என்று புத்தகங்கள் வந்துவிட்டன. எல்லாவற்றையும் படிப்படியாகச் சொல்லித் தருகிறார்கள். இந்தப் புத்தகங்கள் வருவதற்கு முன்னால் குழந்தைகளை எப்படி வளர்த்தார்கள் என்று ஆச்சரியமாக இருக்கிறது. குழந்தை வளர்ப்பு விதிமுறைகளை இவர்கள் கண்டுபிடிப்பதற்கு முன்னால் நாம் எப்படி பிறந்தோம் எப்படி வளர்ந்தோம் எப்படி உயிருடன் இருக்கிறோம் என்று நினைக்கவே வியப்பாக இருக்கிறது.

வழிகாட்டி நூல்கள் விதிமுறைகளை அழுத்தமாகச் சொல்லித் தருகின்றன. உதாரணமாக மூன்று மணி நேரத்திற்கு ஒரு முறை குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டும் என்று வழிகாட்டிகள் சொல்கின்றன. இந்தப் புத்தகத்தைப் படிக்கும் தாய் கடிகாரத்தைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறாள். குழந்தையை அல்ல. குழந்தை பாலிற்காக அழுது கொண்டிருக்கிறது. ஆனால் இன்னும் மூன்று மணி நேரம் ஆகவில்லை. ஆகையால் குழந்தை அழுவதைத் தாய் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

இப்போது குழந்தையின் உணர்வின்மை நிலையில் வேரூன்றிய இயல்பு நிலையை அழிக்கிறீர்கள். இதே வழியில் போனால் குழந்தையும் கடிகாரத்தைப் பார்க்க ஆரம்பித்துவிடும். சரியாக மூன்று மணி நேரங்கள் பசியுடன் காத்திருக்கும். அதன்பின் பாலிற்கு அழ ஆரம்பிக்கும். மூன்று மணி நேரம் ஆகிவிட்டால் குழந்தை அழத்தொடங்கிவிடும். அந்த சமயம் பசி இல்லாவிட்டாலும் அழ ஆரம்பித்துவிடும்.

காலை எழுந்தவுடன் காலைக்கடன்களைக் கழிக்க வேண்டும். குழந்தையை இந்த வேலையில் பயிற்றுவிப்பதுதான் இருப்பதிலேயே பெரிய தொல்லை. மலம் கழிக்க வேண்டும் என்ற உந்துதல் இல்லாவிட்டால் குழந்தை எப்படி அதைச் செய்யும்? ஆனால் தாய் இடுப்பில் கைவைத்துக் கொண்டு கண்டிப்பான பார்வையுடன் குழந்தையைப் பார்த்தபடி நின்று கொண்டிருக்கிறாள். 'இதை நீ இப்போதே செய்ய வேண்டும்' என்று உத்தரவு போடும் தோரணையில் தாய் நின்று கொண்டிருக்கிறாள். குழந்தையோ கதறிக் கொண்டிருக்கிரது. எப்படி அதன் தாயைத் திருப்திப்படுத்துவது என்று அது முழித்துக் கொண்டிருக்கிறது. தாயோ வெறி பிடித்தவளைப் போல் நின்று கொண்டிருக்கிறாள். சில நாட்களில் குழந்தை தன் உடலை வற்புறுத்திக் காலைக் கடன்களைக் கழிக்கிறது.

மனவியல் வல்லுனர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? காலைக்கடன் கழிக்கும் வழக்கத்தை குழந்தை மேல் திணிப்பதுதான். வயதானபின் தோன்றும் மனோ வியாதிகளுக்கு ஐம்பது சதவிகித காரணம் என்று நிபுணர்கள் சொல்கிறார்கள். ஒன்று இரண்டல்ல. ஐம்பது சதவிகிதம். அந்தக் குழந்தை தன்னைத் தானே வற்புறுத்திக் கொள்கிறது. தாய் சொன்ன காலத்தில் காலைக்கடன்களைக் கழிக்கவில்லையென்றால் குழந்தையின் மனதில் குற்ற உணர்வு தோன்றுகிறது.

சரி அதை விடுங்கள். இயல்பாகவே ஒரு குழந்தைக்கு மலம் கழிக்க வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டாலும் அதன் மனதில் ஒரு குற்ற உணர்வு இருக்கிறது. காரணம் குழந்தைக்கு அந்த உணர்வு ஏற்படும் போது அது வீட்டின் வரவேற்பறையில்

இருக்கிறது. அறை நிறைய விருந்தினர்கள் இருக்கிறார்கள். குழந்தை அங்கேயே அவர்கள் முன்னால் மலம் கழித்து விடுகிறது. குழந்தைக்கு எப்படித் தெரியும் - வரவேற்பறையில் அதையெல்லாம் செய்யக்கூடாது என்று?

குழந்தை உணர்வின்மை நிலையில் வாழ்ந்து கொண்டிருக் கிறது. அதற்குக் கழிப்பறை எதுவென்றும் தெரியாது. வரவேற் பறை எதுவென்றும் தெரியாது. எப்போது வீட்டில் விருந்தினர்கள் இருப்பார்கள் எப்போது இருக்கமாட்டார்கள் போன்ற விஷயங்கள் குழந்தைக்குத் தெரியவே தெரியாது. எப்போது எங்கே மலம் கழிக்க அனுமதி உண்டு எங்கே இல்லை என்றும் அதற்குத் தெரியாது. குழந்தை சட்டதிட்டங்களின் படி வாழ்வ தில்லை. ஆனால் வேறு வழியில்லாமல் தன் பெற்றோரைத் திருப்தி செய்ய சட்டத் திட்டங்களைப் பின்பற்றுகிறது. அது பலவீனமாக இருக்கிறது. அதற்கு முன்னால் நீங்கள் பலமுள்ள வராக இருக்கிறீர்கள். நீங்கள் நினைத்தால் குழந்தையை என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

ஒரு குழந்தை பெற்றோருக்குப் பயந்து மலம் கழிக்கத் தன்னைத்தானே வற்புறுத்திக் கொள்ளும் போது என்ன நிகழ்கிறது என்பதைக் கவனியுங்கள். குழந்தையின் உடல் உறுப்புக்களைச் சூழ்ச்சியாகக் கையாளக் கற்றுக் கொள்கிறது. அதன் பின் எதுவும் இயல்பு நிலையில் இருக்காது.

தன் பெற்றோரைத் திருப்திப்படுத்த முதல் முறையாகச் சூழ்ச்சியைக் கையாளுகிறது.

பசியில்லாதபோதும் குழந்தை அழுகிறது. இதை நீங்கள் கண்கூடாகப் பார்க்கலாம். அனைத்து வீடுகளிலும் பாருங்கள். குழந்தைகள் கண்ணீரும் கம்பலையுமாகச் சாப்பிட்டுக் கொண் டிருக்கும். அவர்களுக்கு இப்போது பசியில்லை. ஆனால் தாய் சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்துகிறாள். தவறு குழந்தை களிடம் இல்லை தாயிடம் இருக்கிறது. ஆனால் இப்படியே வற்புறுத்தப்படும் குழந்தை சரியான பாதையிலிருந்து விலகிச் செல்கிறது. அதன் பின் வயிறைப் பார்க்காமல் கடிகாரத்தைப்

பார்த்துச் சாப்பாடு கேட்கும். பசி எடுக்கும் போது அதனைக் கட்டுப்படுத்திக் கொள்ளும். அப்போது உணவு கேட்க முடியாதே! இயற்கையோடு இருக்கும் தொடர்பை குழந்தை இழந்துவிடும். அந்தத் தொடர்பு போய்விட்டால் மன நோய்கள் வந்துவிடும்.

குழந்தை துடிப்புடன் இருக்கிறது. ஆட வேண்டும் ஓட வேண்டும் என்ற உத்வேகம் அதன் மனதில் பொங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதன் தாயோ அதனைத் தூங்கச் சொல்கிறாள். குழந்தையால் செய்ய முடியாததைத் தாய் வற்புறுத்துகிறாள். உங்களைக் கூட தூக்கம் வராத போது வலுக்கட்டாயமாகத் தூங்க வைக்க முடியாது. அந்தத் தாயைக் கூட அப்படித் தூங்க வைக்க முடியாது. தூக்கம் வராத போது யாராவது உங்களை வற்புறுத்திப் படுக்கையில் படுக்கச் சொன்னால் என்ன செய்வீர்கள்? அதையேதான் குழந்தையும் செய்யும். தூங்கி விட்டதைப் போல் பாசாங்கு செய்யும். கண்ணை மூடிக்கொண்டு தூங்கிவிட்டதைப் போல் நடிக்கும். அரைக்கண்ணைத் திறந்து அம்மா தள்ளிப் போய்விட்டாளா என்று அடிக்கடி பார்த்துக் கொள்ளும். நீங்கள் குழந்தைக்குத் தூக்கத்தைக் கற்றுத்தரவில்லை. அது உங்களால் முடியாது. பாசாங்கைக் கற்றுத் தருகிறீர்கள். நீங்கள் குழந்தையை ஒரு கபட வேஷதாரியாக்குகிறீர்கள். அதுவும் கால்காசு பெறாத விஷயத்திற்காக.

தூக்கத்தை யார் மேலும் திணிக்க முடியாது. அப்படிச் செய்ய முடியும் என்றால் இத்தனை லட்சம் பேர் தூக்கமின்மை வியாதியில் தவிக்க மாட்டார்களே! தூக்க மாத்திரைகள் கோடிக்கணக்கில் விற்பனையாகாதே! அப்படிச் செய்ய முடியும் என்றால் ஏன் இன்னும் பலர் அப்படியும் இப்படியும் புரண்டு படுத்துக் கொண்டு இருக்கிறார்கள்.? நீங்கள் உங்கள் குழந்தையின் மேல் தூக்கத்தைத் திணிக்கப் பார்க்கிறீர்கள். குறிப்பிட்ட நேரத்தில் அது தூங்க வேண்டும். அதிகாலை ஐந்து மணிக்கு - பிரம்ம முகூர்த்த வேளையில் - அது விழிக்க வேண்டும். அப்போதுதான் அது நல்ல குழந்தை. இல்லாவிட்டால் அது கெட்ட குழந்தை என்று அபத்தமாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

இயல்பாக இருப்பவர்கள் எல்லாம் ஒரு வகையில் கெட்டவர்களே. செயற்கையாக வேஷம் போடுபவர்களைத்தான் இந்தச் சமுதாயம் நல்லவர்கள் என்று சொல்கிறது.

நீங்கள் ஒரு மனிதனை அழித்துவிட்டீர்கள். அந்தக் குழந்தை இனி காலம் முழுவதும் அவதிப்படும். வாழ்நாள் முழுவதும் இந்தக் குழந்தை அந்த சுவாமிஜியிடம் போகும் இந்தப் பாதிரியாரிடம் போகும் இந்தக் குருவைத் தேடும் அந்த குருவைத் தேடும். அவர்கள் அனைவரும் அந்தக் குழந்தையை 'இதைச் செய் அதைச் செய்' என்று முடியாத காரியங்களை ஏவிக் கொண்டிருப்பார்கள். அவை எதுவுமே பயன்படாது. காரணம் குழந்தையின் வாழ்க்கை முறை அடிப்படையிலேயே தவறாக இருக்கிறது. அந்த மொத்த அமைப்பையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு மீண்டும் புதிதாகத் தொடங்க வேண்டும்.

ஆனால் என்ன செய்வது? நாற்பது, ஐம்பது வயது வாழ்ந்தபின்னால் வாழ்க்கை முறையை மாற்ற வேண்டும் என்று சொல்வது கொஞ்சம் அதிகம்தான். நீங்கள் உங்கள் வாழ்க்கை முறையில் மிக அதிகமாக முதலீடு செய்துவிட்டீர்கள்.

இந்த நிலையில் என்னைத் தேடி வருகிறீர்கள். நான் உங்கள் வாழ்க்கை முறையை முற்றிலுமாகக் கைவிடும்படி சொல்கிறேன். அதைத்தான் நன் சன்னியாசம் என்று சொல்கிறேன்.

அது உங்கள் வாழ்க்கை முறையை மாற்றும் வழி. கடந்த காலத்தை உதறித் தள்ளிவிட்டுப் புதிதாக வாழத் தொடங்கும் வழி.

உங்கள் வாழ்க்கை முறையோடு உள்ள தொடர்பை அறுக்க நான் சொல்லும் வழி சன்னியாசம். நீங்கள் அதில் செய்த முதலீடுகளையும் அந்த முதலீடுகளால் நீங்கள் பெறும் லாபங்களையும் முற்றிலுமாகத் துறப்பதுதான் சன்னியாசம்.

உங்கள் பழைய வாழ்க்கை முறையில் நிறைய நடைமுறை லாபங்கள் இருக்கின்றன என்பது மறுப்பதற்கில்லை. இல்லா விட்டால் அந்தச் சுமையை ஏன் சுமக்கிறீர்கள். அதனால் சமுதாயம் உங்களை மதிக்கிறது. நீங்கள் சமுதாய விதிகளைப் பின்பற்றுவதால் சமுதாயம் உங்களைக் கௌரவிக்கிறது. இதுதான் உங்கள் பழைய வாழ்க்கை முறையால் நீங்கள் பெறும் லாபங்கள்.

சன்னியாசத்தில் குதியுங்கள் என்று நான் சொல்லும் போது வாழ்க்கை முறையை மாற்றுங்கள் என்றுதான் சொல்கிறேன். இதைவிட்டால் வேறு வழியில்லை. உங்களை நான் பகுதி பகுதியாக மாற்ற முடியாது. உங்கள் நோய் மிகப் பெரியது. நான் ஒரு பகுதியை மாற்றினால் விரைவில் நோய் அந்தப் பகுதியைப் பழையபடி மாற்றிவிடும். மாற்றப்பட்ட பகுதியும் நோயின் ஒரு பகுதியாகிவிடும். நீங்கள் முற்றிலுமாக மாறத் துணியாவிட்டால். ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் தியானம் செய்யலாம், ஆழ்நிலை தியானத்தில் ஈடுபடலாம். கண்களை மூடிக்கொண்டு காலையில் பத்து நிமிடம் மாலையில் பத்து நிமிடம் ஏதாவது மந்திரத்தைச் சொல்லலாம்.. ஏதோ மாறப் போகிறது என்று உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளலாம். உங்கள் வாழ்க்கை முறை மாறும் வரை எதுவுமே மாறாது

இந்தக் காரணத்தினால்தான் மகேஷ் யோகி மேலை நாடுகளில் மிகவும் பிரபலமாகிவிட்டார். அவர் உங்கள் வாழ்க்கை முறையைப் பற்றிப் பேசவே மாட்டார். நீங்கள் எப்படி இருந்தாலும் சரி என்று சொல்லிவிடுவார். ஆழ்நிலை தியானம் என்ற ஒரு சிறு ஊசியைப் போட்டால் போதும் எல்லாம் மாறிவிடும் என்று சொல்வார். அவரைப் பொறுத்தமட்டில் ஆழ்நிலைத் தியானம் என்பது ஒரு வித மாத்திரையைப் போன்றது. அது உங்கள் வாழ்க்கை முறையை எந்த வகையிலும் பாதிக்காது. நீங்கள் எப்படிப்பட்ட ஆளாக இருந்தாலும் சரி அதைப் பற்றிக் கவலையில்லை. நீங்கள் நல்லவரோ கெட்டவரோ காலை, மாலை இரண்டு வேளைகளிலும் பத்து நிமிடம் இந்த மந்திரத்தைச் சொன்னால் போதும் எல்லாம் சரியாகிவிடும். சொர்க்கத்தின் கதவுகள் உங்களுக்காகத் திறக்கப் பட்டுவிடும். இதுதான் மகரிஷி மகேஷ் யோகியின் போதனை.

இது முட்டாள்கள் நிறைந்த உலகம். இந்த உத்திகளை நம்புகிறார்கள். இவை வெறும் சூழ்ச்சியே இவை தூக்க மாத்திரைகளைப் போன்றவை. இவற்றால் ஏற்படும் ஒரே பயன் தவறான முறைக்கு உங்களைச் சரி செய்து கொள்ளலாம். ஆனால் அங்கேதான் பிரச்சினையே தொடங்குகிறது. இந்த உத்திகளும் சூழ்ச்சிகளும் உதவாது என்று நான் சொல்லவில்லை. அவை

உதவலாம். உங்கள் வாழ்க்கை முறைக்குத் தகுந்தாற்போல் நீங்கள் மாற அவை உதவலாம். ஆனால் அந்த வாழ்க்கை முறை அடிப்படையிலேயே தவறாயிற்றே! அதற்குத் தகுந்தாற் போல் மாறுவது அதைவிடப் பெரிய தவறாக அல்லவா இருக்கும்! இந்த உத்திகள் உங்களுக்கு ஆறுதல் தரலாம். அந்த ஆறுதல் விஷம் போல் உங்களை மாறவிடாமல் தடுத்துவிடும். உங்களுக்குத் தவறான ஆறுதல் கிடைக்கும். உங்களை நீங்களே தேற்றிக் கொள்ளலாம். ''நான் ஆழ்நிலைத் தியானம் செய்கிறேன்'' என்று பீற்றிக் கொள்ளலாம். அதனால் யாருக்கு என்ன லாபம்?

அந்த உத்தியைக் கற்றுக் கொண்டால் தூக்கம் நன்றாக வரும். தூக்கம் வருவதற்கு அதைவிட நல்ல மந்திரம் நான் அறிவேன்.

அந்த உத்திகளால் நோய் வருவது குறையலாம். அதற்கு வாய்ப்பிருக்கிறது. ஏனென்றால் உங்கள் வாழ்க்கை முறை தவறாக இருந்தாலும் அதற்கு ஏற்றாற்போல் உங்களை நீங்களே மாற்றிக் கொள்கிறீர்களே! ஆனால் அந்த உத்திகளால் பரவச நிலை கிடைக்காது. இன்னும் கொஞ்சம் ஆரோக்கியமாக இருக்கலாம் பரவச நிலை நிச்சயமாக இருக்காது. உங்கள் துன்பங்களை இன்னும் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் உங்களால் ஒரு நாளும் பரவச நிலையை எட்ட முடியாது அதற்கு ஈடான பரமானந்தத்தில் திளைக்க முடியாது. அதற்கு உங்கள் தவறான வாழ்க்கை முறையை அடியோடு விட்டுவிட வேண்டும். அதற்கு நான் சொல்லும் சன்னியாசம்தான் ஒரே வழி.

***ஆன்மாவிற்கு ஒரு அரண் உண்டு.***

***கண்ணுக்குத் தெரியாத ஒரு பாதுகாவலன் அதைக் காக்கிறான்.***

***அதை எந்த ஆபத்தும் அணுக முடியாது.***

***பாதுகாவலனின் செயல்கள் தன்னுணர்வற்றவை***

***அவன் திட்டமிட்டு, சிந்தித்து ஒரு நோக்கத்துடன் செயல்பட்டால்***

***அவன் செயல்கள் சிதறும். வழிதவறிப் போகும்.***

நோக்கங்கள், திட்டங்கள் அனைத்தையும் கைவிடுங்கள் குழந்தையைப் போல் இருங்கள் இயற்கையை நம்புங்கள். பசிக்கும் போது உண்ணுங்கள். பசிக்கவில்லையென்றால் உண்ண வேண்டாம். இயற்கை உங்களுக்கு வழிகாட்டும். தூக்கம் வரும் போது தூங்குங்கள். தூக்கம் வராத போது தூங்கத் தேவை யில்லை. அந்த சமயத்தில் தூங்க வேண்டும் என்ற எண்ணத்தையே கைவிடுங்கள். நோக்கமில்லாமல் இருங்கள் இந்தப் பைத்தியக்காரத்தனமான வாழ்க்கை முறை தானாகவே விலகிப் போய்விடும். நீங்கள் உங்கள் மூலாதாரத்திற்குத் திரும்புவீர்கள். அந்த மூலாதாரம்தான் தாவோ.

**தன்னுணர்வோடு செய்யப்படும் ஆர்ப்பாட்டம்**

**தாவோவின் தன்னுணர்வற்ற நிலையையும் அதன் நேர்மைப்பண்பையும் பாதிக்கும்.**

**அந்த ஆர்ப்பாட்டங்கள் பொய்களே.**

வாழுங்கள்; ஆனால் உங்கள் வாழ்க்கையைச் செயல் முறை விளக்கமாக்காதீர்கள். நடிகனாகாதீர்கள். எந்தக் கட்டத்திலும் நடிப்பையும் பாசாங்கையும் உள்ளே நுழைய விடாதீர்கள்.

மற்றவர்கள் உங்களை உதவாக்கரை என்று சொல்கிறார் களா? அது உங்களுக்குத் தேவையில்லாதது. நீங்கள் எப்படிப் பட்டவர் என்பதுதான் முக்கியம். அடுத்தவர்களின் கருத்தல்ல. எப்போதும் இயல்பு நிலையில் வாழுங்கள். உங்களைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது அவர்களுடைய பிரச்சினை. உங்கள் வாழ்க்கையை ஒரு நாடகமேடையாக்கா தீர்கள். வாழ்க்கையில் நடிக்கத் தொடங்கிவிட்டால் அதற்கு ஒரு முடிவே கிடையாது.

பின் கடைசிவரை ஒரு போலியாகவே வாழ்வீர்கள்.

அந்தப் போலித்தன்மையை மக்கள் மதிக்க ஆரம்பித்து விட்டால் நீங்கள் ஒரு போலியாகவே மாறிவிடுவீர்கள். ''பாவம் அவர் நல்லவர்: மதிக்கத் தகுந்தவர்'' என்று மக்கள் நினைக்க ஆரம்பித்துவிட்டால் நீங்கள் அந்தப் போலியில் ஊறி ஒரு போலியாகவே ஆகிவிடுவீர்கள்.

நீங்கள் ஒரு ஓவியராக வேண்டும் என்று விரும்பினால் - பல நேரங்களில் அந்த ஆசை மனதின் அடி ஆழத்தில் உங்கள் உணர்வின்மை நிலையில் இருக்கும். - ஓவியராகிவிடுங்கள். ஏழையாக இருப்பீர்கள். அதனால் பரவாயில்லை. பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதற்காக மருத்துவராகாதீர்கள். உங்கள் மனதின் ஆழத்தில் உங்களுக்கு மருத்துவராக இருப்பது பிடிக்கவில்லை. அந்தத் தொழிலில் எத்தனை கோடிகள் சம்பாதித்தாலும் சரி உங்கள் மனதில் திருப்தி இருக்காது. உங்கள் பெற்றோர்கள், நண்பர்கள், குடும்பம், சமுதாயம் இவர்க்ளைத் திருப்திப்படுத்தத்தான் நீங்கள் மருத்துவரானீர்கள். உள்ளூர உங்களுக்கு அந்தத் தொழில் பிடிக்கவில்லை. அதில் எவ்வளவு பேரும் புகழும் பணமும் சம்பாதித்தாலும் உங்களுக்கு மன நிறைவு இருக்காது. உண்மையான மகிழ்ச்சி இருக்காது. மன நிறைவில்லாத வாழ்க்கை வீண்.

நான் ஒரு மருத்துவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் தன் நாட்டிலேயே பெரிய அறுவை சிகிச்சை நிபுணரானார். பின் அந்த நாட்டு அறுவை சிகிச்சை நிபுணர்கள் சங்கத்தின் தலைவரும் ஆனார். அன்று அவரைப் பாராட்டி ஒரு விருந்து கொடுத்தார்கள். அந்த மருத்துவரின் முகத்தில் சோகம் கப்பி யிருந்தது.

அவர் நண்பர் ஆதூரத்துடன் விசாரித்தார். '' ஏன் சோகமாக இருக்கிறாய் நண்பா? அதுதான் சாதித்துவிட்டாயே! நீதான் இன்று உலகத்திலேயே அதிகம் சந்தோஷப்பட்டும் ஆளாக இருக்க வேண்டும். இப்போது யாராலும் உன்னோடு போட்டி போட முடியாது. உன் தொழிலில் இந்த நாட்டிலேயே முதலிடத்தில் இருக்கிறாய். தேசிய மருத்துவர் கழகத்தின் தலைவராவது என்பது ஒரு மருத்துவருக்குக் கிடைக்கக்கூடிய அதிக பட்ச கௌரவம். அது உனக்குக் கிடைத்திருக்கிறது. பின் ஏன் இந்த சோகம்?''

''நான் மருத்துவனாக வேண்டும் என்று ஒரு நாளும் விரும்பியதில்லை. மன விருப்பம் இல்லாத துறையில் கடுமையாக உழைத்து இன்று வெற்றி பெற்றுவிட்டேன். இன்று நான் நினைத்தாலும் இந்தச் சிறையிலிருந்து தப்ப முடியாது. இந்தத் தொழிலில் நான் இந்த அளவு வெற்றி பெறாமல்

இருந்திருந்தால் அதையே சாக்காக வைத்துக் கொண்டு வெளி யேறி என் மனதுக்குப் பிடித்த துறையில் காலத்தைக் கழித்திருப் பேன். இப்போது அதற்கும் வழியில்லாமல் போய்விட்டது.''

''என்ன உளறுகிறாய்? உன் குடும்பம் உன் வெற்றியை எப்படி கொண்டாடிக் கொண்டிருக்கிறது என்று பார்த்தாயா? உன் மனைவி மகிழ்ச்சியாக இருக்கிறாள். உன் குழந்தைகள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். எல்லாருமே உன் வெற்றியில் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். அனைவரும் உன்னை மிகவும் மதிக்கிறார்கள்.''

''ஆனால் என்னால் என்னை மதிக்க முடியவில்லை. அதுதான் அடிப்படையான விஷயம். என்னால் எப்படி என்னை மதிக்க முடியும்? நான் பலவீனமானவன் என்று தெரிந்தும் என்னை எப்படி மதிப்பேன்? எனக்கு நடனம் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசை. நாடு போற்றும் நடனக் கலைஞனாக வரவேண்டும் என்று ஆசை. ஆனால் என் தாய் - தந்தை என் வழியில் செல்ல என்னை அனுமதிக்கவில்லை. என்னால் அவர்களை மீறி நடக்க முடியவில்லை. அந்த அளவுக்குக்கூட எனக்கு வலிமையில்லை. நான் பலவீனமானவன். நான் உலகத்திலேயே சிறந்த மருத்துவன் என்பதில் எனக்கு எந்த சந்தோஷமும் இல்லை. நான்தான் உலகத்திலேயே மிகவும் மோசமான நடனக் கலைஞனாக இருக்கிறேன் என்பதுதான் என் கவலை. காரணம் நான்தான் நடனமாடக் கற்றுக் கொள்ளவே யில்லையே! என் பிரச்சினையே அதுதான். என் சோகத்திற்குக் காரணமும் அதுதான்.''

மன நிறைவு இயற்கை மூலமாக வருகிறது. சமுதாயம் மூலமாக அல்ல. உங்கள் விதி உங்களுக்குள் இருக்கிறது. ஆனால் அது உங்களுடைய உணர்வின்மை நிலையில் இருக்கிறது. அதனைப் பின்பற்றுங்கள். நீங்கள் உங்கள் இலக்கை அடைந்துவிட்டீர்கள் என்று யாருக்கும் தெரியாது. ஆனால் உங்களுக்குத் தெரியும். உங்களை யாரும் மதிக்க மாட்டார்கள். அதனால் என்ன? அவர்கள் கிடக்கட்டும். உங்களுக்கு நோபல் பரிசு கிடைக்காது. மன நிறைவோடு வாழ்ந்தவர்கள் யாருக்கும்

நோபல் பரிசு கிடைத்ததில்லை. புத்தருக்கும் ஏசுநாதருக்கும் அது கிடைக்காது. வருங்காலத்திலும் அது போன்ற ஞானிகளுக்குக் கிடைக்காது. அது நிச்சயம்.. காரணம் நோபல் பரிசு இந்தச் சமுதாயத்தின் விதிகளைப் பின்பற்றி சமுதாயம் நிர்ணயித்த இலக்குகளைத் தொட்டவர்களுக்குத்தான் கிடைத்திருக்கிறது. தன் உள்மன இலக்குகளை அடைந்தவர்களுக்கு அது கொடுக்கப் படுவதில்லை.

நோபல் பரிசு பெற்றவர்களைப் பாருங்கள். அவர்களைவிட சோகமானவர்களைப் பார்க்கவே முடியாது. அந்தப் பரிசு பெற்றவர்களில் பலர் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள். அது விபத்தல்ல. அதில் ஆழமான அர்த்தம் இருக்கிறது. அந்தப் பரிசு பெற்றவர்களில் பலருக்கு மன நிறைவு இல்லை. வெளியில் இருந்து வரும் பரிசுகளால் ஒரு நாளும் மன நிறைவு கிடைக்காது.

உணர்வின்மை நிலையை அனுமதியுங்கள். அதனை வற்புறுத்தாதீர்கள்.

**தன்னுணர்வோடு செய்யப்படும் ஆர்ப்பாட்டம்**

**தாவோவின் தன்னுணர்வற்ற நிலையையும் அதன் நேர்மைப்பண்பையும் பாதிக்கும்.**

**அந்த ஆர்ப்பாட்டங்கள் பொய்களே.**

நீங்கள் வெற்றி பெற்றவர்கள் என்று யாரை நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ அவர்கள் பொய்யான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களை ஆழ்ந்து கவனியுங்கள் பொய் மட்டும்தான் புலப்படும்.

முல்லா நசிருதீனுக்கு உடல் நலமில்லை. மருத்துவரைக் காணச் சென்றார். மருத்துவர் கேள்விகள் கேட்டார்.

''என்னிடம் எதையும் மறைக்காதீர்கள். உங்களுக்கு மது அருந்தும் பழக்கம் உண்டா?''

''இல்லை'' என்று சொன்னார் முல்லா. அவர் கை நடுங்கிக் கொண்டிருந்தது. முழு போதையில் இருந்தார் முல்லா. அவரிடம் மதுவின் வாடை பலமாக இருந்தது.

''சரி அதை விடுங்கள். பெண்கள் தொடர்பு.. ''

''நிச்சயமாக இல்லை'' என்று கத்தினார் முல்லா. ஆனால் அப்போதுதான் ஒரு விலைமகளுடன் இருந்து விட்டு வந்திருந்தார். அவர் முகத்தில் அந்தப் பெண்ணின் உதட்டுச் சாயம் தெளிவாகத் தெரிந்தது.

''புகைப்பிடிக்கும் பழக்கம் உண்டா?''

''நிச்சயமாக இல்லை டாக்டர்.''

அவர் சட்டைப்பையில் ஒரு சிகரெட் பாக்கெட் இருந்தது.

''சரி முல்லா. இதெல்லாம் இல்லாமல் உங்கள் உடம்புக்கு இது போன்ற வியாதிகள் வர வாய்ப்பேயில்லையே''

''எனக்கு ஒரே ஒரு கெட்ட பழக்கம் உண்டு, டாக்டர்''

''அது என்ன?''

''அடிக்கடி பொய் சொல்வேன்.''

வெற்றி பெற்ற மனிதர்களின் வாழ்க்கை இப்படித்தான் இருக்கிறது. பெரிய அளவில் வெற்றி பெற்றவர்கள் பெரிய பொய்யர்கள். இந்த உலகத்தில் வெற்றி பெற வேண்டுமென்றால் நீங்கள் பொய் சொல்ல வேண்டும்.

உங்களுக்கு வெற்றி கிடைக்கும். ஆனால் உங்களை நீங்களே தவற விட்டுவிடுவீர்கள். இந்த உலகில் வெற்றி பெறலாம். மறுமையில் தோற்றுவிடுவீர்கள். கடைசியில் மறுமையில் நீங்கள் பெறும் வெற்றிதான் முக்கியம்.

***அந்தச் செயலும் முயற்சியும் பொய்யே.***

***இந்த இரண்டுங்கெட்டான் வழியில் ஒருவன் தன்னைக் காட்டிக்கொண்டால்***

***உலகம் வெகுண்டெழுந்து அவனைச் சிறைப் படுத்தும்.***

செய்து காட்ட வேண்டும் என்றோ நடித்துக்காட்ட வேண்டும் என்றோ விரும்பினால் உலகம் உங்களைச் சிறைப்படுத்தும். உங்களைப் பலி கொடுக்கவும் தயங்காது.

**அதன்பின் தாவோவின் நேர்மை அவனைக் காப்பாற்றாது.**

**ஒவ்வொரு புதுச் செயலும் ஒரு புதுத் தோல்வியே.**

அடுத்தவர்கள் உங்களைப் பற்றி என்ன பேசுகிறார்கள் என்பதில் ஆர்வம் காட்ட ஆரம்பித்தால் ஒவ்வொரு புதுச் செயலும் ஒரு புதுத் தோல்வியே.

நீங்கள் வெற்றிபெறலாம். ஆனால் அந்த வெற்றியால் காலணாவிற்குக்கூட பயனில்லை. அதனால் உங்களுக்கும் நிறைவு கிடைப்பதில்லை. அந்த வெற்றி உங்களை மலரச் செய்வதில்லை. உங்கள் ஊழ் நிறைவு பெறாது. உங்கள் ஜன்மம் சாபல்யம் பெறாது. உங்களிடம் விதைக்கப்பட்டது விதையாகவே இருக்கும். உங்களைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வரலாம். அதை நீங்கள் பத்திரமாக வெட்டி வைத்திருக்கலாம். அந்த உயிரற்ற தாள்கள், நீங்கள் உங்கள் வரவேற்பறையில் கண்ணாடிபோட்டு மாட்டி வைத்திருக்கும் சான்றிதழ்கள் நீங்கள் வெளியே செல்லும் போது அணிந்து கொள்ளும் முக மூடிகள் உங்களுடைய போலிப் புன்னகை - இதெல்லாம் ஒரு நாளும் வாழ்க்கையாகாது. ஒவ்வொரு புதுச் செயலும் உங்களை இன்னும் பொய்யின் ஆழத்திற்குக் கொண்டு போகும். பொய்யில் மூழ்கிக் கிடக்கும் உங்களுக்கு பரவசம் எப்படி கிட்டும்? இந்த உலகம் போற்றும் குப்பைகளை நீங்கள் சம்பாதிக்கலாம். ஆனால் நிஜமானவற்றை நீங்கள் நிச்சயம் இழந்துவிடுவீர்கள்.

ஷுவாங் ட்சு சொல்கிறார்: ''தாவோவில் இருங்கள். நேர்மையாக, உண்மையாக, நிலையாக இருங்கள்.'' உங்களிடம் ஒரே ஒரு விஷயத்தில்தான் நேர்மை எதிர்பார்க்கப்படுகிறது. அந்த நேர்மையை உங்கள் தாவோவிடம் காட்டுங்கள். உங்கள் உள்ளார்ந்த இயல்பிடம் காட்டுங்கள். உங்கள் ஆன்மாவிடம் காட்டுங்கள். வேறு எந்த நேர்மையும் தேவையில்லை. இந்த உலகம் உங்களை பொய்யன் என்று சொன்னாலும் கவலையில்லை. ஊரில் உள்ளவர்கள் எல்லாரும் உங்களை நேர்மையில்லாதவர் என்று சாடட்டும்.

அப்படித்தான் புத்தரின் தந்தை புத்தரைச் சாடினார் - புத்தர் அனைத்தையும் துறந்துவிட்டதால். அதைத்தான் புத்தரின் மனைவியும் செய்தாள் - புத்தர் அவளை விட்டுவிட்டு ஓடி விட்டதால்.

அதைத்தான் புத்தரின் நாடே செய்தது - அவர் நாட்டைத் துறந்து காட்டிற்குள் சென்றுவிட்டதால். ஆனாலும் புத்தர் மகிழ்ச்சியாகவே இருந்தார். இத்தனை பேருக்கு அவர் நேர்மையானவராக இல்லை. தனக்குள் இருக்கும் தாவோவிற்கு அவர் நேர்மையானவராகவே இருந்தார். அவரைச் சாடியவர் களிடம் சொன்னார் ''இதைத்தவிர வேறு வழியில்லை. இதையும் மீறி நீங்கள் துன்பப்பட்டால் அதற்கு உங்கள் எதிர்பார்ப்புகள் தான் காரணமே தவிர நானில்லை.''

உங்கள் வழியில் நிறைவுகாணவே நீங்கள் இந்த உலகத்திற்கு வந்திருக்கிறீர்கள். மற்றவர்கள் அவர்கள் வழியில் நிறைவுகாணவே வந்திருக்கிறார்கள். அவர்கள் உங்களிடம் வேறு எதையாவது எதிர்பார்த்தால் அது அவர்களின் பிரச்சினை. உங்கள் செயல்களால் அவர்கள் துன்பப்படலாம். அவர்கள் உங்களால் துன்பப்படுவதால் நீங்கள் நேர்மையற்றவர் ஆகிவிடமாட்டீர்கள்.

உங்கள் உள்ளார்ந்த இயல்பிற்கு உண்மையானவராக இருங்கள். மற்றவர்கள் தங்கள் இயல்புக்கு உண்மையாக இருப்பதற்கு உதவி செய்யுங்கள். அப்படிச் செய்பவனிடம்தான் உண்மையான சமய உணர்வு இருக்கிறது. உங்கள் ஊழை நிறைவு செய்யவே நீங்கள் இங்கே பிறந்திருக்கிறீர்கள். மற்றவர்கள் தங்கள் ஊழை நிறைவேற்றப் பிறந்திருக்கிறார்கள். அவர்களிடம் இருந்து எதையும் எதிர்பார்க்காதீர்கள். உங்கள் எதிர்பார்ப்பு அவர்களை நடிகர்களாக்கிவிடும். அது கொஞ்சம் அதிகமாக இருந்தால் அவர்களைப் பொய்யர்களாக்கிவிடும். யாரிட மிருந்தும் எதையும் எதிர்பார்க்காதீர்கள். மற்றவர்கள் உங்களிட மிருந்து எதையாவது எதிர்பார்த்தால் அதைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். அதனைக் கண்டு கொள்ளாதீர்கள்.

இதைச் சொல்வது எளிது. செய்வது மிகவும் கடினம். ஆனால் இதுதான் உண்மையான சன்னியாசம். நீங்கள் எப்படி

வளர வேண்டும் என்று மற்றவர்களின் எதிர்பார்ப்புகளை ஒட்டுமொத்தமாக நிராகரியுங்கள். அவர்கள் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றப் போவதாக குறிப்பாகக் கூடச் சொல்லாதீர்கள். நீங்கள் படவேண்டிய துன்பத்தைப் படுங்கள். ஆனால் மற்றவர்களை உங்களிடம் எதையும் எதிர்பார்க்கவிடாதீர்கள். அப்படி எதிர்பார்க்கவிட்டால் உலகம் உங்களைச் சூழ்ந்து கொண்டு சிறைப்படுத்திவிடும்.

''உங்களுக்காக நான் இதைச் செய்கிறேன்'' என்று சொன்ன அந்த மாத்திரத்தில் நீங்கள் மாட்டிக்கொள்வீர்கள். இப்போது நீங்கள் பரந்த வெளியிலிருந்து ஒரு குகைக்குள் வந்துவிட்டீர்கள். இனிமேல் நீங்கள் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும், செய்யும் ஒவ்வொரு புதுச் செயலும், உங்களை மேலும் துன்பத்தில் ஆழ்ந்தும். மேலும் பொய்களில் ஆழ்த்தும் புதுத் தோல்விகளில் ஆழ்த்தும். மற்றவர்கள் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்யாதீர்கள். நீங்களும் மற்றவர்களிடம் எதையும் எதிர் பார்க்காதீர்கள். ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள். உங்கள் துன்பங்களுக்கு நீங்களே காரணம். மற்றவர்களின் துன்பங்களுக்கு அவர்களே காரணம். யாரும் அடுத்தவர்களால் துன்பப்படுவதில்லை. இதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள். அப்போதுதான் உங்கள் உள்ளே இருக்கும் தாவோவிற்கு உங்கள் உள்ளார்ந்த இயல்பு நிலைக்கு உண்மையானவராக நீங்கள் இருக்கலாம். அந்த நேர்மைதான் சமய உணர்வு.

இந்துக்கள் இதனை 'ரித்' என்கிறார்கள். ஏசுநாதர் இதனை இறைவனின் சாம்ராஜ்ஜியம் என்கிறார். ஷுவாங் ட்சு இதனைத் தாவோ என்கிறார். பயன்படுத்தப்படும் சொல் எதுவாக இருந்தாலும் சரி அதன் பொருள் நம் உணர்வின்மை நிலையுடன் ஒருமைப்பாடுடன் இருப்பதுதான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அந்த உணர்வின்மை நிலையை முற்றிலும் நம்பி அதன் போக்கில் நிபந்தனைகளன்றி போவதே தாவோவின் வழி.

இதுதான் உண்மையான இறைநம்பிக்கை. ஒரு கடவுளை நம்புவதோ, சொர்க்கம் நரகம் போன்றவற்றை நம்புவதோ இல்லை அது தொடர்பான கோட்பாடுகளையும் சித்தாந்தங்

களையும் நம்புவதோ இறைநம்பிக்கையில்லை. நீங்கள் எந்த இயல்பு நிலையிலிருந்து தோன்றினீர்களோ எந்த இயல்பு நிலைக்குத் திரும்பிச் செல்லப் போகிறீர்களோ அந்த நிலையை நம்புவதுதான் இறைநம்பிக்கை. அந்த இயல்புநிலையை நம்பினால் உங்களிடம் எந்த நேரமும் நிறைவு இருக்கும். அதன் பின் உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு தருணமும் ஒரு புது நிறைவாக இருக்கும். ஒரு ஆழமான நிறைவாக இருக்கும். இல்லாவிட்டால் ஷுவாங் ட்சு சொல்வதைப் போல்

**ஒவ்வொரு புதுச் செயலும் ஒரு புதுத் தோல்வியே**

**அந்தச் செயல்கள் பகிரங்கமாகப் பட்டப்பகலில் நிகழ்ந்தால்**

**அவன் மனிதர்களால் தண்டிக்கப்படுவான்.**

**ரகசியமாகத் தனியறையில் நடந்தால்**

**ஆவிகள் அவனைத் தண்டிக்கும்.**

உங்கள் செயல்களை விளக்கிக் கொண்டிருக்காதீர்கள்.. செயல்முறை விளக்கம் தராதீர்கள்.

**அந்தச் செயல்கள் பகிரங்கமாகப் பட்டப்பகலில் நிகழ்ந்தால்**

**அவன் மனிதர்களால் தண்டிக்கப்படுவான்.**

இதனை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். அந்த ஆர்ப்பாட்டங்கள் பட்டப்பகலில் நிகழ்ந்தால் மனிதர்களால் அவன் தண்டிக்கப்படுவான். இதைப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கினால், ஒரு நடிகனைப் போல் செயல்படத் தொடங்கினால் உங்கள் வாழ்க்கை ஒரு சர்க்கஸ் காட்சியாகிவிடும். கண்காட்சியாகிவிடும். மக்கள் உங்களைப் போற்றுவார்கள். காரணம் நீங்கள் அவர்களுடைய எதிர்பார்ப்புகளுக்கு அடிபணிகிறீர்களே! அவர்கள் உங்களுக்குக் கைதட்டுவார்கள். ஆனால் அது அதிகநாட்கள் நீடிக்காது. விரைவிலேயே உங்கள் பொய்களை அவர்கள் புரிந்து கொள்வார்கள். எத்தனை நாட்கள்தான் உங்களால் பொய் சொல்ல

முடியும் சொல்லுங்கள். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அந்தப் பொய் வெளியே வந்துவிடும். அது பொய் என்று உணர்ந்தபின் அவர்கள் உங்களைத் தண்டிக்கத் தொடங்கு வார்கள்.

அமெரிக்காவின் தலைவராக இருந்த ரிச்சர்ட் நிக்சனின் வாழ்க்கையைப் பாருங்கள். நடிப்பும் ஆர்ப்பாட்டமும் செய்யும் ஒவ்வொருவருக்கும் அப்படித்தான் நடக்கும். முதலில் அவர்கள் உங்களுக்குக் கைதட்டினார்கள். அந்தக் கைதட்டலுக்கும் பாராட்டுக்கும் நீங்கள் பலியாகிவிட்டீர்கள். அவர்களுடைய பாராட்டை இன்னும் அதிகமாகப் பெற வேண்டும் என்பதற்காக இன்னும் அதிகமாகப் பொய் சொல்ல ஆரம்பித்தீர்கள். உண்மையிலிருந்து இன்னும் அதிக தூரம் விலகிப் போக ஆரம்பித்தீர்கள். இது ஒரு அழிவுச் சுழல். நீங்கள் நிஜத்திலிருந்து இன்னும் அதிக தூரம் விலக விலக நீங்கள் பொய் சொல்வதை மக்கள் இன்னும் எளிதாகக் கண்டுபிடிப்பார்கள். அதற்காக உங்களை இன்னும் கடுமையாகத் தண்டிப்பார்கள்.

மற்றவர்கள் உங்களைப் பாராட்டும்போது ஜாக்கிரதையாக இருங்கள். நீங்கள் ஆபத்தான பாதையில் செல்லத் தொடங்கி விட்டீர்கள். விரைவிலேயே உங்களைப் பாராட்டும் அதே மக்கள் உங்களைத் தண்டிக்கவும் தயங்கமாட்டார்கள்.

உங்கள் வெற்றிகளை மக்கள் சிலாகித்துப் பேசும் போது உங்கள் தோல்விகள் வெகுதூரத்தில் இல்லை என்பதை உண ருங்கள். அவர்கள் உங்களை சிம்மாசனத்தில் உட்காரவைத்தால் தப்பி ஓடிவிடுங்கள். ஏனென்றால் கூடிய சீக்கிரமே உங்களைக் குப்பைத் தொட்டியில் எறியவும் அவர்கள் தயங்கமாட்டார்கள்.

ஆனால் நீங்கள் முட்டாள்தனமாகச் செயல்படுகிறீர்கள். உங்களுக்கு முன்னால் வேறு யாரோ ஒருவர் அதே சிம்மாசனத்தில் இருந்தார் என்பதை நீங்கள் பார்க்கவில்லை. அவர்கள்தான் அவரை அங்கே அமர வைத்தார்கள். இப்போது அவ்ரைத் தூக்கி எறிந்துவிட்டார்கள்.

இப்போது அவர்கள் உங்களுக்கு மாலை போட்டு வரவேற்கிறார்கள். உங்கள் வருகையைக் கொண்டாடுகிறார்கள்

கூடிய சீக்கிரத்தில் அவர்கள் மற்றொரு நடிகரைக் கண்டுபிடிப் பார்கள். பிறகு உங்களைத் தூக்கிப் போட்டுவிடுவார்கள்.. மக்களிடம் புகழைத் தேடுபவன் கதி இதுதான். மக்களின் மனம் கோணாமல் வாழ நினைப்பவன் கதி இதுதான்.

வெளியுலக வாழ்க்கையில் வெற்றியைத் தேடாதீர்கள். அந்தத் தேடல் இல்லையென்றால் உங்கள் வாழ்வில் தோல்வியே வராது. மக்கள் உங்களை மதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கா தீர்கள். உங்களுக்கு அவமானமே வராது.

ஷுவாங் ட்சு சொல்கிறார்: ''வரிசையின் கடைசியில் நில்லுங்கள். உங்களை யாரும் பின்னால் தள்ள மாட்டார்கள்.''

வரிசையின் முதலில் நிற்காதீர்கள். அப்படி நின்றால் எல்லாரும் உங்கள் பகைவர்களாக இருப்பார்கள். விரைவிலேயே உங்களைத் தண்டிப்பார்கள். ஒவ்வொன்றின் எதிர்மறையும் அதனுடனேயே இருக்கிறது.. அவர்கள உங்களைப் பாராட்டினால் பின்னால் தண்டிப்பார்கள். உங்களை மதித்தால் பின்னால் அவமானப்படுத்துவார்கள்.

அதன் பின்னணி என்ன அதன் அமைப்பு என்ன என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்களை யாராவது மதித்தால் அவர் மனதின் ஆழத்தில் தான் அவமானப்படுத்தப்பட்டதாக உணர்கிறார். ஏனென்றால் உங்களை மதிப்பதன் மூலம் அவர் தாழ்ந்தவராகிவிட்டாரே! அவரால் எப்படி உங்களை மன்னிக்க முடியும்? முடியாது. இந்தக் கணக்கை ஒரு நாளில் நேர் செய்ய வேண்டும்.

அவர் குனிந்து உங்கள் கால்களைத் தொட்ட போது அவர் மனதில் ஆழமான காயம் ஏற்பட்டது. அவர் உங்களைவிடத் தாழ்ந்தவர் என்ற உணர்வு ஏற்பட்டது. ஆனால் அப்படி இல்லை என்று அவர் நிரூபிக்க வேண்டுமே! ஒரு நாள் அவர் உங்களைவிட உயர்ந்தவர் என்று நிச்சயம் நிரூபணம் செய்வார்.

அந்த சமுதாய அமைப்பைப் புரிந்து கொள்ளுங்கள். கணக்கு நேர் செய்யப்பட வேண்டும். நீங்கள் யாரையாவது பாராட்டும் போது கூர்ந்து கவனியுங்கள். உங்களுக்குள் அவரை

அவமானப்படுத்த வேண்டும் என்ற ஆசையும் இருக்கும். நல்ல விழிப்புணர்வுடன் செயல்பட்டால் இதைக் கவனிக்கலாம். இப்போது மனதின் ஆழத்தில் இருக்கும் அந்த ஆசையை - அவரை அவமானப்படுத்த வேண்டும் என்ற ஆசையைச் - செயல்படுத்த கால அவகாசம் தேவை அவ்வளவுதான். கூடிய சீக்கிரத்தில் அந்த அவகாசம் கிடைக்கிறது. உண்மையான ஞானி உங்கள் பாராட்டுக்களை விரும்பிப் பெற்றுக் கொள்ள மாட்டான். கையில் மாலையோடு அவனைப் போய்ப் பார்த்தால் ''இந்த மாலை எல்லாம் எனக்கு வேண்டாம். விரைவில் நான் இதற்கும் சேர்த்துக் காசு கொடுக்க வேண்டிய நிலை வரும். வந்த வழியே போய்விடுங்கள்'' என்று நிர்தாட்சண்யமாகச் சொல்லிவிடுவான்.

***அந்தச் செயல்கள் பகிரங்கமாகப் பட்டப்பகலில் நிகழ்ந்தால்***

***அவன் மனிதர்களால் தண்டிக்கப்படுவான்***

***ரகசியமாகத் தனியறையில் நடந்தால்***

***ஆவிகள் அவனைத் தண்டிக்கும்***

நீங்கள் வாழ்க்கையில் நடிக்கிறீர்கள். பெரிய தலைவர்களைப் போல் அந்த நடிப்பை வெளியில் காட்டாமல் இருக்கலாம். தனியாக இருக்கும் போது நடிக்கலாம். இன்று மக்கள் எவ்வளவு பெரிய பொய்யர்களாகிவிட்டார்கள் தெரியுமா? குளியலறையில் தனியாக இருக்கும்போதுகூட நடிக்கிறார்கள். அங்கே கூட அவர்கள் தங்களுக்கு உண்மையாக இருப்பதில்லை. பொய் அந்த அளவிற்கு அவர்களை ஊடுருவிவிட்டது. பொய்களை அவ்வளவு சுலபமாக ஒதுக்கிவைக்க முடியாது. அவை உங்களை விடாமல் துரத்துகின்றன. கனவுகளில்கூடப் பொய் சொல்லத் தொடங்கிவிட்டீர்கள். கனவு காணும்போது கூட பொய்கள் உங்களைத் தொடர்கின்றன. உங்களுக்கு உங்கள் தந்தை மேல் கோபம் இருக்கலாம். அவரைக் கொல்ல வேண்டும் என்று தோன்றலாம். ஆனால் கனவில் அவரைக் கொல்லாமல் உங்கள் சித்தப்பாவையோ பெரியப்பாவையோ கொல்லலாம். இப்படித்தான் பொய்கள் உங்களை ஆட்டிவைக்கின்றன. உங்கள்

சித்தப்பா உங்களுக்கு எந்தக் கெடுதலும் செய்யவில்லை. ஆனால் கனவிலே கொல்ல அவர்தான் தோதாக இருக்கிறார். பக்கத்தில் இருக்கிறார். போதாக்குறைக்கு உங்கள் தந்தையைப் போல வேறு இருக்கிறார்.

கனவிலே கூட உங்களுக்கு உங்கள் தந்தையைக் கொல்வது கடினமாக இருக்கிறது. அதனால்தான் கனவுகளைப் புரிந்து கொள்வது மிகவும் சிக்கலாகிவிட்டது. நாம் காணும் கனவுகளை நமக்கு விளக்க சிக்மண்ட் ஃப்ராய்ட் யூங் போன்ற மனவியல் வல்லுனர்கள் தேவைப்படுகிறார்கள். நீங்கள் கனவிலே என் சித்தப்பாவைக் கொன்றேன் என்று சொன்னால் ஃப்ராய்டு போன்றவர்களின் காதில் அது 'தந்தையைக் கொன்றேன்' என்றுதான் விழும். சித்தப்பா ஒரு வசதியான குறியீடுதான். உங்கள் உண்மையான எதிரி உங்கள் தந்தைதான் என்று ஃப்ராய்டு அடித்துக் கூறுவார்.

உங்கள் நடிப்பையும் ஆர்ப்பாட்டத்தையும் பகிரங்கமாகச் செய்யாமல் ஒரு தனியறைக்குள் செய்தால் இயற்கையே உங்களைத் தண்டிக்கும். நடிப்பும் ஆர்ப்பாட்டமும் போலிகள். அவை தண்டிக்கப்பட வேண்டுபவையே. இதைத்தான் ஷுவாங் ட்சு ஆவிகள் என்று குறிப்பிடுகிறார். ஆவிகள் என்று அவர் சொல்வது இயற்கையைத்தான்.

தண்டனை வேண்டாம் என்றால் நடிக்காதீர்கள். இயல்பாக இருங்கள். யார் என்ன சொன்னாலும் உங்கள் இயல்பை மாற்றிக்கொள்ளாதீர்கள். எதற்காகவும் நடிக்காதீர்கள். அவர்கள் உங்களைக் கெட்டவன் என்று சொன்னாலும் சரி, புரட்சிக்காரன் என்று சொன்னாலும் சரி, கொள்ளைக்காரன் என்று சொன்னாலும் சரி அதனை விட்டுத்தள்ளுங்கள். அவர்களிடம் நல்ல பெயர் வாங்க வேண்டும் என்பதற்காக உங்களை நீங்களே மாற்றிக் கொள்ளாதீர்கள். யாருக்காகவும் மாறாதீர்கள். எதற்காகவும் நடிக்காதீர்கள்.. அவர்கள் உங்களைச் சிலுவையில் அறையும் போதும் உங்களுக்கு உண்மையாக இருங்கள். ஏசுநாதர் சிலுவையில் மாட்டிக் கொள்ளாமல் தப்பித்திருக்கலாம். அந்தத் தண்டனையை நிறைவேற்றிய பாண்டியஸ் பைலேட் ஏசுவை

மன்னிக்கத் தயாராக இருந்தார். ஆனால் ஏசு நாதர் தன் வாயால் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று எதிர்பார்த்தார். ஆனால் ஏசு நாதர் கேட்கவில்லை. அப்படிக் கேட்டிருந்தால் அவர் வார்த்தைகளுக்கு அர்த்தமில்லாமல் போயிருக்கும். அவர் வாழ்க்கையும் போலியாகப் போயிருக்கும். எல்லாக்காலத்திலும் ஏசுநாதர் தனக்கு உண்மையானவராகவே இருந்தார்.

சாக்ரடீஸ் ஒரு மாமேதை. அவர் கடைசி வரை தன் இயல்பு நிலை மாறாமல் வாழ்ந்தவர். அவரைப் புரட்சிக்காரர் என்று முத்திரை குத்தி மரண தண்டனை விதித்துவிட்டார்கள். கடசியாக அவர் தப்பிக்க ஒரு வழி சொன்னார்கள்.

''இனிமேல் உங்கள் கருத்துகளை மக்களிடம் பரப்ப மாட்டேன் என்று நீங்கள் வாக்குறுதி கொடுத்தால், தத்துவம் பேச மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்தால், இனிமேல் எந்த விஷயத்திலும் தலையிடமாட்டேன் .எதைப்பற்றியும் பேசாமல் மௌனமாக இருப்பேன் என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டால் நாங்கள் உங்களை மன்னித்து விட்டுவிடுகிறோம்

இதைக் கேட்ட அந்த மாமேதை ஏதோ நகைச்சுவைத் துணுக்கைக் கேட்டது போலச் சிரித்தார்.

''அது என்னால் சத்தியமாக முடியாது. எனக்கு நானே துரோகம் செய்துகொள்ள முடியாது. இதுதான் என் இயல்புநிலை. இதிலிருந்து இம்மிகூட பிசக மாட்டேன். என்னை விட்டால் நான் இதுவரை செய்தது போல் என் கருத்துகளைப் பேசிக்கொண்டே யிருப்பேன். நான் சொல்வதைச் சொல்லிவிட்டேன். இனிமேலும் என்னைக் கொல்வதா வேண்டாமா என்று நீங்கள்தான் முடிவெடுக்க வேண்டும்.''

கொடிய நஞ்சைச் சிரித்த முகத்துடன் ஏற்றுக் கொண்டார். சாக்ரட்டீஸ் ஆனால் அவர்கள் அவருக்குப் போட நினைத்த வாய்ப்பூட்டை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

உங்களுக்கு நீங்களே உண்மையாக இருங்கள். மற்றவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.

தெய்வத் தன்மையை அடைய இது ஒன்றுதான் வழி. உங்கள் இயல்புநிலையில் வாழ இது ஒன்றுதான் வழி.

**நேர்மையின் பொருளை ஒவ்வொருவரும் புரிந்துகொள்ளட்டும்.**

**வேஷம் போடுவதைத் தவிர்க்கட்டும்.**

**ஆன்மாவின் அரணில் அவன் தனித்திருக்கும் போது**

**அவன் மனிதர்களுடனும் ஆவிகளுடனும் நல்லுறவுடன் இருப்பான்.**

***சரியான வழியில் நடப்பான்***

உங்களிடம் இல்லாத ஒன்றை இருப்பதாகக் காட்டிக்கொள்ள உங்களுக்கு ஆர்வம் இல்லை என்றால் உங்களுக்கும் இயற்கைக்கும் நல்ல உறவு இருக்கும். உங்களுக்கும் மற்ற மனிதர்களுக்கும் ஆரோக்கியமான உறவு இருக்கும். இந்தச் சமுதாயம் உங்களைக் கொல்லத் துணிந்தாலும் நீங்கள் அமைதியாகவே இருப்பீர்கள். ஏசுநாதரைச் சிலுவையில் அறையும் போது அவர் அமைதியாகவே இருந்தார். சாக்ரடீஸுக்கு விஷம் கொடுத்தார்கள். அப்போதும் அவர் அதே அமைதி நிலையில்தான் இருந்தார்.

அவர்கள் என்ன செய்தாலும் நீங்கள் எப்போதும் அமைதிநிலையிலேயேதான் இருப்பீர்கள். அவர்கள் செய்வது உங்களைப் பாதிக்காது. அது உங்களைத் தீண்டாது. நீங்கள் உங்கள் ஆன்மாவின் அரணில் அமைதியாக வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். அங்கே உங்களை எதுவும் நெருங்காது. அந்த அரணை ஊடுருவி எந்தத் தீயசக்தியும் ஊடுருவ முடியாது.

**அவன் மனிதர்களுடனும் ஆவிகளுடனும் நல்லுறவுடன் இருப்பான்.**

***சரியான வழியில் நடப்பான்.***

சரியான வழியில் நடப்பான் என்று ஷுவாங் ட்சு சொல்லும் போது அது தவறுக்கு எதிர்ப்பதமான சரியல்ல. சரியான வழி

என்பது இயற்கையின் வழி. இயல்பு நிலையின் வழி. இயல்பான வழியே சரியான வழி. சரியான வழியே இயல்பான வழி. நீங்கள் நீங்களாக இருப்பதே சரியான வழி.

உங்களால் என்ன செய்ய முடியும்? நீங்களாக இருக்க முடியும். உங்களுக்கு உண்மையாக இருக்க முடியும். அது மட்டுமே உங்களால் முடியும். வேறு எதைச் செய்தாலும் நீங்கள் வழிதவறி விடுவீர்கள்.

இன்று இவ்வளவு போதும்.

ஒரு மனிதனுக்குத் தன் நிழலைக் கண்டாலே வெறுப்பாக இருந்தது. தன் காலடிச் சத்தத்தையும் அவன் வெறுத்தான். இந்த இரண்டையும் தொலைத்துவிட நினைத்தான்.

அதற்கு அவன் கண்டுபிடித்த வழி அவற்றி லிருந்து தப்பி ஓடுவதுதான்.

அவன் எழுந்து ஓட ஆரம்பித்தான்.

ஒவ்வொரு முறையும் அவன் காலை எடுத்து வைத்த போது இன்னொரு கால் அங்கே இருந்தது. அவனுடைய நிழல் கொஞ்சம் கூடக் கஷ்டப் படாமல் அவனைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

தான் வேகமாக ஓடாததால்தான் தோல்வியுற்ற தாக அவன் நினைத்தான்.

அதனால் இன்னும் வேகமாக ஓட ஆரம்பித்தான். இன்னும் வேகமாக.. .. இன்னும் வேகமாக.. இறுதியில் ஓரிடத்தில் விழுந்து மாண்டான்.

பாவம் அவனுக்கு ஒரு விஷயம் புரியவில்லை - அவன் நிழலான ஒரு இடத்திற்குள் சென்றிருந் தால் அவன் நிழல் அங்கே இருந்திருக்காது. ஓடாமல் ஒரு இடத்தில் அமர்ந்திருந்தால் காலடிச் சத்தமும் கேட்டிருக்காது.

மனிதன் பெரிய குழப்பவாதி. அவனால் தன்னையே ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. தன்னைத்தானே நிராகரிக்கிறான். அந்த நிராகரிப்பினால்தான் ஆயிரம் ஆயிரம் குழப்பங்கள். குழப்பம், துன்பம் வேதனை என்று ஒரு தீமைச் சுழல் வந்துவிடுகிறது. உங்களை நீங்கள் அப்படியே ஏற்றுக்கொண்டால் என்ன? அதில் என்ன தவறு இருக்கிறது? பிரபஞ்சத்தின் இருப்பு நிலையே உங்களை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் நீங்கள்தான் உங்களை ஏற்றுக் கொள்வதில்லை.

உங்களுக்கு அடைவதற்கு என்று ஒரு லட்சியம் இருக்கிறது. அந்த லட்சியம் எப்போதும் எதிர்காலத்தில்தான் இருக்கிறது. அது அப்படித்தான் இருக்க முடியும். எந்த லட்சியமும் நிகழ்காலத்தில் இருக்காது. சரி எதிர்காலம் எங்கே இருக்கிறது? அது இன்னும் பிறக்கவில்லை. அது எங்கும் இல்லை. உங்கள் லட்சியத்தின் காரணமாக நீங்கள் எதிர்காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். எதிர்காலம் என்பது கனவு மாத்திரமே.

அந்த லட்சியம் காரணமாக உங்களால் இங்கு இப்பொழுது வாழமுடியவில்லை. அந்த லட்சியத்தின் காரணமாக உங்களை நீங்களே வெறுக்கிறீர்கள்.

எல்லாக் கொள்கைகளும் லட்சியங்களும் ஒரு கட்டத்தில் சுய வெறுப்பைத் தூண்டுகின்றன. உங்கள் மனதில் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற வரைபடம் உருவாகுகிறது. அதன் பின் உங்களையும் அந்த வரைபடத்தையும் தொடர்ந்து ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். ஏதோ குறைகிறதே என்று சதா கவலைப்படுகிறீர்கள். ஒன்றும் குறையவில்லை. நீங்கள் எந்த அளவுக்குப் பரிபூரணமாக இருக்க முடியுமோ அந்த அளவிற்குப் பரிபூரணமாகவே இருக்கிறீர்கள். உங்களிடம் குற்றம் குறை எதுவும் இல்லை.

இதைப் புரிந்துகொண்டால்தான் ஷுவாங் ட்சு சொல்லும் குட்டிக்கதையைப் புரிந்து கொள்ள முடியும்.

இதுவரை சொல்லப்பட்டக் கதைகளிலேயே மிகவும் அழகானது இதுதான். இந்தக் கதை நம் மன அமைப்பின் அடியாழம் வரை ஊடுருவிச் செல்கிறது. உங்கள் மனதில் ஏன்

லட்சியங்களைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் ஏன் இருக்கும் நிலையிலேயே முழுமையானவராக இல்லை? இந்தக் கணத்தில் இந்த நொடியில் நீங்கள் ஏன் கடவுளைப் போல் இல்லை? யார் உங்கள் வாழ்வில் குறுக்கிடுகிறார்கள்? யார் உங்கள் வளர்ச்சிப்பாதையைத் தடுக்கிறார்கள்? இந்தக் கணத்தில் உங்களால் ஏன் மகிழ்ச்சியை அனுபவிக்க முடியவில்லை? ஏன் பரவசப்பட முடியவில்லை? தடை எங்கே இருக்கிறது? தடை உங்களுக்காக நீங்கள் வகுத்துக் கொண்ட லட்சியத்தில் இருக்கிறது.

உங்களால் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும்? உங்களிடம் தான் மிதமிஞ்சிய கோபம் இருக்கிறதே? முதலில் இந்தக் கோபம் போகவேண்டும். உங்களால் எப்படி பரவச நிலையை அடையமுடியும்? உங்களிடம்தான் அதீத காம உணர்வுகள் இருக்கின்றனவே? முதலில் இந்த காம உணர்வுகள் விலகிச் செல்ல வேண்டும். ஒவ்வொரு கணத்தையும் ஒரு விழாவாகக் கொண்டாடும் கடவுளர்களைப் போல் உங்களால் எப்படி இருக்க முடியும்? உங்கள் மனதில் பேராசை, காமம், கோபம் எல்லாம் மண்டிக் கிடக்கிறதே! அவை எல்லாம் முதலில் ஒழிய வேண்டும். அதன் பின் நீங்கள் கடவுளைப் போல் இருக்கலாம்.

இப்படித்தான் லட்சியம் உருவாக்கபடுகிறது. அந்த லட்சியத்தால்தான் உங்களை நீங்களே வெறுக்கிறீர்கள். அந்த லட்சியத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நீங்கள் எப்போதும் குறையோடுதான் இருப்பீர்கள்.

ஒரு வேளை லட்சியத்தோடு ஒத்து இருந்தால்... இந்த இருந்தால் என்ற சொல்தான் பிரச்சினையே. அது இருக்கும் வரை உங்களால் பரவச நிலையை அடைய முடியாது.

''இந்த நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டால் நான் பரவசப்படுவேன்'' என்று சொன்னால் அந்த நிபந்தனைகள் என்றும் நிறைவேறாது. அதைவிட முக்கியம் ஒருவேளை அந்த நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டாலும் அந்த சமயத்தில் மகிழ்ச்சியைக் கொண்டாடும் சக்தியை நீங்கள் இழந்திருப்பீர்கள்.

அது மட்டும் இல்லை. அப்படியே அந்த நிபந்தனைகள் எல்லாம் நிறைவேறினாலும் உங்கள் மனம் மேலும் சில லட்சியங்களையும் நிபந்தனைகளையும் உங்களுக்காக உருவாக்கித்தரும்.

இப்படித்தான் பல பிறவிகளாக நீங்கள் வாழ்க்கையைத் தவறவிட்டிருக்கிறீர்கள். ஒரு லட்சியத்தை உருவாக்குகிறீர்கள். பின் அந்த லட்சியமாக மாற வேண்டும் என்று நினைக்கிறீர்கள். அதனோடு உங்களை நீங்களே ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். வெறுப்பும் வேதனையும் ஏமாற்றமும்தான் மிஞ்சுகிறது. கனவு காணும் தன்மையுடைய உங்கள் மனதினால் நிஜத்தை வெறுக்கிறீர்கள். கனவுகள் உங்களைப் பாடாய்ப் படுத்துகின்றன.

நான் இதற்கு எதிர்மறையாகச் சொல்கிறேன். இந்தக் கணத்தில் கடவுளரைப் போல இருங்கள். உங்கள் மனதில் கோபம் இருக்கட்டும். பாலுணர்வு இருக்கட்டும். பேராசை இருக்கட்டும் அதனால் என்ன? வாழ்க்கையைக் கொண்டாடுங்கள். நாளாக ஆக இன்னும் கொண்டாட வேண்டும் என்று விரும்புவீர்கள். தன்னால் கோபம் குறையும். பரவசம் பெருகும். பேராசை குறையும். மகிழ்ச்சி பெருகும் காமம் குறையும்.

அதன் பின் நீங்கள் சரியான பாதையில் இருப்பீர்கள். இதை விட்டால் வேறு வழியில்லை. ஒரு மனிதன் இந்த வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்கக் கற்றுக்கொண்டுவிட்டால் தவறு களும் தீமைகளும் ஓடி ஒளிந்துகொள்ளும். முதலில் தவறுகளை நீக்கிவிட்டுப் பிறகு முழுமையாக வாழ்வோம் என்று நினைத்தால் எதுவும் நடக்காது. அது இருட்டோடு சண்டை போடுவதற்குச் சமம்.

உங்கள் வீடு இருளில் மூழ்கிக் கிடக்கிறது என்று வைத்துக் கொள்வோம். ''நான் எப்படி மெழுகுவர்த்தியை ஏற்ற முடியும்? முதலில் இந்த இருட்டை அப்புறப்படுத்த வேண்டும்.. பிறகுதான் நான் மெழுகுவர்த்தியை ஏற்றுவேன்'' என்று நீங்கல் சொன்னால் இருட்டும் போகாது. ஒளியும் வராது.

அதைத்தான் நீங்கள் காலம் காலமாகச் செய்து கொண் டிருக்கிறீர்கள். முதலில் என் மனதில் இருக்கும் பேராசை

போகட்டும் அப்பறம் நான் தியானம் செய்வேன், சமாதி நிலையை அடைவேன். பரவசமாக இருப்பேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்.

இருள் போகட்டும். தீபத்தை ஏற்றுகிறேன் என்று சொல் கிறீர்களே அது வடிகட்டிய முட்டாள்தனம் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா? நீங்கள் தீபமேற்ற இருள் இடையூறாக இருக்கப்போகிறதா என்ன?

இருள் என்பது இல்;லாத ஒரு பொருள். அது ஒரு இல்லாமை நிலை. எதிர்மறை நிலை. அது திடப்பொருள் இல்லை. அது ஒரு இன்மை. இருப்பு அல்ல. ஒளியின் இன்மைதான் இருட்டு. அதனால் விளக்கேற்றினால் இருட்டு தன்னால் மறைந்துவிடப் போகிறது. கொண்டாடுங்கள். பரவசம் பொங்கும் தீக்கங்காக இருங்கள். தவறுகள் தன்னால் மறைந்துவிடும். சினம், பேராசை, காமம் இன்னும் என்ன என்ன இருக்கிறதோ இவை எதுவுமே தனிப் பொருள் இல்லை. இவை எல்லாமே ஒரு வகையான இன்மை நிலைதான். பரவசமின்மை. ஆனந்தமின்மை இவை தான் இப்படிப் பரிமளிக்கின்றன.

உங்களால் வாழ்க்கையை அனுபவிக்க முடியவில்லை. கோபம் கோபமாக வருகிறது. உங்கள் கோபத்தை யாரும் உண் டாக்கவில்லை. நீங்கள் துன்பத்தில் உழன்று கொண்டிருக்கிறீர்கள். உங்களால் வாழ்க்கையை அனுபவிக்க முடியவில்லை. அதனால் தான் உங்களுக்குக் கோபம் வருகிறது. உங்கள் கோபத்திற்கு நீங்கள் சொல்லும் காரணங்கள் நொண்டிச்சாக்குகளே. மற்ற வர்களால் உங்களுக்குக் கோபம் வருவதில்லை. வாழ்க்கையை அனுபவிக்கமுடியாத உங்கள் கையாலாகாத்தனத்தினால்தான் கோபம் வருகிறது.

உங்களிடம் அன்பு மலராது. உங்களால் வாழ்க்கையைக் கொண்டாட முடியவில்லையே! பின் அன்பு எப்படி மலரும்? அன்பின் இடத்தில் காமம் உண்டாகிறது. நிஜத்தை விட்டுவிட்டு நிழலைத் தேடி அலைகிறீர்கள். உங்கள் மனம் என்ன சொல்கிறது? ''முதலில் இதை எல்லாம் அழித்துவிடு. பின் கடவுள் தானாகவே உன் மனதிற்குள் இறங்குவார்.''

அந்த வாக்கியம் மனித முட்டாள்தனத்தின் சிகரம். இருப்பதிலேயே பழைமையான முட்டாள்தனமும அதுதான். அது அனைவரிடமும் இருக்கிறது.

இந்தக் கணத்தில் உங்களைக் கடவுள் என்று நினைத்துக் கொள்ள என்ன தடை? உங்களிடம் என்ன குறை? என்ன இல்லை உங்களிடம்? நீங்கள் உயிருடன் இருக்கிறீர்கள். நல்ல நினைவுடன் இருக்கிறீர்கள். வேறு என்ன வேண்டும்? இந்த கணத்தில் கடவுளைப் போல் இருங்கள். கடவுளைப் போல என்று சொன்னேன். அப்படியே இருக்கலாமே 'நான் என்னைக் கடவுளாகக் கற்பனை செய்து கொண்டிருக்கிறேன்' என்று கூட நினைத்துக் கொள்ளுங்கள். கற்பனையில் ஆரம்பித்தால் அது நிஜத்தில் முடியும். ஏனென்றால் நிஜமாகவே நீங்கள் கடவுள் தான்.

தெய்விக வாழ்க்கை வாழ ஆரம்பித்தால் உங்கள் வேதனை, குழப்பம், இருட்டு எல்லாமே மறைந்துவிடும். அப்பறம் எல்லாம் ஒளிமயம்தான். ஒளியாக மாறுங்கள். அதற்கு எந்த நிபந்தனை களும் இல்லை.

இப்போது நாம் இந்த அற்புதமான கதைக்குள் போகலாம்.

**ஒரு மனிதனுக்குத் தன் நிழலைக் கண்டாலே வெறுப்பாக இருந்தது. தன் காலடிச் சத்தத்தையும் அவன் வெறுத்தான். இந்த இரண்டையும் தொலைத்துவிட நினைத்தான்.**

**இந்த இரண்டிலிருந்தும் ஓடிவிட வேண்டும் என்று நினைத்தான்.**

நீங்கள்தான் அந்த மனிதன். ஒவ்வொருவரிடமும் அந்த மனிதன் இருக்கிறான். இப்படித்தான் நீங்கள் நடந்து கொண் டிருக்கிறீர்கள். இதுதான் உங்கள் வாதமும் கூட. நிழலைவிட்டு ஓடுவதுதான் உங்கள் நிலைப்பாடு. அவனுக்குத் தன் நிழலைக் கண்டாலே வெறுப்பு. ஏன்? நிழலில் என்ன பாவம் செய்தது? நிழல் என்ன அவன் பங்காளியா? அது ஏன் அவனை அந்த அளவிற்குப் பாதிக்க வேண்டும்? ஏனென்றால் சில கனவான்கள்

- அதிமேதாவிகள் சொல்லியிருக்கிறார்கள் - கடவுளுக்கு நிழல் இல்லை என்று. கடவுளர் நடக்கும் போது நிழல் விழாது. தனக்கு மட்டும் ஏன் நிழல் விழுகிறது என்பதுதான் அந்த மனிதனின் வருத்தம்.

சொர்க்கத்திலும் சூரியன் உதிக்கும்., அங்கே கடவுளர் நடப்பார்கள். ஆனால் நிழல் விழாது. காரணம் ஒளி அவர்களை ஊடுருவிச் சென்றுவிடும். இப்படித்தான் சொல்லிவைத்தார்கள். இது வெறும் கனவென்று நான் சொல்கிறேன்.

எந்த இடத்திலும் நிழல் விழாத எதுவும் இருக்க முடியாது. ஒரு பொருளும் கொஞ்சம் ஒளியும் இருந்தால் நிழல் இருக்கத் தான் செய்யும். அந்தப் பொருள் இருக்கும் வரை அல்லது ஒளி இருக்கும்வரை நிழல் இருக்கும்.

நீங்கள் இருந்தால் நிழல் இருக்கும். உங்கள் கோபம்,, காமம் பேராசை எல்லாமே உங்கள் நிழல்கள்தான். ஒரு வகையில் பார்த்தால் அவை இருப்பது போல் தோன்றும் இன்னொரு வகையில் பார்த்தால் அவை இல்லாததாகிவிடும். நிழல் என்பது ஒரு உறுதியான பொருள் இல்லை. அது இன்மை நிலை.

நீங்கள் நிற்கிறீர்கள். சூரிய கிரணங்கள் உங்கள் மேல் விழுகிறது. அந்தக் கிரணங்களை உங்களைத் தாண்டிச் செல்ல முடியாது. அதனால் உங்கள் நிழல் விழுகிறது. அந்த நிழல் உங்கள் உருவத்தைப் போல இருக்கிறது. அது ஒரு இன்மை நிலை மட்டுமே. நீங்கள் சூரியனைத் தடுப்பதால்தான் நிழல் விழுகிறது.

நிழலிடம் நிஜம் இல்லை. உங்களிடம்தான் நிஜம் இருக் கிறது. அதனால்தான் நிழலே உருவாகிறது. நீங்கள் மனிதனாக இல்லாமல் ஒரு பேயாகவோ பிசாசாகவோ இருந்தால் நிழல் விழாது.

வானுலகில் வசிக்கும் தேவதைகள் எல்லாம் பேய் பிசாசுகள் வகையைச் சேர்ந்தவர்கள்தான். உங்கள் கனவிலும் எண்ணத் திலும் உருவான பிசாசுகள். இந்தக் கதையில் வரும் மனிதனுக்கு என்ன வருத்தம்? 'நீ ஒரு கடவுளானால்தான் உன் நிழல் மறையும்.' என்று யாரோ அவனுக்குச் சொல்லியிருந்தார்கள்.

**ஒரு மனிதனுக்குத் தன் நிழலைக் கண்டாலே வெறுப்பாக இருந்தது. தன் காலடிச் சத்தத்தையும் அவன் வெறுத்தான். இந்த இரண்டையும் தொலைத்துவிட நினைத்தான்.**

உங்களைப் பாதிக்கும் விஷயங்களைக் கொஞ்சம் ஆழமாகப் போய்ப் பாருங்கள். பெரும்பாலும் அவை உங்கள் காலடிச்சத்தம் போல்தான் இருக்கும். அது ஏன் உங்களைப் படுத்த வேண்டும்? உங்களுக்குக் கால் இருக்கிறது. அது தரையில் படும் போது கொஞ்சம் சத்தம் வரத்தான் செய்யும். அதை நீங்கள் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும்.

ஆனால் இந்த மனிதன் கடவுளர்க்கு நிழலில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறான். அவர்கள் நடந்தால் காலடிச்சத்தம் வராது என்றும் கேள்விப்பட்டிருக்கிறான். இந்தக் கடவுளர் வெறும் கனவுக்காட்சியே. அவர்கள் உங்கள் மனதில்தான் வசிக்கின்றனர். காலடிச் சத்தம் வராமல் நடக்கக் கூடியவர்கள் எங்குமே இல்லை. நிழலும் சத்தமும் நம்முடன் பிறந்தவை. ஒளி வந்தால் நிழல் இருக்கும். நகர்ந்தால் சத்தம் கேட்கும். இதுதான் இயற்கை. இதை உங்களால் மாற்ற முடியாது. இதை மாற்ற முயற்சித்தால் நீங்கள் உங்கள் பாதையைத் தவறவிடுவீர்கள். இதை மாற்ற முனைந்தால் உங்கள் மொத்த வாழ்க்கையும் விரயமாகிவிடும். இறுதியில் நீங்கள் தொடங்கிய இடத்திலேயே இருப்பீர்கள். நிழலும் இருக்கும். காலடிச்சத்தமும் இருக்கும். மரணம் உங்கள் வாசற்கதவைத் தட்டிக் கொண்டிருக்கும்.

மரணம் கதவைத் தட்டும் முன்னால் நீங்கள் உங்களை உள்ளபடியே ஏற்றுக்கொள்ளுங்கள். அந்த ஏற்பில் ஒரு மகா அற்புதம் நிகழும். உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் போது உங்களை விட்டு நீங்கள் விலகி ஓட மாட்டீர்கள். இதுதான் அந்த மகா அற்புதம்.

இப்போது நீங்கள் ஒவ்வொருவரும் உங்களை விட்டு ஓடிக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் என்னிடம் வரும்போது கூட உங்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு வரும் பதற்றத்தைத்தான் பார்க்கிறேன். அதனால்தான் உங்களால் என்னை அடைய

முடியவில்லை. நமக்குள்ளே ஒரு இடைவெளி வந்துவிடுகிறது. உங்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு ஓடும் முயற்சியில் என்னிடம் வந்தால் என்னை நீங்கள் முழுமையாக வந்து சேர முடியாது. நீங்கள் உங்களிடமிருந்து தப்பித்து ஓடக்கூடாது என்பதற்குத்தான் இவ்வளவு சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் நீங்களாகத்தான் இருக்க முடியும் வேறு யாராகவும் இருக்கமுடியாது. உங்களுக்கு என்று ஒரு தனித்தன்மை இருக்கிறது. உங்களுக்கென்று பிரத்தியேகமாய் ஒரு வழியை உருவாக்கித் தந்திருக்கிறது இயற்கை.

உங்கள் கட்டைவிரல் ரேகையை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் எவ்வளவுத் தனித்தன்மை இருக்கிறது? அந்தக் கட்டை விரல் இதுவரை இருந்ததும் இல்லை. இனி இருக்கப் போவதும் இல்லை. அது உங்களுக்கே சொந்தமானது. உங்கள் இருப்பு நிலையும் அப்படித்தான்.. அது உங்களுக்கே சொந்தமானது. பிரத்தியேகமானது. தனித்தன்மை வாய்ந்தது. உங்களுக்கென்று ஒரு ஒப்புவமையில்லாத இருப்புநிலை கொடுக்கப்பட்டுள்ளது. அந்த இருப்புநிலை இதுவரை இருந்ததும் இல்லை. இனி இருக்கப் போவதும் இல்லை. அது உங்களிடம் மட்டுமே உள்ளது. அதைக் கொண்டாடுங்கள்.

இந்தத் தனித்தன்மை ஒவ்வொருவருக்கும் கொடுக்கப் பட்டுள்ளது.. இயற்கை ஒவ்வொருவருக்கும் ஒரு தனித்தன்மை வாய்ந்த பரிசினைக் கொடுத்திருக்கிறது. நீங்கள் அந்தப் பரிசை வெறுக்கிறீர்கள். இன்னும் சிறந்ததாக இருந்தால் நன்றாக இருக்குமோ என்று நினைக்கிறீர்கள். பிரபஞ்ச இருப்புநிலையை விட புத்திசாலியாக வேண்டும் என்று நினைக்கிறீர்கள். தாவோவைவிட புத்திசாலித்தனமாகச் செயல்பட வேண்டும் என்று திட்டமிடுகிறீர்கள். அப்போதுதான் வழி தவறுகிறீர்கள்.

முழுமையைவிட அதன் ஒரு பகுதி அறிவிற் சிறந்ததாக இருக்க முடியாது. முழுமை செய்வதுதான் இறுதியானது. அதை உங்களால் மாற்ற முடியாது. அதை மாற்ற முயற்சித்து அதில் உங்கள் வாழ்க்கையையே பாழாக்கிக் கொள்ளலாம். ஆனால் அதன் மூலம் ஒன்றும் செய்ய முடியாது.

முழுமை பரந்து விரிந்து பிரம்மாண்டமாக இருக்கிறது. அதில் நீங்கள் ஒரு சிறிய அணு மாத்திரமே. சமுத்திரம் பிரம்மாண்டமானது. அதில் நீங்கள் ஒரு சிறு துளி மட்டுமே. மொத்தக் கடலும் உப்பாகக் கரிக்கும் போது அதில் உள்ள சிறு துளியான நீங்கள் தேனாக இனிக்க விரும்புகிறீர்கள். அது நடக்காத காரியம். ஆனால் இப்படி நடக்காத காரியங்களில் ஈடுபடுவதைத்தான் உங்கள் அகந்தை விரும்பும். கடினமான செயல்கள், செய்யவே முடியாத செயல்களில் ஈடுபடுவது அகந்தைக்கு அல்வா சாப்பிடுவது போல். ஷுவாங் ட்சு சொல்கிறார் : ''சுலபமாக இருப்பது சரியாகவே இருக்கும்.''

நீங்கள் ஏன் எளிமையாக இருக்கக் கூடாது? அனைத்தையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது? உங்கள் நிழலை ஏன் வெறுக்க வேண்டும்? மறுக்க வேண்டும்? உங்கள் நிழலை ஏற்றுக் கொண்ட அந்தத் தருணத்தில் நீங்கள் அதை மறந்துவிடுகிறீர்கள். நிழல் மறைந்துவிடுகிறது - குறைந்த பட்சம் உங்கள் மனதிலிருந்து. உடலுடன் சேர்ந்து இருக்கலாம்.

அதனால் என்ன பிரச்சினை? நிழலினால் என்ன பிரச்சினை வரும்? உங்கள் நிழலை ஏன் பிரச்சினையாக்க வேண்டும்? நீங்கள் இப்போது இருக்கும் நிலையில் எல்லாவற்றிலிருந்தும் பிரச்சினையை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். இந்தக் கதையில் வரும் மனிதன் தன் நிழலினால் தொல்லைப்பட்டான். அது அவனுக்கு ஒரு புதிராக இருந்தது. அவன் நிழலில்லாத கடவுளரில் ஒருவராக இருக்க வேண்டும் என்று விரும்பினான்.

நீங்கள் ஏற்கனவே ஒரு கடவுளைப் போல்தான் இருக்கிறீர்கள். பின் அதே நிலைக்கு எப்படிப் பயணிக்க முடியும்? நீங்கள் ஏற்கனவே இருக்கும் நிலையை அடைய நீங்கள் செய்யும் முயற்சி அனைத்தும் வியர்த்தமே. நீங்கள் அங்கும் இங்கும் அலையலாம். மற்றவர்கள் வீட்டுக் கதவுகளைத் தட்டலாம். ஆனால் அதெல்லாம் வெறும் கண்ணாமூச்சி விளையாட்டு மட்டுமே. இறுதியில் உங்கள் வீட்டிற்குத்தான் திரும்புவீர்கள். நீங்கள் அடைய வேண்டிய நிலை அங்கே ஏற்கனவே இருப்பதைப் பார்ப்பீர்கள். அதை யாராலும்

உங்களிடமிருந்து பிரித்து எடுக்க முடியாது. இயல்புநிலையை, தாவோவை உங்களிடமிருந்து யாராலும் பிரிக்க முடியாது.

இந்த மனிதன் நிழலினால் தொல்லைப்பட்டான். அதிலிருந்து தப்பியோட வேண்டும் என்று நினைத்தான். இதைத்தான் பலரும் செய்கிறார்கள்.

மனித மனத்திற்கு ஒரு விபரீதமான காரண - காரிய அறிவு இருக்கிறது.

உதாரணமாக உங்களுக்குக் கோபம் வந்தால் என்ன செய்வீர்கள்? உங்கள் மனம் என்ன சொல்லும்.? ''கோபப்பட மாட்டேன் என்று ஒரு உறுதிமொழி எடுத்துக்கொள்.'' நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் கோபத்தை அடக்கி வைப்பீர்கள். அதனை அடக்கிவைக்க அடக்கி வைக்க அது இன்னும் அதிகமாகும். கோபம் உங்கள் மனதின் ஆழத்தில் போய் பின் இருப்புநிலையின் வேர்களில் போய்த் தங்கிவிடும். அதன் பின் உங்கள் நிலைமை இன்னும் மோசமாகிவிடும்.

முதல் கட்டத்தில் நீங்கள் சில சமயம் கோபமாக இருப்பீர்கள். சில சமயம் கோபமில்லாமல் இருப்பீர்கள். ஆனால் சினம் அடக்கிவைக்கப்பட்டால் நீங்கள் எப்போதும் சினத்துடனேயே இருப்பீர்கள். சினம் உங்கள் ரத்தத்துடன் கலந்துவிடும். விஷமாகப் பரவிவிடும். உங்கள் மனித உறவுகளில் அசிங்கமாக வெளிப்படும். நீங்கள் யாரையாவது காதலித்தால் அந்தக் காதலில் சினம் இருக்கும். அந்தக் காதலே ஒரு வன்முறையாக மாறிவிடும். யாருக்காவது உதவி செய்தால் அந்த உதவியில் கூட இந்தச் சினம் என்னும் விஷம் கலந்திருக்கும். காரணம் விஷம் உங்களுக்குள் இருக்கிறது. உங்கள் செயலில் எல்லாம் அந்த விஷம் இருக்கும். உங்களுக்குள் இருக்கும் விஷத்தையே உங்கள் செயல்களும் உறவுகளும் பிரதிபலிக்கும். அதை நீங்கள் மீண்டும் உணரும் போது உங்கள் மனம் ''நீ உள்ளே அடக்கி வைத்தது போதாது. இன்னும் அதிக வன்மையுடன் அடக்கி வை'' என்று அறிவுரை சொல்லும். அந்த அடக்கி வைத்தலால்தான் கோபமே தோன்று கிறது. மனமோ இன்னும் அதிகமாக அடக்கிவை என்று சொல்கிறது. அதனால் உங்கள் கோபம் இன்னும் அதிகமாகும்.

உங்கள் மனம் காமத்தில் லயித்திருப்பதற்குக் காரணம் நீங்கள் உங்கள் பாலுணர்வுகளை முரட்டுத்தனமாக அடக்கி வைத்ததுதான். மனம் என்ன சொல்கிறது? ''இன்னும் அதிகமாக அடக்கி வைக்க வேண்டும். பாலுணர்வை அடக்கி வைக்க வேறு ஏதாவது புது வழி இருக்கிறதா என்று பார். முற்றிலுமாக அடக்கி வைத்தால்தான் உன்னுள் பிரம்மச்சரியம் மலரும்.''

அப்படி ஒரு நாளும் மலராது. அப்படி அடக்கிவைப்பதால் பாலுணர்வு உடலுக்குள் மட்டும் அல்லாமல் மனதிற்குள்ளும் சென்று விடுகிறது. அது அறிவு சார்ந்த விஷயமாகிவிடுகிறது. அதன் பின் மனிதன் அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக் கிறான். அதனால்தான் இன்று வலைதளங்களிலும் அச்சு வடிவிலும் மிக அதிக அளவில் ஆபாசப் படங்களும் எழுத்துகளும் உலா வருகின்றன.

பெண்ணின் நிர்வாணப் படங்களைப் பார்ப்பதில் மக்கள் ஏன் அவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்கள்? பெண்ணைப் பார்த்தால் போதாதா? பெண்கள் இருக்கும் போது படத்திற்கு என்ன வேலை? ஒரு பெண்ணின் நிர்வாணப்படம் அந்தப் பெண்ணைவிட அதிகமாகப் பாலுணர்வைத் தூண்டுகிறது. நிஜப் பெண்ணிற்கு உடல் இருக்கிறது. நிழல் இருக்கிறது. அவளுடைய காலடிச் சத்தம் கேட்கும். ஆனால் அவளுடைய புகைப்படம் வெறும் கனவு மட்டுமே. அது மனதிற்கு மட்டுமே தெரியும் ஒரு மாயக்காட்சி. அதற்கு நிழல் இல்லை.

தோலும் சதையும் உள்ள ஒரு நிஜப் பெண்ணிற்கு. வியர்க்கும். அவள் உடலிலிருந்து அந்த வியர்வை நாற்றம் வரலாம். ஆனால் படத்தில் உள்ள் பெண்ணிற்கு வியர்க்காது. அதனால் அவளிடமிருந்து எந்த நாற்றமும் வராது. உயிருள்ள பெண்ணிற்குக் கோபம் வரும். படத்தில் இருக்கும் பெண்ணிற்குக் கோபம் வராது. உயிரும் உடலும் உள்ள ஒரு பெண்ணிற்கு முதுமை வரும். ஆனால் புகைப்படத்திற்கு அந்தப் பிரச்சினை இல்லை. அது எப்போதும் இளமையாக இருக்கும். படம் என்பது மனம் சம்பந்தப்பட்டது. தங்கள் உடலில் பாலுணர்வை அடக்கி வைப்பவர்கள் மனரீதியில் அதீதப்

பாலுணர்வுடன் இருப்பார்கள். அவர்கள். மனம் காமத்தின் பிடியிலேயே எப்போதும் இருக்கும். அந்த நிலையில் அதுவே அவர்களுக்கு ஒரு நோயாகிவிடும்.

உங்களுக்குப் பசித்தால் சாப்பிடுங்கள். ஆனால் இருபத்திநான்கு மணி நேரமும் நீங்கள் உணவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் அது ஒரு மன நோயாகிவிடும். பசி இருக்கிறது. சாப்பிடுகிறீர்கள். அந்த வேலை முடிந்துவிட்டது. இனி அடுத்த முறை பசியெடுக்கும் வரை உணவு பற்றிய சிந்தனையே உங்களிடம் வராது. ஆனால் அந்தப் பசியை ஆற்றிக் கொள்ளாமல் அடக்கி வைத்தால்? அது மனதிற்குச் சென்றுவிடும்.

ஒரு முறை முல்லா நசிருதீனின் மனைவி நோய்வாய்ப் பட்டிருந்தாள். ஒரு அறுவை சிகிச்சை செய்யவேண்டியிருந்தது. சில நாட்களுக்கு முன்புதான் அவள் வீட்டிற்கு வந்திருந்தாள். முல்லாவிடம் நான் கேட்டேன் ''உன் மனனவி எப்படி இருக் கிறாள்? அறுவைச் சிகிச்சை செய்தார்களே, குணமாகிவிட்டதா?''

''இல்லை, இன்னும் அவள் அதைப்பற்றியே பேசிக் கொண்டிருக்கிறாள்.''

ஒரு விஷயத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால், அதைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தால் நீங்கள் இன்னும் அதிலிருந்து விடுபட்டு வரவில்லை என்றுதான் பொருள். ஆனால் இந்த இடத்தில் அது ஆபத்தானது. ஏனென்றால் உடல் அறுவை சிகிச்சையிலிருந்து மீண்டு வந்துவிட்டாலும் மனம் இன்னும் அங்கேயே மாட்டிக் கொண்டு தவித்துக் கொண் டிருக்கும். உடல் குணமாகுமே தவிர மனம் குணமாகாது.

பசியை அடக்கிவைத்துப் பாருங்கள். பசி உடலிலிருந்து மனதிற்குப் போய்விடும். பிரச்சினையை வெளியே தூக்கியெறி வதற்குப் பதிலாக உள்ளே தூக்கியெறிந்துவிட்டீர்கள். இதைப் போல் எதை அடக்கி வைத்தாலும் அது உங்கள் வேர்களில் போய் ஒட்டிக் கொள்ளும். நீங்கள் அடக்கி வைக்கும் முயற்சியில் வெற்றி பெறுவது இயலாத காரியம். வெற்றி பெறவில்லை

யென்றால் உங்கள் மனம் ஏதோ தவறு நடந்து கொண்டிருக்கிறது என்று சொல்லும். உங்கள் முயற்சி தேவையான அளவு இல்லை என்று குற்றம் சாட்டும். இன்னும் அதிகமாக முயற்சி செய்யுங்கள் என்று சொல்லும்.

**அதற்கு அவன் கண்டுபிடித்த வழி அவற்றிலிருந்து தப்பி ஓடுவதுதான்.**

மனதிற்கு இரண்டே வழிகள்தான் தெரியும். ஒன்று, எதிர்த்து நின்று சண்டை போடுவது. இல்லை துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று தப்பித்து ஓடுவது. இரண்டுமே தவறானவை. நீங்கள் சண்டை போடும் போது அந்த பிரச்சினையுடனேயே இருக்கிறீர்கள். அந்தப் பிரச்சினை தொடர்ந்து நீடிக்கும். சண்டை போடும் போது உங்களுக்குள் பிரிவுகள் வந்துவிடுகின்றன. ஏனென்றால் பிரச்சினை வெளியில் இல்லை. உங்களுக்குள்ளேயேதான் இருக்கிறது.

உதாரணமாக உங்களுக்குக் அடிக்கடி கோபம் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அதை எதிர்த்துப் போராடுகிறீர்கள் உங்களில் ஒரு பகுதி கோபத்துடன் இருக்கிறது. மற்றொரு பகுதி அந்தக் கோபத்துடன் போரிடுகிறது. இது என்ன விபரீதமான வேடிக்கை? உங்கள் வலது கையும் இடது கையும் சண்டை போட்டால் யார் ஜெயிப்பார்கள்? உங்கள் சக்திதான் வீணாகும். யாருமே வெல்ல முடியாத சண்டை அது.

கோபத்தைக் கட்டுப்படுத்திவிட்டதாக நீங்கள் முட்டாள் தனமாக நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் நீங்கள் உங்கள் கோபத்தைக் கீழே போட்டு அதன் மேல் உட்கார்ந்திருக்கிறீர்கள். நீங்கள் அப்படியே உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டும். ஒரு சில நிமிடங்களுக்குக் கூட உங்களுக்கு ஒய்வு கிடைக்காது. ஒரு கணத்திற்கு அதை மறந்து போனாலும் நீங்கள் அதுவரை ஜெயித்தது எல்லாமே வீணாகிவிடும்.

மக்கள் தங்கள் இயற்கை உணர்வுகளை அடக்கி வைத்து அதன் மேல் அமர்ந்திருக்கிறார்கள். அதனால் அவர்களால் ஒரு நிமிடம் கூட சும்மா இருக்க முடியவில்லை. ஓய்வு நிலையில்

இருப்பதே மிகவும் கடினமாகிவிட்டது. அது ஏன்? உங்களால் எளிதாகத் தூங்க முடியவில்லை. அது ஏன்? உங்களால் எல்லாவற்றையும் போனால் போகட்டும் என்று விட்டுவிட்டுச் சும்மா இருக்க முடியவில்லை. காரணம் நீங்கள் பலவற்றை அடக்கி வைத்திருக்கிறீர்கள். உங்களுக்குப் பயமாக இருக்கிறது. கொஞ்ச நேரம் சும்மா இருந்தாலும் அவை வெளியே வந்துவிடுமோ என்று அஞ்சுகிறீர்கள்.

நீங்கள் வணங்கும் மத குருமார்களால் ஒரு நிமிடம் சும்மா இருக்க முடியாது எந்த நேரமும் அவர்கள் அழுத்தத்துடன்தான் இருப்பார்கள். அவர்கள் அழுத்தத்தின் காரணம் இதுதான். அவர்கள் பல விஷயங்களை உள்ளே அடக்கி வைத்திருக் கிறார்கள். ''கொஞ்ச நேரம் சும்மாத்தான் இருங்களேன்'' என்று சொல்லிப் பாருங்கள். ''ஐயையோ நாங்கள் சும்மா இருந்தால் பகைவன் உடனே உள்ளேயிருந்து கிளம்பி வந்துவிடுவான்.'' அவர்களுக்குத் தூங்கக் கூடப் பயமாக இருக்கிறது.

உங்கள் மகாத்மாக்களைப் பாருங்கள். அவர்கள் தூக்கத்திற்குப் பயப்படுகிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கத்தைக் குறைத்து ஒரு நாள் தூக்கத்தை அறவே ஒழித்து விடலாம் என்று நினைக்கிறார்கள். எட்டு மணி நேரத்திலிருந்து தூக்கத்தை ஆறு மணி நேரமாகக் குறைக்கிறார்கள். ஆறிலிருந்து ஐந்து, ஐந்திலிருந்து மூன்று, அப்பறம் முடிந்தால் இரண்டு என்று குறைத்துக் கொண்டேயிருக்கிறார்கள். ஒரு துறவி, ஒரு வயதான சன்னியாசி ஒரு நாளில் இரண்டு மணி நேரம் மட்டுமே தூங்கினால் அது ஒரு சாதனை என்று நினைக்கிறார்கள். அது சாதனையில்லை. முட்டாள்தனம். 'மொத்த உலகமும் தூங்கும் போது யோகி மட்டும் விழித்துக் கொண்டிருக்கிறான்.' என்று கண்ணன் கீதையில் சொல்லியிருக்கிறான். ஆனால் அதற்கு அர்த்தம் இதுவல்ல.

உங்கள் உடலில் அழுத்தம் இல்லையென்றால் அது உறங்கும் போது உள்ளுணர்வு எப்போதும் விழிப்பு நிலையில் இருக்கும். அதுதான் கண்ணன் சொல்வது. அது வேறு. அதற்கும் உங்கள் சாதாரணத் தூக்கத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

சொல்லப்போனால் ஒரு யோகி உங்களைவிட நன்றாகவே தூங்குவான். காரணம் அவனிடம் பயம் இல்லை. அவனால் சும்மா இருக்க முடியும், உடலையும் மனத்தையும் எந்த நேரத்திலும் தளர்வாக வைத்துக் கொள்ள முடியும். ஆனால் இந்த சாமியார்களால் அது முடியாது. காரணம் அவர்களிடம் ஒரு பயம் இருக்கும். தூங்கும் போது அவர்கள் அடக்கி வைத்த உணர்வுகள் கனவுகள் மூலமாக வெளிப்பட்டுவிடுமே என்கிற பயம் இருக்கும்.

மகாத்மா காந்தி தனது சுயசரிதையில் என்ன எழுதி யிருக்கிறார் தெரியுமா?

''விழித்திருக்கும் நேரங்களில் நான் பாலுணர்வை வெற்றி கொண்டு விட்டேன். ஆனால் தூங்கும் போது பாலுணர்வு சம்பந்தமான கனவுகளாகவே வருகின்றன.''

அவை வரத்தான் செய்யும். ஏனென்றால் நீங்கள் விழித் திருக்கும் போது அடக்கிய விஷயங்கள் கனவில் வெளிப்படும். ஏன் கனவில் வருகின்றன? தூங்கும் போது உங்களுக்குள் இருக்கும் தணிக்கைக் குழு சுறுசுறுப்பாகச் செயல்படாது. அந்த உணர்வுகளை எதிர்த்துச் சண்டை போடுபவன் அங்கு இல்லை. அவன் தூங்கிவிட்டானே! அதனால் பகைவன் மேலே தோன்றி ஆட்டம் போடுவான்.

மனம் ''போரிடு'' இல்லை ''தப்பியோடு'' என்று சொல்கிறது. சரி போரிட வேண்டாம், தப்பி ஓடுவோம் என்றால் எங்கே ஓடுவது? இமய மலையின் உச்சிக்கு ஓடினாலும் அங்கேயும் உங்கள் கோபம் உங்களைத் தொடர்ந்து வரும். அதுதான் உங்கள் நிழல். பாலுணர்வு தொடர்ந்து வரும். அதுதான் உங்கள் நிழல். நீங்கள் எங்கே போனாலும் உங்கள் நிழல் உங்களைப் பின் தொடர்ந்து வரும்.

***அதற்கு அவன் கண்டுபிடித்த வழி அவற்றி லிருந்து தப்பி ஓடுவதுதான்.***

***அவன் எழுந்து ஓட ஆரம்பித்தான்.***

**ஒவ்வொரு முறையும் அவன் காலை எடுத்து வைத்த போது இன்னொரு கால் அங்கே இருந்தது. அவனுடைய நிழல் கொஞ்சம் கூடக் கஷ்டப் படாமல் அவனைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.**

அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் மிக வேகமாக ஓடிக்கொண்டிருந்தான். என்றாலும் நிழல் கொஞ்சம் கூடச் சிரமப்படாமல் அவனைப் பின் தொடந்து வந்து கொண்டிருந்தது. நிழலுக்கு வியர்க்கவில்லை. மூச்சு வாங்கவில்லை. நிழலுக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. ஏனென்றால் நிழலே உண்மை யில்லையே! நிழல் ஒரு இன்மை நிலைதானே! ஓடிய மனிதனுக்கு வியர்க்கலாம் மூச்சு வாங்கலாம். ஆனால் இந்தக் கஷ்டம் எதுவும் இல்லாமல் நிழல் அவன் கூடவே வந்து கொண்டிருந்தது. நிழலால் உங்களைவிட்டுப் போக முடியாது. போரிடு அல்லது தப்பி ஓடு ஆகிய உத்திகள் இங்கே செல்லுபடியாகாது.

நீங்கள் எங்கே போவீர்கள்? எங்கே போனாலும் உங்களையும் தூக்கிக் கொண்டு போக வேண்டுமே! அப்போது நிழலும் கூடவே வந்துவிடுமே!

**தான் வேகமாக ஓடாததால்தான் தோல்வியுற்ற தாக அவன் நினைத்தான்.**

**அதனால் இன்னும் வேகமாக ஓட ஆரம்பித்தான். இன்னும் வேகமாக.. .. இன்னும் வேகமாக.. இறுதியில் ஓரிடத்தில் விழுந்து மாண்டான்.**

மனதின் காரண-காரியங்களை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அதைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் அதற்கு நீங்கள் பலியாகிவிடுவீர்கல். மனதின் காரண காரியம் தீமையின் பாற்பட்டவை. அது ஒரு தீமையின் சுழலுக்குள் உங்களை இழுத்துக் கொண்டு போய்விடும்.

உங்கள் மனதின் பேச்சைக் கேட்க ஆரம்பித்தால் அது அந்தச் தீமைச் சுழலின் ஆழத்திற்கு உங்களைக் கொண்டுபோய்த் தள்ளிவிடும்.

கதையில் வரும் மனிதனின் வாதங்கள் என்னவோ நன்றாகத்தான் இருக்கிறது. அவனுடைய தர்க்கத்தில் தப்புக் கண்டுபிடிக்க முடியாது. அவன் அரிஸ்ட்டாட்டிலைப் போல் ஒரு பெரிய தர்க்கவாதிதான் அதில் எந்த சந்தேகமும் இல்லை. நிழல் என்னைத் தொடர்கிறது என்கிறான். உங்களை யாராவது பின் தொடர்ந்தால் என்ன செய்வீர்கள்? இன்னும் வேகமாக ஓடுவீர்கள் இல்லையா? ஒரு கட்டத்தில் பின்னால் வருபவன் மேலே தொடராமல் நின்றுவிடுவான், இல்லையா? அவன் அதே முறையை நிழலுக்குக் கையாள்கிறான். 'நான் வேகமாக ஓடினால் ஒரு கட்டத்தில் நிழல் என்னைப் பின் தொடராமல் நின்றுவிடும் என்று அவன் நினைக்கிறான். இதில் தர்க்கரீதியாக எந்தத் தவறும் இல்லை. ஆனால் நிழல் உங்களுடையது ஆயிற்றே! நிழல் என்று தனியாக ஏதுமே இல்லையே! அது ஒரு இன்மை நிலை என்று பார்த்தோமா அல்லவா? வேறு யாராவது உங்களைப் போன்ற மனிதர்கள் பின் தொடர்ந்திருந்தால் அந்த வாதம் எடுபட்டிருக்கும். தொடர்வது நிழல் என்றால்? தனக்கென்று தனியாக ஒரு இருப்பு இல்லாத ஒரு இன்மை நிலை என்றால்?

வேறு யாராவது உங்களுடன் இருந்தால் மனம் சிந்திப்பது சரியாகவே இருக்கும். நீங்கள் மட்டும் தனியாக இருந்தால் மனதின் சிந்தனைகள் முக்கால்வாசி தவறாகவே இருக்கும். நீங்கள் மற்றவர்களுடன் இருக்கும் போது இந்தச் சமுதாயத்தில் இருக்கும் போது மனதின் செயல்பாடுகள் சரியாகவே இருக்கும். ஆனால் நீங்கள் தனியாக இருக்கும்போது அது தப்பாகிவிடும். ஏன்? மனம் என்பது மற்றவர்களுடன் உறவு கொள்வதற்கான சாதனம் மட்டுமே. அடுத்தவர்களுடன் வாழ மனம் என்ற உத்தி தேவைப்படுகிறது. அதை வைத்துக் கொண்டு நீங்கள் தனியாக எதையும் செய்ய முடியாது. சமுதாயம் என்ற ஒன்று இருப்பதால்தான் மனம் தேவைப்படுகிறது. பிறந்த குழந்தை சமுதாயத்தை விட்டு விலகிப் போய்விட்டதென்றால் அதற்கு மனம் வளராது. மனம் என்ற ஒன்று இருக்கவே இருக்காது. இது பலமுறை நடந்திருக்கிறது.

கல்கத்தா நகருக்கு அருகே முப்பது, நாற்பது வருடங்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சி இது. ஒரு சிறிய பெண் குழந்தையைக்

காட்டு ஓநாய்கள் தூக்கிக் கொண்டு போய்விட்டன. அந்த ஓநாய்கள் அந்தக் குழந்தையை தங்கள் குட்டியைப் போல் வளர்ந்து வந்தன. அந்தப் பெண்ணிற்கு 14 வயதாகும் போது யாரோ ஒருவர் அவள் ஓநாய்களுடன் இருப்பதைப் பார்த்து விட்டார். ஓநாய்களை விரட்டிவிட்டு அவளைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள். ஆனால் அவள் ஒரு ஓநாயைப் போல்தான் இருந்தாள். அவளிடம் மனித மனமே இல்லை. ஓநாயைப் போல் நாலு கால் பாய்ச்சலில்தான் ஓடுவாள். பச்சை மாமிசத்தைத்தான் சாப்பிடுவாள். ஆபத்தானவளாக இருந்தாள். மிகவும் வலிமை யுடையவளாக இருந்தாள். அவளைக் கட்டுப்படுத்த எட்டு கட்டுமஸ்தான ஆண்கள் தேவைப்பட்டார்கள். அவளுக்கு ஓநாயின் குணங்கள்தான் இருந்தன. ஓநாயின் மனம் தான் இருந்தது. ஓநாய்களின் சமூகத்தில் வளர்ந்ததால் ஓநாய் மனமே இருந்தது. அவளை மனிதர்களைப் போல் இரண்டு கால்களில் நிற்க வைக்க மிகவும் பாடுபட்டார்கள். இரண்டு அடி நடப்பாள். பின் கீழே விழுவாள் பின் ஓநாயைப் போல் ஓட ஆரம்பிப்பாள். அவள் ஓடும் வேகத்திற்கு யாராலும் ஈடு கொடுக்க முடிய வில்லை.

பத்து வருடங்களுக்கு முன்னால் உத்தர பிரதேச மாநிலத்தில் லக்னோ நகருக்கு அருகே ஒரு பையனைக் கண்டுபிடித்தார்கள். அதுவும் இதே கதைதான். அவன் தன்னுடைய 12ஆம் வயது வரை ஓநாய்களிடம் வளர்ந்தான். இந்த ஓநாய்களுக்குத்தான் குழந்தைகளின் மேல் என்ன பாசமோ தெரியவில்லை. மனதளவில் ஓநாயாக இருந்த அவனை மாற்ற மருத்துவர்கள் படாத பாடுபட்டார்கள். அவனை மருத்துவமனையில் உள்நோயாளியாகச் சேர்ந்தார்கள். மருந்து கொடுத்தார்கள். மசாஜ் செய்தார்கள். ஊசி போட்டார்கள். ஆறே மாதத்தில் அந்தச் சிறுவன் இறந்துவிட்டான். அவனை மனிதனாக மாற்ற அவர்கள் செய்த முயற்சியில் அந்தச் சிறுவனின் மனம் மிகவும் குழம்பிவிட்டது. அந்த மாற்றத்தை அவன் இருப்புநிலை ஏற்றுக் கொள்ளவில்லை. அவனைப் பிடித்த போது அவன் மிகவும் ஆரோக்கியமாக இருந்தான். சாதாரணமாக வளரும் குழந்தைகள் கூட அவ்வளவு ஆரோக்கியமாக இருக்காது. ஆனால் அவன்

காட்டுத்தனமாக இருந்தான். ஆனால் மனதளவில் அவன் ஓநாயாக இருந்தான். மருத்துவர்கள் அடித்த கூத்தில் அவன் நோய்வாய்ப்பட்டான். ஆறே மாதத்தில் இறந்தே போனான்.

அவர்கள் மனித மனத்தை உருவாக்க முயன்றார்கள். அது நடக்காத காரியம். அந்த ஆறுமாதங்களில் அவர்களால் அவனுக்கு ஒரே ஒரு வார்த்தைதான் சொல்லிக் கொடுக்க முடிந்தது. அவனுக்கு ராம் என்று பெயரிட்டார்கள். அவனிடம் உன் பெயர் என்ன என்று கேட்டால், ராம் என்று சொல்வான். அதுதான் அவர்களுக்குக் கிடைத்த ஒரே வெற்றி.

மனம் என்பது சமுதாயத்தால் உருவாக்கப்படுகிறது. ஒரு ஓநாய்க்கு ஓநாய் சமுதாயத்தின் மனம் தேவைப் படுகிறது. ஒரு மனிதனுக்கு மனித சமுதாயத்தின் மனம் தேவைப் படுகிறது. பல வேறுபட்ட மனித மனங்கள் இருப்பதால் பலவேறுபட்ட மனிதச் சமுதாயங்கள் இருக்கின்றன.

இந்துவிற்கு ஒரு வகை மனம் இருக்கிறது. இஸ்லாமியனுக்கு வேறு வகை. கிறிஸ்தவனுக்கோ இன்னும் ஒரு வகை. ரஷிய மனம் வேறு அமெரிக்க மனம் வேறு. அவர்கள் பார்வையும் வேறு பார்க்கும் கோணங்களும் வேறு சிந்தனைகளும் வேறு. அவர்கள் புரிந்து கொள்ளும் வகைகளும் வேறு வேறுதான்.

ஒரே விஷயத்தை அவர்கள் வெவ்வேறாகப் பார்க்கிறார்களே ஏன்? ஒரு சமுதாயத்தில் வாழ வேண்டுமென்றால் ஒரு குறிப்பிட்ட மனம் தேவை. நீங்கள் ரஷ்யா நாட்டுக்காரராக இருந்து உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருந்தால் உங்களைக் கிறுக்கன் என்பார்கள். இந்தியாவில் இருந்து கடவுள் நம்பிக்கை இல்லையென்றால் கிறுக்கன் என்பார்கள்.

ஒரு முறை நான் தியானப் பயிற்சி முகாம் நடத்திக் கொண்டிருந்தேன். என் சீடர்கள் இயக்கநிலை தியானத்தில் கன்னா பின்னாவென்று முகபாவங்கள் காட்டுவதை இரண்டு நாய்கள் கவனித்துக் கொண்டேயிருந்தன. அப்போது ஒரு நாய் இன்னொரு நாயிடம் சொன்னது ''நான் இதே மாதிரி நடந்து கொண்டால் என் குருநாதர் வயிற்றுப் பூச்சிக்கான மாத்திரையைக் கொடுப்பார். இவர் என்னடாவென்றால். .. .. ''

உலகத்திற்குள் செல்லும்போது விழிப்புணர்வுடன் இருங்கள். மற்றவர்கள் முன்னால் இயக்கநிலை தியானம் செய்யுங்கள். அவர்கள் உங்களைப் பைத்தியக்காரர்கள் என்று சொல்லட்டும்.

ஒவ்வொருவரும் ஒரு மனதைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு மனமும் முழுமையின் ஒரு பகுதியே. இந்தப் பகுதியைத் தூக்கி வெளியே எறிந்தால்தான் பிரபஞ்ச மனம் உள்ளே நுழையும்.

இந்தப் பகுதி மனம் ஒரு வழிமுறை. ஒரு சமுதாய நடை முறை. அடுத்தவர்களுடன் உரையாட உங்களுக்கு ஒரு மொழி தேவை. அடுத்தவர்களுடன் உறவாட உங்களுக்கு ஒரு மனம் தேவை. நீங்கள் வேலை செய்யும் போது அடுத்தவர்களுடன் இருக்கும் போது உங்கள் மனம் பெரும்பாலும் சரியாகவே இருகும். தனியாக இருக்கும் போது அது பெரும்பாலும் தவறாகவே இருக்கும்.

கதையில் வரும் இந்த மனிதன் செய்தது ஒரு விதத்தில் சரிதான். வேறுயாராவது அவனைப் பின் தொடந்திருந்தால் அவன் செய்தது முற்றிலும் சரியாக இருந்திருக்கும். அவன் போதிய வேகத்துடன் ஓடாவிட்டால் அடுத்தவன் பின் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருப்பான்.

ஆனால் அவன் செய்தது தவறு. எப்படி? அங்கு வேறு யாரும் இல்லை. மனம் அந்த இடத்தில் பயனற்றுப் போகிறது. அடுத்தவர்களுக்கு மனம் உங்களுக்குத் தியானம் என்று வாழுங்கள். மனம் மற்றவர்களுக்கு. மனமற்ற நிலை உங்களுக்கு. இதைத்தான் ஷுவாங் ட்சு சொல்கிறார். ஜென் சொல்கிறது சூஃபி ஞானிகள் சொல்கிறார்கள். யூத ஞானிகள் சொல்கிறார்கள். புத்தர் ஏசுநாதர் நபிகள் நாயகம் சொல்வது எல்லாம் இதைத்தான். மற்றவர்களுக்கு மனம் உங்களுக்கு மனமற்ற நிலை.

இந்தக் கதையில் வரும் மனிதன் துன்பத்தை விலை கொடுத்து வாங்குகிறான். ஏனென்றால் இவன் மனதைத் தனக் காகப் பயன்படுத்திக் கொண்டான். மனதின் செயல்பாட்டுக்

கென்று ஒரு வழிமுறை இருக்கிறது. மனம் அவனின் என்ன சொன்னது. '' இன்னும் வேகமாகப் போ. இன்னும் வேகமாக. அப்போதுதான் உன் நிழலால் உன்னைப் பின்தொடர முடியாது.''

**தான் வேகமாக ஓடாததால்தான் தோல்வியுற்ற தாக அவன் நினைத்தான்.**

அவன் எப்போது ஓட ஆரம்பித்தானோ அப்போதே அவன் தோல்வி தொடங்கிவிட்டது. ஆனால் இந்த உண்மையை அவன் மனம் சொல்ல முடியாது. அதற்கான தகவல் அதனிடம் கொடுக்கப்படவில்லை.

மனமும் ஒரு கணினியைப் போலத்தான். அதற்குத் தகவல்களை உணவாகக் கொடுக்க வேண்டும். மனத்தினால் புதிதாக எதையும் தரமுடியாது. நீங்கள் கொடுத்த தகவலைத்தான் அது வேறு வழியில் திருப்பித் தரும். அது உங்களுக்குத் தருவதெல்லாம் இரவல் வாங்கிய தகவல்களே.

மனதிற்கு அடிமையாகிவிட்டால் வேதனைதான் மிஞ்சும் நாளெல்லாம் அது சொல்வதைக் கேட்கத் தொடங்கிவிட்டால் நீங்கள் துன்பப்படுவீர்கள். தனியாக இருக்கும் போது மனதினால் எந்தப் பயனும் இல்லை. மனம் ஒரு இடைஞ்சலாகத்தான். அதனால் மனதை விட்டுவிடுங்கள்.

ஒரு நாள் முல்லா நசிருதீனின் மகன் பள்ளியிலிருந்து வரும் போது பாலுறவைப் பற்றிய ஒரு புத்தகத்தைக் கொண்டுவந்தான். அதில் அப்படி ஒன்றும் வியப்பில்லை. ஏனென்றால் அவன் ஒரு முற்போக்கான பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அவனுடைய தாய்க்கு அது கொஞ்சம் கூட பிடிக்கவில்லை. சரி முல்லா வந்ததும் இதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று தீர்மானித்தாள். அந்தப் பள்ளி ஆனாலும் மிகவும் முற்போக்காக இருக்கிறது. இதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்தாள். முல்லா வந்தவுடன் பையன் கொண்டு வந்த புத்தகத்தை அவரிடம் காண்பித்தாள்.

தன் மகனைத் தேடிக் கொண்டு போனார் முல்லா. அவன் மாடியில் தனது அறையில் இருந்தான். முல்லா அங்கே திடீரென்று

சென்ற போது அவன் வீட்டு வேலைக்காரிக்கு முத்தம் கொடுத்துக் கொண்டிருந்தான். முல்லா சொன்னார்: ''மகனே உன் வீட்டுப் பாடத்தைச் செய்து முடித்ததும் கீழே இறங்கி வா. உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டியிருக்கிறது.''

முல்லா செய்தது தர்க்கரீதியாகச் சரிதான். தர்க்க சாஸ்திரத்திற்கு என்று சில வழிகள் இருக்கின்றன. அவை சரியாக ஒன்றன் பின் ஒன்றாக வரும். அதற்கு முடிவே கிடையாது.

இந்தக் கதையில் வரும் மனிதன் தன் மனதைப் பின் தொடர்ந்து போனான். அதனால் நிற்காமல் வேக வேகமாக ஓடினான். இறுதியில் கீழே விழுந்து மாண்டான். நிற்காமல் போனால் வேகத்தை அதிகரித்துக் கொண்டே போனால் மரணம் தான் முடிவாக இருக்க முடியும்..

உங்களிடம் இன்னும் வாழ்க்கை மலரவில்லை என்பதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் இன்னும் ஒரு நொடி கூட முழுமையாக வாழவில்லை என்பதைக் கவனித்திருக்கிறீர்களா? புத்தரும் ஷுவாங் ட்சுவும் விவரிக்கும் பரவச நிலையை ஒரு நொடி கூட நீங்கள் அனுபவித்ததில்லை என்பதை உணர்ந்திருக் கிறீர்களா? உங்களுக்கு என்ன நேரப் போகிறது? ஒன்றும் இல்லை. மரணத்தைத் தவிர வேறு எதுவும் நேரப்போவது இல்லை. மரணத்திற்கு அருகில் வந்தவுடன் இன்னும் வேகமாக ஓடப்போகிறீர்கள். வேகமாக ஓடினால் மரணத்திலிருந்து தப்பிவிடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

இவ்வளவு வேகமாக எங்கே போகிறீர்கள்? மனித மனதிற்கு வேகத்தின் மேல் பித்து. நம் இலக்கு தெரிந்துவிட்டாற்போல் வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறோம். சரி அப்படி எங்கேதான் போகிறோம்? இறுதியாக, நீங்கள் மெதுவாகப் போனாலும் வேகமாகப் போனாலும் உங்கள் மரணத்தை நோக்கித்தான் ஓடிக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒரு சூஃபிக் கதையைக் கேளுங்கள்

ஒரு அரசன் தனக்கு சாவு வரப்போவதாகக் கனவு கண்டான். ஒரு நிழலுருவம் தன்னைத் துரத்துவது போல் கனவு கண்டான்.

''யார் நீ'' என்று அந்த நிழலுருவத்தைக் கேட்டான்.

''மரண தேவதை. நாளை சூரியன் மறையும் வேளையில் உன் உயிரைக் கொண்டு போக வருவேன்.''

தப்பிக்க ஏதாவது வழியிருக்கிறதா என்று கேட்க நினைத்தான். ஆனால் அவனுக்குப் பயத்தில் வார்த்தை வரவில்லை. அதற்குள் கனவும் கலைந்தது. அவனுக்கு வியர்த்தது. பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்தான்.

அது நள்ளிரவு நேரம். அரசவையில் இருக்கும் அறிவாளிகளை அரண்மனைக்கு அழைத்தான். ''என் கனவிற்குப் பொருள் என்னவென்று உடனே கண்டுபிடியுங்கள்.'' என்று ஆணையிட்டான்.

அரசவையில் இருக்கும் அறிவாளிகளைப் போல் முட்டாள்களை நீங்கள் எங்குமே பார்க்க முடியாது. அந்த அறிவாளிகள் அனைவரும் தங்கள் வீடுகளுக்கு ஓடினார்கள். தங்கள் மதத்தின் வேதாகமப் புத்தகங்களை எடுத்து வந்தார்கள். அவை எல்லாம் மிகவும் பெரிதாக தடி தடியாக இருந்தன. அவற்றைப் புரட்டிப் படிக்க ஆரம்பித்தார்கள். இதற்கிடையில் விவாதம் நடந்தது. வாதங்கள் எதிர்வாதங்கள் என்று அந்த இடமே களேபரமாகிவிட்டது.

அவர்கள் பேசியதைக் கேட்ட அந்த அரசனின் குழப்பம் இன்னும் அதிகமானது.

அங்கிருந்த அறிவாளிகள் யாருமே அடுத்தவர் சொன்னதை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் வெவ்வேறு மதப்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். அறிவாளிகள் எப்போதுமே அப்படித்தான் இருப்பார்கள். ஆளுக்கொரு மதப்பிரிவில் இருந்து கொண்டு அதுதான் சிறந்ததென்று நம் கழுத்தை அறுப்பார்கள். செத்து மடிந்த சில மரபுகளுக்கு அடிமைகளாக இருந்தார்கள். யாரும் சுதந்திரமாக யோசிக்கும் நிலையில் இல்லை. சிலர் இந்துக்களாக இருந்தார்கள். சிலர் இஸ்லாமியர்கள். கிறிஸ்தவர்கள், யூதர்கள் என்று பலதரப்பினர் இருந்தார்கள். அவர்களின் புனித நூல்களைக் கொண்டு வந்திருந்தார்கள். அரசனுடைய கனவின்

பலனை அறிய பாடுபட்டுக்கொண்டிருந்தார்கள். விவாதங்கள் சர்ச்சைகளாகி சர்ச்சைகள் சண்டைகளாகி ஒருவரை ஒருவர் தாக்கும் நிலமைக்கு வந்துவிட்டார்கள்.

அரசனுக்குக் கவலையாகப் போய்விட்டது. சூரியன் உதிக்கத் தொடங்கிவிட்டான். அதன் பின் நாள் வேகமாக நகர்ந்துவிடுமே! சூரியனின் பயணம் தொடங்கிவிட்டது. அரசனின் வாழ்க்கைப் பயண் முடியப் போகிறது.. இன்னும் பனிரெண்டு மணி நேரத்தில் சூரியன் மறைந்துவிடும்

அறிவாளிகள் பேசிக் கொண்டிருக்கும் போது அரசன் குறுக்கே பேசினான். ''மன்னா எங்கள் வாதத்தில் நடுவே வராதீர்கள். தலை போகும் விஷயங்களைப் பேசிக் கொண் டிருக்கிறோம்.''

அரண்மனையில் பல ஆண்டு காலம் வேலை பார்த்த ஒரு முதியவன் மன்னனின் காதுகளில் கிசுகிசுத்தான்.

''மன்னா இவர்கள் எந்த முடிவிற்கும் வரமாட்டார்கள். பேசாமல் இங்கிருந்து தப்பித்துச் சென்றுவிடுங்கள்.''

எந்தக் காலத்தில் அறிவாளிகள் ஒரு முடிவுக்கு வந்திருக் கிறார்கள் சொல்லுங்கள். அவர்களுடைய முடிவு வரும் வரை முடிவெடுக்காமல் பேசிக்கொண்டேயிருப்பார்கள்.

அந்த வயதான பணியாள் சொன்னான்.

''மன்னா மரண தேவதையே உங்களுக்கு எச்சரிக்கை கொடுத்துவிட்டது. எங்காவது தப்பிச் சென்றுவிடுங்கள். குறைந்த பட்சமாக இந்த அரண்மனையிலிருந்தாவது தப்பித்துவிடுங்கள். எங்காவது செல்லுங்கள். ஆனால் மிகவும் வேகமாகச் செல்ல வேண்டும். அதுதான் முக்கியம்.''

மன்னனுக்கு அந்த அறிவுரை பிடித்திருந்தது. ஒரு மனித னால் எதுவும் செய்யமுடியவில்லை என்றால் அந்தச் சூழ்நிலையி லிருந்து தப்பித்துக் கொள்ளத்தான் பார்ப்பான். சண்டை போட்டுக் கொண்டிருக்கும் அறிவாளிகளைப் பார்த்துக் கத்தினான்.

''நான் உயிருடன் திரும்பி வந்தால் அந்த சமயத்தில் நீங்கள் ஒரு முடிவுக்கு வந்திருந்தால் நீங்கள் சொல்வதைக் கேட்கிறேன். இப்போதைக்கு இந்த இடத்தைவிட்டுச் செல்கிறேன்.''

தன்னிடம் இருப்பதிலேயே வேகமாகச் செல்லக்கூடிய குதிரையின் மீதேறி அமர்ந்தான். குதிரையை முடுக்கிவிட்டான். குதிரை காற்றைப் போல் பறந்தது. மன்னனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. எப்படியோ வாழ்வா சாவா போராட்டத்திலிருந்து அவன் தப்பிவிட்டான். பின்னால் திரும்பி மரணத்தின் நிழல் தன்னைத் தொடர்கிறதா என்று பார்த்தான். வரவில்லை. அவன் மகிழ்ச்சி அதிகமாகியது.

சூரியன் மறையும் நேரத்தில் அவன் தன் தலைநகரைவிட்டுப் பல நூறு மைல்கள் வந்திருந்தான். ஒரு பெரிய ஆலமரத்தின் கீழே நின்றான். குதிரையிலிருந்த் குதித்து இறங்கினான். குதிரையைச் செல்லமாகத் தட்டிக் கொடுத்தான்.. ''குதிரையே நீதான் என்னைச் சாவிலிருந்து காப்பாற்றினாய்.''

அவனை யாரோ தோளில் தொட்டது போல் தோன்றியது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அவன் கனவில் சந்தித்த அதே மரணத்தின் நிழ்ல். அது இப்போது தெளிவாகப் பேசியது.

''மன்னா நானும் உன் குதிரைக்கு நன்றி சொல்ல வேண்டும். அதன் வேகம் உண்மையிலேயே அபாரமானது. நான் நாள் முழுவதும் இந்த ஆலமரத்தின் அடியில் காத்துக் கொண் டிருக்கிறேன். நான் உன்னை இங்கே சந்திக்க வேண்டும் என்பதுதான் விதி. நீ எங்கே வராமல் போய்விடுவாயோ என்று பயந்து கொண்டிருந்தேன். அவ்வளவு தூரத்தை எப்படி ஒரே நாளில் கடந்து வரப் போகிறாய் என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் குதிரை வேகமாக ஓடி உன்னை சேர வேண்டிய இடத்தில் சேர வேண்டிய நேரத்தில் கொண்டு வந்து சேர்த்துவிட்டது. சரி, நாம் நம் பயணத்தைத் தொடங்கலாமா?''

நீங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? எந்த இடத்தைச் சென்றடையப் போகிறீர்கள்? எல்லா ஓட்டமும் தப்பித்தலும் உங்களை அந்த ஆலமரத்தின் அடியில் கொண்டு

போய்ச் சேர்த்துவிடும். நீங்கள் உங்கள் குதிரைக்கோ அல்லது காருக்கோ நன்றி சொல்லிக் கொண்டிருக்கும்போது மரணத்தின் கைகள் உங்கள் தோளில் விழும்.

• மரணம் உங்கள் காதுகளில் கிசுகிசுக்கும்.

''உனக்காக நாள் முழுவதும் இந்த ஆலமரத்தினடியில் காத்துக் கொண்டிருந்தேன் நண்பனே! சரியான நேரத்தில் வந்துவிட்டாய். நன்றி.''

எல்லாரும் சரியான நேரத்தில்தான் வருகிறார்கள். ஒரு நொடி கூட வீணாவதில்லை. இறுதிப் பயணத்துக்கு யாருமே தாமதமாக வருவதில்லை. யாரோ சிலர் விதித்த காலத்திற்கு முன்னால் போய்ச் சேர்ந்துவிட்டதாகச் சிலர் சொல்கிறார்கள். ஆனால் எவரும் ஒரு நொடி கூட தாமதமாக வந்து சேரவில்லை. சிலர் முன்னாலேயே போய்விடுகிறார்கள் - எல்லாம் மருத்துவர் களின் உபயம்.

**தான் வேகமாக ஓடாததால்தான் தோல்வியுற்ற தாக அவன் நினைத்தான்.**

**அதனால் இன்னும் வேகமாக ஓட ஆரம்பித்தான். இன்னும் வேகமாக.. ... இன்னும் வேகமாக.. இறுதியில் ஓரிடத்தில் விழுந்து மாண்டான்.**

**பாவம் அவனுக்கு ஒரு விஷயம் புரியவில்லை - அவன் நிழலான ஒரு இடத்திற்குள் சென்றிருந் தால் அவன் நிழல் அங்கே இருந்திருக்காது. ஓடாமல் ஒரு இடத்தில் அமர்ந்திருந்தால் காலடிச் சத்தமும் கேட்டிருக்காது.**

அது மிகவும் சுலபம். நீங்கள் நிழலுக்குச் சென்றால் போதும் உங்கள் நிழல் மறைந்துவிடும். சூரிய ஒளியின் காரணமாகத்தான் நிழல் விழுகிறது. சூரியக் கிரணங்கள் இல்லாத மர நிழலில் உங்கள் நிழல் விழ வாய்ப்பேயில்லை.

**அவன் நிழலான ஒரு இடத்திற்குள் சென்றிருந் தால் அவன் நிழல் அங்கே இருந்திருக்காது.**

அந்த நிழலிற்கு மௌனம் என்று பெயர். அதற்கு அமைதி என்று பெயர். மனம் சொல்வதைக் கேட்காதீர்கள். நிழலுக்கு வந்துவிடுங்கள். சூரிய ஒளிக் கிரணங்கள் புக முடியாத மௌன நிலைக்கு வந்துவிடுங்கள். நீங்கள் வெளிச்சுற்றிலேயே இருக்கிறீர்கள். அதுதான் உங்கள் பிரச்சினை. அங்கே வெளியுலகத்தின் ஒளி உங்கள் மேல் விழுகிறது. அதனால்தான் நிழல் உருவாகிறது. உங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள். நிழலிற்குள் வாருங்கள். கண்ணை மூடியவுடன் சூரியன் காணாமல் போய்விடும். பின் நிழல் எங்கிருந்து வரும்?

அதனால் தான் எல்லா வகைத் தியானங்களிலும் உங்கள் கண்களை மூடிக்கொள்ளச் சொல்கிறார்கள். உள்ளே சூரியனும் இல்லை. நிழலும் இல்லை. வெளியே சமுதாயம் இருக்கிறது. எல்லா வகையான நிழலும் இருக்கிறது.

இதை நீங்கள் எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா? உங்கள் கோபம், பாலுணர்வு, பேராசை எல்லாமே சமுதாயத்தின் பாகங்கள்தான். சமூகத்தை வெளியே விட்டு விட்டு உள்ளே நுழைந்துவிடுங்கள். கோபம் எப்படி இருக்க முடியும்? அந்த நிலையில் பாலுணர்வு எப்படி இருக்க முடியும்? ஆனால் முதலில் நீங்கள் கண்களை மூடும் போது அவை உண்மையில் மூடியிருக்காது.

வெளியில் இருந்து உருவங்களை உள்ளே கொண்டு செல்வீர்கள். அவற்றின் பிரதிபிம்பங்களைப் பார்த்துக் கொண்டிருப்பீர்க்ள். ஆனால் தொடர்ந்து தியானப் பயிற்சி செய்தால் இன்னும் உள்ளே ஆழமாகப் போனால் ஒரு கட்டத்தில் சமுதாயம் வெளியே தங்கிவிடும். நீங்கள் உள்ளே இருப்பீர்கள், சமுதாயம் வெளியே இருக்கும். இப்போது நீங்கள் வட்டத்தின் வெளிச்சுற்றிலிருந்து அதன் மையத்திற்குள் சென்றுவிட்டீர்கள்.

மையத்தில் பரிபூரண அமைதி இருக்கிறது. அங்கே கோபமும் இல்லை அதை எதிர்த்துப் போராடும் குணமும் இல்லை. அங்கே பாலுணர்வும் இல்லை பிரம்மச்சரியமும் இல்லை. பேராசையும் இல்லை. அதன் எதிர்மறையும் இல்லை.

வன்முறையும் இல்லை. அகிம்சையும் இல்லை. அவை எல்லாம் மையத்திற்கு வெளியே இருக்கின்றன. எதிர்மறைகள் எல்லாமே வெளியேதான் இருக்கின்றன. நீங்கள் அந்த எதிர்மறைகளில் எதுவாகவும் இல்லை. நீங்கள் ஒரு தூய்மையான எளிமையான இருப்புநிலை அவ்வளவுதான். இதை வைத்துத்தான் நீங்கள் கடவுளைப் போல் என்று சொன்னேன். இறைத்தன்மை என்பது எதிர்மறைகள் இல்லாத தூய்மை. அங்கு தப்பி ஓடுவதும் இல்லை, எதிர்த்துப் போரிடுவதும் இல்லை. அது மரத்தின் நிழல்.. அங்கு உங்களுடைய நிழல் விழாது.

**பாவம் அவனுக்கு ஒரு விஷயம் புரியவில்லை - அவன் நிழலான ஒரு இடத்திற்குள் சென்றிருந் தால் அவன் நிழல் அங்கே இருந்திருக்காது. ஓடாமல் ஒரு இடத்தில் அமர்ந்திருந்தால் காலடிச் சத்தமும் கேட்டிருக்காது.**

அது மிகவும் சுலபம். சுலபமாக இருப்பதுதான் மனதிற்குக் கடினமாக இருக்கும். எதிர்த்துப் போராடு அல்லது தப்பி ஓடு என்பது மனதுக்கு எளிது. 'ஒன்றும் செய்யாமல் சும்மா இரு' என்று சொன்னால் மனம் மிகவும் சிரமப்படும். மனம் உங்களிடம் கெஞ்சும். ''ஒரே ஒரு மந்திரமாவது சொல்லிக் கொடுக்கக் கூடாதா? கண்ணை மூடிக் கொண்டு 'ஓம் ராம் ராம் ' என்று சொல்லிக் கொண்டிருப்பேனே!''

ஏதாவது செய்ய வேண்டும் எதன் பின்னாலாவது ஓட வேண்டும் ஒன்றும் செய்யாமல் எப்படி சும்மா இருப்பது என்று மனம் கிடந்து அடித்துக் கொள்ளும்.

மனம் எப்பது இடையறாச் செய்கையே. இருப்புநிலை என்பது செயலற்று இருத்தல். சும்மா அமர்ந்திருத்தல் இருப்புநிலை. ஓடுவது மனம். வெளிச்சுற்றுதான் நகரும். மையம் நகராது. மாட்டுவண்டி போகும் போது பாருங்கள். அதன் பெரிய சக்கரங்கள் சுழன்று கொண்டிருக்கும். ஆனால் அந்தச் சக்கரத்தின் மையம் நின்ற இடத்தில் நிலையாக அசைவற்று இருக்கும். உங்கள் இருப்புநிலைதான் அந்த மையம். உங்கள் வெளிச் சுற்றுதான் மனம்

சூஃபி நடனங்களில் இதைத்தான் கவனிக்க வேண்டும். அந்த நடனமாடும் போது உங்கள் உடல் வெளிச்சுற்றாகிவிடும். உங்கள் உடல் வேகமாக நகர நகர உங்கள் மையம் அசைவற்று இருக்கும். உங்கள் உடல் வண்டிச்சக்கரமாகச் சுழன்று கொண் டிருக்கும். நீங்கள் அதன் மையமாக இருப்பீர்கள். விரைவில் உங்கள் உடல் பயங்கர வேகத்துடன் ஆடிக்கொண்டிருக்கிறது என்பதை உணர்வீர்கள். வேகம் அதிகமாக அதிகமாக உங்களுக்கு நல்லது. உள்ளே நீங்கள் நகராமல் இருக்கிறீர்கள் என்பதை உணர்வீர்கள். ஒரு கட்டத்தில் நீங்கள் தனியாக இருப்பீர்கள். உங்கள் உடல் தனியாக இருக்கும்.

நீங்களும் உடலுடன் நகர்ந்து கொண்டுதான் இருக்கிறீர்கள். உங்களுக்கும் உடலிற்கும் நடுவே எந்தப் பிரிவும் இல்லை. ஓரிடத்தில் அமருங்கள். ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருங்கள். அது போதும். கண்ணை மூடிக் கொள்ளுங்கள். எல்லா விஷயங்களும் மெதுவாக இறங்கட்டும். அதற்கு நேரமாகும். நீங்கள் பல பிறவிகளில் விஷயங்களைக் கிளறி விட்டுக் கொண்டிருந்தீர்கள். பலவிதமான பாதிப்புகளை உருவாக்க முயற்சி செய்து கொண்டிருந்தீர்கள். உங்கள் முந்தைய செயல்களின் விளைவுகள் வடிய கொஞ்சம் நேரம் ஆகலாம். அதற்கு நீங்கள் வேறு ஒன்றும் செய்யத் தேவையில்லை. சும்மா உட்கார்ந்திருந்தால் போதும். இதைத்தான் ஜென் துறவிகள் ஜாஜென் (zazen) என்கிறார்கள். ஜாஜென் என்பது ஒன்றும் பேசாமல், ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருப்பது மட்டுமே.

இதைத்தான் இந்த சூத்திரத்தில் ஷுவாங் ட்சு சொல்கிறார்

> **பாவம் அவனுக்கு ஒரு விஷயம் புரியவில்லை - அவன் நிழலான ஒரு இடத்திற்குள் சென்றிருந் தால் அவன் நிழல் அங்கே இருந்திருக்காது. ஓடாமல் ஒரு இடத்தில் அமர்ந்திருந்தால் காலடிச் சத்தமும் கேட்டிருக்காது.**

எதிர்த்துப் போரிடவும் வேண்டாம். தப்பி ஓடவும் வேண்டாம். மரநிழலைத் தேடிச் சென்று அமர்ந்தால் போதும். அதை உங்கள் வாழ்க்கை முழுவதும் செய்து கொண்டிருக்க

வேண்டும். போராடாதீர்கள். தப்பி ஓடாதீர்கள். எல்லாம் அதனதன் இயற்கை விதிப்படி நடக்கட்டும். கண்களை மூடிக்கொண்டு உங்கள் மையத்திற்கு நகருங்கள். அங்கு சூரிய கிரணங்கள் ஊடுருவாது. அதனால் நிழலும் வராது. கடவுளர்க்கு நிழல் கிடையாது என்ற வாக்கியத்தின் தாத்பரியம் அதுதான். எங்கோ ஒரு லோகத்தில் நிழல்கள் விழாத கடவுளர் இருக்கிறார்கள் என்பது அதன் அர்த்தம் இல்லை. ஆனால் உள் நிழல் விழாத இறைத்தன்மை உங்களிடம் இருக்கிறது என்றுதான் அதற்குப் பொருள். வெளி உலகம் அங்கே ஊடுருவி வர முடியாது. காரணம் அங்கே நிரந்தரமாக நிழல் இருக்கும். இதைத்தான் ஷுவாங் ட்சு உங்கள் உள்ளார்ந்த இயல்பு என்று சொல்கிறார்.

என்ன செய்ய வேண்டும்? மனம் சொல்வதைக் கேட்கக் கூடாது. வெளி உலக உறவுகளுக்கு அது ஏற்ற கருவி. ஆனால் உன்முகப்பயணத்திற்கு மனம் ஒரு பெரிய இடையூறு. மக்களுடன் உறவாட தர்க்கம் உதவும். ஆனால் தனியாக இருக்கும் போது உங்களுக்கு தர்க்கம் உதவாது. நம்பிக்கை வேண்டும். காரண-காரியம் பொறுத்து வருவதல்ல நம்பிக்கை. மக்கள் சமுதாயத்தில் இருக்கும் போது நம்பிக்கை ஆபத்தானது. மக்கள் உங்களை ஏமாற்றிவிடலாம். அங்கே தர்க்கம் வேண்டும். சந்தேகப்பட வேண்டும். விஞ்ஞானத்திற்கு சந்தேகம் தேவை. மதத்திற்கு நம்பிக்கை தேவை. ஆழமான நம்பிக்கையுடன் அமைதியாக உட்காருங்கள். உங்கள் உள்ளார்ந்த இயல்பு அதன் பின் நடக்க வேண்டியவற்றைப் பார்த்துக் கொள்ளும். அதற்குப் பொறுமை தேவை. நடுவில் மனம் அதை விட்டுவிடு என்று புலம்பும். அதைக் காது கொடுத்துக் கேட்காதீர்கள்.

மனம் சதா பேசிக்கொண்டே இருக்கும். கடந்த காலத்தில் மனம் சொல்வதை அப்படியே கேட்டீர்கள். அதற்கு முக்கியத்துவம் கொடுத்தீர்கள். தேவையில்லாத சமயங்களில் கூட மனம் உங்களுக்கு ஏதாவது அறிவுரையும் ஆலோசனையும் சொல்லிக் கொண்டேயிருக்கும்.

ஒரு வங்கியின் தலைமை அலுவலகத்தில் கணினிகளையும் தானியங்கி இயந்திரங்களையும் பொறுத்த ஏற்பாடுகள் நடந்து

கொண்டிருந்தன. அதற்கு முன் செயல்திறன் விற்பன்னர் ஒருவரை அழைத்து அந்த வங்கியில் வெட்டியாக யாராவது இருக்கிறார்களா என்று கண்டுபிடிக்கச் சொன்னார்கள். வேலை இல்லாமல் யாராவ்து இருந்தால் அவர்களை வீட்டிற்கு அனுப்பி அந்தச் சம்பளத்தை மிச்சப்படுத்தலாமே.

அந்த விற்பன்னர் ஒரு குமாஸ்தாவைக் கேட்டார்.

''நீங்கள் இந்த வங்கியில் என்ன செய்கிறீர்கள்?''

''ஒன்றும் செய்யவில்லை.''

அதன்பின் ஒரு அதிகாரியிடம் அதே கேள்வியைக் கேட்டார்.

''ஒன்றும் செய்யவில்லை.'' என்று அதே பதிலைச் சொன்னார் அதிகாரி.

வெற்றி கலந்த புன்னகையுடன் அந்த வங்கியின் இயக்குனர் களிடம் சொன்னார் அந்த விற்பன்னர்.

''நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது. இங்கே ஒரே வேலையைச் செய்யப் பலர் இருக்கிறார்கள் என்று சொன்னேன். அது உண்மையாகிவிட்டது பார்த்தீர்களா? ஒன்றும் செய்யாமல் இருக்க ஒருவர் போதாதா? அதே வேலையைச் செய்ய ஒரு அதிகாரி வேறு வேண்டுமா என்ன?''

பாவம் விற்பன்னர் என்ன செய்வார்? அப்படித்தான் அவருக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கிறது. இருவர் ஒரே வேலையைச் செய்தால் அது விரயம் என்று மட்டும்தான் அவருக்குத் தெரியும். ஒன்றும் செய்யாமல் இருக்க ஒருவரைப் பணியமர்த்தினால் போதும் என்பதுதான் அவர் கருத்து.

வெளியுலக விஷயங்களுக்கு உங்கள் மனம் சொல்வதைக் கவனியுங்கள். உள்ளார்ந்த விஷயங்களுக்கு வேண்டாம். அந்த விஷயங்களில் மனதை அப்படியே ஒதுக்கிவிடுங்கள். மனதோடு சண்டை போடாதீர்கள். அப்படிச் செய்தால் அது உங்களைப் பாதிக்கும். மனதை அப்படியே புறந்தள்ளி விடுங்கள். அதுதான் நம்பிக்கை.

நம்பிக்கை என்பது மனதோடு போடும் சண்டையில்லை. சண்டை நடந்தால் பகைவன் உங்களைக் கவரலாம். நண்பர்களை விட பகைவர்கள்தான் உங்களை அதிகம் பாதிக்கிறார்கள் என்பதை மறந்துவிடாதீர்கள்.

யாருடனாவது தொடர்ந்து சண்டையிட்டால் நீங்கள் ஒரே மாதிரியான உத்திகளைத் தொடர்ந்து கையாள வேண்டும். இறுதியில் பகைவர்கள் ஒன்று போல் இருப்பார்கள். அந்தக் கட்டத்தில் பகைவரிடமிருந்து விலகி இருக்க முடியாது. பகைவரின் பாதிப்பு உங்களிடம் இருக்கும்.

மனதுடன் சண்டை போடுபவர்கள் பெரிய தத்துவவாதி களாகிவிடுவார்கள். அவர்கள் மனதிற்கு எதிராகப் பேசலாம். ஆனால் அவர்கள் பேச்செல்லாம் மனம் பற்றியே இருக்கும். ''மனதை எதிர்த்துப் போராடுங்கள்'' என்று கூக்குரலிடுவார்கள். ஆனால் அவர்கள் சொல்வதெல்லாம் மனதிலிருந்துதான் வரும். அவர்கள் பகைமை கூட மனதிலிருந்துதான் தோன்றும். அதன்பின் நீங்கள் பகைவருடன் இருக்க வேண்டும்.

இது இரண்டாம் உலகப்போரின் போது நடந்தது.

ஹிட்லர் இந்த உலகத்தையே நாஜி உலகமாக மாற்றிக் கொண்டிருந்தான். அவனை எதிர்த்துப் போராடியவர்க கூட நாஜிக்களாக மாறிக்கொண்டிருந்தார்கள். ஒரு சுவையான நிகழ்வு. வெற்றி வர வர ஹிட்லர் கிறுக்குப் பிடித்தவன் போல் நடக்கத் தொடங்கினான். ராணுவ வல்லுனர்கள் சொல்வதைக் கேட்கமாட்டான். தன்னை உலகத்திலேயே சிறந்த ராணுவ மேதையாக நினைத்துக் கொண்டிருந்தான். அதனால் போர் அவன் இஷ்டப்படித்தான் நடக்க வேண்டும் என்று கட்டளை போட்டான். அதனால்தான் முதலில் அவன் பக்கம் வெற்றிகள் குவியத் தொடங்கின. இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா, ரஷியா நாட்டுத் தளபதிகளுக்கு அவன் என்ன செய்கிறான் என்ன செய்யப் போகிறான் என்பதே புரியவில்லை. தங்களைப் போல் சிந்திக்கும் திறன் வாய்ந்த தளபதிகள் இந்தப் போரை நடத்தியிருந்தால் அவர்களுக்குப் புரிந்திருக்கும்.

ஆனால் எதிர்ப்பக்கம் ஒரு பைத்தியக்காரன் அல்லவா போரிட்டுக் கொண்டிருக்கிறான்! ராணுவ உத்திகள், போர் உத்திகள் ராணுவப் பயிற்சி ஆகிய எதையும் அவன் நம்ப வில்லை. பின் எப்படி அவன் முடிவுகள் எடுத்தான் தெரியுமா? சொன்னால் நம்ப மாட்டீர்கள். சோதிடர்கள் சொல்வதைக் கேட்டுத்தான் அவன் முக்கியமான ராணுவ முடிவுகளை எடுத்தான்.

அதைவிடப் பெரிய ஆச்சரியம் என்ன தெரியுமா? இங்கிலாந்து நாட்டு அதிபரான சர்ச்சில் இதைக் கேட்டவுடன் அவரும் சோதிடர்களை நியமித்து அவர்களுடைய கருத்துகளைக் கேட்கத் தொடங்கினார்.

''இது வடிகட்டிய முட்டாள்தனம் ஆனால் வேறு வழியில்லை.'' என்று நினைத்தார் சர்ச்சில் காரணம் அவர் ஒரு ராணுவ மனிதர். ''ஒரு உலக யுத்தத்தை சோதிடர்களை வைத்து நடத்துவது என்பது பைத்தியக்காரத்தனம்.'' உண்மைதான். ஆனால் வேறு வழியில்லையே! பகைவன் அதைத்தானே செய்து கொண்டிருக்கிறான்.

சொன்னால் நம்ப மாட்டீர்கள். அதற்குப் பிறகுதான் இங்கிலாந்து-அமெரிக்க-ரஷிய கூட்டணி போரில் வெல்ல ஆரம்பித்தது. இப்போது பாருங்கள் அவர்கள் பகைவர்களைப் போலவே மாறிவிட்டார்கள். பகைவனுக்கும் அவர்களுக்கும் எந்த வேறுபாடும் இல்லை.

இதை மட்டும் நன்றாக மனதில் கொள்ளுங்கள். மனதுடன் சண்டை போடாதீர்கள் அப்படிப் போட்டால் அதன் போக்கிற்கு நீங்கள் போக வேண்டும். மனதை ஒரு விஷயத்தை நம்பச் செய்ய வேண்டும் என்றால் நீங்கள் அதனுடன் வாதிக்க வேண்டும். வார்த்தைகளை மட்டுமே தொடர்ந்து உபயோகிக்க வேண்டும். பிரச்சினையே அங்கிருந்துதான் தொடங்குகிறது.

மனதை புறம் தள்ளுங்கள். அதைத்தான் சிரத்தை என்று சொல்கிறோம். சிரத்தை மனதிற்கு எதிரானது. மனதிற்கு அப்பாற்பட்டது. அது மனதை அப்படியே ஒதுக்கி வைக்கும்

கலை. வீட்டை விட்டு வெளியே போகும் முன் காலணிகளை அணிகிறீர்கள். மீண்டும் வீட்டிற்குள்ளே நுழையும் போது அந்தக் காலணிகளை ஒரு ஓரமாகக் கழற்றிப் போடுகிறீர்கள். அதில் வாதங்களோ போராட்டங்களோ எதுவும் இல்லை.

''நான் வீட்டிற்குள் வந்துவிட்டேன். நீ இனிமேல் எனக்குத் தேவைப்பட மாட்டாய். அதனால் உன்னை ஒரு ஓரமாக வைக்கிறேன்.'' என்று நீங்கள் காலணிகளிடம் பேச்சு வார்த்தை நடத்துவதில்லை.

அது எளிதானது. எளிதாய் இருப்பதுதான் சரி. அதில் சண்டை இல்லை. எளிதாய் இருப்பதுதான் சரி. அதில் போராட்டம் இல்லை. முரண்பாடுகள் இல்லை.

மனதைத் தள்ளி வைத்துவிட்டு உள்ளே இருக்கும் நிழலுக்குள் சென்று விடுங்கள். அங்கு நிழலும் இல்லை. காலடிச் சத்தமும் இல்லை. உங்களிடம் இறைத்தன்மை தோன்றும்.. உங்களிடம் ஏற்கனவே அந்தத் தன்மை இருந்தால்தான் அது உங்களிடம் தோன்றும். நீங்கள் இறைவனைப் போலத்தான் என்று நான் அடித்துச் சொல்கிறேன். அதற்குக் குறைவாக இருக்கும் எந்த நிலையையும் ஏற்றுக் கொள்ளாதீர்கள்.

எந்த லட்சியத்தையும் உருவாக்கிக் கொள்ளாதீர்கள். அதனால் முரண்களும் வெறுப்பும்தான் தோன்றும். தப்பி ஓடுதலும் போராட்டமும்தான் தோன்றும். உங்கள் வாழ்க்கையே ஒரு புரியாத புதிராக மாறிவிடும். விடை கண்டுபிடிக்க வேண்டிய ஒரு புதிர் அல்ல வாழ்க்கை.; அது வாழ்ந்து பார்க்க வேண்டிய ஒரு ரகசியம்.

இன்று இது போதும்.

ஷி ஹ்ஸிங் கோழிச் சண்டைக்குச் சேவல்களைப் பயிற்றுவிப்பவன். அவன் ஹ்ஸ்வான் என்ற மன்னனிடம் வேலை பார்த்தான். ஒரு அருமையான சேவலுக்குச் சண்டை போடப் பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தான்.

சேவல் சண்டை போடத் தயாராகிவிட்டதா என்று மன்னன் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தான்.

பயிற்சியாளன் சொன்னான்: ''இன்னும் தயாராகவில்லை. சேவல் தீயாக இருக்கிறது. எந்தச் சேவலோடும் சண்டையை ஆரம்பிக்கத் துடித்துக் கொண்டிருக்கிறது. தன் வலிமையின் மேல் அதற்கு அதீத கர்வம் இருக்கிறது..''

பத்து நாட்கள் கழித்து அதே கேள்விக்குப் பயிற்சியாளன் பதில் சொன்னான்.

''இல்லை, இன்னும் தயாராகவில்லை. மற்றொரு சேவல் கூவுவதைக் கேட்டால் சிலுப்பிக் கொள்கிறது.''

மேலும் பத்து நாட்கள் கழிந்தன. மன்னனிடமிருந்து அதே கேள்வி. பயிற்சியாளன் சொன்னான்.

''இன்னும் தயாராகவில்லை. அதனிடம் இன்னும் அந்த கோபப்பார்வை இருக்கிறது. தன் சிறகுகளைச் சிலுப்பிக் கொள்கிறது.''

**அடுத்த பத்து நாட்கள் கழித்துச் சொன்னான்.**

**''இப்போது ஏறக்குறைய தயாராகிவிட்டது. மற்றொரு சேவல் கூவினால் அது கண்களை இமைப்பதுகூட இல்லை. மரக்கட்டையைப் போல் அசைவற்று நிற்கிறது. இப்போதுதான் இது சண்டைக்குப் பக்குவமாகியிருக்கிறது. மற்ற கோழிகள் இப்போது இதைப் பார்த்தால் ஓட ஆரம்பிக்கும். ''**

மனிதனின் மனம் அகந்தையில் போய் முடிகிறது. அதுதான் மனதின் உச்சகட்ட வளர்ச்சி. மனம் எப்படி அகந்தையாக மாறுகிறது என்பதை முதலில் புரிந்து கொள்வோம்.

அகந்தைதான் தடுப்புச் சுவர். அகந்தை அதிகமாக இருந்தால் அந்த அளவிற்கு உங்களிடம் தெய்விகம் குறைவாக இருக்கும். அகந்தை குறைவாக இருக்க இருக்க தெய்விகத்தன்மை அதிகமாக இருக்கும். உங்கள் மனம் காலியாக இருந்தால் அகந்தை என்பதே இல்லாமல் இருந்தால் தெய்விகத்தன்மை நிரந்தர விருந்தாளியாக உங்களுக்குள் இருக்கும். ஆனால் உங்களில் சிறுபகுதி கூட உள்ளே இருக்கக்கூடாது. அப்போது தான் தெய்வம் உள்ளே வர முடியும். உங்களிடம் நீங்கள் இல்லாத போதுதான் தெய்விகத்தை வரவேற்று உபசரிக்க முடியும். உங்களுக்குள் நீங்கள் அதிகமாக இருந்தால் அதாவது அகந்தை மிதமிஞ்சியிருந்தால் உங்கள் ஜெப தபங்கள் எல்லாம் வீணே! நீங்கள் தெய்விகத்திற்கு விடுக்கும் அழைப்பும் பொய்யே. உங்கள் அகந்தை வலிமையாக இருக்கும் போது உங்களால் தெய்விகத்தை வீட்டிற்குள் அழைக்க முடியாது. காலியாக இருக்கும் ஆன்மாவின் மௌனமான தாகம்தான் அந்த அழைப்பு. அது வார்த்தைகளில்லாத மௌனமான வழிபாடு. வழிபாட்டு நிலை. இல்லாத மனமும் கரைந்து விட்ட அகந்தையும் செய்யும் வழிபாடு.

ஒரு முறை முல்லா நசிருதீன் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவர் முகத்தில் வருத்தம், குழப்பம்..

''நான் ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். நான் எதையும் கண்மூடித்தனமாக நம்ப மாட்டேன். நான் ஒரு பகுத்தறிவுவாதி''

''சரி உங்கள் பிரச்சினை என்னவென்று சொல்லுங்கள்.''

''இன்று காலை புனிதமான குரானின் மேல் ஒரு சுண்டெலி அமர்ந்திருப்பதைப் பார்த்தேன். அதிலிருந்து எனக்குச் சங்கடமாகிவிட்டது. குரான் ஒரு புனித நூல். அது ஒரு சாதாரண சுண்டெலியிடமிர்ந்து தன்னைக் காத்துக் கொள்ளாவிட்டால் என்னை எப்படி அது என்னை எப்படிக் காப்பாற்றும்? என் நம்பிக்கையே ஆடிப்போய்விட்டது. நான் பெரும் கவலையில் இருக்கின்றேன். இனிமேல் என்னால் குரானை நம்ப முடியாது. நான் என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்.''

''பகுத்தறிவு பூர்வமாகவே இதற்கு விடை காண்போம். நீங்கள் இனிமேல் சுண்டெலியை நம்புங்கள் சுண்டெலி குரானைவிட வலிமை வாய்ந்தது என்பதை உங்கள் கண்களாலேயே பார்த்துவிட்டீர்களே?''

மனதை வசப்படுத்தும் ஒரே தன்மை வலிமைதான். அதனால்தான் மனித மனம் வலிமையை வெளியே தேடிக் கொண்டிருக்கிறது.

முல்லா நான் சொன்னதை நம்பினார். தர்க்கரீதியாக நான் சொன்னதற்கு எதிராக எதையும் அவரால் சொல்லமுடியவில்லை. அன்று முதல் அவர் சுண்டெலியை வணங்கத் தொடங்கினார்.

விரைவிலேயே மீண்டும் பிரச்சினை வந்தது. ஒரு நாள் ஒரு பூனை சுண்டெலி மேல் குதிப்பதைப் பார்த்துவிட்டார். இந்த முறை அவர் என்னிடம் வந்து விளக்கம் கேட்கவில்லை. நான் ஏற்கனவே சொன்னதை வைத்து அவர் சரியாக அனுமானித்துவிட்டார். சுண்டெலியை விட பூனை வலிமை வாய்ந்தது என்பதால் அவர் பூனையை வழிபடத் தொடங்கினார்.

அப்படியும் பிரச்சினை தீரவில்லை. ஒரு நாள் நாய் ஒன்று பூனையைத் துரத்துவதைப் பார்த்தார். பூனையோ பயத்தில்

நடுங்கிக் கொண்டிருந்தது. அதனால் அன்று முதல் நாயை வழிபட ஆரம்பித்தார் முல்லா.

அப்படியும் பிரச்சினை தீரவில்லை. ஒரு நாள் அந்த நாயின் மேல் கோபம் கொண்ட முல்லாவின் மனைவி அதனைக் கல்லால் அடித்தே கொன்றுவிட்டாள். இப்போது முல்லாவால் சுயமாக முடிவெடுக்க முடியவில்லை. மீண்டும் என்னைத் தேடி ஓடிவந்தார்.

''இது ஆனாலும் அதிகம். என்னால் சுண்டெலி, பூனை, நாயை வழிபடமுடியும். ஆனால் சொந்த மனைவியை வழிபட முடியாது.''

''முல்லா நீங்கள் பெரிய பகுத்தறிவுவாதியாயிற்றே! அறிவு இப்படித்தான் போகும். நீங்கள் அறிவின் பாதையில்தான் செல்ல வேண்டும். வேறு வழியில்லை.. இனிமேல் திரும்பிப் போகமுடியாது.''

''சரி. ஆனால் என்னால் அதைப் பகிரங்கமாகச் செய்ய முடியாது. என் மனைவியின் பட்த்தை ரகசியமாக என் அறையில் வைத்து வணங்குகிறேன். கதவை உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு அந்தப் படத்தை வணங்குகிறேன். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். தயவு செய்து இதை அவளிடம் சொல்லிவிடாதீர்கள்.''

ரகசிய மனைவி-வழிபாடு தொடர்ந்து நடைபெற்றது. எல்லாம் நல்லபடியாக நடந்து கொண்டிருக்கிறது என்று நான் நினைத்துக் கொண்டிருந்த போது ஒரு நாள் முல்லாவின் மனைவி என்னிடம் ஓடி வந்தாள்.

''முல்லா பல நாட்களாக ஒரு மாதிரியாக இருக்கிறார். அவருக்குக் கொஞ்சம் மறை கழன்றுவிட்டது என்று நான் ஏற்கனவே சந்தேகப்பட்டேன். ஏனென்றால் அவர் முதலில் ஒரு சுண்டெலியை வழிபட்டுக் கொண்டிருந்தார். அப்பறும் ஒரு பூனையை வழிபட்டார். பின் ஒரு நாயை. ஆனால் கடந்த சில நாட்களாக தன் அறையைப் பூட்டிக்கொண்டு உள்ளே ஏதோ செய்து கொண்டிருக்கிறார். யாரையும் உள்ளே விடுவது இல்லை.

இன்று என் ஆர்வக்கோளாறு காரணமாகச் சாவித் துவாரம் வழியாக உள்ளே என்ன செய்கிறார் என்று பார்த்தேன். ஆனால் இது கொஞ்சம் அதிகம் தான்.''

''அப்படி என்னதான் செய்கிறார்?''

''அந்தக் கண்றாவியை என் வாயால் வேறு சொல்ல வேண்டுமாக்கும்! நீங்களே வந்து பாருங்கள்.''

அடுத்த நாள் நான் முல்லாவின் வீட்டிற்குப் போய் அவர் அறைக்கு வெளியே நின்று கொண்டு சாவித் துவாரம் வழியாக உள்ளே நடப்பதைப் பார்த்தேன்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. பாவி மனுஷர் கண்ணாடி முன் நிர்வாணமாக நின்று கொண்டு தன்னைத்தானே வணங்கிக் கொண்டிருந்தார். கதவைப் பலமாகத் தட்டினேன். முல்லா கதவைத் திறந்தார். அவர் செய்கைக்கு விளக்கம் கேட்டேன்.

''இது தான் தர்க்கரீதியாக மிகச் சரியான முடிவு. இன்று காலை எனக்குக் கோபம் வந்தது. என் மனைவியை அடித்துவிட்டேன். அவள் என்னிடம் பயப்படுகிறாள். அதனால் நான் அவளைவிட வலிமை வாய்ந்தவன் என்பதைக் கண்டுகொண்டேன். அதனால் நான் என்னையே வழிபட்டுக் கொண்டிருக்கிறேன்.

இப்படித்தான் மனம் கொஞ்சம் கொஞ்சமாக அகந்தையை நோக்கிச் சென்று கொண்டிருக்கும். அதன் இறுதி இலக்கு ''நான்''. மனம் சொல்வதை நீங்கள் கேட்கத் தொடங்கினால் அதன் இறுதி இலக்கிற்கு விரைவிலேயே உங்களை அழைத்துச் சென்றுவிடும். அதன்பின் முல்லாவைப் போல் நீங்கள் உங்களையே வழிபட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

நான் ஏதோ வேடிக்கையாகப் பேசுகிறேன் என்று நினைக் காதீர்கள். மொத்த மனித இனமும் இன்று இதைத்தான் செய்து கொண்டிருக்கிறது. இப்போது தெய்வங்களை தூக்கி வெளியே எறிந்து விட்டார்கள். கோவில்களும் தேவாலயங்களும் பயனற்றுப் போய்விட்டன. மனிதன் தன்னைத் 'தானே வழிபட்டுக் கொண்டிருக்கிறான். இது எப்படி நிகழ்கிறது?

நீங்கள் உங்கள் மனம் சொல்வதைக் கேட்க ஆரம்பித்தால் அது தன் நுட்பமான வாதங்களால் நீங்கள்தான் பிரபஞ்சத்தின் மையம் என்று உங்களை நம்ப வைத்துவிடும். இந்த உலகிலேயே மிகவும் முக்கியமானவர் நீங்கள்தான். எல்லாரையும் விட உயர்ந்தவர் நீங்கள்தான். நீங்கள்தான் கடவுள் என்று மனம் உங்களை நம்பவைத்துவிடும். ஒரு கட்டத்தில் இந்த அகங்கார மான அணுகுமுறை வந்தே தீரும். அதுதான் தர்க்கரீதியாக உச்ச நிலை. மனம் எல்லாவற்றைப் பற்றியும் கேள்விகள் எழுப்பும். சந்தேகங்களைக் கிளப்பும். ஆனால் எந்தக் காலத்திலும் உங்கள் அகந்தையைப் பற்றி எந்தச் சந்தேகத்தையும் கிளப்பாது.

எங்காவது சரணாகதி அடைய வேண்டும் என்ற நிலை வந்தால் மனம் தேவையில்லாத சந்தேகங்களைக் கிளப்பும்.

''நீ என்ன செய்கிறாய்? ஒரு குருவிடமோ கடவுளிடமோ கோயிலிலோ தேவாலயத்திலோ சரணடையப் போகிறாயா? அன்பிலும் வழிபாட்டுத்தன்மையிலும் சரண் புகப் போகிறாயா? பாலுணர்வில் சரண் புகப் போகிறாயா? என்ன செய்கிறாய்? உன்னை நீயே இழந்து கொண்டிருக்கிறாய். விழிப்புணர்வுடன் இரு. அனைத்தையும் உன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திரு. இல்லாவிட்டால் உன்னை நீயே இழந்துவிடுவாய்..''

ஏதாவது ஒரு இடத்தில் எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும் என்று நினைக்கிறீர்களா? மனம் உங்களை எதிர்க்கத் தொடங்கும். அதனால்தான் மனம் அன்பை எதிர்க்கிறது. ஏனென்றால் அன்பு என்பது முழுமையான சரணாகதி. அன்பு இருக்கும் இடத்தில் அகந்தை இருக்க முடியாது.

அதனால் தான் மனம் குருவை வன்மையாக எதிர்க்கிறது. குருவினிடம் அகந்தையை இழக்க வேண்டுமே? இல்லா விட்டால் குருவால் ஒன்றும் செய்ய முடியாது. அதனால் தான் மனம் கடவுளை எதிர்க்கிறது. ஏனென்றால் கடவுள் என்று ஒருவர் இருக்கும்வரி நீங்கள் எல்லாரையும் விட மேலான இடத்தில் நீங்கள் இருக்க முடியாதே! கடவுள் இருந்தால் அகந்தை அவருக்குக் கட்டுப்பட்டுத்தான் இருக்க வேண்டும். அதன் பின் இருப்பதிலேயே உயரமான சிம்மாசனத்தில் நீங்கள் அமர முடியாதே! அதனால்தான் கடவுளை மனம் அனுமதிப்பதில்லை.

தத்துவ மேதை நீஷே சொன்னார்: ''என்னால் கடவுள் இருப்பதை எந்தக் காலத்திலும் ஏற்றுக் கொள்ள முடியாது. அப்படி ஏற்றுக் கொண்டால் நான் எங்கே போவதாம்? கடவுள் இருக்கிறார் என்றால் நான் யார்? கடவுள் இருக்கும்போது நான் ஒன்றுமில்லை. அதனால் கடவுளா நானா என்ற கேள்வி வந்தால் நான் என்னையே தேர்ந்தெடுப்பேன். கடவுளை இல்லை.''

அதனால்தான் அந்த அறிவுஜீவி சொன்னார் : ''இறைவன் இறந்துவிட்டான். மனிதன் விடுதலை பெற்றுவிட்டான்.''

இருபதாம் நூற்றாண்டின் போக்கை நீஷே நிர்ணயித்தார். அவர்தான் இருபதாம் நூற்றாண்டின் தீர்க்கதரிசி. உங்கள் அனைவருக்கும் அடிப்படையாக இருப்பது அவருடைய தத்துவங்கள்தான். அதை நீங்கள் உணர்ந்திருக்கலாம். இல்லை உணராது இருக்கலாம். ஆனால் அதுதான் உண்மை. உங்களுக்குள் கடவுள் செத்துவிட்டார். அகந்தை மட்டும்தான் உயிருடன் இருக்கிறது. கடவுளும் அகந்தையும் ஒரே இடத்தில் இருக்க முடியாது.

பைபிளின் பழைய வேதாகமத்தில் ஒரு அழகான வாக்கியம் இருக்கிறது. ''நீ உயிருடன் இருக்கும் வரை கடவுளைப் பார்க்க முடியாது.''

கடவுளைப் பார்க்க வேண்டுமானால் உங்களுக்குள் இருக்கும் அந்த நான் செத்துவிட வேண்டும். அந்த நான் இருக்கும் வரை உங்களால் கடவுளைப் பார்க்க முடியாது.

உங்களுக்குள் இருக்கும் அந்த நான் இறந்தால்தான் நீங்கள் இறைவனைப் பார்க்க முடியும். நீங்கள் தான் தடுப்புச்சுவர். அகந்தையா ஆண்டவனா என்பதை நீங்கள் தான் தேர்ந்தெடுக்க வேண்டும். இரண்டும் ஒரே இடத்தில் இருக்க முடியாது. இரண்டையும் வைத்துச் சமாளிப்பேன் என்று நினைத்தால் அகந்தைதான் மிஞ்சும் இறைவன் செத்துவிடுவான். பிரபஞ்சத்தின் இருப்புநிலையில் இறைவன் மறைய வாய்ப்பேயில்லை. ஆனால் உங்களுக்குள் இறைவன் செத்திருப்பான். ஆமாம் அவன் இருக்கமாட்டான். நீங்கள்தான் உங்கள் அகந்தையால்

ஆண்டவனை வெளியே தள்ளிவிட்டீர்களே! உங்களை உங்களால் நிரப்பிக் கொண்டுவிட்டீர்கள். உங்கள் அகந்தையை ஊடுருவிச் செல்ல அதில் ஓட்டைகளேயில்லை. அகந்தையிருக்கும் இடத்தில் வேறு எதற்குமே இடமில்லை. எதுவுமே அகந்தையை ஊடுருவிக் கொண்டு உள்ளே போக முடியாது. அகந்தைக்கு பொறாமை அதிகம். அது வேறு எதையுமே உங்களுக்குள் நுழையவிடாது. வேறு போட்டியில்லாத மன்னனாக 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னனாக' அகந்தை உங்களை ஆட்சி செய்யும்.

மனம் சரணாகதியின் எதிரி. மனம் வலுப்பெற்றுவிட்டால் சரணாகதியின் எல்லாப் பரிமாணங்களும் மறைந்து போகும். இந்த நூற்றாண்டே அந்த நோயால் தவிக்கிறது - ஆம் யாரிடமும் சரணடைய முடியாமல் செய்துவிட்ட அந்த மன நோயால் தவிக்கிறது. இதுதான் பிரச்சினை. நவீன மனத்தின் சாரம் இதுதான். 'எப்படி அன்பு காட்டுவது?' என்று கேட்டுக்கொண்டே இருக்கிறீர்கள். மனதினால் அன்பு காட்ட முடியாது. மனம் போருக்குச் செல்லும். மனம் உலகப் போரைத் தொடங்கி வைக்கும். மனம் உலகத்தையே அழிக்கும். ஆனால் உங்கள் மனதினால் அன்பென்னும் வட்டத்திற்குள் செல்ல முடியாது. ஒரு சண்டை நடக்கும் போது அங்கே மனம் இருக்கும். அந்த இடத்தில் அது உத்வேகத்துடன் செயல்படும். ஆனால் அன்பென்று வந்துவிட்டால் அங்கே மனம் சரணடைய வேண்டும். இன்று பல மனங்களால் அதைச் செய்ய முடியாது. இன்றைய மனிதனின் தலையாய பிரச்சினை அதுதான்

அன்பு என்பது வேறு ஒருவருக்கு அதிகாரத்தைக் கொடுப்பது. அதைச் செய்ய நீங்கள் அஞ்சுகிறீர்கள். ஏனென்றால் அந்த வேறு ஒருவர் உங்களைவிட முக்கியமான ஆளாகி விடுவார். ஒரு ஆபத்து என்று வந்துவிட்டால் அந்த வேறொருவருக்காக நீங்கள் உங்களையே தியாகம் செய்யத் தயங்கமாட்டீர்கள். நீங்கள் யாரிடம் அன்பு காட்டுகிறீர்களோ அவர் அரியாசனத்தில் வீற்றிருப்பார். அவர் யாராக வேண்டுமானாலும் இருக்கலாம் - உங்கள் நண்பர், குரு, காதலன் காதலி.. இப்படி யாராக வேண்டுமானாலும் இருக்கலம். அவர்

அரியாசனத்தில் இருக்க நீங்கள் அவருக்கு ஊழியரைப் போல் கீழே நின்று கொண்டிருப்பீர்கள். இதை உங்கள் மனதினால் ஜீரணிக்க முடியாது. அதனால்தான் அன்புகாட்டுவது என்பது மனதிற்கு முடியாத செயல். பாலுறவு கூட ஒரு வகையில் முடியாத செயல்தான். பாலுறவின் போது ஒரு கட்டத்தில் உங்க ளையே நீங்கள் இழக்க வேண்டியதிருக்கும். அப்போதுதான் பாலுறவில் உச்சத்தைத் தொடமுடியும்.. அப்போதுதான் உங்கள் உடல் புத்தம்புது சக்தியால் நிரப்பப்படும். புதிய இன்ப அதிர்வுகளால் ஆட்கொள்ளப்படும். ஒரு உடல் ரீதியான மின்சாரம் உங்களைத் தாக்கும். ஆனால் அதற்கு உங்களையே நீங்கள் இழக்க வேண்டும்.

விந்துவை வெளியே விடுவது பாலுறவின் உச்சகட்டம் இல்லை. அது உச்சத்தின் உடல்ரீதியான அடையாளம். உச்சம் மனம் சம்பந்தப்பட்டது. பாலுறவில் உச்சம் என்பது ஆன்மிக மானது. விந்துவை வெளியே விடுவது வீணான வேலை. உடலில் ஏற்பட்டிருக்கும் அழுத்தத்தை அது குறைக்கலாம். அதனால் உடலிற்கு சுகத்தைத் தரலாம். அது ஒரு பாதுகாப்பு அமைப்பு மட்டுமே. உங்களிடம் இருக்கும் சக்தி அபரிமிதமாகப் போனால் விந்துவை வெளியேற்றுவதன் மூலம் நீங்கள் சமன் செய்து கொள்ளலாம். ஆனால் அது உண்மையான உச்சம் இல்லை. உண்மையான உச்சத்தில் நீங்கள் உயிர்த்துடிப்பின் உச்சத்தைத் தொடுவீர்கள். பரவசத்தின் சிகரத்தை எட்டிப் பிடிப்பீர்கள். அந்த நேரத்தில் உங்கள் உடல் உங்கள் இருப்புநிலை எல்லாமே ஓய்வுநிலைக்கு வரும். தளர்ச்சி இருக்காது. ஆனால் சுகமான ஒரு தளர்வு நிலையில் இருப்பீர்கள்.

மொத்த ஆன்மாவும் ஒரு புது இசையில் துடிப்புடன் இருக்கும். அந்த இசை இந்த பிரபஞ்சத்தின் ஆதார இசையோடு இசைவாக இருக்கும். அந்த சமயத்தில் உங்கள் அகந்தை அங்கு இருக்காது. வெறும் சக்தி மட்டுமே இருக்கும். காட்டாற்று வெள்ளம் போல் சக்தி உங்களுக்குள் ஓடிக் கொண்டிருக்கும். வெள்ளம் வடிந்தவுடன் ஆற்றின் ஓட்டம் சீர்பட்டு நீங்கள் அண்ட சராசரங்களோடு இசைவான நிலையில் இருப்பீர்கள். அந்தப் பரவசத்தின் சிகரத்தைத்தான் உடலுறவின் உச்சம் (ணிறு

ஞ்ச்ண்ட்) என்று சொல்கிறோம். உச்சநிலை என்பது உள்ளே நடக்கும் ஒரு நிகழ்வு.

இன்றைய காலகட்டத்தில் அந்த உச்சநிலை சாத்தியமில்லாமல் போய்விட்டது. அதனால் இன்று தொன்னூறு சதவிகிதம் பேர் ஏதோ ஒரு வகையான மனநோயினால் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். தெய்விகத்தன்மையை அடையும் மிக எளிதான வழியை நீங்கள் தொலைத்துவிட்டீர்கள்.

பிரபஞ்சத்தின் முழுமையுடன் இயற்கையாக ஒன்றியிருக்கும் வாய்ப்பை நழுவ விட்டுவிட்டீர்கள். அந்த முழுமைதான் உங்களைப் புதுப்பிக்கும். புதிய சக்தியைக் கொடுக்கும். உன்னதமான உயிர்ப்பைக் கொடுக்கும். உடலுறவின் உச்சநிலை உங்கள் பழைய சக்தியை அழித்துப் புதிய சக்தியைக் கொடுக்கிறது. அது இல்லையென்றால் நீங்க:ள் பிணத்தைப் போல் இருப்பீர்கள். உங்கள் அகந்தையின் காரணமாக உங்களால் அந்த உச்சத்தைத் தொடமுடியவில்லை.

உடலுறவாக இருந்தாலும், அன்பாக இருந்தாலும் காதலாக இருந்தாலும் வழிபாடு தியானம் என்று எதுவாக இருந்தாலும் பிரச்சினை ஒன்றுதான். நீங்கள் சரணடைய வேண்டும். ஆனால் உங்கள் அகந்தை உங்களைச் சரணடையவிடாது.

அகந்தை எப்போதும் ஏன் சண்டைப் போடத் துடித்துக் கொண்டிருக்கிறது? எந்த நொடியிலும் யார் மேலாவது பாய்ந்து ஏதாவது ஒரு நொண்டிச் சாக்கைக் கண்டுபிடித்து அவருடன் சண்டை போட்டு வாதிட்டு உங்கள் கோபத்தைக் காட்ட நினைக் கிறீர்கள். ஏன்? அகந்தை ஏன் சண்டையைத் தேடிக் கொண்டு அலைகிறது? சண்டைதான் அகந்தைக்கு உணவு. எரிபொருள். சண்டையின் மூலமாகத்தான் அது சக்தி பெறுகிறது. சண்டையிடுவதுதான் அகந்தைக்கு ஆதாரம். உங்களுக்குள் இருக்கும் மிக ஆழமான வன்முறை உங்கள் அகந்தைதான். உங்கள் அகந்தையை வலுவாக்க நீங்கள் இருபத்திநான்கு மணி நேரமும் சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டும். சண்டை போட ஒரு பகைவன் வேண்டுமல்லவா? அப்போதுதானே ஒரு சவால் இருக்கும்? ஒரு விறுவிறுப்பு இருக்கும்? அதனால்தான் அகந்தை

யாருடன் சண்டை போடலாம் என்று அலைந்து கொண் டிருக்கிறது.

ஏன் இந்த சண்டை? சண்டை மூலமாகத்தான் அகந்தை தன் சக்தியைப் பெறுகிறது. இரண்டாவது, அகந்தை எப்போதும் அச்சத்திலேயே இருக்கிறது. அதனால்தான் நீங்கள் எந்த நேரமும் சண்டைக்குத் தயாராகவே இருக்கிறீர்கள். உங்களிடம் பயம் இருக்கிறது. அகந்தை எப்போதும் அச்சத்துடனேயே இருக்கும். ஏன்? அகந்தையே ஒரு போலிதானே! அது இயற்கைக்கு விரோதமானதுதானே! அது தாவோ இல்லையே! அது ஒரு செயற்கையான கருவிதானே! அதை நீங்கள் எப்போதும் பராமரித்துக் கொண்டிருக்க வேண்டும். நிர்வகித்துக் கொண் டிருக்க வேண்டும். ஒரு நிமிடம் அதனைப் பராமரிக்கவில்லை யென்றால்கூட அது மறைந்துவிடும். அதுதான் அகந்தையின் அச்சத்திற்கு ஆதாரம். அதனால்தான் நீங்கள் விழிப்புடன் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

ஒரு நாள். ஒரே ஒரு நாள் நீங்கள் அகந்தையில்லாமல் இருந்தால் கூட உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். புதிராக இருக்கும். பல பிறவிகளாக நீங்கள் சுமந்து கொண்டிருந்த உங்கள் அகந்தைக்கு என்ன ஆயிற்று? ஒரே நாளில் அகந்தை மறைந்து விடும். ஏனெனில் அகந்தைக்கு எரிபொருள் வேண்டும். அது தொடர்ந்து கிடைக்க வேண்டும். ஏனென்றால் அது இயற்கையின் பகுதி இல்லை. அதனிடம் இயல்பான சக்தி கிடையாது

இருப்புநிலை தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கும். அது சாசுவதமானது. இந்த மரம் ஒரு நாள் பட்டுப் போகலாம். ஆனால் விரைவிலேயே இந்த இடத்தில் இன்னொரு மரம் வரும். இந்த மரத்தின் சக்தி அந்த மரத்திற்குள் செல்லும் உங்கள் உடல் ஒரு நாள் கீழே விழுந்து மடியலாம். ஆனால் உயிர்ச் சக்தி வேறு ஒரு உடலுக்குள் சென்றுவிடும். இருப்புநிலையில் இருக்கும் மற்றவற்றைப் போல உங்களுடைய அடியாழத்தில் வற்றாத நதியாக பிரபஞ்ச சக்தி இருக்கிறது.

உங்கள் உடலிற்கு எரிபொருள் தேவை. காலாகாலத்தில் உணவும் தண்ணீரும் கொடுக்கவில்லையென்றால் உங்கள் உடல்

இறந்துவிடும். உணவு இல்லையென்றால் மூன்றே மாதங்களில் நீங்கள் இறந்துவிடுவீர்கள். தண்ணீர் இல்லையென்றால் மூன்று நாட்களில் நீங்கள் இறந்துவிடுவீர்கள். காற்று இல்லை என்றால் மூன்றே நிமிடங்களில் நீங்கள் இறந்துவிடுவீர்கள்.

உங்கள் உடலிற்கு எப்போதும் எரிபொருள் தேவைப் படுகிறது. காரணம் உங்கள் உடல் சாசுவதமானது அல்ல.

ஆனால் உங்கள் உணர்வுநிலைக்கு எரிபொருள் தேவை யில்லை. உங்கள் உடல் மாய்ந்தவுடன் உங்கள் உணர்வு நிலை வேறு ஒரு கருப்பையைத் தேடிச் செல்லும். உண்ர்வு நில்லை என்பது நிற்காத இயக்கம். அது ஒரு முடிவில்லாத சக்தி. ஆதி அந்தம் இல்லாத அற்புத சக்தி. அது ஆரம்பிக்கவில்லை. அதற்கு முடிவும் இல்லை. அந்த உணர்வுநிலையுடன் ஒன்றிவிட்டால் அதன் பின் உங்களுக்கு அச்சமே இருக்காது. முடிந்து விடுவோமோ, மடிந்துவிடுவோமோ என்ற எண்ணத்தின் அடிப்படையில்தானே பயம் பிறக்கிறது. முடிவே இல்லாத அமரத்துவம் வாய்ந்த அந்த மூலாதார சக்தியுடன் ஒன்றிவிட்டால் அச்சத்திற்கு அங்கே வேலையே இல்லையே!

அகந்தை எளிதில் உடையும் தன்மை உள்ளது. எந்த நேரத்திலும் மரணத்தின் விளிம்பில் இருக்கும். யார் வேண்டு மானாலும் அதைக் கொல்லலாம். ஒரு சிறிய சைகை ஒரு சின்னப் பார்வை அகந்தையைக் கொன்றுவிடும். யாராவது உங்களைப் பார்த்தால் அகந்தை பயத்தில் நெளிகிறது. அந்த மனிதன் பகைவனாகத் தோன்றுகிறான். பகைமையின் சிறு சைகையைக் கண்டால் கூட அகந்தை நடுக்கம் கொள்கிறது. காரணம் அகந்தையில் உறுதி இல்லை. அது எளிதில் உடைந்து போகும் தன்மை கொண்டது. அது பொய்யானது. செயற்கையானது. அதைப் பராமரிக்க வேண்டும். அதனால்தான் உலகத்தில் அவ்வளவு அச்சம் இருக்கிறது. இந்த அச்சம் என்னும் கடலிற்கு நடுவே ஆங்காங்கே துணிவு என்னும் சிறு தீவுகளை உருவாக்கி யிருக்கிறீர்கள். இல்லாவிட்டால் வாழ்க்கை இன்னும் கடினமாக இருந்திருக்கும்.

நீங்கள் உங்களைத் தைரியசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு கோழைகூடத் தன்னைத் தைரியசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறான். அது ஒரு சிக்கலான பிரச்சினை. அகந்தை எந்த நேரமும் அச்சத்தில் நடுங்கிக் கொண்டிருக்கிறது. உள்ளே ஆழ்ந்து பார்த்தால் அகந்தை என்பது அச்சத்தின் வடிவமாகவே தெரியும். எந்த நேரமும் மரணம் சம்பவிக்கலாம். காதலிக்கும் போது மரணம் வரலாம். வழிபாடு செய்யும் போது வரலாம். எந்த அழ்ந்த உறவிலும் அகந்தை அழிந்து போகும். ஒரு ரோஜா மலரை மனதில் எந்த சிந்தனையும் இல்லாமல் சில கணங்கள் பார்த்தீர்களென்றால் அந்தச் சில கணங்களுக்கு அகந்தை அழிந்து போகும். ஒரு ரோஜா மலர் கூட உங்கள் அகந்தையைக் கொன்றுவிடலாம். அது அந்த அளவிற்கு மெல்லிசாக இருக்கிறது. அகந்தை மெல்லிய இழையைப் போன்றது. ஒரு கனவைப் போல் லேசாகக் கனமில்லாமல் இருக்கிறது. உங்கள் மனதின் அடியாழத்தில் மரணபயம் வலுவாக இருந்தாலும் மேலோட்டமாக நீங்கள் தைரியசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இது அசட்டுத் துணிச்சல், 'நான் கோழையில்லை' என்ற இந்த வெட்டிப் பெருமை உங்கள் அகந்தையை வளர்க்கிறது. உங்கள் அகந்தை அச்சமன்றி வேறில்லை என்பதை உணர்ந்தால் நீங்கள் உங்கள் அகந்தையைச் சோறுபோட்டு வளர்க்க மாட்டீர்கள். அதனை விட்டுவிடுவீர்கள். வெட்டியாக ஏன் வியாதியைச் சுமக்க வேண்டும்? வியாதி மறைந்திருக்கிறது.. அதனால் அது வியாதியில்லை என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதுதான் ஆரோக்கியம் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

முல்லாவிற்கு அப்போதுதான் திருமணமாகியிருந்தது. புதுமனைவியை அழைத்துக் கொண்டு ஒரு மலைப்பிரதேசத்திற்கு தேனிலவிற்குப் போனார் முல்லா. முதல் நாள். நள்ளிரவு நேரம். யாரோ கதவைத் தட்டினார்கள். முல்லா எழுந்து போய் கதவைத் திறந்தார். கையில் துப்பாக்கியுடன் ஒருவன் நின்று கொண் டிருந்தான். அவன் ஒரு திருடன். திருடத்தான் வந்திருந்தான். ஆனால் முல்லாவின் இளம் மனைவியின் அழகில் மயங்கிய வன் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டான். திருட்டை மறந்தான்.

முல்லாவிடம் சீறினான் ''அந்த மூலையில் போய் நில்.''

முல்லாவைச் சுற்றி ஒரு வட்டம் போட்டான்.

''இந்த வட்டத்தை விட்டு ஒரு அடி வெளியில் உன் காலை எடுத்து வைத்தாயோ துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிடுவேன்.''

பின் முல்லாவின் மனைவியை அணைத்தான். முத்தம் கொடுத்தான். பின் அவளுடன் உடலுறவு கொண்டான்.

அந்தத் திருடன் வெளியேறியவுடன் முல்லாவின் மனைவி கோபத்தில் பொங்கினாள்.

''நீயெல்லாம் ஒரு ஆம்பளையாய்யா? அந்தக் கிராதகன் போட்ட வட்டத்திற்குள் நின்று கொண்டு உன் மனைவியோடு ஒரு அன்னியன் உடலுறவு கொள்வதைப் பார்த்துக் கொண் டிருந்தாயே, வெட்கமாக இல்லை?''

முல்லா ஆவேசமாகச் சொன்னார்.

''நான் ஒன்றும் கோழையில்லை. அவன் பார்க்காத நேரத்தில் நான் காலை வட்டத்திற்கு வெளியே வைத்தேன். ஒரு முறையல்ல. மூன்று முறை அப்படிச் செய்தேன்.''

அகந்தை இப்படித்தான் தன்னைத்தானே பராமரித்துக் கொள்கிறது. யாரும் பார்க்காத போது வட்டத்திற்கு வெளியே காலை எடுத்து வைக்கிறது. அதுதான் அகந்தையின் அதிக பட்ச சாதனை. மரணம் உங்களைப் பார்க்காத போது நீங்களும் தைரியமாக காலை வட்டத்திற்கு வெளியே வைக்கிறீர்கள். ஒரு முறை அல்ல. மூன்று முறை. முல்லாவைப் போல.

வட்டத்திற்கு வெளியே காலடி எடுத்து வைக்கும்போது சுகமாகத்தான் இருக்கிறது. எல்லாருமே மூலையில் இருக்கும் ஒரு வட்டத்திற்குள்தான் நிற்கிறார்கள். சில சமயம் காலை எடுத்து வெளியே வைக்கிறார்கள். நான் கோழையில்லை என்று பீற்றிக் கொள்வதற்காக அப்படிச் செய்கிறார்கள். ஆனால் உங்கள் அகந்தை ஒரு கோழை. அது வேறு எப்படியும் இருக்க முடியாது. பயமில்லாத மனிதனிடம் அகந்தை இருக்க முடியாது. காரணம் அகந்தை இயற்கையின் வழியல்ல.

பயமின்றி அகந்தை இருக்கவும் முடியாது. ஏன்? அகந்தை நிலையாக இருக்க முடியாது. அதற்கு ஒரு கட்டத்தில் மரணம் சம்பவித்தேயாக வேண்டும். அகந்தை உருவாக்கப்பட்ட ஒரு சாதனம். உங்களால் உருவாக்கப்பட்டது. அது ஒரு காலகட்டத்தில் மறையத்தான் வேண்டும். மரணம் என்பது நிச்சயமாகிவிட்ட பிறகு எப்படி உங்களால் பயமில்லாமல் இருக்க முடியும்? சில நேரங்களில் நீங்கள் அந்த மூலை வட்டத்திற்கு வெளியே காலை எடுத்து வைக்கலாம். உங்களால் முடிந்தது அவ்வளவுதான். அகந்தை இருக்கும் போது அச்சமின்மை இருக்க முடியாது. இரண்டு வார்த்தைகளை நினைவில் கொள்ளுங்கள். ஒன்று கோழைத்தனம். மற்றொன்று தைரியம். கோழைத்தனம் அகந்தையின் ஒரு பகுதி. அகந்தையின் ஆழமான பகுதி. தைரியம் என்பது மூன்றுமுறை வட்டத்திற்கு வெளியே காலை வைப்பது.

அந்தத் துணிச்சலும் கோழைத்தனத்தின் ஒரு பகுதிதான். அதன் மறைக்கப்பட்ட பகுதி. அலங்கரிக்கப்பட்ட பகுதி. உள்ளே இருக்கும் கோழைத்தனம் என்ற அசிங்கமான புண்ணின் மேல் அசட்டுத் துணிச்சல் என்ற மலரைத் தூவி மூடி வைத்திருக்கிறீர்கள். மலர்களில் புண் மறைந்திருக்கிறது. ஒவ்வொரு தைரியசாலிக்குள்ளும் ஒரு கோழை இருப்பதைப் பார்க்கலாம். வரலாறு புகழும் நெப்போலியன்கள், ஹிட்லர்கள், மகா அலெக்சாண்டர்கள் எல்லாரும் கோழைகளே. அவர்கள் துணிச்சல் எல்லாம் வட்டத்திற்கு வெளியே மூன்றுமுறை காலை வைப்பதோடு சரி. உள்ளே அதே கோழைத்தனம். அதே நடுக்கம். கோழைத்தனத்தை மறைப்பதற்குத்தான் அந்த தைரியசாலி வேஷம். துணிச்சல் என்பது ஒரு உத்தி மாத்திரமே. இப்போது மனவியல் வல்லுனர்களுக்கும் இது நன்றாகத் தெரியும்.

இது எல்லா மதங்களுக்கும் தெரியும். எதையாவது மறைக்க வேண்டுமென்றால் அதற்கு நேர் எதிரான ஒன்றை தூக்கிக் காட்ட வேண்டும். நீங்கள் முட்டாளாக இருந்தால் உங்கள் அறிவு இருப்பதாகக் காட்டிக் கொள்ள வேண்டும். நீங்கள் அசிங்கமாக இருந்தால் உங்கள் உடல், முகம், தலை முடி அனைத்தையும் கொஞ்சம் அழகுபடுத்தி இல்லாத அழகை இருப்பதாகக் காட்டுவீர்கள். உங்கள் அழகற்ற நிலையை ஆடைகளாலும்

ஆபரணங்களாலும் மறைத்துக் கொள்வீர்கள். உங்களிடம் தாழ்வு மனப்பான்மை இருந்தால் நீங்கள் மற்றவர்களைவிட மேல் என்று காட்டிக் கொள்வீர்கள். ''நான் ஒன்றும் தாழ்ந்தவன் இல்லை யாக்கும்'' என்று உங்களின் ஒவ்வொரு செயலும் கூச்சல் போடும். நீங்கள் ஒரு முகம் தெரியாத ஆளாக இருந்தால் - கூட்டத்தோடு கோவிந்தா போடும் ஒரு சாமானியனாக இருந்தால் -நீங்கள் வி.ஐ.பி என்று காட்டிக்கொள்ள தேவையில்லாத பந்தா செய்வீர்கள்.

கோழைத்தனமும் துணிச்சலும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். இரண்டிலும் பயம் இருக்கிறது. கோழைத்தனமும் துணிச்சலும் பயத்தின் இருவேறு முகங்கள். ஒன்று நேரடியான முகம். மற்றது சூழ்ச்சியால் மாற்றியமைக்கப்பட்ட முகம். சூழ்ச்சி செய்யத் தெரிந்த பயந்தாங்கொள்ளி துணிச்சல்காரன் என்று பெயர் எடுக்கிறான்.

ஒரு முறை போரில் ஈடுபட்டிருந்த ஒரு வீரன் பயந்து போய் பின்வாங்கி ஓட ஆரம்பித்தான். பின்னால் பின்னால் என்று போய்க்கொண்டேயிருந்தான். அவனை ஒரு மேலதிகாரி தடுத்து நிறுத்தினார்.

''என்ன செய்கிறாய்? ஏன் பின்னால் ஓடுகிறாய்? சண்டை இன்னும் நடந்து கொண்டிருக்கிறது தெரியுமா?''

வீரனுக்குப் பயத்தில் பேச்சே வரவில்லை. தொடர்ந்து பின்னால் ஓட ஆரம்பித்தான். அந்த அதிகாரி அவனை விடாமல் துரத்திக் கொண்டு போனார். ''ஏன் ஓடுகிறாய்? நீ இன்னும் என் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. நான் யாரென்று உனக்குத் தெரியுமா? நான் உன் ராணுவத்தின் தளபதி.''

''அடக் கடவுளே! அவ்வளவு தூரமா நான் பின்னால் வந்துவிட்டேன்!''

உங்களுடைய தலைவர்கள். தளபதிகள் எப்போதும் பின்னாலேயே இருக்கிறார்கள். அவர்கள் எந்தப் போரிலும் சாவது இல்லை. மற்றவர்கள் அவர்களுக்காகச் சாகிறார்கள். அவர்கள் வடிகட்டிய கோழைகள். ஆனால் பெரிய தைரிய

சாலிகள் போல் தங்களைக் காட்டிக் கொள்வார்கள். அடுத்தவர்கள் செத்தால் அவர்கள் தங்கள் நெஞ்சில் வீரப்பதக்கங்களைக் குத்திக் கொள்வார்கள். உங்கள் நெப்போலியன்கள், ஹிட்லர்கள், அலெக்சாண்டர்கள் எல்லாருமே கோழைகள். ஆனால் வெளியே உள்ளே இருப்பதற்கு நேர்மாறாகக் காட்டிக் கொள்வார்கள். இதை நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். அப்போதுதான் அச்சமற்ற நிலையை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

அச்சமற்ற மனிதன் கோழையும் இல்லை தைரியசாலியும் இல்லை. இந்த இரண்டில் ஒன்றாக இருக்க முடியாது. அவன் பயமற்றவன். மகாவீரர், புத்தர், ஷுவாங் ட்சு, ஏசுநாதர் இவர்கள் தைரியசாலிகளா? நிச்சயமாக இல்லை. அவர்கள் கோழைகள் இல்லை. நீங்கள் கோழையாக இருந்தால்தான் தைரியசாலியாக இருக்க முடியும். நீங்கள் மூலையில் திருடன் கிழித்த வட்டத்திற்குள் இருந்தால்தான் மூன்றுமுறை திருடனுக்குத் தெரியாமல் உங்கள் காலை வெளியே எடுத்து வைக்க முடியும்

வட்டத்திற்குள் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள மாட்டேன் என்றால் வெளியே காலை எடுத்துவைத்து உங்கள் துணிச்சலை எப்படிக் காட்டமுடியும்? அச்சமற்ற மனிதன் தன்னுள் இருக்கும் அந்த சாவற்ற தன்மையைப் புரிந்து கொண்டவன். தனக்குள் இருக்கும் முதலும் முடிவுமற்ற அந்த பரம்பொருளைத் தெரிந்து கொண்டவன். அப்படிப்பட்ட வனுக்குக் கோழைத்தனமும் இருக்காது. தைரியமும் இருக்காது. காரணம் தைரியம் என்பது மனதில் உள்ள பயத்தை மறைக்க நாம் போடும் வேஷம்.

அந்த மனிதன் முட்டாளாகவும் இருக்க மாட்டான் புத்திசாலியாகவும் இருக்க மாட்டான். காரணம் புத்திசாலித்தனம் என்பது நமது முட்டாள்தனத்தை மறைக்க நாம் போடும் வேஷம் மட்டுமே. எதிர்மறைகளால் பிரிக்க முடியாத ஒருமைப்பாடுடைய வனாக இருப்பான். அத்தகைய மனிதன் ஒரு தனித்தன்மை வாய்ந்த நிகழ்வாக இருப்பான். அவன் இத்தகையவன் என்று உங்களால் வரையறுக்க முடியாது.

புத்த பெருமானை இத்தகையவர் என்று யாரால் வரையறுக்க முடியும்? அவரைக் கோழை என்பீர்களா? முடியாது. தைரியசாலி என்பீர்களா? அதுவும் முடியாது. முட்டாள் என்று இகழ்வீர்களா? முடியாது. இல்லை அறிவாளி என்ற் புகழ்வீர்களா? அதுவும் முடியாது. காரணம் அறிவு முட்டாள்தனத்தின் எதிர்மறைக் குணம். தைரியம் கோழைத்தனத்தின் எதிர்மறைக்குணம்.

புத்தனை என்னவென்று அழைப்பீர்கள்? எப்படி அழைத் தாலும் அது தப்பாகிவிடும். ஒரு புத்தனின் முன்னிலையில் மௌனமாக மட்டுமே இருக்க முடியும். அவரைப் பாவி என்பீர்களா புனிதர் என்பீர்களா? அவர் இரண்டும் இல்லை. உள்ளே பாவம் இருந்தால்தான் வெளியே 'புனிதராக' இருக்க முடியும். புனிதம் என்பது பாவத்தை மறைக்கப் போடும் வேஷம் மட்டுமே.

ஒரு புத்தர் தோன்றும் போது அவரை இத்தகையவர் என்று நம்மால் வரையறுக்க முடியாது. நாம் ஏற்கனவே செய்து வைத்திருக்கும் பிரிவுகளில் அவரை அடைத்து வைக்க முடியாது. அவருக்கு ஒரு பெயர்ச் சீட்டை உருவாக்க முடியாது. புத்தரை எங்கேயும் எதிலேயும் வைக்க முடியாது. அவர் எல்லாருக்கும் சொந்தம். யாருக்கும் சொந்தம் இல்லை. அவர் எல்லா வகை-தொகைகளையும் கடந்து நிற்பார். ஐந்தறைப் பெட்டிக்குள் அவரை அடைத்து வைக்க முடியாது. புத்தனின் முன்னால் மொழிகளும் செயலிழந்து போகின்றன. மனம் அமைதியடை கிறது. அவர் முன் அர்த்தமுள்ள எதையும் நம்மால் சொல்ல முடியாமல் போகிறது. புத்தருக்கு அச்சமில்லை. மனமில்லை. அவரை புத்திசாலி என்றோ முட்டாள் என்றோ அழைக்க முடியாது. இரண்டிற்கும் மனம் வேண்டும்.

இந்தப் பின்னணியில் ஷுவாங் ட்சுவின் அழகான கதைக்குள் நுழைவோம்.

***ஷி ஹ்ஸிங் கோழிச் சண்டைக்குச் சேவல்களைப் பயிற்றுவிப்பவன். அவன் ஹ்ஸ்வான் என்ற மன்னனிடம் வேலை பார்த்தான்.***

இந்த மனிதன் ஷி ஹ்ஸிங் இருக்கிறானே இவன் சாதாரணப் பயிற்சியாளன் மட்டும் இல்லை. பெரிய ஞானி. எப்போதும் தாவோவில் நிலைத்திருப்பவன். சீனா, ஜப்பான் மற்றும் பல்வேறு கிழக்கத்திய நாடுகளில் எல்லா விஷயங்களையும் தியானப் பயிற்சிக்காக எடுத்துக் கொண்டார்கள். வில்வித்தை, படம் வரைதல், கத்திச் சண்டை - எல்லாவற்றுக்கும் மேலாகச் சண்டைக் கோழிகளுக்குப் பயிற்சி கொடுப்பதில் கூட ஆன்மிகக் கோணத்தைப் பார்த்தார்கள். யதார்த்த வாழ்க்கையின் எந்த ஒரு பரிமாணத்தையும் அவர்கள் விட்டுவைக்கவில்லை. அனைத்திலும் தாவோவைக் கண்டார்கள். பயிற்சிக்கு விஷயமாக்கிக் கொண்டார்கள். அந்த நாட்டின் சக்கரவர்த்தி இந்த மனிதன் ஷி ஹ்ஸிங்கிடம் ஒரு சேவலுக்குச் சண்டைப் பயிற்சி கொடுக்குமாறு சொல்லியிருந்தார். அந்த மன்னனுக்கு சண்டை போட்டி என்றால் மிகவும் பிடிக்கும். நடக்கப்போகும் சண்டையில் தன் சேவல்தான் ஜெயிக்க வேண்டும் என்று விரும்பினார்.

அந்தச் சேவல்கள் மூலமாக நமது அகந்தைதான் போரிடுகிறது. நாம் செய்வது அனைத்தையும் நமது அகந்தைக்கே அர்ப்பணிக்கிறோம். சாதாரண விளையாடுக்களில் கூட இந்த அகந்தை விஷம் கலந்துவிடுகிறது. உங்களுக்கு விளையாட்டில் ஆர்வம் இல்லை. ஜெயிப்பதில்தான் ஆர்வம் இருக்கிறது. விளையாட்டுக்கும் பந்தயத்திற்கும் அதுதான் வித்தியாசம். விளையாடும் போது உங்கள் ஆர்வம் விளையாட்டில் மட்டும்தான். குழந்தையைப் போல் அதில் பங்கு கொள்கிறீர்கள். அப்போது அந்த விளையாட்டே அழகாக இருக்கிறது. அதே அணுகுமுறையை உங்கள் வாழ்க்கைக்கும் கையாண்டால் உங்கள் வாழ்க்கையே ஒரு முடிவில்லாத விளையாட்ட்டாக இருக்கும்.

ஆனால் போட்டி பந்தயம் என்று வந்துவிட்டால் உங்களுக்கு ஆட்டத்தில் ஆர்வம் இல்லை. அதன் முடிவைத் தெரிந்து கொள்வதில்தான் ஆர்வம் இருக்கிறது. எப்படியாவது ஜெயித்துவிட வேண்டும் என்ற மனப்பாங்குதான் அதிகம் இருக்கிறது. அந்த மனப்பாங்கு வந்துவிட்டால் அங்கே விளையாட்டு செத்துவிடுகிறது. அது ஒரு தொழிலாக, ஒரு போராட்டமாக மாறிவிடுகிறது.

இதை நன்றாகக் கவனியுங்கள். சேவலுக்குச் சண்டைப் பயிற்சி கொடுப்பதுதான் பயிற்சியாளனின் வேலை என்றாலும் அவன் நோக்கம் வேறு மன்னனின் நோக்கம் வேறு என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். மன்னனுக்குப் போட்டியில் ஜெயிக்க வேண்டும் என்ற துடிப்பு. பயிற்சியாளனுக்கோ ஒரு சேவலைச் சிறந்த போரிடும் சேவலாக மாற்ற வேண்டும் என்ற துடிப்பு.

***சேவல் சண்டை போடத் தயாராகிவிட்டதா என்று மன்னன் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தான்.***

***பயிற்சியாளன் சொன்னான்: ''இன்னும் தயாராக வில்லை'' சேவல் தீயாக இருக்கிறது.***

வேடிக்கையைப் பாருங்கள். மன்னன் என்ன சொல்லியிருப் பான்? சேவல் தீயாக இருந்தால் நல்லதுதானே? வேறு சேவலுடன் சண்டை போடும் போது அது தீயாக இருந்தால் வெல்ல அதிக வாய்ப்பு இருக்கும் அல்லவா?

பயிற்சியாளனின் கூற்று மன்னனுக்கு ஆச்சரியமாக இருந்திருக்கும்.. இவன் என்ன பயிற்சியாளன்? சேவல் இன்னும் சண்டைக்குத் தயாராகவில்லை என்கிறான். ஆனால் அது தீயாக இருக்கிறது என்கிறானே?

***எந்தச் சேவலோடும் சண்டையை ஆரம்பிக்கத் துடித்துக் கொண்டிருக்கிறது.***

அந்தச் சேவல் எப்போதும் சண்டை போடத் தயாராக இருக்கிறது. ஏனென்றால் அந்தச் சேவலுக்குப் பயம் இருக்கிறது. உங்களுக்குப் பயம் இருந்தால் எப்படிப் போரிட முடியும்? மன்னன் - பயிற்சியாளன் - இந்த இருவேறு மனங்கள் எப்படிச் செயல்படுகின்றன என்று பாருங்கள்.

தர்க்கரீதியாகச் செயல்படும் மனம் என்ன சொல்கிறது? நீ தீயாக இருந்தால், யாரோடும் சண்டைபோடத் துடித்துக் கொண்டிருந்தால் நீ பெரிய வீரனாகிவிட்டாய். இனியும் எதற்குப் பயிற்சி? எதற்காகக் காத்துக்கொண்டிருக்கிறாய். நீதான் தீயாக இருக்கிறாயே! சண்டை போடேன்! சும்மா இருந்தால் சிறிது

நேரத்தில் உன்னிடம் இருக்கும் தீ குளிர்ந்துவிடும். உன்னிடம் உள்ள சக்தி குறைந்துவிடும்.

ஆனால் மனமற்ற நிலையில் இருக்கும் மனம் வேறு மாதிரி சிந்திக்கிறது. அந்த நிலையில் இருப்பவன் என்ன சொல்கிறான்?

''அந்தச் சேவல் எந்தக் கணத்திலும் யாரோடும் சண்டை போடத் துடித்துக் கொண்டிருப்பதால் அதற்கு இன்னும் பயிற்சி முடியவில்லை. அதனால் அது சண்டைக்குத் தயாராகவில்லை.''

ஏன்? எந்தக் கணமும் சண்டை போட நீங்கள் தயாராக இருந்தால் நீங்கள் ஒரு கோழை. உங்கள் கோழைத்தனத்தை சண்டையில் மறைத்துக் கொள்ள முயல்கிறீர்கள். நீங்கள் ஒரு தைரியசாலி என்று உலகத்திற்கு நிரூபிக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். இந்த நினைப்பே நீங்கள் ஒரு கோழை என்று காட்டிவிடும். உங்கள் துணிச்சலை நிரூபிக்க வேண்டும் என்ற துடிப்பே உங்களிடம் அந்தத் துணிச்சல் இல்லை என்பதை நிரூபித்துவிடும்.

உண்மையிலேயே அறிவாளியாக இருப்பவன் அதனை நிரூபிக்க பாடுபடமாட்டான். ஒரு முட்டாள் தன்னை அறிவாளி என்று நிரூபிக்கப் படாத பாடு பட்டுக்கொண்டிருப்பான். அன்பு வயப்பட்ட மனிதன் அன்பாகவே ஆகிவிடுவான். தனக்கு அன்பு இருக்கிறது என்று நிரூபிக்க அவன் ஒரு நாளும் முனைய மாட்டான்.

உங்கள் மனதில் அன்பு இல்லாதபோதுதான் அன்பு இருப்பதுபோல் காட்டிக் கொள்ள விரும்புவீர்கள். பரிசு கொடுப்பீர்கள். அன்பைப் பற்றி விலாவாரியாகப் பேசுவீர்கள். உங்கள் முயற்சிகள் அனைத்தும் அன்பு இல்லை என்பதையே காட்டும். நீங்கள் ஒருவர் மீது உண்மையிலேயே அன்பு வைத்திருந்தால் அவரிடம் போய் ''நான் உன்னை நேசிக்கிறேன்'' என்று கூடச் சொல்லத் தேவையில்லை. வார்த்தையில்லாமல் அந்த ஆளால் உங்கள் அன்பைப் புரிந்து கொள்ள முடியவில்லை யென்றால் அவர் அந்த அன்பைப் பெறத் தகுதியானவர் இல்லை. அன்பை வார்த்தைகளால் வெளிப்படுத்தியே தீர வேண்டும்

என்ற நிலை வந்தால் உங்கள் மனதில் இருப்பது அன்பு இல்லை அது வேறு ஏதோ உணர்வு என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

டேல் கார்னஜி என்ற ஒருவர் இருக்கிறார். அவர் எழுதிய ''நண்பர்களைச் சம்பாதிப்பது எப்படி'' என்ற தன்னம்பிக்கை நூல் மிகவும் பிரபலம். அவர் என்ன சொல்கிறார்? தினமும் காலை உங்கள் மனைவியிடம் 'ஐ லவ் யூ' சொல்லுங்கள். அப்படிச் சொல்லவேண்டும் என்று உங்களுக்குத் தோன்றாவிட்டாலும் பரவாயில்லை. உங்கள் மனதில் அத்தகைய உணர்வுகள் இல்லாவிட்டாலும் மேம்போக்காகவாவது அப்படிச் சொல் லுங்கள் என்று சொல்கிறார். காலையில் சொல்ல வேண்டுமாம். அப்பறம் எப்போதெல்லாம் நேரம் கிடைக்கிறதோ அப்போ தெல்லாம் அதையே திருப்பிச் சொல்ல வேண்டுமாம். என்ன கொடுமை இது?

ஒரு கோணத்தில் பார்த்தால் அவர் சொல்வது சரி என்றே தோன்றுகிறது. உங்கள் மனைவி வார்த்தைகளைத்தான் நம்புவாள். நீங்களும் உங்கள் அன்பு வார்த்தைகளில் வெளிப் படுவதைத்தான் விரும்புவீர்கள். உங்களையும் உங்கள் மனைவியையும் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அப்படிச் சொல்கிறார்.

அதனால்தான் காதலில் விழுந்தவர்கள் ஆரம்பக் கட்டத்தில் அநியாயத்திற்குக் காதலைப் பற்றிப் பேசுவார்கள். கவிதை களாகப் பொழிவார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் ஈர்க்க வேண்டுமே! கனவுகள், காதல் பேச்சுக்கள் எல்லாமே கொஞ்சம் தூக்கலாகவே இருக்கும். அந்தப் பேச்சுக்கள் உளறல்களாகத் தோன்றும் போது ஏதோ தவறு நடந்துவிட்டது என்று காதலர்கள் நினைப்பார்கள்.

இங்கே காதல் இல்லை. ஏனென்றால் இவர்கள் காதல் வார்த்தைகளை நம்பி இருந்தது. ஆரம்பத்திலேயே காதல் இல்லை. அவர்கள் காதலைப் பற்றிப் பேசினார்கள். ஆனால் அவர்கள் இதயத்தில் காதல் இல்லை. . இல்லாத காதலை இருப்பது போல் காட்டுக் கொள்ள அவர்கள் காதலைப் பற்றிப் பேசினார்கள்.

மறைத்தல் என்ற வார்த்தையை மறந்துவிடாதீர்கள். உங்கள் வாழ்நாள் முழுவதும் இதையேதான் செய்து கொண்டிருக்கிறீர்கள் ஒவ்வொரு பரிமாணத்திலும் இதையேதான் செய்கிறீர்கள். அதனால்தான் நமக்கு டேல் கார்னஜி சரியான ஆளாக, பெரிய ஞானியாகத் தோன்றுகிறார். அவர் எழுதிய புத்தகங்கள் பைபிளுக்கு அடுத்தபடியாக லட்சக்கணக்கான பிரதிகள் விற்கின்றன. . ஆனால் நான் சொல்கிறேன். டேல் கார்னஜி போன்றவர்களிடம் கொஞ்சம் எச்சரிக்கையாகவே இருங்கள். அவர் போன்றவர்கள்தான் உங்களை போலிகளாக மாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

அவர் சொல்வதைக் கேட்டால் உங்களால் உண்மையான வர்களாக இருக்க முடியாது. அன்பு, காதல் என்ற சொற்களைச் சொல்ல வேண்டும் என்ற அவசியம் இல்லை. நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று சொல்லக் கூட அவசியம் இல்லை. அது தேவையே இல்லை. உங்கள் இருப்புநிலை உங்கள் அன்பை அறைகூவட்டும். உங்கள் இதயத்தில் அன்பு இருந்தால் உங்கள் ஆன்மா அதை எப்படியாவது வெளியே சொல்லிவிடும். நீங்கள் எப்படி அமர்கிறீர்கள், எப்படி நகர்கிறீர்கள், எப்படிப் பார்க் கிறீர்கள் என்பதிலேயே உங்கள் அன்பு வெளிப்பட்டுவிடும். உங்கள் ஆன்மாவே உங்கள் அன்பின் வெளிப்பாடாக அமைந்துவிடும்.

அன்பு என்பது ஒரு முக்கியமான ஆற்றல். அதை உங்களால் மறைக்க முடியாது. யாராவது அன்பை மறைக்க முயன்று வெற்றி கண்டிருக்கிறார்களா என்ன? அதை மறைக்க முடியாது. அது உள்ளே கனன்று எரியும் நெருப்பு. அது சதா ஒளிர்ந்து கொண்டே யிருக்கும் நெருப்பு. காதல் வயப்பட்டவர்களை அவர்கள் முகபாவங்களை வைத்தே கண்டுபிடித்துவிடலாம். அவர்கள் கண்களைக் கூர்ந்து பார்த்தால் போதும் அவர்கள் பழைய மாதிரி இல்லை என்பதைக் கண்டுபிடித்துவிடலாம். அவர்களுக்குள் ஏதோ ஒன்று பெரிய அளவில் மாறியிருக்கிறது என்பதைச் சொல்லிவிடலாம். உள்ளே ஒரு நெருப்பு எரியத் தொடங்கி யிருக்கிறது. அவர்கள் ஆன்மாவிற்கு ஒரு புது நறுமணம் வந்திருக்கிறாது. அவர்கள் நடையில் நாட்டியம் மிளிர்கிறது.

பேச்சில் கவிதை ஒளிர்கிறது. காதலிப்பவர்களோடு இருக்கும் போது மட்டும் இத்தகைய ரசாயன மாற்றங்கள் நிகழ்வதில்லை. யாருடன் இருந்தாலும் அது நிகழ்கிறது. காதல் வயப்பட்டவர்கள் அன்னியர்களோடு தெருவில் பேசிக் கொண்டிருக்கும்போது கூட வித்தியாசமானவர்களாகத் தெரிகிறார்கள். அந்த அன்னியன் எப்போதாவது தன் வாழ்வில் காதலை அனுபவித்திருந்தால் இவர்கள் காதல் வயப்பட்டவர்கள் என்பதைக் கண்டுபிடித்து விடுவான்.

காதலை மறைப்பது முடியாத காரியம். இதுவரை அந்த முயற்சியில் யாரும் வெற்றி கண்டதில்லை. ஆனால் காதல் இல்லை என்றால் அது இருப்பது போல் பாசாங்கு செய்ய வேண்டும். காட்டிக் கொள்ள வேண்டும்.

***பயிற்சியாளன் சொன்னான்: ''இன்னும் தயாராக வில்லை. சேவல் தீயாக இருக்கிறது.***

இதிலிருந்து அந்த சேவல் அச்சத்தில் இருக்கிறது என்று புரிகிறது. ஏன் தீயாக இருக்க வேண்டும்? யாருக்குத் தீயைக் காட்டப் போகிறீர்கள்? என்ன தேவை? உள்ளே அச்சம். வெளியே தீ. அதுதான் உச்சகட்ட பாசாங்கு.

***எந்தச் சேவலோடும் சண்டையை ஆரம்பிக்கத் துடித்துக் கொண்டிருக்கிறது.***

தேவையில்லாமல் சண்டை போடத் துடிக்கிறது. வழியில் யாரைப் பார்த்தாலும் சண்டை போட வேண்டும் என்று நினைக்கிறது.

***தன் வலிமையின் மேல் அதற்கு அதீத கர்வம் இருக்கிறது..''***

சேவல் இன்னும் சண்டைக்குத் தயாராகவில்லை. உங்கள் வலிமையில் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் உங்களிடமிருந்து நீங்களே எதையோ மறைக்கிறீர்கள் என்று பொருள். ''எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்று சொன்னால் உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்றுதான் பொருள். உங்களுக்கு உண்மையி லேயே நம்பிக்கை இருக்கும் பட்சத்தில் அந்த வார்த்தையைச்

சொல்ல மாட்டீர்கள். நீங்கள் நம்பிக்கை இருப்பதாக நடிக்கிறீர்கள். அந்த நடிப்பு மற்றவர்களுக்கு மட்டும் இல்லை. உங்களுக்கும்தான். உங்களை நீங்களே மனோவசியம் செய்யப் பார்க்கிறீர்கள். அதே வார்த்தையைத் திருப்பித் திருப்பிச் சொன்னால் ஒரு வேளை உங்களுக்கு அந்த உணர்வு கிடைக்கலாம். ஆனால் அந்த உணர்விற்கு உள்ளார்ந்த சக்தி இருக்காது.

''எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்று எல்லாரும் சொல்லிக் கொண்டு திரிகிறார்கள். ஏன்? அவர்கள் எதை மறைக்கப் பார்க்கிறார்கள்? நீங்கள் சவடால் அடிக்கும் நம்பிக்கை நிஜமாகவே உங்களிடம் இருந்தால் அதைச் சொல்லிக்கொண்டு திரிவானேன்? உண்மையிலேயே நம்பிக்கை இருப்பவனுக்கு அந்த நம்பிக்கை இருப்பதே தெரியாது. இந்த நுட்பத்தை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். ஏதாவது போலியாக இருந்தால் அது போலி என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். அது போலி என்ற உள்ளுணர்வு உங்களை உறுத்திக் கொண்டேயிருக்கும். நிஜமானவற்றை நீங்கள் மறந்துவிடுவீர்கள் நீங்கள் சுவாசிப்பது உங்களுக்குத் தெரிந்திருக்கிறதா? சுவாசம் ஒரே சீராகச் சரியாக இருக்கும் வரை நீங்கள் சுவாசிப்பதே உங்களுக்குத் தெரியாது. சுவாசத்தில் ஏதாவது கோளாறு இருந்தால்தான் சுவாசிப்பதை நீங்கள் உணர்வீர்கள். உங்கள் நுரையீரலில் ஏதாவது பிரச்சினை இருந்தால், உங்களுக்கு ஜலதோஷமோ ஆஸ்துமாவோ இருந்தால் நீங்கள் விடும் ஒவ்வொரு மூச்சும் உங்களுக்கு நினைவிருக்கும். எல்லாம் சரியாக நடந்து கொண்டிருக்கும் போது அது நடப்பதே உங்களுக்குத் தெரியாது. முதலிலேயே பார்த்தோமே, செருப்பு பொருந்தினால் கால்கள் இருப்பதையே மறந்துவிடுவோம். உங்களுக்கு உண்மையிலேயே நம்பிக்கை இருந்தால் அது இருப்பதே உங்களுக்கு நினைவில் இருக்காது. நிஜமான நம்பிக்கை சீரான சுவாசம் மாதிரி. அது இருப்பதே தெரியாது.

என்னிடம் வரும் மக்கள் ''எனக்கு உங்களிடம் முழுமையான நம்பிக்கை இருக்கிறது'' என்று சொல்கிறார்கள். அது என்ன ''முழுமை''? நீங்கள் எதை மறைக்கப் பார்க்கிறீர்கள்? நம்பிக்கை இருந்தால் போதாதா? அது என்ன முழுமையான நம்பிக்கை?

நான் சொல்லட்டுமா? உங்களுக்கு என் மேல் இருக்கும் நம்பிக்கையில் முழுமை இல்லை. அதனால்தான் அதனை அழுத்திச் சொல்கிறீர்கள். ''நான் உன்னைத் தீவிரமாகக் காதலிக்கிறேன்.'' என்று சொல்கிறார்கள். அது என்ன தீவிரம்? தீவிரமில்லாத காதல் என்று ஏதாவது இருக்கிறதா என்ன? காதல் என்பதே ஒரு தீவிரமான உணர்வுதான். ஏன் ஒரே வார்த்தையை இரண்டுமுறை சொல்ல வேண்டும்? உங்கள் காதலில் தீவிரம் இல்லை என்று உள்ளூரத் தெரியும். அதனால்தான் அந்த வார்த்தையை அழுத்திச் சொல்கிறீர்கள். நீங்களே சொல்லா விட்டால் வேறு யார் சொல்வார்கள்? நீங்கள் சொல்லாவிட்டால் யாருக்கும் உங்கள் காதல் தீவிரம் என்று தெரியாது. உங்கள் காதல் தீவிரமாக இருந்ததென்றால் நீங்கள் சொல்லாமலேயே மற்றவர்களுக்குத் தெரிந்துவிடும்.

தீவிரமான காதல் என்பது ஒரு ஒட்டுமொத்த உருமாற்றம். தீவிரமான காதல் உண்டாகும் போது ஒரு மரணமும் அதனைத் தொடர்ந்து ஒரு புதிய ஜனனமும் நிகழ்கிறது. தீவிரமான காதலுக்கு யாருடைய வார்த்தைகளும் வர்ணனைகளும் தேவையில்லை.

எனக்கு மதுவை ருசிபார்த்துத் தரம் பிரிக்கும் ஒரு விற்பன்னரைத் தெரியும். எந்த நாட்டு மதுவாக இருந்தாலும் ருசித்து பார்த்து அதன் தரத்தை உடனே சொல்லிவிடுவார். அவருடைய நண்பர் ஒரு முறை அவரைத் தன் வீட்டுக்கு அழைத்திருந்தார். நண்பரின் வீட்டில் மிக மிகப் பழமையான மதுவகைகளை வைத்திருந்தார். அதனை விற்பன்னருக்குக் காட்ட வேண்டும் என்று நினைத்தார். அந்த மனிதனின் பாராட்டுதல் களைப் பெற வேண்டும் என்று நினைத்தார். இருப்பதிலேயே உயர்ந்த மதுவகையிலிருந்து ஒரு கோப்பை மதுவை விற்பன்னரிடம் கொடுத்தார். அவர் அதனை ருசி பார்த்தார். ஆனால் ஒன்றுமே பேசவில்லை. அது நன்றாக இருக்கிறது என்று சாதாரணமாகக் கூடச் சொல்லவில்லை.

அழைத்த நண்பர் காயப்பட்டார். பின் இருப்பதிலேயே மிகவும் காட்டமான சாதாரணமான ஒரு மதுவைக் கொடுத்தார்.

அதை ருசி பார்த்த விற்பன்னர் ''ஆஹா மிக நன்றாக இருக்கிறது!'' என்று வாய்விட்டுப் பாராட்டினார்.

அழைத்தவருக்கு எதுவும் புரியவில்லை.

''இருப்பதிலேயே உயர்ந்த மதுவைக் கொடுத்தேன். நீங்கள் ருசித்துப் பார்த்துவிட்டு மௌனமாக இருந்தீர்கள். இது சாதாரணக் கடைச் சரக்கு. இதைக் குடித்துப் பார்த்துவிட்டு ''ஆஹா ஓஹோ'' என்று புகழ்கிறீர்களே?''

''முதல் வகைக்கு எந்த விதப் பாராட்டும் தேவையில்லை. அதன் தரத்தை அதுவே உரைக்கும். இரண்டாவது வகைக்கு யாராவது பாராட்டியேயாக வேண்டும். அது அவ்வளவு சாதாரண மானது. யாரும் பாராட்டாவிட்டால் பாவம் அது வருத்தப்படும்.''

முழுமையான நம்பிக்கை என்று சொன்னால் அதில் முழுமையில்லை என்று பொருள். அதனால்தான் அப்படிச் சொல் கிறீர்கள். ஆனால் இந்த விழிப்புணர்வு உங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். தீவிரமான காதல் என்று நீங்கள் வர்ணிக்கும் காதலில் தீவிரம் இல்லை. அதனால்தான் நீங்கள் வாய்விட்டுச் சொல் கிறீர்கள் ஆனால் இது உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். விழிப்புணர்வுடன் செயல்படுங்கள். வார்த்தைகளைக் கவன மாகப் பயன்படுத்துங்கள்.

பயிற்சியாளன் சொல்வதைக் கவனியுங்கள்:

**எந்தச் சேவலோடும் சண்டையை ஆரம்பிக்கத் துடித்துக் கொண்டிருக்கிறது. தன் வலிமையின் மேல் அதற்கு அதீத கர்வம் இருக்கிறது..''**

இதை உங்கள் வாழ்க்கையிலும் நீங்கள் பார்க்கலாம்.. இது எங்கும் நடக்கிறது. நீங்கள் யாருடன் வேண்டுமானாலும் சண்டை போடத் தயாராக இருக்கிறீர்கள். வாய்ப்பிற்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். வாய்ப்பு கூட வேண்டாம். ஏதாவது ஒரு நொண்டிச் சாக்குக்கூடப் போதும். உங்கள் காலை யாராவது மிதித்தால்கூடப் போதும். நீங்கள் அவருடன் சண்டை போடத் தயார். ஏன்? ஏனென்றால் நீங்கள் உள்ளூரப் பாதிக்கப்பட்டிருக்

கிறீர்கள். நீங்கள் ஒரு முகம் தெரியாத மனிதர் என்று உங்களுக்கே தெரியு. அதனால்தான் உங்கள் காரை யாராவது தெரியாமல் மிதித்துவிட்டால்கூட வெகுண்டு எழுகிறீர்கள். ''நான் யாரென்று உனக்குத் தெரியுமா?'' அது உங்களுக்கே தெரியாதே!

**பத்து நாட்கள் கழித்து அதே கேள்விக்குப் பயிற்சியாளன் பதில் சொன்னான்.**

***''இல்லை, இன்னும் தயாராகவில்லை. மற்றொரு சேவல் கூவுவதைக் கேட்டால் சிலுப்பிக் கொள்கிறது.''***

சக்கரவர்த்தி துடித்துக் கொண்டிருந்தார். கோழிச் சண்டைக்கான நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. சக்கரவர்த்திக்குத் தன் சேவல் எப்படியாவது ஜெயிக்க வேண்டும் என்று ஆசை. பயிற்சியாளனோ இன்னும் தாமதப்படுத்திக் கொண்டிருந்தான். அவன் சொல்லும் காரணங்கள் அபத்தமாகத் தோன்றின.

தாவோவில் நிலைத்திருக்கும் மனிதனின் பேச்சு அபத்தமாகத்தான் தோன்றும். அவை அபத்தம்தான். அவை உங்கள் மனதிற்குப் பொருத்தமாக இருக்காது.

பத்து நாட்கள் கழித்து சொல்கிறான்.

***''இல்லை, இன்னும் தயாராகவில்லை. மற்றொரு சேவல் கூவுவதைக் கேட்டால் சிலுப்பிக் கொள்கிறது.''***

சேவல் இன்னும் பக்குவமடையவில்லை. இன்னும் சிறுபிள்ளைத்தனமாகவே இருக்கிறது. சேவல் செய்வது ஒரு வீரனின் செய்கையல்ல. சிலுப்பிக் கொள்ளுதல் கோழையின் வழி. அச்சமற்றவனின் வழியல்ல. அச்சமற்ற சேவலின் போக்கல்ல அது.

எங்கோ யாரோ கத்துகிறார்கள். எங்கோ ஏதோ ஒரு சேவல் கூவுகிறது. அந்த சவால் உங்களுக்குத்தான் என்று நீங்கள் ஏன் நினைத்துக் கொள்ள வேண்டும்? மொத்த உலகத்தையும் ஏன் எதிரியாகவே பார்க்கிறீர்கள்? இந்த எதிரி-மனநிலை இருந்தால்

மூலாதாரத்தோடு உங்களுக்கு உள்ள தொடர்பு சரியில்லை என்று பொருள். அது இருந்தால் இந்த உலகமே நண்பர்களின் கூட்ட மாகத்தான் தோன்றும். நட்பே உறவின் ஆதாரமாக விளங்கும். எதிரிகள் விதிசவிலக்குகளாகத்தான் இருப்பார்கள்.

இப்போது பகைமையே ஆதாரமாக இருக்கிறது. நட்பு விதிவிலக்காக இருக்கிறது. உங்களால் இப்போது நண்பனை நம்புவதே கடினமாக இருக்கிறது. ஏனென்றால் அந்த அளவுக்கு உங்களுக்குப் பகைமை பற்றித் தெரிந்திருக்கிறது.

ஒருமுறை முல்லா நசிருதீனை நீதிபதியாக நியமித்து விட்டார்கள். வம்பு செய்பவர்களை அடக்க அதுவே சிறந்த வழி. மிகவும் அதிகமாக வம்பு செய்பவர்களை ஆளுநர்களாக்கி விடுவாரக்ள். இன்னும் மோசமான வம்புக்காரர்களை வெளி நாட்டுத் தூதர்களாக்கி நாட்டைவிட்டே துரத்திவிட்டுவிடுவார்கள். சாதாரண வம்புக்காரர்களை உள்ளூர் நீதிபதியாக்கிவிடுவார்கள். அவர்களுக்கு ஏதாவது வேலையைக் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் ஏதாவது வம்பு செய்து கொண்டேயிருப்பார்கள்.

முல்லா ஒரு வம்பு பிடித்தவர் என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் கொலை, கொள்ளை, கற்பழிப்பு என்று பெரிதாக ஒன்றும் செய்யமாட்டார். உள்ளூர் அரசியலில் ஓரளவு பெரிய புள்ளி. அதனால் அவரை உள்ளூர் நீதிபதியாக்கிவிட்டார்கள். அந்த நாட்டுச் சட்டத்தின் படி உள்ளூர் நீதிபதிகள் தாங்கள் விரும்பிய இடத்தில் நீதிமன்றத்தை அழைத்துக் கொள்ளலாம். முல்லா தன் வரவேற்பறையை நீதிமன்றமாக்கினார். ஒரு குமாஸ்தா, ஒரு காவல்காரன் என்று பந்தாவாக ஆட்களை அமர்த்திக் கொண்டார். வழக்குக்காகக் காத்திருந்தார். காலையி லிருந்து ஒரு ஈ காக்கா கூட வரவில்லை. சாதாரண ஜேப்படி வழக்கு கூட வரவைல்லை. மனம் நொந்த முல்லா தன் குமாஸ்தாவிடம் சொன்னார்:

''ஒரு வழக்கு கூட இல்லை. கொலை, கொள்ளை, கற்பழிப்பு என்று எந்த வழக்கும் வரவில்லை. இப்படியே இருந்தால் என் வேலை மிகவும் சலிப்பாகிவிடும். ஒரு சாதாரண போக்குவரத்து வழக்குக்கூட வரவில்லை. சே! ''

பழுத்த அனுபவம் கொண்ட அந்த குமாஸ்தா சொன்னான் ''சோர்ந்து போய்விடாதீர்கள் முல்லா. மனிதனின் தன்மை மேல் நம்பிக்கை வையுங்கள். ஏதாவது ஒன்று நடந்தே தீரும். எனக்கு இன்னும் மனிதன் மேல் இருக்கும் நம்பிக்கை போகவில்லை.''

எந்த மாதிரியான மனிதத் தன்மைபற்றி அவன் பேசுகிறான்? ''எனக்கு நம்பிக்கை இருக்கிறது. காத்திருங்கள். ஏதாவது நடக்கும்.''

உங்கள் நீதிமன்றங்கள், நீதிபதிகள், உங்கள் அரசாங்கங்கள் உங்களையும் உங்கள் மனித குணத்தையும் நம்பியே இருக்கின்றன. இந்த அபத்தக்களஞ்சியம் உங்களால்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்த சமுதாய அமைப்பின் அடிப்படை என்ன தெரியுமா? நீங்கள் எந்த நேரமும் சண்டை போடத் தயாராக இருப்பதுதான். சமுதாயம் இயல்பு நிலைக்கு வர வர அரசாங்கமே தேவையில்லாமல் போய்விடும். அரசாங்கம் ஒரு வகையான வியாதி. நீதிமன்றம் இன்னொரு வகையான வியாதி. இவை எல்லாம் நல்ல அறிகுறிகள் இல்லை. குற்றவாளி இருப்பதால்தான் போலீஸ்காரர் இருக்கிறார். இந்த மொத்த அமைப்பும் ஒரே ஒரு காரணத்திற்காகத்தான் இருக்கிறது. நீங்கள் எந்த நேரமும் சிலுப்பிக் கொண்டு சண்டை போடத் தயாராக இருப்பதால்தான் இதெல்லாம் இருக்கிறது. உங்களுக்கு அகந்தை இருப்பதால்தான் அரசாங்கமே இருக்கிறது. நீதிமன்றம் இருக்கிறது. நீதிபதிகள் வாழ்கிறார்கள். அகந்தையை விட்டு விடுங்கள். எல்லாரும் அகந்தையை விட்டுவிட்டால் அரசியலே இல்லாமல் போய்விடும். அரசியலுக்கு ஆதாரம் மனிதனின் அகங்காரம்தான்.

**பத்து நாட்கள் கழித்து அதே கேள்விக்குப் பயிற்சியாளன் பதில் சொன்னான்.**

**''இல்லை, இன்னும் தயாராகவில்லை. மற்றொரு சேவல் கூவுவதைக் கேட்டால் சிலுப்பிக் கொள்கிறது.''**

**மேலும் பத்து நாட்கள் கழிந்தன. மன்னனிடமிருந்து அதே கேள்வி. பயிற்சியாளன் சொன்னான்.**

**"இன்னும் தயாராகவில்லை. அதனிடம் இன்னும் அந்த கோபப்பார்வை இருக்கிறது. தன் சிறகு களைச் சிலுப்பிக் கொள்கிறது."**

இன்னும் அந்தச் சேவலின் உணர்வின்மை நிலையில் சண்டை போட வேண்டும் என்ற துடிப்பு இருக்கிறது. மேல் மட்டத்தில் அமைதியாக இருக்கிறது. ஆனால் ஒரு சேவல் கடந்து போனால் அதனைக் கோபத்துடன் பார்க்கிறது. அது உணர்வின்மை நிலையில் நிகழும் செய்கை. என்றாலும் இந்தச் சேவல் வளர்ந்து கொண்டிருக்கிறது. தன் பழைய நிலையிலிருந்து விலகிப் போய்க் கொண்டிருக்கிறது. சண்டை போட வேண்டும் என்ற எண்ணம் அதன் உணர்வு நிலையிலிருந்து போய்விட்டது. ஆனால் உணர்வின்மை நிலையில் அந்த எண்ணம் இன்னும் இருக்கிறது.

அடுத்த பத்து நாட்கள் கழித்துச் சொன்னான்.

"இப்போது ஏறக்குறைய தயாராகிவிட்டது.

இன்னும் பூரணமாகத் தயாராகவில்லை. ஆனால் ஏறக் குறைய தயாராகிவிட்டது.

**மற்றொரு சேவல் கூவினால் அது கண்களை இமைப்பதுகூட இல்லை. மரக்கட்டையைப் போல் அசைவற்று நிற்கிறது. இப்போதுதான் இது சண்டைக்குப் பக்குவமாகியிருக்கிறது. மற்ற கோழிகள் இப்போது இதைப் பார்த்தால் ஓட ஆரம்பிக்கும். "**

இந்த நிலைக்கு வந்துவிட்டால் அது சண்டை போட வேண்டும் என்ற அவசியம் கூட இல்லை. வீரன் பக்குவ மடைந்துவிட்டால் அவன் சண்டை போடத் தேவையில்லை. அச்சமற்ற நிலையில் வீரன் இருக்கும்போது அவன் ஏன் சண்டை போட வேண்டும்? அவன் இருந்தாலே போதுமானது. அந்தச் சேவல் இருக்கும் நிலையைப் பார்த்து மற்ற சேவல்கள் ஓடிவிடும். கடைசியில் அதுதான் நடந்தது. அந்தப் பறவையைப் போட்டிக்கு விட்டார்கள். தைரியசாலிகளான மற்ற சேவல்கள்

நெஞ்சைச் சிலுப்பிக் கொண்டு சண்டைக்கு வந்தன. திருடன் பார்க்காத நேரத்தில் மூலை வட்டத்திலிருந்து காலை வெளியே எடுத்து வைக்கும் தைரியசாலிகள் அவை. மற்ற சேவல்களிடம் அகந்தை இருந்தது. ஆணவம் இருந்தது. கர்வம் இருந்தது.

இந்தச் சேவலை சில விநாடிகள் உற்றுப் பார்த்தன. இந்தச் சேவல் வித்தியாசமாக இருந்தது. இந்த உலகத்தைச் சேர்ந்த சேவலாக இது தோன்றவில்லை. நமது சேவல் ஒரு புத்தனைப் போல் அமைதியாக நின்று கொண்டிருந்தது. அதனைத் தூண்டிவிட அவை முயற்சி செய்தன. ஆனால் நம் சேவலோ தன் கணகளைக் கூட இமைக்கவில்லை. மற்ற சேவுல்கள் குதித்தன. பெரிய சத்தத்துடன் கூவின. ஆனால் நமது சேவல் கொஞ்சம் கூட அசைந்து கொடுக்கவில்லை. இப்போது மற்ற சேவல்கள் பயத்தில் நடுங்கின. இந்த சேவல் அன்னியன். இது நம் இனத்தைச் சேர்ந்தது இல்லை என்று நினைத்தன.

இந்தச் சேவல் கோழையும் இல்லை தைரியசாலியும் இல்லை என்று அவை புரிந்து கொண்டன. அது அச்சமற்ற நிலையில் இருந்தது. அச்சமற்றவர்களைப் பார்த்தால் என்ன செய்வது? தலை தெறிக்க ஓட வேண்டியதுதான்.

சாமுராய் வீரனுக்கும் ஜென் வீரனுக்கும் இதே பயிற்சிதான் கொடுக்கப்படுகிறது. அவன் போரிட வேண்டும் ஆனால் மனதில் கோபம் இருக்கக் கூடாது. இது கொஞ்சம் கடினமான காரியம்தான். ஏனென்றால் உங்களால் கோபம் இல்லாமல் காதலிக்கக் கூட முடியாது. ஆனால் அவன் கோபம் கொள்ளாமல் எதிரியுடன் போரிட வேண்டும். எப்படி இருக்கிறது. கதை?

ஒரு சூஃபி கதை சொல்கிறேன் கேளுங்கள்.

ஒமர் என்று ஒரு எகிப்து நாட்டு மன்னன் இருந்தான். அவன் தன் பகைவனுடன் முப்பது ஆண்டுகள் போரிட்டுக் கொண் டிருந்தான். பகைவன் வலிமை மிக்கவனாக இருந்ததால் சண்டை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. போரிடுவதே வாழ்க்கையாகி விட்டது. போர் முடிவதற்கு ஒரு அருமையான வாய்ப்பு கிடைத்தது.

ஒரு நாள் சண்டையின் போது பகை நாட்டு மன்னம் குதிரையிலிருந்து கீழே விழுந்துவிட்டான். ஓமர் தன் குதிரையிலிருந்து கீழே குதித்தான். ஒரே விநாடி போதும். ஓமர் தன் கையில் இருந்த ஈட்டியால் பகைவனைக் குத்திக் கொன்று விட்டால் போர் முடிந்துவிடும். ஓமருக்கு வெற்றி கிடைத்துவிடும். ஆனால் தனக்குக் கிடைத்த அந்தச் சிறிய இடைவெளியில் பகைவன் ஓமரின் முகத்தில் எச்சில் துப்பிவிட்டான். தூக்கிய ஈட்டி அந்தரத்தில் அப்படியே நின்றது.

ஓமர் தன் முகத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். பின் தன் பகைவனிடம் சொன்னான். ''நாளை போரை மீண்டும் தொடர்வோம்.''

''உனக்கு என்ன ஆகிவிட்டது? இப்படி ஒரு வாய்ப்பிற்காகத் தானே நீயும் நானும் முப்பது வருடங்களாகப் போராடி கொண்டிருக்கிறோம்? ஒரு நாள் உன் மேல் ஏறி அமர்ந்து உன் நெஞ்சை ஈட்டியால் குத்தும் நாள் வராதா என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். எனக்கு அந்த வாய்ப்பு கிடைக்கவில்லை. உனக்கு கிடைத்திருக்கிறது. ஒரே விநாடியில் நீ என்னைக் கொன்றுவிடலா.ம். அதை ஏன் செய்யவில்லை?''

''இது சாதாரணப் போர் இல்லை. நான் ஒரு சபதம் எடுத்திருக்கிறேன். அது ஒரு சூஃபி சபதம். சினமில்லாமல் போரிடுவது என்பதுதான் அந்தச் சபதம். நீ என் முகத்தில் எச்சில் துப்பிய அந்த ஒரு கணத்தில் என் மனதில் கோபம் பொங்கியது. அந்தக் கோபத்தில் உன்னைக் கொல்ல வேண்டும் என்ற வெறி வந்துவிட்டது. என் அகந்தை உள்ளே நுழைந்துவிட்டது.

''முப்பது ஆண்டுகளாக இந்தப் பிரச்சினை எனக்கு இல்லை. நாம் ஒரு காரணத்திற்காகச் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறோம். எனக்கு உன்மேல் தனிப்பட்ட பகைமை இல்லை. நீ என் பகைவன் இல்லை. உன்னைக் கொல்ல வேண்டும் என்பது என் நோக்கம் இல்லை. இந்தப் போரில் வெற்றி பெற்று என் பக்க நியாயத்தை நிலைநிறுத்த வேண்டும் என்பதே என் நோக்கம். ஆனால் நீ என் மேல் துப்பிய அந்தக் கணத்தில் சண்டைக்கான காரணத்தை மறந்து போனேன்,. நீ எனக்குப் பகைவனாகத்

தோன்றினாய். உன்னைக் கொல்ல வேண்டும் என்ற வெறி வந்து விட்டது. அந்த வெறியில் எதையும் செய்ய விரும்பவில்லை. அதனால்தான் நாளை சண்டையைத் தொடரலாம் என்று சொன்னேன்..''

ஆனால் போர் அதன் பின் தொடரவில்லை. பகைவன் நண்பனான். ''நீயே எனக்குக் குருவாக இருந்து சினம் இல்லாமல் சண்டை போடுவது எப்படி என்ற் சொல்லிக் கொடு.'' என்று சொன்னான்.

அகந்தை இல்லாமல் போரிடுவதுதான் இங்கே ஆன்மிக ரகசியம். அகந்தை இல்லாமல் உங்களால் சண்டை போட முடியும் என்றால் அகந்தை இல்லாமல் என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

இதுதான் சாமுராய் வீரனுக்கும் ஜென் வீரனுக்கும் கொடுக்கப்படும் பயிற்சி. இந்தச் சேவலுக்குக் கொடுக்கப்பட்ட பயிற்சியும் அதுதான். அகந்தையில்லாமல் சண்டையிடுவது எப்படி என்பதைக் கற்றுத்தருவதுதான் அந்தப் பயிற்சி.

***''இப்போது ஏறக்குறைய தயாராகிவிட்டது.***

வார்த்தைகளைக் கவனியுங்கள். ஏறக்குறைய தயாராகி விட்டது. இன்னும் முழுமையாகத் தயாராகவில்லை. ஏன்? இந்த உலகில் பரிபூரணமாக எதுவுமே இல்லை என்பதுதான் தாவோவின் தாத்பரியம். எல்லாமே ஏறக்குறைய சரியாக இருக்கிறது. நீங்கள் பூரணமாக இருந்துவிட்டால் நீங்கள் மறைந்துவிடுவீர்கள். பருப்பொருள் (matter) சம்பந்தப்பட்ட எதுவும் பூரணமாக இருக்காது. பருப்பொருள் தொடர்புடையது எதுவும் குறையுள்ளதாகத்தான் இருக்கும். இந்த உலகம் சம்பந்தப்பட்ட எதுவும் குறையுள்ளதாகத்தான் இருக்கும்.

அந்தக் குறை இருக்கும் வரைதான் நீங்கள் இந்த உடலில் இருக்க முடியும். நீங்கள் குறையில்லாமல் நிர்மலமாகிவிட்டால் மறைந்துவிடுவீர்கள். சாதாரண மனிதர்கள் சாவார்கள். ஆனால் பரிபூரணர்கள் அப்பழுக்கில்லாதவர்கள் அப்படியே மறைந்து விடுவார்கள். நீங்கள் கிளம்புகிறீர்கள். பூரணமானவர் மறைகிறார். கிளம்புகிறீர்கள் என்னும் போது மற்றொரு இடத்திற்கு வந்து

சேருதலும் இருக்கும். ஏனெனில் புறப்படுதல் என்பது பயணத்தின் ஒரு பகுதிதான். அதன் மற்றொரு பகுதி வந்தடைதல்.

வந்தடைதலின் ஆரம்பம் கிளம்புதல். கிளம்புதலின் ஆரம்பம் வந்தடைதல். நீங்கள் இந்த உலகத்திலிருந்து கிளம்பி மீண்டும் இங்கேயே வந்தடைகிறீர்கள். ஆனால் பூரணமான மனிதன் அப்படியே மறைந்துவிடுகிறான். அவன் மீண்டும் தோன்றுவதில்லை. அவன் அப்பழுக்கின்றி இருப்பதால் பருப்பொருள் மூலமாக அவன் பரிமளிக்க முடியாது. அவன் பூரணத்துவமாகவே இருக்கிறான். இந்த குற்றம் நிறைந்த உலகிலே அவனால் ஒரு உருவத்தைக் கொள்ள முடியாது. அவன் உருவத்திற்கு அப்பாற்பட்டு அருவமாகிறான்.

அதனால்தான் அந்தப் பயிற்சியாளன் **''இப்போது ஏறக்குறைய தயாராகிவிட்டது.**

என்று சொன்னான். இதைவிட இன்னும் எப்படித் தயாராக இருக்க முடியும் என்று உங்களால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.

இதுதான் முக்கியம்: **மற்றொரு சேவல் கூவினால் அது கண்களை இமைப்பதுகூட இல்லை.**

இதைவிடச் சிறந்த நிலை இருக்க முடியாது.

**மரக்கட்டையைப் போல் அசைவற்று நிற்கிறது.**

இதுதான் உச்சகட்டம்.

**இப்போதுதான் இது சண்டைக்குப் பக்குவமாகியிருக்கிறது. மற்ற கோழிகள் இப்போது இதைப் பார்த்தால் ஓட ஆரம்பிக்கும்.**

இதைவிடச் சிறந்த பூரணத்துவம் இருக்க முடியுமா? முடியும். அது கட்டையைப் போல் அசைவற்று இருக்கலாம். அதன் கண்கள் நகராமல் இருக்கலாம். மற்ற சேவல்கள் அதைப் பார்த்து ஓடிப் போகலாம். அதனால் இந்த சேவலே போட்டியில் ஜெயிக்கலாம். ஆனால் உள்ளே அந்த சேவலின் மனம் தானே இருக்கிறது! அதுவே பூரணத்துவத்துக்கு ஒரு குறைபாடுதானே!

இது எல்லாம் அந்தச் சேவலின் முயற்சியால் வருவது. அதனால்தான் அந்தச் சேவலிடம் இன்னும் குறைபாடு உள்ளது. இதைச் செய்ய அதற்குப் பயிற்சி கொடுத்திருக்கிறார்கள். அதனால் அது தயாராக இருக்கிறது. போட்டியில் வெல்லும். ஆனால் உள்ளூர அது இன்னும் அந்தப் பழைய சேவல்தானே! அந்தப் பழைய தன்மையின் ஒரு சிறு கீறலாவது மிச்சம் இருக்கும். அதை யாராலும் கண்டுபிடிக்க முடியாது. வெளியில் இருந்து பார்க்கும் போது அந்தச் சேவல் நமக்கு ஒரு புனிதராகவே தோன்றும். ஆனால் அது இன்னும் அதே பழைய சேவல்தான் என்பதை மறந்துவிடக்கூடாது. அதன் ஆழத்தில் அந்த மையத்தில் இன்னும் அது பழைய சேவல்தான். அதுதான் பிரச்சினை. நீங்கள் ஒரு மதத்தின் சடங்குகளைக் கடைப்பிடிக்கலாம். அதைத் துல்லியமாகச் செய்து ஒரு விற்பன்னன் ஆகலாம். ஏறக்குறைய சரி என்பது குற்றம் குறை உள்ள நிலையைத்தான் சொல்கிறது. உங்கள் பரிபூரணத்துவம் உறுதியாக இருக்க வேண்டும்.

முழுமையில் உறுதி என்றால் என்ன? பயிற்சியையும் முயற்சியையும் கைவிடுவதுதான். எளிதாக இருப்பதே சரியானது. இந்தச் சேவல் தன் முயற்சியின் மூலமாகத்தான் இந்த நிலையை அடைந்திருக்கிறது. அது இன்னும் செய்கையின் சுழலில் மாட்டிக் கொண்டிருக்கிறது. அது அசைவற்று இருக்கிறது சரி. ஆனால் அதன் இதயத்தின் ஆழத்தில் செயலற்ற நிலை இல்லை. அதற்கு பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கிறது. கட்டுப்பாடுகள் கற்றுத்தரப்பட்டிருக்கின்றன.

மதம் என்பது ஒரு கட்டுப்பாடு அல்ல. அது ஒரு பயிற்சியும் இல்லை. அது ஒரு பிரவாகம். அதில் ஐக்கியமாவதே மதத்தின் நோக்கம். அதை வற்புறுத்தலால் பெற முடியாது. வெளியில் இருந்து அதை உள்ளே திணிக்க முடியாது. உள்ளே இருந்து அதனைப் பிரவாகமாக ஓடவிட வேண்டும். அது ஓடிப் பொங்கி வழிந்து வெளியே ஓடட்டும். அந்தப் பிரவாகம் தன்னிச்சையாக இருக்க வேண்டும்.

என்ன செய்வது? தன்னிச்சையாக இருக்க வேண்டும் என்று சொல்லியாகிவிட்டது. அதுவோ வரமாட்டேன் என்று அடம்

பிடிக்கிறது. பயிற்சி எடுத்துக் கொண்டால் நல்ல சண்டைக் கோழி என்று பெயர் வாங்கலாம். சண்டையில் மற்ற கோழிகளைத் தோற்கடிக்கலாம். ஆனால் உங்களைப் பொறுத்த மட்டில் நீங்கள் இன்னும் அதே பழைய ஆசாமியாகத்தான் இருப்பீர்கள்.

இன்று நம்மிடையே வாழும் புனிதர்களுக்கு இந்த நிலைதான் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய புனிதத்தன்மை கடுமையான முயற்சியாலும் இடைவிடாத பயிற்சியாலும்தான் வந்தது. அதை அவர்கள் தொடர்ந்து பராமரித்துக் கொண்டிருக்கிறார்கள். பராமரிக்கப்படும் எதும் உண்மையில்லை. காரணம் அதன் நேர் எதிர்த் தன்மை உங்கள் உணர்வின்மை நிலையில் எங்கோ ஒளிந்து கொண்டிருக்கும். அது எந்த நேரத்திலும் வெடித்துக் கொண்டு கிளம்பலாம். உங்கள் பராமரிப்பில் தொய்வு ஏற்படும் போது அது வெளிப்பட வாய்ப்பு இருக்கிறது.

என்னிடம் ஒரு சூஃபியை அழைத்து வந்தார்கள். அவர் முப்பது வருடங்களாக தியானப் பயிற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார். அதில் எந்த சந்தேகமும் இல்லை. இந்தக் கதையில் வரும் சேவலைப் போல் அவர் ஏறக்குறைய சரியாக இருந்தார். அவர் சீடர்கள் எந்நேரமும் அவர் புகழைப் பாடிக் கொண்டிருந்தார்கள். அவருக்கு நிறைய சீடர்கள் இருந்தார்கள். மரம், பாறை, விண்மீன்கள் எதைப் பார்த்தாலும் அதில் எல்லாம் அவர் அல்லாவையே காண்பதாக அவருடைய சீடர்கள் சொன்னார்கள்.

அந்த சூஃபி என்னுடன் மூன்று நாட்கள் தங்கியிருந்தார். அவர் இடையறாது ஜபித்துக் கொண்டேயிருந்தார். இதனை சூஃபிக்கள் ஜிக்ரா என்பார்கள். ஒரு விநாடி கூட விடாமல் அல்லாவின் பெயரை ஜபித்துக் கொண்டிருப்பதுதான் ஜிக்ரா. அவர் குளிக்கும் போதுகூட ஜபித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் நான் அவரிடம் கேட்டேன்:

''ஏன் இந்தப் பழக்கம்? உங்களால் எல்லா இடத்திலும் அல்லாவைப் பார்க்க முடிந்ததென்றால் ஏன் அவர் பெயரை விடாமல் ஜபித்துக் கொண்டிருக்கிறீர்கள்? ஏன் இந்தப் பயிற்சி? பார்க்கும் இடம் எங்கும் அல்லா நீக்கமற நிறைந்திருக்கும் போது

நீங்கள் இந்த ஜபத்தின் மூலம் யாரை அழைக்கிறீர்கள்? கூப்பிடப்படுவது அல்லா என்றால் கூப்பிடுவது யார்? இதனை இத்தோடு விடுங்கள். என்னுடன் இருக்கும் இந்த மூன்று நாட்களில் இந்த ஜபதபங்கள் வேண்டாம். எல்லாவற்றையும் விட்டுவிடுங்கள்.''

அவரிடம் அபரிமிதமான பணிவு இருந்தது. நான் சொன்னதில் இருந்த உண்மையைப் புரிந்து கொண்டார். இன்னும் பயிற்சி தொடர்ந்தால் நாம் அதில் தேறவில்லை என்றுதானே பொருள்? இதனை அவர் புரிந்து கொண்டார்.

''நான் தேறிவிட்டேன் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை.''

''அப்பறம் அதை விட்டுவிடுவது தானே?''

'அசைக்க முடியாத நம்பிக்கை' என்று அவர் அழுத்திச் சொன்னதிலிருந்தே அவர் நம்பிக்கை முழுமையாக இல்லை என்று தெரிந்தது. ஜபத்தை விட்டுவிட்டால் அவர் கஷ்டப்படுவார் என்பதும் தெரிந்தது. என்றாலும் ஜபதபங்களை. விட்டுவிட்டார். நான் அவரைக் கவனித்துக் கொண்டேயிருந்தேன்.

மூன்றாம் நாள். அதிகாலை நான்கு மணிக்கு என் அறைக்கு அரக்கப் பரக்க ஓடிவந்தார். என்னைப் பற்றிக் குலுக்கினார்.

''என்ன காரியம் செய்துவிட்டீர்கள் நீங்கள்? எல்லாம் போய்விட்டது. இப்போது என்னால் கடவுளைக் காண முடிய வில்லை. மரம் மரமாகத் தெரிகிறது. கல் கல்லாகத் தெரிகிறது. என்னை என்ன செய்தீர்கள் நீங்கள்? என்னைக் கொன்று விட்டீர்கள். என் முப்பது வருடப் பயிற்சியை அழித்து விட்டீர்கள். நீங்கள் என் நண்பர் இல்லை. பகைவன். ''

நான் அவரிடம் சொன்னேன்: ''அமைதியாக இருங்கள். என் அருகில் அமருங்கள். என்ன நடந்தது என்று நாம் இருவரும் ஆராய்ந்து பார்ப்போம். நான் உங்கள் பகைவன் இல்லை. இந்தப் பழக்கத்தை இன்னும் முப்பது ஜன்மங்களுக்குத் தொடர்ந்தாலும் ஒன்றும் ஆகப்போவதில்லை. நீங்கள் ஏறக்குறைய தயாராக இருப்பீர்கள். இதே நிலை கடைசிவரை நீடிக்கும். என்றாவது ஒரு

நாள் இந்தப் பயிற்சியை நிறுத்தினால் பழையது எல்லாம் மீண்டும் வந்துவிடும். பழையது எதுவும் முற்றிலுமாக அழியவில்லை. உங்களுக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறது. உங்கள் பயிற்சியின் மூலம் அதை இன்னும் உள்ளே அமுக்கி வைக்கிறீர்கள். பயிற்சியை நிறுத்தினால் அது பீறிட்டுக் கொண்டு கிளம்புகிறது. சுவரில் அடித்த ரப்பர் பந்தைப் போல் அது மீண்டும் வருகிறது. முடுக்கி வைக்கப்பட்ட இரும்புச் சுருள் விட்டவுடன் தாவிக் கிளம்புவது போல் கிளம்புகிறது. அது ஒரு பின்னுதைப்பு விசை. அதை அமுக்கிக் கொண்டேயிருந்தால் எல்லாம் சரியாக இருப்பதாகத் தோன்றும். உங்கள் கையை அதிலிருந்து எடுத்த மாத்திரத்தில் அது தவ்விக் கொண்டு மேலே கிளம்பும். பழையது எல்லாம் வந்துவிடும். எதையோ இழந்துவிட்டது போல் நினைக்காதீர்கள். கோபப்படாதீர்கள். இதுதான் சிறந்த ஞானம். பயிற்சியை விடுங்கள். மரத்தைச் சாதாரணமாகப் பாருங்கள் அதுவே தூய்மையான ஞானம். மரத்திற்குள் கடவுளை வம்படியாகப் புகுத்த முயற்சி செய்யாதீர்கள்.

உண்மையான சமய உணர்வு உள்ளவனுக்கும் சமயச் சடங்குகளைக் கடைப்பிடிப்பவனுக்கும் இதுதான் வித்தியாசம்.

மரத்தைப் பாருங்கள். அதில் தேவையில்லாமல் கடவுளைப் புகுத்தாதீர்கள். அதுதான் கடவுள் என்று மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டேயிருந்தால் மரம் கூடக் கடவுளாகத் தெரிய ஆரம்பிக்கும். ஆனால் அந்தக் கடவுள் உண்மையான கடவுள் இல்லை. அது திணிக்கப்பட்டது. உங்கள் மனம் மரத்தினுள் ஏற்றியது. மரத்தைப் பாருங்கள் மௌனமாக இருங்கள். மரத்திடம் உள்ளபடியே தெய்விகத்தன்மை இருக்கிறது. அதற்கு உங்கள் கடவுள் தேவைப்படாது.

மௌனமாக இருங்கள். மரத்துடன் இருங்கள். போகப் போக உங்கள் மௌனம் ஆழமாக ஆழமாக நீங்கள் அந்த மரம் மாறுவதைப் பார்ப்பீர்கள்

ஒரு நாள் நீங்கள் காண்பது எல்லாமே தெய்விகமானது என்பதை உணர்வீர்கள். அந்தத் தெய்விகத்தை யாராலும் உங்களிடமிருந்து பிரிக்க முடியாது. அது பயிற்சியால் வருவது

அல்ல. அது ஒரு தன்னிச்சையான நிகழ்வு. மெய்ப்பொருள் வார்த்தைகள் மூலம் வருவதில்லை. மௌனத்தின் மூலம்தான் வருகிறது.

பயிற்சி கொடுப்பவன் என்ன சொல்கிறான்? ''அது ஏறக்குறைய தயாராகிவிட்டது.''

ஏனெனில் சேவலுக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தக் குணங்கள் அதன்மேல் திணிக்கப்பட்டிருக்கின்றன. வெளியே காட்டிக் கொள்வதற்கு அது பெருமையாக இருக்க லாம். ஆனால் அதனால் ஆன்மிக லாபம் எதுவும் கிடையாது. உண்மையான ஞானி தன்னிச்சையாக இயல்பாக வாழ்கிறான். அவன் பெறும் அனுபவங்கள் எதிலும் அவன் மனதை வைப்பதில்லை.

சரி நாம் என்ன செய்வது? முதலில் பயிற்சி வேண்டும். இல்லாவிட்டால் இயல்பு நிலை வராது. அதனை அடியாழத்திற்கு அனுப்பிவிட்டீர்கள். அதனால் அது மேலே வராது. அது உங்கள் உணர்வு நிலைக்கு மீண்டும் வராது. முதலில் பயிற்சி பெறுங்கள். உங்கள் பயிற்சி முழுமையாக இருக்க வேண்டும். உங்களை நான் ''அவர் ஏறக்குறைய தயாராகிவிட்டார்'' என்று சொல்லும் அளவிற்கு உங்கள் பயிற்சி தீவிரமாக இருக்க வேண்டும்.

அடுத்த கட்டத்தில் எல்லாப் பயிற்சியையும் விட்டுவிட வேண்டும். பின் என்ன நிகழ்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். பயிற்சியை விட்டவுடன் பழையது எல்லாம் மேலே வரும். ஒரு சாட்சியின் மனோபாவத்துடன் அதைப் பாருங்கள். மேலே கிளம்பி வரும் பழைய விஷயங்களைப் பார்த்தாலே போதும். அவை தன்னால் வற்றி வடிந்து விடும். வேறு எதுவும் செய்யத் தேவையில்லை.

ஒரு இரும்புச்சுருளை முடிந்தவரை அமுக்கிவிட்டு சட்டென்று விட்டுவிடுங்கள். அது குதித்துக் கொண்டு மேலெழும்பும் உங்கள் பயிற்சியின் நோக்கமும் அது போன்றதுதான். இரும்புச் சுருளை முடிந்தவரை அமுக்குவதுதான் பயிற்சி.

சுவரில் வைத்து அழுத்தப்படும் சுருள் போல் உங்கள் மனம் அழுத்தப்படுகிறது. இந்தத் தியானப் பயிற்சி எல்லாம் மனதை சுவரோடு வைத்து அமுக்குவதற்காகத்தான். கடைசிவரை அமுக்க வேண்டும். இனிமேல் அமுக்க இம்மியளவு இடம் கூட இல்லை என்ற நிலையில் நீங்கள் ஏறக்குறைய தயாராகிவிட்டீர்கள் - இந்தக் கதையில் வரும் சேவலைப் போல்.

அந்தத் தருணத்தில் நான் உங்களைப் பார்த்து ''விட்டு விடுங்கள்'' என்று கத்துவேன். மனம் என்னும் சுருள் விரியும். அது மட்டும் அல்லாமல் குதிக்கும். அது உங்களிடமிருந்து வெளியே குதித்துவிட்டால் நீங்கள் மனதிலிருந்து விடுதலை பெறுவீர்கள். அதற்குப் பின் பயிற்சி தேவையில்லை. அதன்பின் ஒவ்வொரு கணத்தையும் முழுமையாக வாழ்ந்தால் போதும். ஒவ்வொரு விநாடியையும் விழாவாகக் கொண்டாடினால் போது.ம் ஒவ்வொரு கணத்தையும் நன்றியுணர்வோடு கழித்தால் போதும் ஒவ்வொரு நொடியிலும் பரவசத்தை அனுபவித்தால் போதும்.

இன்று இத்துடன் நிறுத்திக் கொள்வோம்.

ஊ (Wu) நாட்டு இளவரசன் ஒரு படகில் பயணித்து குரங்கு மலையை அடைந்தான். குரங்குகள் அவனைப் பார்த்ததும் பயத்தில் மரங்களின் உச்சாணிக்கிளைகளில் போய் ஒளிந்து கொண்டன. ஒரு குரங்கு மட்டும் எதைப்பற்றியும் கவலைப்படாமல் கிளைக்குக் கிளை தாவி விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தது. இளவரசன் அந்தக் குரங்கின் மேல் ஒரு அம்பைத் தொடுத்தான். ஆனால் அந்தக் குரங்கோ லாகவகமாக அந்த அம்பைக் கையில் பிடித்து விட்டது.

இளவரசன் தன் ஆட்களிடம் அந்தக் குரங்கின் மேல் ஒரே நேரத்தில் சரமாரியாக அம்பு தொடுக்குமாறு ஆணையிட்டான். அடுத்த நொடி நூறு அம்புகள் அந்தக் குரங்கைத் தாக்க அது செத்து விழுந்தது.

இளவரசன் தன் தோழனான யென் புயி (Yen Pu'i) யிடம் சொன்னான்

''என்ன நடந்தது பார்த்தாயா? அந்தக் குரங்கு தன்னைப் புத்திசாலி என்று விளம்பரப்படுத்திக் கொண்டது. தன் திறமையை நம்பியது. அதன் காரணமாக யாருமே தன்னைத் தொட முடியாது என்று நினைத்தது. கடைசியில் என்ன ஆயிற்று? மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!''

**அவர்கள் வீடு திரும்பியதும் யென் புயி ஒரு துறுவியிடம் சீடனாக்ச் சேர்ந்தான். தன்னைச் சிறந்தவனாகக் காட்டும் எல்லாவற்றையும் தொலைத்துவிட வேண்டும் என்று தீர்மானித் தான். இன்பத்தைத் துறந்தான். தன்னிடம் உள்ள ஒவ்வொரு சிறப்பையும் மறைத்து வைக்கக் கற்றுக் கொண்டான். அவன் எப்படிப்பட்டவன் என்று யாராலும் கணிக்க முடியாத நிலை விரைவிலேயே ஏற்பட்டது.. இப்போது எல்லாரும் அவனை ஒரு பயம் கலந்த மரியாதையுடன் பார்த்தார்கள்.**

இந்தக் கதையில் தாவோவின் முக்கியமான ரகசிய சாவி புதைந்திருக்கிறது. உங்களிடம் எது அழகாக இருக்கிறதோ அதை மறைத்து வையுங்கள் என்று தாவோ சொல்கிறது உங்களிடம் உள்ள சிறப்புகளை வெளியே காட்டாதீர்கள் என்பது தாவோவின் கூற்று. உங்களிடம் உண்மையுள்ளதாக என்ன இருக்கிறதோ, மதிப்புள்ளதாக என்ன இருக்கிறதோ அதை உள்ளேயே போட்டு மறைத்து வையுங்கள் என்பதுதான் தாவோவின் சித்தாந்தம். ஏன்? அப்படி மறைத்து வைக்கப் படுவது பூமியில் மறைத்து விதைக்கப்படும் விதை போல் மரமாக வளரும்.

அதை வெளியே எறியாதீர்கள். ஒரு விதையை எல்லாரும் பார்க்கும்படியாகத் தெருவில் எறிந்தால் அது எந்தப் பயனும் இல்லாமல் செத்துப்போகும்.

சிறப்பாக இருப்பனவற்றையும் அழகாக இருப்பனவற் றையும் விதையைப் போல் எண்ணுங்கள். அது வளர மண் கொடுங்கள். உங்கள் இதயத்தில் மறைவான இடம் கொடுங்கள். அதனை வெளியே காட்டாதீர்கள். ஆனால் எல்லாரும் இதற்கு நேர் மாறாகச் செய்கிறார்கள். தப்பான விஷயங்களை மறைக் கிறார்கள். அது வேறு யாருக்கும் தெரிந்துவிடக்கூடாது என்பதில் கவனமாக இருக்கிறார்கள். அசிங்கமாக இருப்பதை மறைத்து விடுகிறார்கள். அழகாக இருப்பதை பிரமாதமாக விளம்பரப் படுத்துகிறார்கள். பல சமயங்களில் இல்லாத விஷயங்களையும்

இருப்பதுபோல் காடிக்கொள்கிறார்கள். அதைப் பெரிது படுத்துகிறார்கள். அதற்குப் பிரமாதமாக வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார்கள். அதுதான் நமது கவலைகளுக்கு மூல காரணம். அசிங்கமாக இருப்பது வளர்கிறது. அழகாக இருப்பது தொலைந்து போய்விடுகிறது. உங்களுக்குள்ளே மண்டிக் கிடப்பதெல்லாம் பிடுங்கி எறிய வேண்டிய களைகள்தான்.

உங்கள் வாழ்க்கையில் மலர்ச்சியில்லல. ஏனென்றால் நீங்கள் செய்வது எதுவும் சரியில்லை. தவறானதையே செய்திருக் கிறீர்கள். உங்கள் தேர்வு தவறானது. இது தாவோவின் மிக ரகசியமான சாவிகளில் ஒன்று.

தாவோவின்பாற்பட்டவன் மிகவும் சாதாரணமான வனாகவே இருக்கிறான்.. அவன் யாரென்று யாருமே அறிய மாட்டார்கள். அவனுள் எத்தகைய பொக்கிஷம் இருக்கிறது என்று யாருக்கும் தெரியாது. அவன் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்வதில்லை. தன் சிறப்புகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவதில்லை.

நீங்கள் விளம்பரப்படுத்துகிறீர்கள். காரணம் - உங்கள் அகந்தை. உங்களுக்கு உங்கள் மேலேயே திருப்தியில்லை. அடுத்தவர்கள் பாராட்டினால்தான் உங்களுக்குத் திருப்தி கிடைக்கிறது. உங்களிடம் கோஹினூர் வைரமே கிடைத்தாலும் அது போதவில்லை. உங்களிடம் விலை மதிப்பில்லாத ஒரு வைரக்கல் இருக்கலாம். ஆனால் அது மட்டும் போதாது. அதை மற்றவர்கள் போற்ற வேண்டும் பாராட்ட வேண்டும். உங்கள் உண்மை நிலை உங்களுக்கு முக்கியமில்லை. அடுத்தவர்கள் கருத்துத்தான் உங்களுக்கு முக்கியமாகப் படுகிறது. அடுத்த வர்களின் கண்களை ஒரு கண்ணாடி போல் பயன்படுத்துகிறீர்கள். அவர்கள் கைதட்டிப் பாராட்டினால் மட்டுமே உங்களுக்குச் சுகமாக இருக்கிறது.

அகந்தை என்பது போலி. அது அடுத்தவர்களின் கருத்து களாலான ஒரு அசிங்கமான அவியல். அது தன்னறிவு இல்லை. சுய ஞானம் இல்லை. நீங்கள் 'சுயம்' என்று நினைத்துக் கொண்டிருப்பது அடுத்தவர்கள் கருத்துகளின் பிரதிபலிப்பைத்

தான். அது போக ஓரத்தில் கொஞ்சம் பயமும் இருக்கிறது. மற்றவர்கள் தங்கள் கருத்துகளை மாற்றிக் கொள்ளலாம். நீங்கள் எப்போதும் அவர்களைச் சார்ந்தே இருக்கிறீர்கள்.

அவர்கள் உங்களுக்கு நல்லவர் என்று முத்திரை குத்தி விட்டால் பின் அவர்கள் வகுத்த விதிகளை நீங்கள் கடைப் பிடித்தேயாக வேண்டும். அப்போதுதான் தொடர்ந்து நல்லவராக இருக்க முடியும். அவர்கள் தங்கள் விதிகளை மாற்றிக் கொண்டால் நீங்களும் அதற்குத் தகுந்தாற்போல் உங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். உங்கள் இருப்பு நிலையை நீங்கள் அடுத்தவர்கள் மூலமாகத்தான் அணுகுகிறீர்கள். அதனால்தான் நீங்கள் உங்கள் சிறப்புகளை விளம்பரப் படுத்திக் கொள்கிறீர்கள். கொஞ்சம் மிகைப்படுத்தவும் செய்கிறீர்கள். இதெல்லாம் போதாது என்று இல்லாத சிறப்புகளை இருப்பதாகக் காட்டிக் கொள்கிறீர்கள். உங்களிடம் கொஞ்சம் உண்மை இருக்கலாம். கொஞ்சம் அழகு இருக்கலாம். ஆனால் அதை ஊதிப் பெரிதாக்கினால் கேலிக் கூத்தாகிவிடும்.

முல்லா நசிருதீனை எனக்கு அறிமுகப்படுத்திய நாளை நான் மறக்கவே முடியாது. முல்லா பெரிய எழுத்தாளர் என்று அவரை அறிமுகப்படுத்திய நண்பர் சொன்னார். முல்லா பெருமையுடன் சிரித்துக் கொண்டிருந்தார். நான் முல்லாவிடம் கேட்டேன்.

''இப்போது என்ன எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்?''

''இப்போதுதான் நான் 'ஹேம்லட்' என்ற பெரிய சோக நாடகத்தை எழுதி முடித்தேன்.''

என்னால் என் செவிகளை நம்பமுடியவில்லை. அதனால் அவரிடம் கேட்டேன்,

''ஷேக்ஸ்பியர் என்பவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறீர்களா?''

''எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. சென்ற முறை நான் மேக்பத் என்ற பெயரில் ஒரு நாடகம் எழுதினேன். அப்போதும் இதே கேள்வியைத்தான் என்னிடம் கேட்டார்கள்.''

எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை.

இப்போது முல்லா என்னிடம் கேட்டார்.

''எனக்கு ரொம்ப நாட்களாக ஒரு சந்தேகம். இந்த ஷேக்ஸ்பியர் என்பவர் யார்? அவர் ஏன் என் நூல்களை எல்லாம் திருடித் தன் நூல்கள் என்று சொல்லிக் கொள்கிறார்? நான் எழுதும் அதே பெயரிலேயே அவர் ஏன் நாடகங்கள் எழுதுகிறார்?''

நான் தலையில் அடித்துக் கொண்டேன்.

மற்றவர்கள் உங்களைக் காப்பி அடிப்பதாக நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள்தான் மற்றவர்களைக் காப்பி அடிக்கிறீர்கள். நீங்கள் அசல் இல்லை. நகல் மட்டுமே. அசல் ஆசாமிகள் இப்படித் தங்களைப் பற்றி விளம்பரப் படுத்திக் கொள்ளமாட்டார்கள்.

அது ஒரு மலைப்பிரதேசம். அங்கே ஒரு பெரிய விடுதியின் முன்னால் இருந்த புல்தரையில் மூன்று வயதான பெண்மணிகள் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வ்யதை ஒத்த நான்காவது பெண்மணி, 'என்னையும் இந்த ஆட்டத்தில் சேர்த்துக் கொள்வீர்களா?;' என்று கேட்டாள்.

''தாராளமாக. ஆனால் எங்களுக்கென்று சில• விதிமுறைகள் இருக்கின்றன. அதைப் பின்பற்றுவதாக உறுதியளித்தால் நீயும் எங்களுடன் விளையாடலாம்.''

''என்ன விதிமுறைகள்?''

''இந்தா,''

அச்சடிக்கப்பட்ட ஒரு அட்டையை அவளிடம் நீட்டினார்கள். அதில் நான்கு விதிகள் கொட்டை எழுத்தில் அச்சடிக்கப் பட்டிருந்தன.

விதி ஒன்று: பட்டுப்புடவைகள் பற்றியோ வேறு விலை யுயர்ந்த ஆடைகள் பற்றியோ பேசக்கூடாது. எங்களிடம் நிறைய இருக்கிறது.

விதி இரண்டு பேரன் பேத்திகள் பெருமைகளைப் பீற்றிக் கொள்ளக் கூட்டாது. நாங்கள் எல்லாருமே பாட்டிகள்தான்.

விதி மூன்று: நகைகளைப் பற்றி மூச்சுவிடக் கூடாது. அவை எங்களிடம் ஏராளமாக இருக்கின்றன,

விதி நான்கு: தாம்பத்திய உறவைப் பற்றிப் பேசக்கூடாது. நடந்தவை நடந்தவையாகவே இருக்கட்டும்.

எல்லாரும் தங்களைப் பற்றிப் பேசவே விரும்புகிறார்கள். பட்டுப்புடவை, விலையுயர்ந்த ஆடைகள், கார்கள், நகைகள் குழந்தைகள், தாம்பத்தியம் இப்படி எதைப்பற்றியாவது பேச வேண்டும் என்று நினைக்கிறார்கள்.

இப்படிப் பேசியே நம்மைக் கழுத்தறுக்கிறார்கள். ஒருவரை ஒருவர் கழுத்தறுக்கிறார்கள். இப்படிச் சலிப்படையச் செய்பவர் களை நீங்கள் பொறுத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்றால் அதற்கு ஒரே காரணம் தான் இருக்க முடியும். அது ஒரு பரஸ்பர புரிந்துணர்வு. அவர் உங்களை ரம்பம் போடுவார். அதன் பின் நீங்கள் அவரை ரம்பம் போட்டால் அதைச் சகித்துக் கொள்வார் நீங்கள் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். அவர் தன் சுயபுராணத்தை முடித்தவுடன் நீங்கள் உங்கள் ஜம்ப புராணத்தை ஆரம்பித்து விடுவீர்கள். இப்படியே மொத்த வாழ்க்கையும் போலியாக ஜம்பம் அடித்துக் கொள்வதில் கழிகிறது. இதில் நீங்கள் என்ன சாதிக்கப் போகிறீர்கள்? நீங்கள் முக்கியமானவர், வித்தியாச மானவர் என்ற ஒரு போலி உணர்வுதான்.

பட்டுப்புடவையோ விலையுயர்ந்த ஆடைகளோ உங்களை எப்படி விதிவிலக்கானவராகச் செய்ய முடியும்? விலை மதிப்புள்ள நகைகள் ஒருவனை மதிப்புள்ளவனாக மாற்ற முடியுமா? உங்கள் செயல்கள் மூலம் 'வித்தியாசமானவர்' 'உயர்ந்தவர்' என்ற சிறப்பைப் பெற முடியாது. உங்கள் தன்மைகளின் மூலம்தான் அந்தச் சிறப்பைப் பெற முடியும்.

இன்னொரு கோணத்தில் பார்த்தார் எல்லாருமே வித்தி யாசமானவர்கள்தான். ஒவ்வொருவரிடமும் ஒரு தனித்தன்மை இருக்கத்தான் செய்கிறது. அதை நிரூபிக்கத் தேவையில்லை.

அதை நிரூபிக்க முயற்சி செய்தால் உங்களிடம் ஏற்கனவே இருக்கும் தனித்தன்மை உங்களுக்குத் தெரியவில்லை என்பது நிரூபணமாகிவிடும்.

நீங்கள் எதை நிரூபிக்க நினைத்தாலும் அதில் உங்களுக்குக் கொஞ்சம் சந்தேகம் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். உங்கள் மனதில் இருக்கும் ஐயங்களை அடுத்தவர்களின் பார்வைகள் மூலம், அவர்களுடைய கருத்துகள் மூலம் நிவர்த்தி செய்ய நினைக்கிறீர்கள். உங்களிடம் அழகு இருக்கிறது என்பதை நீங்கள் நம்பவில்லை. ஆனால் அடுத்த வர்கள் அதைச் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறீர்கள்.

அந்தச் சிறிய கிராமத்தில் ஒரு விநோதமானப் பழக்கம் இருந்தது. அங்கு எந்தத் திருமணம் நடந்தாலும் மணமகன் மணமகளின் கைகளைப் பற்றும் முன் அந்தக் கிராமத்து புரோகிதர் மணப்பெண்ணைக் கன்னத்தின் முத்தமிட வேண்டும் என்ற மரபு இருந்தது. பல வருடங்களாக இருந்த பழக்கம் அது.

அந்தக் கிராமத்தில் இருந்த ஒரே ஒரு பெண்ணிற்கு மட்டும் அந்த மரபு பிடிக்கவில்லை. அவள் தன்னைப் பேரழகி என்று நினைத்துக் கொண்டிருந்தாள். சொல்லப் போனால் எல்லாப் பெண்களும் தங்களை அழகி என்றுதான் நினைத்துக் கொண் டிருக்கிறார்கள். அது பெண்களின் இயற்கைக் குணம். சரி அதை விடுங்கள்.

இந்தப் பெண்ணிற்கு அருவருப்பாக இருந்தது. அது எப்படி திருமண தினத்தன்னு ஒரு அன்னிய ஆடவன் என்னை முத்தமிடுவது? அதுவும் கன்னத்தில்? எப்படியாவது இந்தக் காட்டுமிராண்டித்தனத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று தீர்மானித்தாள். அவளுடைய திருமணம் நிச்சயமானவுடன் தனக்குக் கணவனாகப் போகும் மனிதனிடன் ஒரு நிபந்தனை போட்டாள்.

''நீங்கள் அந்தப் புரோகிதரிடம் சொல்லிவிடுங்கள்:. எந்தக் காரணம் கொண்டும் அவர் எனக்கு முத்தம் கொடுக்கக் கூடாது. அதை நினைக்கவே எனக்கு அருவருப்பாக இருக்கிறது.''

''சரி முயற்சி செய்கிறேன்.''

அவனைப் பார்க்கும் போதெல்லாம் அதையே மீண்டும் மீண்டும் சொன்னாள். இதை எப்படி ஊர்ப் புரோகிதரிடம்

சொல்வது என்று யோசித்துக் கொண்டிருந்தான் அவளுடைய வருங்காலக் கணவன்.

திருமணத்திற்கு முதல் நாள் அவனைத் தனியே சந்தித்த அந்தப் பெண் அவனிடம் கேட்டாள்.

''நான் சொன்னதைப் புரோகிதரிடம் சொல்லிவிட்டீர்களா இல்லையா? என்னால் அந்த ஆள் முத்தம் கொடுப்பதைப் பொறுத்துக் கொள்ள முடியாது.''

''சொல்லிவிட்டேன் கண்ணே.'' என்று அதீத வருத்தத்துடன் சொன்னான் அவன்.

''அதற்கு நீங்கள் ஏன் இப்படிச் சோகமாக இருக்க வேண்டும்?''

''இல்லை, அந்த விஷயத்தைப் புரோகிதரிடம் சொன்னவுடன் அவர் ஆனந்தம் தாங்காமல் நடனமாட ஆரம்பித்து விட்டார். 'நல்ல வேளை என் வயிற்றில் பாலை வார்த்தாய். நல்ல செய்தி சொன்னாய். அதனால் வழக்கமாகக் கல்யாணத்துக்கு நான் வாங்கும் தட்சணையில் நீ பாதி கொடுத்தால் போதும்.''

நீங்கள் உங்களை அழகி என்று நினைத்துக் கொண்டிருக்கலாம். மற்றவர்கள் யாரும் அப்படி நினைக்காமல் இருக்கலாம். அவர்கள் எல்லாம் தங்களை அழகு என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கே அவர்களுக்கு நேரம் போதவில்லை. அவர்களுக்கு அவர்களுடைய அழகுதான் பிரச்சினை. உங்களுடையது இல்லை. அப்படியே யாராவது உங்களைப் பார்த்து, ''ஆம் நீ அழகாகத்தான் இருக்கிறாய்!'' என்று தலையசைத்துச் சொன்னால் அதே போல் நீங்கள் அவர்களைப் பார்த்து அதே மாதிரி தலையசைத்து ''நீங்கள் மட்டும் என்ன குறைச்சலா?'' என்று சொல்வதை எதிர்பார்க்கிறார்கள். இது பல நூற்றாண்டுகளாக மனித சமுதாயத்தில் நடந்துவரும் பரஸ்பர வியாபாரம். நீங்கள் என் அகந்தையை விசிறிவிட்டால் நான் உங்கள் அகந்தையை விசிறிவிடுவேன். நீங்கள் அழகு இல்லை என்று எனக்குத் தெரியும். நான் அழகு இல்லை என்று உங்களுக்குத் தெரியும்.

ஒவ்வொருவருக்கும் தனித்தன்மை தேவைப்படுகிறது. இந்தத் தேவை உங்களிடம் இருந்தால் என்ன பொருள்? நீங்கள் இன்னும் பிறவியிலிருந்தே உங்களுடன் இருக்கும் அந்தத் தனித்தன்மையைப் புரிந்து கொள்ளவில்லை. உங்கள் தனித் தன்மைக்கு எந்தச் சான்றும் தேவையில்லை. பொய்களுக்குத்தான் சான்றுகளும் சாட்சிகளும் தேவைப்படும். அதனால்தான் உங்களால் தர்க்கரீதியாக சான்றுகளையும் சாட்சிகளையும் வைத்துக் கொண்டு கடவுளை நிரூபிக்க முடியாது. ஏனென்றால் கடவுள்தான் உச்சகட்ட உண்மை. உண்மைகளுக்கு நிரூபணம் தேவையில்லை.'

நான் சொல்கிறேன். நீங்கள் தனித்தன்மை வாய்ந்தவர். சிறப்பு மிக்கவர். ஆனால் அப்படி இருப்பதாகக் காட்டிக் கொள்ளாதீர்கள். அது கேலிக் கூத்தாகிவிடும். உங்கள் தனித்தன்மையை நீங்களே நம்பாவிட்டால் வேறு யார் நம்புவார்கள், சொல்லுங்கள் நம்பிக்கை என்பது சான்றுகளுக்கு அப்பாற்பட்டது. அது சுய அறிவால் மட்டுமே வரும்.

நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். உங்களைத் தெரிந்து கொள்ள இரண்டே வழிகள்தான் இருக்கின்றன. ஒன்று உங்களை நீங்களே நேரடியாகத் தெரிந்து கொள்வது. இது சரியான வழி. தவறான வழி ஒன்றும் இருக்கிறது. மற்றவர்கள் மூலமாக உங்களைத் தெரிந்து கொள்வதுதான் அது. உங்களுக்கே உங்களைத் தெரியவில்லையென்றால் மற்றவர்களுக்கு எப்படித் தெரியும்? அவர்கள் தள்ளி இருக்கிறார்கள். நீங்கள்தான் உங்களுக்கு மிக அருகில் இருக்கிறீர்கள். உங்களுக்கே தெரிய வில்லையென்றால் பாவம் மற்றவர்களுக்கு என்ன தெரியும்?

நமக்கு நம்மைப் பற்றிய ஞானம் இல்லாததால்தான் ஒரு மாற்று தேவைப் படுகிறது. நம் அகந்தைதான் அந்த மாற்று. அகந்தையோ எந்த நேரமும் தன்னை வெளிக்காட்டிக் கொள்வதி லேயே குறியாக இருக்கிறது. நீங்கள் உங்களைக் காட்சிப் பொருளாக மாற்றிவிட்டீர்கள் நீங்கள் நல்லவர், நீங்கள் ஒரு அழகி. நீங்கள் புனிதர். நீங்கள் ஒரு மகான். தனித்தன்மை வாய்ந்தவர். இப்படியெல்லாம் மற்றவர்கள் உங்களைச் சொல்ல

வேண்டும் என்று அவர்களை எப்போதும் கெஞ்சிக் கொண்டே யிருக்கிறீர்கள்.

தாவோ அதனை எதிர்க்கிறது. இப்படித்தான் உங்கள் வாழ்க்கை வீணாகிறது என்று தாவோ உங்களை எச்சரிக்கிறது. இப்படி வீணாகும் சக்தியை உங்களிடமே திருப்ப முடியும் என்று சொல்கிறது. அப்படித் திருப்பும்போது நீங்கள் சிறப்பு மிகுந்தவர் என்பதை உணர்வீர்கள்.

தன்னைப் பற்றிய அறிவை சேகரிக்கும் மனிதன் மற்றவர்கள் பார்வையில் ஒரு சாமானியனாகவே இருப்பான். அவன் தன்னை வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொள்ளமாட்டான். வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அவன் மறைந்து கொள்வான். அவன் மற்றவர்களுக்குக் காட்சிப் பொருளாக இருக்கமாட்டான். அவன் எப்போதும் அமைதியாகவே இருப்பான். அமைதியாக வாழ்வான். அமைதியாகவே இன்பம் துய்ப்பான். தன்னை யாரும் தொந்தரவு செய்யாமல் இருந்தால் போதும் என்று நினைப்பான். தன்னைப் பற்றி யாரும் கவலைப்பட வேண்டாம் என்று நினைப்பான். மற்றவர்கள் உங்களைப் பற்றிக் கவலைப்படத் தொடங்கினால் உங்கள் வாழ்க்கை சிக்கலாகிவிடும். தன்னைப் பற்றிய ஞானம் இன்னும் கடினமாகிவிடும்.

ஞானத்தின் வழியில் தனிமைதான் துணை. அந்த வழியில் தனியாகத்தான் போக முடியும். மொத்தக் கூட்டமும் உங்களை அந்த வழியில் பின் தொடர்ந்து வரும் என்று நீங்கள் நினைத்தால் நீங்கள் ஒருநாளும் இலக்கை அடையப் போவதில்லை. நீங்கள் ஜம்பம் அடித்துக் கொள்பவராக இருந்தால் கடைசி வரை ஒரு காட்சிப் பொருளாகவே இருப்பீர்கள். உங்களால் ஒரு நாளும் மனிதனாக முடியாது. உங்களுடைய மனிதத்தன்மை உங்கள் இருப்புநிலையின் ஆழமான மடிப்புகளுக்கு இடையே ஒளிந்திருக்கிறது. இருப்புநிலையின் உன்னதமான ரகசியம் அது. நீங்கள் ஒரு அதிபயங்கரமான பள்ளத்தாக்கு. உங்களுடைய அடியாழத்தில்தான் அந்த ''மனிதன்'' ஒளிந்து கொண்டிருக்கிறான். அவனைக் கண்டுபிடிப்பதுதான் ஆன்மிக லட்சியம். அந்த

லட்சிய பயணத்தில் நீங்கள் தனியாகத்தான் போகமுடியும். அளவுக்கதிகமாக நீங்கள் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட்டால் அவர்கள் என்ன சொல்வார்களோ என்ன நினைப்பார்களோ என்று சதா சிந்தித்துக் கொண்டிருந்தால் நீங்கள் வெளிச்சுற்றில்தான் இருப்பீர்கள். இது முதல் விஷயம்.

அடுத்த விஷயம். உங்களை நீங்கள் வெளிச்சம் போட்டுக் காட்டும் போது உங்களுக்குள் இருக்கும் அசிங்கமான பகுதிகளை இருட்டடிப்பு செய்துவிடுவீர்கள். உங்களிடம் எதெல்லாம் அசிங்கமாக, தவறாக இருக்கிறதோ அதை எல்லாம் ஆடைகள் மூலம்; ஒப்பனையின் மூலம், முகமூடிகள் மூலம், வார்த்தை களின் மூலம் செயல்களின் மூலம் மறைத்துவிடுவீர்கள். இந்தச் செய்கையால் தீமைகளும் தவறுகளும் விதைகளாகி உங்களுக்குள் வளர்ந்து கொண்டிருக்கும். அவற்றை இன்னும் ஆழமாக உள்ளே தள்ளிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் சக்தியின் மூலத்தை நோக்கித் தள்ளிக் கொண்டிருக்கிறீர்கள். அதனால் உங்களுக்குள் இருக்கும் தீமையும் தவறும் இன்னும் வலுவடையும். நன்மையையும் அழகையும் வெளியே எறிந்து விட்டீர்கள். எனவே அவை விதையாகி உள்ளே போய் வளர வாய்ப்பு இல்லாமலேயே போய்விடும்.

அதற்கு நேர் எதிராகச் செய்யுங்கள். உங்களிடம் அசிங்கமாக ஏதாவது இருந்தால் அதை மற்றவர்களுக்கு வெளிச்சம் போட்டுக் காண்பியுங்கள். அது நாலாபக்கமும் பரவி வலுவிழந்துவிடும். நீங்கள் கோபக்காரராக இருந்தால் அதை அனைவரிடமும் சொல்லுங்கள். ''நான் கோபக்காரன். என்னை நேசிக்காதீர்கள். என்னுடன் நட்பு பாராட்டாதீர்கள்.

''நான் கெட்டவன். நான் அசிங்கமானவன். நான் பேராசைக் காரன். எனக்கு காமம் கொஞ்சம் அதிகம்'' என்று உங்களிடம் இருக்கும் அசிங்கங்களையும் அவலங்களையும் பட்டிய லிடுங்கள். சொல்வதோடு நிற்காமல் அதைச் செய்தும் காட்டுங்கள். வெளியே காட்டப்படும் எதுவுமே பரவி நீர்த்துப் போய்விடும் என்பதை ஒரு ஆச்சரியத்துடன் உணர்வீர்கள். அழகானவற்றை உள்ளேயே மறைத்து வையுங்கள். அது

உங்களுக்குள் இன்னும் ஆழமாகப் போகட்டும். அங்கேயே அது வேர்விட்டு பெரிய மரமாக முளைக்கட்டும்.

இப்போது இந்தக் கதையைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்.

**வூ (Wu) நாட்டு இளவரசன் ஒரு படகில் பயணித்து குரங்கு மலையை அடைந்தான்.**

ஷுவாங் ட்சு குரங்குகளைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறார். குரங்குகள்தானே நம் முன்னோர்கள்? எனவே அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதில் அவருக்கு ஆர்வம் இருந்தது. உங்களுக்குள்ளும் ஒரு குரங்கு மறைந்து கொண்டிருக் கிறது. இந்த உலகமே ஒரு குரங்குமலைதான். இருப்பதெல்லாம் குரங்குகள்தான். குரங்கின் குணம் என்ன? மற்றவர்கள் செய்வதைப் பார்த்து அப்படியே செய்வது. குர்ஜிஃப் என்ற ஞானி சொல்வார்: ''நீங்கள் குரங்காக இருப்பதை நிறுத்திக் கொள்ளாவிட்டால் மனிதனாக வாழமுடியாது.''

அது சரிதான். ''குரங்கின் முக்கியமான குணம் என்ன?'' என்று யாரோ அவரைக் கேட்டார்கள்.

''அடுத்தவர் செய்வதைப் பார்த்து அதை அப்படியே செய்வது.''

ஒருவர் செய்வதை அப்படியே செய்வதில் குரங்கு கில்லாடி. நீங்கள் உங்கள் வாழ்க்கை முழுவதும் என்ன செய்து கொண்டிருக் கிறீர்கள்? நீங்கள் மனிதனாக வாழ்கிறீர்களா? இல்லை குரங்காக இருக்கிறீர்களா? நீங்கள் அடுத்தவர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகிறீர்கள். உங்களைச் சுற்றிப் பார்க்கிறீர்கள். அடுத்தவர் செய்வதை ஒற்றி அப்படியே செய்கிறீர்கள். யாராவது ஒரு குறிப்பிட்ட முறையில் நடப்பதைப் பார்த்தால் அப்படியே நடக்கிறீர்கள். யாராவது குறிப்பிட்ட பாணியில் ஆடைகள் அணிந்திருந்தால் அப்படியே நீங்களும் அணிகிறீர்கள். காப்பியடிப்பதற்கு ஆங்கிலத்தில் உள்ள வார்த்தையே 'குரங்குத்தனம்' செய்வது என்ற பொருளில்தான் வருகிறது. (aping) அடுத்தவர்கள் வைத்திருப்பது போன்ற கார்களை வைத்துக் கொள்ள விரும்புகிறீர்கள்.

உங்கள் தேவை என்னவென்று நீங்கள் பார்ப்பதில்லை. மற்றவர்களைப் பார்க்காமல் உங்கள் தேவைகளை மட்டும் பார்த்தால் உங்கள் வாழ்க்கை ஒரு ஆனந்த அனுபவமாகிவிடும். ஏனென்றால் உங்களுக்கென்று பிரமாதமான தேவைகள் எதுவும் இல்லை. அடுத்தவரைப் பின்பற்றி அவர்களைப் போலவே வாழ முற்படும் போது அது ஒரு முடிவில்லாமல் போய்விடுகிறது. தேவைகள் குறைவுதான். அவற்றை நிறைவேற்றிக்கொள்வதும் சுலபம்தான். உங்கள் தேவைகளை மட்டும் பார்த்தால் நீங்கள் விரைவிலேயே திருப்தியடைந்துவிடுவீர்கள். போதுமென்ற பொன்னான மனநிலையை வளர்த்துக் கொள்வது அப்படி ஒன்றும் கடினமான காரியம் அல்ல. ஆனால் அடுத்தவர்களைப் பார்த்து அதுபோல வாழ வேண்டும் என்று நினைத்தால் - புலியைப் பார்த்துப் பூனையும் சூடு போட்டுக் கொள்ள வேண்டும் என்று நினைத்தால் - உங்கள் தேவைகள் பெருகுகின்றன. இப்போது உங்களுக்கு லட்சம் தேவைகள் இருக்கின்றன. உங்கள் தேவைகளுக்கு ஒரு முடிவே கிடையாது. நாட்டில் லட்சக் கணக்கானவர்கள் இருக்கிறார்கள். நீங்களோ அனைவரையும் பார்த்து அவர்களைப் போல் வாழ வேண்டும் என்று நினைக் கிறீர்கள். இது முடியவே முடியாத காரியம். இப்படியே அடுத்த வர்களைப் பார்த்துச் சூடு போட்டுக் கொண்டே போனால் ஒரு கட்டத்தில் நீங்கள் யார், ஏன் இங்கு வந்தீர்கள் என்பதே உங்களுக்கு மறந்து போய்விடும்.. நீங்கள் ஒரு போலியாகி விடுவீர்கள். ஒரு நகலாகிவிடுவீர்கள்.

உங்கள் விதியை நிறைவேற்ற நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். அது உங்களுக்கே உங்களுக்கு மட்டும் சொந்தமானது. அது வேறு யாருக்கும் உரித்தானது அன்று. இருப்புநிலை வேறு யாருக்கும் இல்லாத ஒரு தனித்தன்மையை ஒரு விதியை உங்களுக்கென்று நிர்ணயித்திருக்கிறது. உங்களுக்கு என்று நிர்ணயிக்கப்பட்டதை நீங்கள்தான் செய்ய முடியும். ஒரு புத்தரோ ஒரு ஏசுநாதரோ உங்கள் வாழ்க்கையை வாழ முடியாது. ஆனால் நீங்களோ புத்தரையும் ஏசுவையும் போல் வேடமிட முயற்சிக்கிறீர்கள்.

இந்து மத சாஸ்திரங்கள் வெகு அழுத்தமாகக் கூறும் விஷயம் இதுதான். நீங்கள் அடுத்தவரைப் பின்பற்றி அவர்களைப் போல்

வாழ ஆரம்பித்தால் இந்த உலகத்தில் மீண்டும் மீண்டும் பிறப்பீர்கள். அவர்கள் சொல்லும் மறுபிறவியின் கோட்பாடு அதுதான். நீங்கள் இந்தப் பிறவியில் முழுமையாக மலரவில்லையென்றால் இன்னும் ஒரு பிறவி எடுக்க வேண்டும். அடுத்தவர்களைப் போல் வாழ வேண்டும் என்று நினைத்தால் எப்படி மலர முடியும்? ஒரு இசைக் கலைஞனைப் பார்க்கிறீர்கள். நீங்கள் அப்படி ஆக வேண்டும் என்று நினைக்கிறீர்கள். வெற்றிகரமான ஒரு நடிகனைப் பார்த்து நீங்களும் நடிகனாக வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள். உங்களைத் தவிர வேறு எல்லாமாகவும் ஆக வேண்டும் என்று நினைக்கிறீர்கள். ஆனால் உண்மை என்னவென்றால் நீங்கள் நீங்களாக மட்டுமே இருக்க முடியும். வேறு யாராகவும் இருக்க முடியாது. வேறு எதுவும் சாத்தியம் இல்லை. வேறு யாரும் உங்களைப் போல் இல்லை. அதனால் யாருமே உங்கள் லட்சிய மனிதர்களாக இருக்க முடியாது. அந்தத் தகுதி இந்த உலகில் யாருக்குமே இல்லை.

புத்தனை நேசியுங்கள். புத்தன் அழகானவன். ஆனால் அவனைப் போல் ஆக வேண்டும் என்று கனவு காணாதீர்கள். உங்கள் வாழ்க்கையைத் தவறவிட்டுவிடுவீர்கள். ஏசுநாதர் ஒரு அற்புதமான மனிதர். அதில் ஐயமில்லை. ஆனால் இந்த உலகத்திற்கு இரண்டு ஏசுநாதர்கள் தேவையில்லையே! இருப்பு நிலை ஒரு ஏசுநாதரின் தேவையைப் பூர்த்தி செய்துவிட்டது. அவர் பணி நிறைவு பெற்றுவிட்டது. அவர் முழு மலர்ச்சியடைந்துவிட்டார். முழுமலர்ச்சியடைந்தவர்கள் மீண்டும் வருவதில்லை.

ஏசுநாதரைக் காதலியுங்கள். காப்பியடிக்காதீர்கள். அதில் உங்களுக்கு நிறைவு தோன்றாது. மாறாக வேதனையும் கவலையும்தான் மிஞ்சும்.

நீங்கள் யாரையும் பின்பற்ற முடியாது. அடுத்தவர் வாழ்விலிருந்து நல்ல செய்திகளை எடுத்துக் கொள்ளலாம். தவறில்லை. ஆனால் மிகவும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். நல்ல செய்தியை எடுத்துக் கொள்ளுதல் என்பது நகலெடுப்பதாக மாறிவிடக் கூடாது.

நீங்கள் ஒரு புத்தனைப் பார்த்தால் அவன் எப்படி முழுமையாக மலர்ந்தான் என்பதைக் கவனியுங்கள். அந்த மலர்ச்சியில் பொதிந்திருக்கும் நல்ல செய்திகளை எடுத்துக் கொள்ளுங்கள். அவனுடைய முறைகள் என்ன? புத்தன் என்ன செய்தான் என்ற புரிந்துணர்வை உள்வாங்கிக் கொள்ளுங்கள். போகப் போக நீங்கள் செல்ல வேண்டிய பாதை என்று உங்களுக்குத் தெரியும். அது புத்தனின் பாதையைப் போல் இருக்காது. அப்படி இருக்கவும் முடியாது. அது முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும். ஆனால் புத்தனைப் பற்றிய புரிந்துணர்வு உங்களுக்குத் துணை புரியும். நீங்கள் உங்கள் வழியில்தான் வளர வேண்டும். புத்தனைப் பற்றிய புரிதல் உங்கள் புரிதலை இன்னும் ஆழமாக்கும். ஒரு உண்மையான சீடனுக்கும் போலியாகப் பின்பற்றுபவனுக்கும் இடையே உள்ள அடிப்படை வேறுபாடு அதுதான்.

சீடன் வேறு. பின்பற்றுபவன் வேறு. எனக்குச் சீடனாக இருங்கள். என்னைப் பின்பற்றாதீர்கள். ஒழுக்கம் என்பது என்ன?

ஒழுக்கம் என்பது கற்றல். ஆங்கிலத்தில் ஒழுக்கத்திற்கான வார்த்தை discipline. அதன் வேர் கற்றல் என்ற சொல்லில் இருக்கிறது. அது கட்டுப்பாட்டைக் குறிக்கும் சொல் அல்ல. கற்கத் தயாராக இருப்பவவே சீடன். புரிந்து கொள்ளத் தெரிந்தவனே சீடன். திறந்த மனதுடன் அனைத்தையும் ஏற்றுக் கொள்பவனே சீடன். தன்னை ஒரு கருப்பையாக மாற்றிக் கொள்ளத் தயாராக இருப்பவனே சீடன். அவன் எதிர்ப்பதில்லை. சண்டை போடுவதில்லை. வாதம் புரிவதில்லை. புரிந்து கொள்ள முயற்சிக்கிறான். நீங்கள் புரிந்து கொள்ள முயற்சிக்கும் போது உங்கள் அறிவு வேலை செய்வதில்லை. அறிவு இரண்டே இரண்டு விஷயங்களைத்தான் செய்யும். ஒன்று மூர்க்கத்தனமாக எதிர்க்கும். இல்லாவிட்டால் கண்மூடித்தனமாகப் பின்பற்றும். அறிவு உங்களை பகைவனாக்கும் இல்லாவிட்டால் கண்மூடித் தனமாகப் பின்பற்ற வைக்கும். அறிவு உங்களை ஒரு நாளும் சீடனாக்காது.

சீடனின் தன்மை வேறு. அவன் அறிவின்பாற்பட்டவன் அல்ல. சீடன் இதயத்தின்பாற்பட்டவன். அவன் தன் குருவை

நேசிக்கிறான். அவரை அப்படியே உள்வாங்கிக் கொள்கிறான். பின் தன் வழியில் பயணிக்கிறான்.

சீடனாக இருப்பது என்பது நேரடியான விஷயம் இல்லை. அது மறைமுகமானது. மென்மையானது. உங்கள் குருவைப் பார்த்து அவர் என்ன செய்கிறாரோ அதைச் செய்ய முடியாது. அப்படிச் செய்தால் அவரைப் பின்பற்றுவீர்கள், அவ்வளவுதான். அவர் சொல்லும் வார்த்தைகளை மனனம் செய்து அதை மீண்டும் ஒப்பிக்கலாம். அதனால் அவரைப் பின்பற்றும் கூட்டத்தில் சேர்வீர்கள். அந்த முயற்சியை உங்கள் அறிவுதான் எடுக்கிறது. ஆன்மிக வளர்ச்சியின் மிகப்பெரிய தடைக்கல் உங்கள் அறிவு.

நீங்கள் எதிர்க்காத போது கண்மூடித்தனமாக எதையும் நகலெடுக்காதபோது உங்கள் விழிப்புணர்வு அறிவிலிருந்து இதயத்திற்குத் தாவுகிறது. அப்போது நீங்கள் திறந்த இதயத்துடன் செயல்படுகிறீர்கள். அப்போது நீங்கள் காதல்வயப் படுகிறீர்கள். அதைத்தான் சிரத்தை அல்லது நம்பிக்கை என்று சொல்கிறோம். அது கண்மூடித்தனமான குருட்டு நம்பிக்கை இல்லை.

சிரத்தையையும் குருட்டுத்தனமான நம்பிக்கையையும் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். பின்னது அறிவு சம்பந்தப்பட்டது. குருட்டுத்தனமான அவநம்பிக்கையும் அப்படித்தான். நீங்கள் ஒரு ரோஜா மலரைப் பார்க்கிறீர்கள். அதை நம்புகிறீர்களா இல்லை நம்ப மறுக்கிறீர்களா? இரண்டும் இல்லை. நீங்கள் அதைப் பார்க்கிறீர்கள். யாரும் ரோஜா மலரைப் பின்பற்றுவதும் இல்லை. அதைக் கண்மூடித்தனமாக எதிர்ப்பதும் இல்லை.

காலையில் சூரியன் உதிக்கிறது. அதை நம்புகிறீர்களா இல்லை மறுக்கிறீர்களா? நீங்கள் சூரியனை நம்பவில்லை என்பதால் கண்களை மூடிக்கொள்கிறீர்களா? இல்லை எல்லா வேலை களையும் விட்டுவிட்டு நாள் முழுவதும் சூரியனைப் பின்பற்றிச் செல்கிறீர்களா? இந்த இரண்டில் எதைச் செய்தாலும் சரி உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். சூரியனை அனுபவி யுங்கள். காலைக்கதிர்களையும் அவை தரும் புத்துணர்வையும் உள்வாங்கிக் கொள்ளுங்கள். சூரியனே அனைத்திற்கும்

உயிர்ப்பை அளிக்கிறான். அந்த உயிர்பை சந்தோஷமாக அனுபவியுங்கள்.

ஒரு ரோஜா மலரைப் பார்க்கிறீர்கள். அதில் இருக்கும் ஏதோ ஒன்று உங்கள் இதயத்தைச் சென்றடைகிறது. வெளியே ரோஜா மலர்கிறது. உள்ளே உங்கள் இதயம் மலரத் தொடங்குகிறது.

ஒரு பெரிய குருதேவரை அணுகுகிறீர்கள். அவர் புத்தராக இருக்கலாம். ஏசுநாதராக அல்லது ஷுவாங் ட்சுவாக இருக்கலாம். நீங்கள் என்ன செய்ய வேண்டும்? சூரியனைப் பார்த்து என்ன் செய்வீர்களோ, அதைச் செய்தால் போது. அவரைப் பின்பற்ற வேண்டாம். பின்பற்றாமல் இருக்கவும் வேண்டாம். அவரை உள்வாங்கிக் கொள்ளுங்கள் அதுவே போதும்.

ஏசுநாதர் தன் சீடர்களுக்குக் கடைசியாகச் சொன்னது என்ன தெரியுமா?

''என்னை உண்ணுங்கள் என்னை அருந்துங்கள். என்னை உங்கள் ரத்தத்தில் ஓடவிடுங்கள். என்னை முழுவதுமாக உள்வாங்கிக் கொள்ளுங்கள்.''

அதற்கு என்ன பொருள்? என்னை உள்வாங்கிக் கொள்ளுங்கள். நான் சொல்வதை ஜீரணித்துப் பின் உங்கள் வழியில் செல்லுங்கள் நான் செய்வது போல் செய்யாதீர்கள். அப்படிச் செய்தால் உங்கள் உள்ளொளியை இழந்துவிடுவீர்கள்.

ஒரு உண்மையான குரு உங்களுக்கு விதிமுறைகளைத் தர மாட்டார். கண்களைத் தருவார். நீங்கள் செல்ல வேண்டிய பாதையைக் காட்ட மாட்டார். மாறாக உங்களிடம் ஒரு விளக்கைத் தருவார். ''இந்த விளக்கை எடுத்துக் கொண்டு உன் பாதையில் போ. இது உன் பாதையை உனக்குக் காட்டும்.''என்று சொல்வார்.

ஒரு போலி குரு உங்களுக்கு நீங்கள் செல்ல வேண்டிய இடத்தின் வரைபடத்தைத் தருவார். ''இந்த வழியில்தான் செல்ல வேண்டும். வேறு வழியில் சென்றால் நீ வழி தவறிவிடுவாய்'' என்பார். அவர் எந்தக் காலத்திலும் உங்களுக்கு விளக்கைத் தரமாட்டார்.

உங்கள் கையில் ஒளிகாட்டும் விளக்கு இருந்தால் போதும் வரைபடமோ வழிகாட்டியோ தேவையில்லை.

நாம் யாரும் ஒரே மாதிரியாக இல்லை. நமது பாதைகளும் ஒரே மாதிரியாக இருக்க வாய்ப்பில்லை. இந்தப் புரிதல் உங்கள் மனதில் ஆழமாக இறங்கட்டும். ஒரே போல் இருக்கும் இரண்டு மனிதர்கள் இல்லை. இருக்கவும் முடியாது. செய்ததையே செய்யு,ம் பிழை படைப்பில் இல்லை. எத்தனை வேறுபட்ட மனிதர்கள் வந்துவிட்டாலும் இன்னும் படைப்பு சலிக்காமல் புதுப் புது ரகங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. தனித்தன்மை யில்தான் இருப்பு நிலை மலர்கிறது. ஒவ்வொருவரும் விசேஷமானவரே. ஒவ்வொருவரும் சிறப்பானவரே. சாதாரணம் என்று எதுவுமே படைப்பில் கிடையாது. இதை நிரூபிக்கத் தேவையில்லை. இதை நிரூபணம் செய்ய முற்பட்டால் நீங்கள் குரங்காக மாறிவிடுவீர்கள். அடுத்தவர்களைப் பார்த்துக் காப்பி அடிப்பதை நிறுத்துங்கள்.

அடுத்தவர் செய்வதை அப்படியே செய்வது எளிது. அடுத்தவர் செய்கையைப் புரிந்து கொள்வது கடினம். அதனால் தான் அனைவரும் அர்த்தம் புரியாமல் அடுத்தவர்களைப் பின்பற்றுகிறார்கள். அது மிகவும் சுலபம். ஒரு விதியை அப்படியே கடைப்பிடிக்க வேண்டும். அதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லையே.

என்னிடம் வருபவர்களில் சிலர் சொல்கிறார்கள்: ''எங்களுக்குத் தெளிவான விதிமுறைகளை வகுத்துக் கொடுங்கள், நாங்கள் அவற்றை வார்த்தை பிசகாமல் பின்பற்றத் தயாராக இருக்கிறோம்.''

அவர்கள் சொல்வதின் தாத்பர்யம் புரிகிறதா?

''நாங்கள் வளர மாட்டோம். நாங்கள் பக்குவம் அடைய மாட்டோம். என்ன சாப்பிட வேண்டும் காலையில் எத்தனை மணிக்குக் கண் விழிக்க வேண்டும், இரவில் எப்போது உறங்கச் செல்ல வேண்டும் என்று விதிகளை வகுத்துக் கொடுங்கள். போதும்.''

உங்களுக்கு மனிதனாக இருக்கப் பிடிக்கவில்லை. குரங்காக வேண்டும் என்று நினைக்கிறீர்கள்.

ஒரு மனிதன் விதிகளுக்காக ஏங்க மாட்டான். அவன் புரிந்துணர்வை நாடுவான். அப்போதுதான் இந்தப் பரந்த உலகத்தில் அவன் வழியைக் கண்டுபிடித்து அதில் அவன் பயணிக்க முடியும். வரைபடமோ வழிகாட்டிகளோ திசைகாட்டும் கருவியோ அவனுக்குத் தேவையில்லை. அவனுடைய உள்ளொளியே அவனுக்கு வழியைக் காட்டிவிடும்.

புரிந்துணர்வு இருப்பதால் சுதந்திரம் இருக்கிறது. அதனால் அந்த வழியில் அழகு இருக்கிறது. சுதந்திரம் இல்லாதவழியில் அழகு இருக்காது. உலகிலேயே மிகவும் அசிங்கமானது அடிமைத்தனம்தான்.

**வூ (Wu) நாட்டு இளவரசன் ஒரு படகில் பயணித்து குரங்கு மலையை அடைந்தான். குரங்குகள் அவனைப் பார்த்ததும் பயத்தில் மரங்களின் உச்சாணிக்கிளைகளில் போய் ஒளிந்து கொண்டன. ஒரு குரங்கு மட்டும் எதைப்பற்றியும் கவலைப்படாமல் கிளைக்குக் கிளை தாவி விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தது.**

யார் கண்டது? அந்தக் குரங்கு கூட்டத்தின் தலைவனாக இருக்கலாம். ஒரு ஜனாதிபதியாக அல்லது பிரதம மந்திரியாக இருக்கலாம். சாதாரண மக்கள் பயந்து ஓடலாம். தலைவன் எப்படி ஓடுவது? ஒரு மகத்தான தலைவன் எப்படிச் சாதாரணக் குரங்குகளைப் பின்பற்ற முடியும்? அவன் தன்னை யாரென்று காட்டிக் கொள்ள வேண்டாமா? தன் திறமையை தன் பலத்தை நிலைநிறுத்த வேண்டாமா? இல்லாவிட்டால் மற்ற குரங்குகளின் பார்வையில் அவன் கௌரவம் போய்விடுமே! அந்தக் குரங்கு போட்ட ஆட்டம் இளவரசனுக்காக இல்லை. மற்ற குரங்கு களுக்காக.

நீங்கள் தலைவனாக இருக்க வேண்டுமென்றால் உங்களைக் கடுமையானவராகக் காட்டிக் கொள்ள வேண்டும். நீங்கள் உங்கள் திறமைகளை வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டும்.

அரசியல் தலைவர்கள் எப்போதும் வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிஜமான முகங்களை யாருமே பார்த்ததில்லை. அவர்களுடைய மனைவி மக்கள் கூட அவர்களுடைய நிஜமான முகங்களைப் பார்த்திருக்க முடியாது. முகமூடிகள் அணிந்து கொள்வதில் அவர்கள் பலே கில்லாடிகள். அவர்கள் யார் என்று யாருக்குமே தெரியாது. அதனால் தங்களை எந்த நேரமும் காட்சிப் பொருளாகவே காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு அரசியல்வாதி ஒரு கேள்விக்கு ஆம் என்று பதில் சொன்னால் ஒரு வேளை இருக்கலாம் என்று பொருள் கொள்ள வேண்டும். ஒருவேளை இருக்கலாம் என்று சொன்னால் நிச்சயம் இல்லை என்று பொருள் கொள்ள வேண்டும். அவன் இல்லை என்று நிச்சயமாகப் பதில் சொன்னால் அவன் அரசியல்வாதியே இல்லை என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.. எந்த அரசியல்வாதியும் மனதில் நினைப்பதை வெளியே சொல்வ தில்லை. சொல்வதை நினைப்பதில்லை. நினைப்பதைச் சொல்வதில்லை. ஒரு அரசியல்வாதி மூலமாக நீங்கள் உங்களை நன்றாகப் புரிந்து கொள்ளலாம்..

அரசியல்வாதி வேறு யாரும் அல்ல நீங்கள்தான். பெரிதாக்கப்பட்ட நீங்கள்தான் அரசியல்வாதி. உங்கள் மனதைப் பூதக்கண்ணாடியின் மூலம் பார்த்தால் எப்படி இருக்கும்? அரசியல்வாதியின் மனம் அப்படித்தான் இருக்கும். தலைவன் என்பவன் தொண்டனின் பெரிதாக்கப்பட்ட படிவம். பூதக்கண்ணாடியின் மூலம் ஒரு பொருளைப் பார்த்துப் புரிந்து கொள்வது எளிது.

தலைவர்களைப் புரிந்து கொள்வது அத்தியாவசியமானது. ஏனென்றால் தலைவர்கள்தான் பெரிய குரங்குகள்.

நீங்கள் உங்கள் தலைவர்களைப் பின்பற்றுவதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? கொஞ்சம் ஆழ்ந்து பார்த்தால் அவர்கள் உங்களைப் பின்பற்றுகிறார்க்ள். எந்தத் தலைவனும் தன் தொண்டர்களைப் பின்பற்றிக் கொண்டேயிருக்கிறான். அவன் எப்போதும் நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை உன்னிப்பாகக்

கவனித்துக் கொண்டேயிருக்கிறான். எந்தப் பக்கம் காற்றடிக்கிறது என்று அவன் தொடர்ந்து பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். அந்த இடத்திற்குத் தொண்டர்களுக்கு முன்னால் அவன் போய்ச் சேர்ந்துவிட வேண்டும்.

ஒரு முறை முல்லா நசிருதீன் தன் கழுதையின் மேல் அமர்ந்து எங்கோ போய்க் கொண்டிருந்தார். கழுதை மிகவும் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

அவருடைய நண்பர் கேட்டார் ''எங்கே போகிறீர்கள் முல்லா?''

''உங்களிடம் உண்மையை மறைக்க விரும்பவில்லை. நீங்கள் கழுதையையே கேளுங்கள்.''

''என்ன உளறுகிறீர்கள்?''

''நான் உளறவில்லை ஐயா. உண்மையைத்தான் சொல்கிறேன். இந்தக் கழுதை அநியாயத்திற்குப் பிடிவாதம் பிடிக்கிறது. அதனால் மிகவும் கஷ்டப்படுகிறேன். ஏதாவது ஒரு கிராமம் வழியாக இல்லை சந்தை வழியாகப் போகும் போது நான் இந்த வழியில் போ என்று சொன்னால் இது வேறு வழியில் போகும். இதனால் எல்லாரும் என்னைக் கேலி செய்கிறார்கள். 'என்ன ஆ:ளுய்யா நீ, உன் கழுதை கூட நீ சொல்றதக் கேக்க மாட்டேங்குது.' என்று என் காதுபடவே பேசுகிறார்கள். அதனால் இப்போது ஏற்பாட்டை மாற்றிவிட்டேன். கழுதை எங்கே போகிறதோ நானும் அங்கேயே போகிறேன். பார்ப்பவர்கள் கழுதை நான் சொல்வதைக் கேட்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மையில் இந்தக் கழுதை சொல்வதைத்தான் நான் கேட்கிறேன். இந்தப் புதிய ஏற்பாட்டில் கழுதையும் சந்தோஷமாக இருக்கிறது. என் கௌரவமும் கெடவில்லை.''

ஒவ்வொரு பெரிய தலைவனும் தன் தொண்டர்களைப் பின்பற்றுகிறான். காற்று எந்தப் பக்கம் அடிக்கிறது. அது தன் தொண்டர்களை எந்தப் பக்கம் இழுக்கும் என்று கணிக்கிறான். அந்த இடத்துக்கு முன்னதாகவே போய்விடுகிறான். அதுதான் தலைவனின் தொழில் ரகசியம். மக்கள் எதை விரும்புகிறார்கள்

என்று தலைவன் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். அவர்களுக்கு என்ன வேண்டும் என்று அவர்கள் உணரும் முன்னால் அவர்கள் கோஷம் போட ஒரு கவர்ச்சி வாசகத்தைக் கொடுத்துவிட வேண்டும். அதன்பின் அவர்கள் நாய்களைப் போல் தலைவர்களைப் பின் தொடர்வார்கள்.

இந்தக் குரங்கு ஒரு தலைவனாக இருந்திருக்க வேண்டும். அந்த இளவரசனைப் பார்த்துக் கூட அது அஞ்சவில்லை என்று மற்ற குரங்குகளுக்குப் புரிய வைக்க வேண்டும். மற்ற குரங்குகள் சாதாரணமானவை. வேட்டையாட வரும் இளவரசனைக் கண்டவுடன் அவை ஓடி ஒளிந்துவிட்டன. ஆனால் இந்தக் குரங்கோ தன்னை ஒரு அரசனாக நினைத்துக் கொண்டிருக்கிறது. அதனால் அது அங்கே தனித்து இருக்க வேண்டியதாயிற்று. அப்படி இருந்தால்தான் மற்ற குரங்குகளின் பார்வையில் அதன் மதிப்பு ஏறும்.

> **ஒரு குரங்கு மட்டும் எதைப்பற்றியும் கவலைப் படாமல் கிளைக்குக் கிளை தாவி விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தது. இளவரசன் அந்தக் குரங்கின் மேல் ஒரு அம்பைத் தொடுத்தான்.**

இளவரசர்களும் வித்தியாசமானவர்கள் அல்லர். அந்தக் குரங்கின் செய்கை தன்னை அவமானப்படுத்தியதாக உணர்ந்தான் இளவரசன். தன்னைப் பார்த்துப் பயந்து ஓடிய மற்ற குரங்குகளைப் பார்த்து அவன் சந்தோஷப்பட்டான்.

'நான் எவ்வளவு பெரிய இளவரசன்! கேவலம் ஒரு குரங்கு என்னை அவமானப்படுத்துவதா? அது தன்னைப் பெரிய பிஸ்தாவாகக் காட்டிக் கொள்வதா?' என்று நினைத்தான் இளவரசன்.

சூழ்நிலையைப் பாருங்கள். அந்த இளவரசனுக்கும் தொண்டர்கள் இருந்தார்கள். அவர்கள் பார்வையில் அவன் மதிப்பு போய்விடுமே என்று கவலைப்பட்டான். 'என்ன இது ஒரு குரங்கு கூட நம் இளவரசரை மதிக்காமல் தவ்விக் குதிக்கிறது?' என்று அவர்கள் நினைத்துவிடுவார்களே என்று அஞ்சினான் இளவரசன். அந்தக் குரங்கைக் கொன்றேயாக வேண்டும் என்ற

நிலைக்கு வந்துவிட்டான். நீங்கள் மனிதனாக இருந்தாலும் சரி குரங்காக இருந்தாலும் சரி விளக்கம் ஒன்றுதான்.

**இளவரசன் அந்தக் குரங்கின் மேல் ஒரு அம்பைத் தொடுத்தான். ஆனால் அந்தக் குரங்கோ லாகவகமாக அந்த அம்பைக் கையில் பிடித்து விட்டது.**

**இளவரசன் தன் ஆட்களிடம் அந்தக் குரங்கின் மேல் ஒரே நேரத்தில் சரமாரியாக அம்பு தொடுக்குமாறு ஆணையிட்டான்.**

இந்தக் குரங்கு கொஞ்சம் தலைக்கனம் உள்ள குரங்காக இருக்க வேண்டும்.. அகம் பிடித்த கழுதையாக இருக்க வேண்டும். இந்த வேடிக்கையைப் பாருங்கள். அந்த இளவரசன் குரங்கின் அகந்தையைத் துல்லியமாகக் கண்டுபிடித்துவிட்டான். தன்னுடைய அகந்தையை அவனால் இனம் கண்டு கொள்ள முடியவில்லை. இதுதான் இன்று உலகம் முழுவதும் நடக்கிறது. உங்களுடைய எந்த உறவிலும் நீங்கள் மற்றவர்களின் அகந்தையை உணர்வீர்கள். உங்கள் அகந்தையை உங்களால் உணரமுடியாது. உங்கள் அகந்தை அடுத்தவர்களுக்குத்தான் தெரியும்.

மேலே சொன்ன குரங்குக் கதையை எழுதியவன் ஒரு மனிதன். இதே கதையை ஒரு வேளை குரங்குகள் எழுதியிருந்தால் அது வேறு மாதிரி இருந்திருக்கும். குரங்குகள் கூட்டத்தில் ஷுவாங் ட்சுவைப் போன்ற ஒரு ஞானி இருந்திருந்தால் அந்த ஞானக் குரங்கு இந்தக் கதையை எழுதியிருந்தால்.. சற்று கற்பனை செய்து பாருங்களேன்.. .. அப்போது கதையின் போக்கு எப்படி இருந்திருக்கும்? ;இளவரசன் தலைக்கனம் பிடித்தவனாக இருந்தான். பிடித்த முயலுக்கு மூன்று கால் என்று பிடிவாதம் பிடிக்கும் மூர்க்கனாக இருந்தான். தேவையில்லாமல் வன்முறையைக் கையாளும் முரடனாகவும் இருந்தான். குரங்கு அவனை என்ன செய்தது? அது தன் போக்கில் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தது. அவ்வளவுதான். அது ஏன் இளவரசனைக் கோபப்படுத்த வேண்டும்? அந்தக் குரங்கை

அவன் ஏன் கொல்ல வேண்டும்? அந்த இளவரசன் கர்வம் பிடித்தவன். முதலில் அவன் அந்தக் குரங்கைக் கொல்ல முயற்சி செய்தான். குரங்கு தன்னைத் தற்காத்துக் கொண்டது. அது வேறு எந்தத் தப்பும் செய்யவில்லையே?

குரங்கின் கோணத்திலிருந்து இந்தக் கதையைப் பார்த்தால் அது முற்றிலும் வேறு மாதிரி இருக்கும். ஆனால் அடிப்படை ஒன்றுதான். ஒரு ஞானி ஒவ்வொரு பிரச்சினையையும் அடுத்தவர் கோணத்திலிருந்து பார்க்கிறான். ஒரே ஒரு கோணத்திலிருந்து பிரச்சினையைப் பார்த்தால் நீங்கள் ஒரு நாளும் ஞானியாக இருக்க முடியாது. சில நேரங்களில் அடுத்தவருடைய காலணிகளை அணிந்து கொண்டு அவர் பாதையில் நடந்து பாருங்கள். அப்போதுதான் ஒரு பிரச்சினையின் பல கோணங்கள் தெரியும்.

என்னிடம் தம்பதிகள் வருகிறார்கள். அவர்கள் பிரச்சினை பெரிய பிரச்சினை. திருமண உறவிலேதான் எத்தனை அகந்தை, அழுத்தம், பொய், நடிப்பு.. ஒரு கட்டத்தில் திருமண வாழ்க்கையே நரகமாகிவிடுகிறது. என்னிடம் வரும் தம்பதிகளுக்கு நான் தரும் ஒரே அறிவுரை - ஒரு நாளாவது அடுத்தவர் வாழ்க்கையை வாழ்ந்து பாருங்கள். கணவன் மனைவியாக இருக்கட்டும். மனைவி கணவனாக இருக்கட்டும். அப்படி இருபத்திநான்கு மணி நேரம் இருந்துவிட்டால் அடுத்தவரைப் புரிந்து கொள்வது எளிது. ஒரு மணிநேர விவாதத்தில் கூட அடுத்தவர் பக்கமிருந்து பேசுங்கள். அழுத்தமெல்லாம் ஓடிப் போய்விடும்.

அடுத்தவரின் உணர்வுகளைப் புரிந்து கொள்ள நம் மனத்தில் நெகிழ்வு வேண்டும். மாலை நேரம். கணவன் தன் பணி முடிந்து வருகிறான். மனைவியிடம் ஏதோ சொல்கிறான். மனைவிக்கு சுர்ரென்று கோபம் வருகிறது. 'அப்படி என்ன தவறாகச் சொல்லிவிட்டேன்?' என்று அப்பாவியாய் அங்கலாய்க்கிறான் கணவன்.

அந்தக் கணவனுக்கு நான் சொல்வதெல்லாம் இதுதான். கொஞ்சம் யோசியுங்கள். உங்கள் மனைவியின் கண்கள் மூலமாகப் பாருங்கள். உங்களை மனைவியாக நினைத்துக்

கொள்ளுங்கள் உங்கள் கணவன் மாலை வந்ததும் நீங்கள் சொன்ன வாக்கியத்தைச் சொன்னதாக நினைத்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் உங்கள் மனைவியின் உணர்வுகள் புரியும். மற்றவர்களைப் புரிந்து கொண்டால் உங்களை நீங்களே இன்னும் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். அடுத்தவர் கண்களுக்கு நீங்கள் அகம்பிடித்தவராகத் தெரிவீர்கள். ஆனால் உங்கள் கண்களுக்கு நீங்கள் எப்போதுமே அடக்கமான உத்தம புருஷனாகத் தெரிவீர்கள். உங்களிடம் உள்ள குறைகளைப் பொறுத்தமட்டில் நீங்கள் குருடாகவே இருப்பீர்கள்.

அந்த இளவரசனும் அப்படித்தான். அந்தக் குரங்கு திமிருடன் இருக்கிறது. தன்னை வல்லமை படைத்ததாகக் காட்டிக் கொண்டிருக்கிறது என்பதை அவன் கண்டான். அது சரி அது ஏன் அவனுக்குச் சினமூட்ட வேண்டும்? குரங்கு என்ன வேண்டு மானாலும் செய்யட்டுமே? குரங்கு குரங்குத்தனம்தானே செய்யும்? அது தன் வாழ்க்கையை அனுபவித்துப் போகட்டுமே! இவன் என்ன செய்யப் போகிறான்? அந்தக் குரங்கு யாரையும் காயப்படுத்தவில்லையே! யார்க்கும் தீங்கிழைக்கவில்லையே! அதுதன் போக்கில் ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்குத் தாவிக் கொண்டிருக்கிறது. அதற்கு அது ஒரு விளையாட்டு. விளையாடிவிட்டுப் போகட்டுமே? குரங்கின் விளையாட்டில் இளவரசன் ஏன் தன் மூக்கை நுழைக்க வேண்டும்? குரங்கு தன்னை அவமானப்படுத்திவிட்டதாக ஏன் கருத வேண்டும்.?

தன் செயல்களின் மூலம் குரங்கு என்ன சொன்னது?

"நீ ஒன்றுமில்லாத ஆள். எனக்கு உன்னைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை. நீ மனிதர்களுக்கு வேண்டுமானால் இளவரசனாக இருக்கலாம். அதனால் என்ன? குரங்குகளை பொறுத்தமட்டில் நீ ஒரு வெற்றுப் பயல். குரங்கினத்தைப் பொறுத்தமட்டில் நான் கூட ஒரு இளவரசன்தான். உன்னால் என்னைப் போல் கிளைக்குக் கிளை தாவ முடியுமா?"

குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் என்ற பேருண்மையை விஞ்ஞானி டார்வின் கண்டுபிடித்த போது யாரோ அவரிடம் சொன்னார்களாம்.

''எதற்கும் ஒரு வார்த்தை குரங்கையும் கேட்டுப் பாருங்கள்.''

எனக்கும் அதுதான் தோன்றுகிறது. இந்த விஷயத்தைக் குரங்குகளிடம் சொன்னால் அவை என்ன சொல்லும்? குரங்கின் நிலையிலிருந்து மனிதன் பரிணாம வளர்ச்சி பெறவில்லை. குரங்கு மனிதனானது பரிணாம வீழ்ச்சி. பாருங்கள் குரங்குகள் மனிதனைவிட வலிமையானவை. மனிதனால் செய்ய முடியாத சிலவற்றைக் குரங்கினால் செய்ய முடியும். பொதுவாகவே மனிதர்களைவிட குரங்குகள் இன்னும் மகிழ்ச்சியாகவே வாழ்கின்றன. மனிதர்களைவிட வாழ்க்கையின் சுகங்களை நன்றாகவே அனுபவிக்கின்றன. மனிதனாகப் பரிணாம வளர்ச்சி பெற்று என்ன கண்டீர்கள்? அழிக்கும் ஆயுதங்களைக் கண்டு பிடித்தீர்கள். அணுகுண்டுகளைத் தயாரித்தீர்கள். சலிப்படையச் செய்யும் சில உபகரணங்களைக் கண்டுபிடித்தீர்கள். உருப்படியாக வேறு என்ன செய்தீர்கள்?

குரங்கிலிருந்து மனிதன் தோன்றியதை ஏன் பரிணாம வளர்ச்சி என்று சொல்ல வேண்டும்? குரங்குகளிடம் சொல்லிப் பாருங்கள். உங்களை எள்ளி நகையாடும். உங்களை முட்டாள்கள் என்று சாடும். உங்களால் நான்கு காலில் நடக்க முடியுமா? குரங்கைப் போல் மரம் ஏற முடியுமா?

இந்தக் கதையில் வரும் குரங்கும் இளவரசனும் ஒரே நிலையில்தான் இருந்தார்கள்.

***இளவரசன் அந்தக் குரங்கின் மேல் ஒரு அம்பைத் தொடுத்தான். ஆனால் அந்தக் குரங்கோ லாகவகமாக அந்த அம்பைக் கையில் பிடித்து விட்டது.***

குரங்கைவிட இளவரசனிடம் இன்னும் அதிக வன்முறை இருந்தது. குரங்கு தன் திறமையைப் பீற்றிக் கொண்டது. அதை ஏன் கொல்ல வேண்டும்? உயிரினங்களிலேயே அதிகபட்ச வன்முறை இருப்பது மனிதனிடம்தான்.

ஜப்பானின் டோக்கியோ நகரில் ஒரு மிருகக்காட்சிசாலை இருக்கிறது. டோக்கியோ போக நேர்ந்தால் அதைப் பார்க்காமல்

வராதீர்கள். நூற்றுக்கணக்கான கூண்டுகள். அதில் பல்வேறு காட்டு விலங்குகள் இருக்கின்றன. கடைசிக் கூண்டில் ஒரு அறிவிப்பை வைத்திருக்கிறார்கள். "இருப்பதிலேயே மிகவும் அபாயகரமான மிருகம்". அந்தக் கூண்டு காலியாக இருக்கும். உள்ளே பார்த்தால் உலகத்திலேயே மிகவும் ஆபத்தான மிருகத்தைக் காணலாம். ஆமாம் அங்கே ஒரு கண்ணாடி இருக்கும். அதில் உங்களையே பார்த்துக் கொள்வீர்கள்.

குரங்கின் அகந்தையில் ஒரு வெகுளித்தனம் இருந்தது. விலங்குகளுக்கு அகந்தை இருக்கிறது. ஆனால் அதில் ஒரு வெகுளித்தனம் இருக்கிறது. மனிதனின் அகந்தையில் ஒரு வக்கிரம் இருக்கிறது. வன்முறை மிகவும் அதிகமாக இருக்கிறது. அதிகபட்ச வன்முறை உள்ள விலங்கு மனிதன்தான். கரடி புலி சிங்கம். எல்லாமே கொல்கின்றன. அவை உணவிற்காகக் கொல் கின்றன. மனிதன் மட்டுமே வேடிக்கைக்காகக் கொல்கிறான். கொல்வது மனிதனுக்கு சுகமான பொழுதுபோக்கு. புலியின் மாமிசத்தைச் சாப்பிடப் போவதில்லை என்று நிச்சயமாகத் தெரிந்திருந்தும் ஏன் புலியைக் கொல்ல வேண்டும்? கொல்வது என்பது மனிதனுக்கு ஒரு விளையாட்டு. வேட்டையாடுவது என்பது கிரிக்கெட்டைப் போல் ஒரு விளையாட்டு. உலகத்தின் எந்த விலங்கும் தன் இனத்தைச் சேர்ந்தவற்றை கொல்வதில்லை. ஒரு சிங்கம் மற்றொரு சிங்கத்தைக் கொல்லாது. ஒரு குரங்கு மற்றொரு குரங்கைக் கொல்லாது.

மனிதன் மட்டும்தான் மற்றொரு மனிதனைக் கொல்கிறான். மற்ற விலங்கு இனங்களுக்கு இயற்கையாகவே ஒரு பாதுகாப்பு வளையம் இருக்கிறது. எந்த விலங்கும் தன் இனத்தைச் சேர்ந்த மற்றொரு விலங்கைக் கொல்லாது. இதை விலங்கியல் விஞ்ஞானிகள் ஏற்றுக் கொள்கின்றனர். மனிதனின் அமைப்பில் ஏதோ தவறு நடந்திருக்கிறது. தன் இனத்தாரை அழிப்பதில் அதீத ஆர்வம் காட்டும் ஒரே இனம் மனித இனம்தான். விலங்கு களுக்கிடையே உலகப்போர் நடந்ததில்லை. பெரிய அளவில் சண்டைகள் நடந்ததில்லை. தனிச் சண்டைகள் நிகழலாம். மனிதர்கள் மத்தியில் நடப்பது போல் ஒரு கூட்டமே போரில் கலந்து கொள்வதில்லை.

விலங்குகள் எளிதாகத் தங்கள் பிரச்சினைகளைப் புரிந்து கொள்கின்றன. இரண்டு நாய்கள் சண்டை போட்டால் சில நிமிடங்களிலேயே நிலைமையைப் புரிந்து கொண்டு சமாதானம் ஆகிவிடுகின்றன. மனிதன் எப்போதும் புரிந்து கொள்வதில்லை. மனிதனுக்கு உயிர்க் கொலையைவிட உன்னதமான தீர்வு தெரியாது.

இரண்டு நாய்களுக்கு இடையே நடக்கும் சண்டையைக் கவனித்திருக்கிறீர்களா? இரண்டும் சத்தம் போட்டுக் குரைக்கும். பல்லைக் காட்டும். ஒன்றன் மேல் ஒன்று குதிக்கும். ஆனால் எல்லாம் சும்மா பாவ்லாதான். எதிரியின் வலிமையை அளந்து கொண்டேயிருக்கும். நிஜமாகச் சண்டை போடாது. அதற்கான முஸ்தீபுகளைச் செய்து கொண்டேயிருக்கும். சண்டையே ஆரம்பித்திருக்காது. அதற்குள் ஒரு நாய் தன் பலம் குறைவு என்பதைக் கண்டுபிடித்துவிடும். உடனே வாலை ஆட்டும். அவ்வளவுதான் சண்டை ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே நின்றுவிடும் இப்போது இரண்டும் புரிந்துணர்வு ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டன. இரண்டு நாய்களுக்கும் இடையே எது மேல் எது கீழ் என்ற வரம்புகள் நிர்ணயிக்கப்பட்டு விட்டன. வலிமையான நாய் சண்டையில் ஜெயிக்கப் போகிறது. பின் வெட்டியாகச் சண்டை போட்டுக் காயப்படுத்திக் கொள்வானேன்.?

மனிதன்தான் முட்டாள்தனமான மிருகம். பலம் குறைந்தவன் தோற்றுவிடுவான். பலம் மிகுந்தவன் ஜெயித்துவிடுவான் என்பதை அவன் ஏற்றுக் கொள்ளவேமாட்டான். அது சாதாரணக் கணக்கு. அதுகூட மனிதனுக்குப் புரியாது. எதற்காகச் சண்டை போட வேண்டும்? அதற்கான அவசியமே கிடையாது. ஹிட்லர் ஸ்டாலினைப் பார்த்துக் குரைக்கலாம். ஸ்டாலின் பதிலுக்குக் குரைக்கலாம். தங்கள் பக்கம் இருக்கும் வல்லுனர்களை அழைத்து யாரிடம் எவ்வளவு பீரங்கிகள் எவ்வளவு போர் விமானங்கள் எவ்வளவு அணுகுண்டுகள் இருக்கிறது என்று கணக்கிடலாம். சில நிமிடங்களில் யாரிடம் பலம் அதிகம் என்பதைக் கண்டு பிடித்துவிடலாம். பலம் குறைந்தவர் வாலை ஆட்ட வேண்டியதுதான். போர்முனைக்குச் செல்லவே வேண்டாம்.

உட்கார்ந்து பேசிக் கண்டுபிடிக்கும் அதே விஷயத்தைத்தான் போரின் முடிவில் தெரிந்து கொள்ளப் போகிறார்கள். அதற்கு எதற்கு அவ்வளவு மனித உயிர்களை விரயமாக்க வேண்டும்?

ஆனால் அது நடக்காது. காரணம் மனிதர்கள் அகம் பிடித்த வர்கள். பலம் குறைந்தவன் கூட தான் ஜெயிக்கப் போவதாக நினைத்துக் கொண்டிருப்பான். விலங்குகள் இப்படித் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதில்லை. நாய்கள் போடும் போலிச் சண்டைகள் வெறும் பலப் பரீட்சைகள் மட்டுமே. யார் பலமுள்ளவர் என்பதைக் கண்டுபிடிப்பதற்காக நடத்தப்படும் பரீட்சைகள். அதைக் கண்டுபிடித்தவுடன் அது முடிந்துவிடும்.

அதன் முடிவில் வாலை ஆட்டும் நாயை நீங்கள் கோழை என்று சொல்வீர்கள். அது தவறு. அது புத்திசாலி. அதற்குத் தன் பலமும் தெரியும். எதிரியின் பலமும் தெரியும். அதன் பின் வீணாகச் சண்டைக்குப் போய் தன்னைத்தானே காயப்படுத்திக் கொள்வானேன்? யார் பலசாலி என்பது நிரூபணமாகிவிட்டது. அதுவும் வன்முறையில்லாமல் ரத்தம் சிந்தாமல் நிரூபணமாகி விட்டது. சண்டையின் மூலமாகவும் அதுதன் நிரூபணமாகப் போகிறது. பின் எதற்காக வெட்டியாகச் சண்டை போடு வானேன்? இப்படிச் சிக்கனமாக முடித்துக் கொண்டால் இருவருக்குமே நல்லதுதானே?

***இளவரசன் தன் ஆட்களிடம் அந்தக் குரங்கின் மேல் ஒரே நேரத்தில் சரமாரியாக அம்பு தொடுக்குமாறு ஆணையிட்டான்.***

இளவரசனின் முட்டாள்தனத்தைக் கவனியுங்கள். ஒரு குரங்கைக் கொல்ல சரமாரியாக எல்லாரும் அம்பு தொடுக்க வேண்டுமாம். ஒரு குரங்கைப் பலர் ஒரே சமயத்தில் தாக்கு கிறார்கள். என்ன கொடுமை இது?

***அடுத்த நொடி நூறு அம்புகள் அந்தக் குரங்கைத் தாக்க அது செத்து விழுந்தது.***

இளவரசனுக்கு அப்போது சுகமாக இருந்திருக்கும். அவன் சாதித்துவிட்டானே! ஆனால் அவனுடைய முட்டாள்தனத்தைப்

பாருங்கள். அவன் ஒரு நாட்டுக்கே இளவரசன் என்பதால் அவனிடம் நூறு பேர் இருந்திருப்பார்கள். நூறு பேர் சேர்ந்து ஒரே ஒரு குரங்கைக் கொல்வது பின் அந்த வெற்றியைக் கொண்டாடுவது.. சேச்சே. குரங்குகள் இந்தக் கேலிக்கூத்தைப் பார்த்துச் சிரித்திருக்கும்.

**அடுத்த நொடி நூறு அம்புகள் அந்தக் குரங்கைத் தாக்க அது செத்து விழுந்தது. இளவரசன் தன் தோழனான யென் புயி (Yen Pu'i) யிடம் சொன்னான்**

வேடிக்கையைப் பாருங்கள். இப்படி முட்டாள்த்தனமாக நடந்து கொள்ளும் போது கூட நம்மைப் புத்திசாலிகள் என்று காட்டிக் கொள்கிறோம். இளவரசன் தேவையில்லாமல் கொன்றிருக்கிறான். இதனை எப்படி வெற்றி என்று சொல்வது? ஒற்றைக் குரங்கை நூறு வீரர்கள் வில் அம்புடன் கொன்றிருக்கிறார்கள். குரங்கோ நிர்வாணமாக நிராயுதபாணியாக இருந்திருக்கிறது.

இது ஒரு வெற்றியா? சத்தியமாக இல்லை. இது நாகரிகம் கூட இல்லை. பொதுவாக ஒரு மனிதனுடன் சண்டை போட்டால் அவனுக்கும் நம்மிடம் இருப்பது போன்ற ஆயுதத்தைக் கொடுக்கிறோம். ஆனால் இங்கேயோ நூறு மனிதர்களுக்கு மேல் இருந்திருக்கிறார்கள். அனைவரின் கையிலும் வில் அம்பு இருந்திருக்கிறது. குரங்கின் கையில் எதுவும் இல்லை. ஒரு அப்பாவி விலங்கை அநியாயமாக கொடூரமாகக் கொன்றிருக்கிறார்கள்.

அந்த இளவரசன் ஒரு முட்டாள். ஆனால் அவன் சொல்லும் அறிவுரையைக் கவனியுங்கள். நாம் முட்டாளாக இருக்கும் போதுகூட நம்மை ஒரு ஞானியாகக் காட்டிக் கொள்கிறோம். அவன் என்ன சொல்கிறான்?

**''என்ன நடந்தது பார்த்தாயா? அந்தக் குரங்கு தன்னைப் புத்திசாலி என்று விளம்பரப்படுத்திக் கொண்டது. தன் திறமையை நம்பியது. அதன் காரணமாக யாருமே தன்னைத் தொட முடியாது**

**என்று நினைத்தது. கடைசியில் என்ன ஆயிற்று? மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!''**

இது நாம் புரிந்து கொள்ள வேண்டிய நுட்பமான விஷயம். அடுத்தவர்களுக்கு அறிவுரை சொல்லும் போது நாம் எல்லாருமே ஞானிகள்தான். ஆனால் நாம் அதே பிரச்சினையில் மாட்டிக் கொண்டால் அந்த ஞானத்தை நாம் பயன்படுத்திக் கொள்வதில்லை.

நம்மிடம் ஒருவர் பிரச்சினையைக் கொண்டுவந்தால் அவருக்குப் பிரமாதமாக அறிவுரை சொல்வோம். ஆனால் நமக்கே அப்படி ஒரு பிரச்சினை வந்தால் அந்த அறிவுரையை நமக்கே நாம் சொல்லிக் கொள்ள மாட்டோம். ஏன்? மற்றவர்கள் பிரச்சினை என்றால் நம்மால் விலகிநின்று விரலை மடக்கி உபதேசம் செய்ய முடிகிறது.

**இளவரசன் தன் தோழனான யென் புயி** (Yen Pu'i) **யிடம் சொன்னான்**

**''என்ன நடந்தது பார்த்தாயா? அந்தக் குரங்கு தன்னைப் புத்திசாலி என்று விளம்பரப்படுத்திக் கொண்டது. தன் திறமையை நம்பியது. அதன் காரணமாக யாருமே தன்னைத் தொட முடியாது என்று நினைத்தது. கடைசியில் என்ன ஆயிற்று? மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!''**

இளவரசனால் குரங்கின் முட்டாள்தனத்தைப் பார்க்க முடிந்தது. தன் முட்டாள்தனத்தைப் பார்க்க முடியவில்லை. என்னைப் பொறுத்தமட்டில் அந்த இளவரசன் குரங்கைவிடப் பெரிய முட்டாள்.

அவனும் தன் திறமையை விளம்பரப்படுத்திக் கொண்டான். அவனும் தன் திறமைகளைக் காட்டினான். அதை மனிதர்களிடம் மட்டும் காட்டவில்லை. குரங்குகளிடமும் காட்டினான். அவன் தான் யாரென்று காட்டிவிட்டான். இத்தனைக்கும் அவன் சாதாரண

மனிதன் இல்லை. ஒரு இளவரசன். இறுதியில் நண்பனுக்கு அறிவுரை சொல்கிறான்:

**மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!''**

அவன் சொல்லும் அறிவுரை சரிதான். அவன் நண்பனோ அந்த அறிவுரையை ஊன்றிக் கேட்டான். தன்னையே மாற்றிக் கொண்டான். ஆனால் இளவரசன் அப்படியே இருந்தான். அதனால்தான் சொல்கிறேன். உங்களிடம் கற்றுக்கொள்ளும் மனம் இருந்தால் நீங்கள் முட்டாள்களிடமிருந்துகூடப் பாடம் கற்க முடியும். அந்த மனம் இல்லாவிட்டால் உங்களால் புத்தனிட மிருந்து கூட எதையும் கற்க முடியாது. சில சமயங்களில் உங்களுக்கு அறிவுரை வழங்குபவர்கள் அப்படியே இருப்பார்கள். நீங்கள் மாறிவிடுவீர்கள்.

சில சமயம் ஆசிரியர்கள் அப்படியே இருப்பார்கள். சீடர்கள் வேகமாக முன்னேறி ஆசிரியர்களையும் கடந்து சென்று விடுவார்கள். அடுத்தவருக்கு அறிவுரை கொடுக்க முடிந்தால் நீங்கள் ஞானம் பெற்றுவிட்டீர்கள் என்று பொருள் இல்லை.

இளவரசன் கொடுத்த அறிவுரை அழகானது. தாவோ அதைத்தான் காலம் காலமாகச் சொல்லி வந்திருக்கிறது. தாவோ அதே அறிவுரையைத்தான் சொல்கிறது. ஆனால் தாவோவிற்கு அந்த இளவரசனின் மனப்பாங்கு இல்லை. ஷுவாங் ட்சு இந்தக் கதையில் தான் சொல்ல வந்ததை அந்த இளவரசன் மூலமாகச் சொல்லியிருக்கிறர். இளவரசன் ஒரு மேதாவியைப் போல்,, ஒரு புரோகிதனைப் போல் அவனுக்கு நல்ல விஷயத்தைச் சொல்லத் தெரியுமே தவிர அதன்படி நடக்கத் தெரியாது. பண்டிதனுக்கு வாழ்க்கை அனுபவம் இல்லை. வெறும் வாய் வார்த்தைதான். அந்த இளவரசன் இந்த அறிவுரையை தாவோ ஞானிகள் யாரிடமாவது கேட்டிருக்க வேண்டும். ஏனென்றால் இது தாவோவின் முக்கியமான தத்துவங்களில் ஒன்று.

***''என்ன நடந்தது பார்த்தாயா? அந்தக் குரங்கு தன்னைப் புத்திசாலி என்று விளம்பரப்படுத்திக் கொண்டது. தன் திறமையை நம்பியது. அதன்***

**காரணமாக யாருமே தன்னைத் தொட முடியாது என்று நினைத்தது. கடைசியில் என்ன ஆயிற்று? மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!''**

உன்னிடம் இருக்கும் திறமைகளைக் காட்டிக் கொள்ளாதே. அப்படிச் செய்தால் தேவையில்லாத பிரச்சினை வந்து சேரும். சில சமயம் அதனால் உன் உயிரையே இழக்க வேண்டியதிருக்கும்.

**மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!**

சரியான வார்த்தை. இளவரசனின் அறிவுரை சரிதான். யார் பேசுகிறார்கள் என்று பார்க்காதீர்கள். அவர்கள் சொல்வதை மட்டும் கவனியுங்கள். உங்களுக்குள் மாற்றம் வரும். இளவரசனின் நண்பன் புத்திசாலி. இளவரசன் சொன்ன அறிவுரையை அவனே கடைப்பிடித்தானா என்பதைப் பற்றி அவனுடைய நண்பன் கவலைப்படவில்லை.

புட்டிகளைப் பற்றிக் கவலைப்படுவானேன்? அவற்றுள் இருக்கும் மருந்தல்லவா நமக்கு முக்கியம்? அதை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். புட்டிகளை மறந்துவிடுங்கள். அவற்றின் உள்ளே இருப்பதைச் சுவைத்துப் பாருங்கள் அது சரியாக இருந்தால் போதும். புட்டி எப்படி இருந்தால் நமக்கு என்ன?

இந்தக் கதையில் வரும் இளவரசன் அந்தக் குரங்கைப் போல்தான் இருக்கிறான். சொல்லப் போனால் அவன் குரங்கைவிட மோசம். என்றாலும் தாவோவின் மகத்தான போதனை ஒன்று அவன் வாயிலாக வெளியே வந்திருக்கிறது. அவன் அதைப் பற்றிப் படித்திருக்காலம். அடுத்தவர் சொல்லக் கேட்டிருக்கலாம். அவன் சந்தித்த சூழ்நிலை அவனுள் புதைந்திருந்த இந்த போதனை வெளியே வரத் தூண்டியிருக்கிறது. நண்பனிடம் சொன்னான்:'' உன் திறமைகளை வெளிச்சம் போட்டுக் காட்டாதே. பந்தா செய்யும் பேர்வழியாக இருக்காதே. அப்படி இருந்தால் விரைவில் மாட்டிக் கொள்வாய்.''

**மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே.!**

ஏன்? ஒவ்வொரு மனிதனும் அகம்பிடித்தவன். உங்கள் திறமைகளை நம்பி செயல்பட்டால் தேவையில்,லாத பிரச்சினை வரும். காரணம், அதனால் நீங்கள் நிறைய பகைவர்களைச் சம்பாதித்துக் கொள்வீர்கள். தங்களைவிட உயர்வாக இருப்பவர்களை யாருமே விரும்பமாட்டார்கள்.

ஒருமுறை முல்லா நசிருதீன் என்னிடம் வந்தார். அவர் மிகவும் பரபரப்பாகக் காணப்பட்டார்

''என்ன ஆயிற்று?'' என்று கேட்டேன்.

''நீங்கள்தான் எனக்கு உதவ வேண்டும். சமீப காலமாக எனக்குப் பயங்கரமான தாழ்வு மனப்பான்மை வந்துவிட்டது. என்ன செய்வது என்றே தெரியவில்லை. நீங்கள்தான் எப்படியாவது.. ''

''அதைப் பற்றி இன்னும் கொஞ்சம் சொல்லுங்கள். இந்தத் தாழ்வு மனப்பான்மைக்கு என்ன காரணம்?''

''நான்தான் இருப்பதிலேயே மிகவும் உயர்ந்தவன் என்று எனக்கு நன்றாகவே தெரியும். ஆனால் சமீபகாலமாக மற்றவர்களும் எனக்குச் சமமாகத்தான் இருக்கிறார்கள் என்ற உணர்வு வருகிறது. இந்தத் தாழ்வு மனப்பான்மையில் மாட்டிக் கொண்டு தவியாகத் தவிக்கிறேன். நான் மற்றவர்களை விட எல்லா விதத்திலும் உயர்ந்தவன் என்று எனக்குப் புரிய வைத்து இந்த மனப்பான்மையைப் போக்குங்கள்.''

உங்கள் திறமையைக் காட்டும் போது அடுத்தவரிடம் அத்தகைய திறமையில்லை என்று சொல்லாமல் சொல்கிறீர்கள். இதனால் அடுத்தவர் காயப்படுகிறார். மற்ற குரங்குகள் எல்லாம் பயந்து ஓட இந்தக் குரங்கு மட்டும் மரத்திற்கு மரம் தாவிக் கொண்டிருந்தது இளவரசனைக் குத்திக் காட்டுவது போல் இருந்தது. உங்களிடம் உள்ள சிறப்பைக் காண்பித்தால், உங்கள் திறமைகளை நுட்பமான வழிகளில் காட்ட முற்பட்டால்

எல்லாருக்கும் கோபம் வரும். அவர்களால் உங்களை மன்னிக்க முடியாது. உங்களைப் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருப்பார்கள்

சிறப்பான எந்த மனிதனையும் பழிவாங்க மக்கள் கூட்டம் துடித்துக் கொண்டிருக்கிறது. ஏசுநாதர் ஏன் சிலுவையில் அறையப்பட்டார்? அவர் தங்களைவிடச் சிறப்பாக இருந்தது அவர் நாட்டு மக்களுக்குப் பிடிக்கவில்லை. அவருடைய மேன்மையை மக்கள் வெறுத்தார்கள். அவர் சிறப்புகள் மிக்கவர். அவர் இருப்பதை அவர்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவரைக் கொன்றேயாக வேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

ஏதன்ஸ் நாட்டு மக்களால் சாக்ரட்டீஸைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. சாக்ரட்டீஸைப் போல் கூர்மையான அறிவு படைத்தவர்கள் அதற்கு முன் அங்கே பிறந்ததில்லை. அதனால் எல்லாருக்கும் அவர் மேல் கோபம்.

ஷுவாங் ட்சு சொல்கிறார்: மனிதர்களோடு பழகும் போது உன்னிடம் உள்ள சிறப்புகளை நம்பாதே. மறைந்தே இரு.''

நான் சொல்லப்போவதை நன்றாகக் கவனியுங்கள். ஒரு தாவோ ஞானி கொல்லப்பட்டதாகவோ சிலுவையில் அறையப்பட்டதாகவோ விஷம் கொடுக்கப்பட்டதாகவோ வரலாறு இல்லை. ஏனெனில் அவர்கள் தங்கள் சிறப்புகளை நம்பியதில்லை. 'நான் உங்களிடமிருந்து வேறுபட்டவன்' என்று எந்த தாவோ துறவியும் சொல்வதில்லை. உங்களைவிட உயர்ந்தவர்கள் என்றோ உங்களைவிடப் புனிதமானவர்கள் என்றோ அவர்கள் பீற்றிக் கொள்வதில்லை. அவர்கள் மக்களோடு பழகும் போது மக்கள் அவர்களைவிட மேலானவர்கள் என்று தோன்றும்படி பழகுவார்கள்.

ஷுவாங் ட்சு சாதாரணமாகத்தான் வாழ்ந்தார். என்றாலும் அதில் ஒரு விவரிக்க முடியாத அழகு இருந்தது. அவருடன் இருந்தவர்களுக்கு அவருடைய மகத்தான பரிமாணங்கள் தெரியாது. அவர் சாதாரணமாக கிராமங்கள் வழியாக நடந்து போவார். ஒரு பெரிய ஞானி போகிறார் என்று யாருக்குமே தெரியாது.

ஒரு முறை அந்த நாட்டு மன்னன் ஷுவாங் ட்சுவின் ஞானத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு தன் அமைச்சரை அவரைத் தேடிக் கண்டுபிடிக்குமாறு அனுப்பினான். ஆனால் அவரை எங்கே கண்டுபிடிப்பது? அவருக்கு ஒரு வீடு இல்லை. விலாசம் இல்லை. ஒரு நாடோடியைப் போல் ஊர் ஊராகப் போய்க் கொண்டிருந்தார் ஷுவாங் ட்சு.

அவர் அடிக்கடி சொல்வார் : ''நீங்கள் ஒரே இடத்தில் வசித்து வந்தீர்களென்றால் உங்களை மறைத்துக் கொள்வது கடினம். மக்கள் சந்தேகப்பட ஆரம்பித்துவிடுவார்கள். கொஞ்சம் கொஞ்சமாக உங்களைப் பற்றித் தெரிந்து கொள்வார்கள். அதற்குள் அந்த இடத்தைவிட்டு வேறு இடத்திற்குச் சென்றுவிட வேண்டும். இல்லாவிட்டால் உங்களுக்குப் பிரச்சினை.'' அதனால் அவர் நிரந்தரமாக ஒரு இடத்தில் தங்கவில்லை. அவரை எப்படிக் கண்டுபிடிப்பது.?

என்றாலும் அவர்கள் முயன்று பார்த்தார்கள். சக்கரவர்த்தியின் கட்டளையாயிற்றே! பல தாவோ குருக்களைக் கேட்டார்கள்.

''ஷுவாங் ட்சுவை எங்கே பார்க்கலாம்?''

''அவர் காற்றைப் போல் மேகத்தைப் போல் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு யாருக்கும் தெரியாமல் போய்விடுவார். அவரைப் பார்ப்பது மிகவும் கடினம். கிராமம் கிராமமாகச் செல்லுங்கள். எங்காவது ஒரு கிராமத்தில் மிகவும் சாதாரணமான ஒரு மனிதன் இருப்பதாகச் சொன்னால் அவரைப் பிடியுங்கள். அவர்தான் ஷுவாங் ட்சு.''

இப்படித்தான் அவரைக் கண்டுபிடித்தார்கள் ஒரு கிராமத்தில் சொன்னார்கள்.

''ஆமாம் அப்படி ஒருவர் இருக்கிறார். அவர் இங்கே வந்து சில நாட்கள்தான் ஆகின்றன. மிகவும் சாதாரணமானவர் அவர். அவரைவிட சாதாரணமானவர்களை உங்களால் பார்க்கவே முடியாது.''

''சரி, அவர் எங்கே இருக்கிறார்.?''

''ஆற்றிலே மீன் பிடித்துக் கொண்டிருக்கிறார்.''

அமைச்சரின் ஆட்கள் அவரைத் தேடிக் கொண்டு போனார்கள். ஷுவாங் ட்சுவிடம் சொன்னார்கள்.

''மன்னர் உங்களைப் பற்றி விசாரித்தார். நாங்கள் உங்களை நாடு முழுவதும் தேடிக் கொண்டிருந்தோம். உங்களுக்கு அரசவைக்கு வர விருப்பமா? மன்னனுக்கு குருவாக இருக்க விருப்பமா?''

''கொஞ்சம் அவகாசம் கொடுங்கள் யோசித்துச் சொல்கிறேன்..''

மறுநாள் அவரை அந்தக் கிராமத்தில் காணவில்லை. எப்படியோ தப்பித்துச் சென்றுவிட்டார்.

தாவோவின்பாற்பட்டவன் அடையாளமே இல்லாமல் வாழ்கிறான். ஏன்? உங்கள் ஞானத்தை நீங்கள் காண்பித்தால் மக்கள் உங்களை மன்னிக்கவே மாட்டார்கள். முட்டாள்களைக் கூட மன்னித்துவிடுவார்கள். ஞானிகளை மன்னிக்கவே மாட்டார்கள். அதனால்தான் ஏசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்கள். சாக்ரடீஸுக்கு விஷம் கொடுத்தார்கள். ஏசுநாதர் முன்பும் சாக்ரட்டீஸ் முன்பும் நீங்கள் மிகவும் தாழ்ந்தவர்களாக உணர்கிறீர்கள். பின் அவர்களை எப்படி மன்னிக்க முடியும்? இளவரசனின் வீரர்கள் அந்த ஒற்றைக் குரங்கின் மேல் சரமாரியாக ஒரே சமயத்தில் அம்பு தொடுத்ததைப் போல் நீங்களும் உங்கள் ஞானிகளைச் சரமாரியாகத் தாக்குகிறீர்கள். அது மனிதனின் இயற்கையான குணம். அந்த ஞானியைக் கொன்றுபோட்ட பிறகுதான் உங்கள் பாரம் குறைந்ததைப் போல் இருக்கும். ஏசுநாதர் மேன்மையாவர். அவர் பக்கத்தில் நின்றாலே நீங்கள் தாழ்ந்தவர் என்று உணர்வீர்கள். இதனால் ஏசுநாதர் தன்னை மறைத்துக் கொள்ள வேண்டும். அதுதான் இந்தக் கதையின் சாரம். இது அடிப்படையான உண்மை

**அவர்கள் வீடு திரும்பியதும் யென் புயி ஒரு துறவியிடம் சீடனாகச் சேர்ந்தான். தன்னைச் சிறந்தவனாகக் காட்டும் எல்லாவற்றையும்**

**தொலைத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தான். இன்பத்தைத் துறந்தான். தன்னிடம் உள்ள ஒவ்வொரு சிறப்பையும் மறைத்து வைக்கக் கற்றுக் கொண்டான்.**

**அவன் எப்படிப்பட்டவன் என்று யாராலும் கணிக்க முடியாத நிலை விரைவிலேயே ஏற்பட்டது.. இப்போது எல்லாரும் அவனை ஒரு பயம் கலந்த மரியாதையுடன் பார்த்தார்கள்.**

இதில் பல போதனைகள் பொதிந்திருக்கின்றன. இந்த யென் புயி ஒரு புத்திசாலியாகத்தான் இருக்க வேண்டும். சொன்னது யார் என்பதைப் பார்க்காமல் சொல்லப்பட்ட விஷயம் என்ன என்பதை மட்டும்தான் அவன் பார்த்தான்.

ஆனால் நீங்கள் அப்படியில்லை. மருந்தைவிட மருந்துபுட்டியைத்தான் நீங்கள் அதிகம் பார்க்கிறீர்கள். உங்களிடம் நான் ஏதாவது சொன்னால் நீங்கள் என்னைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறீர்கள். ‘இந்த மனிதனை நம்பலாமா? இவன் சொல்லும் நிலையை இவன் முதலில் அடைந்துவிட்டானா?’

முதலில் உங்களுக்கு என்னைப் பற்றிய நம்பிக்கை வரவேண்டும் என்று நினைக்கிறீர்கள். அது நடக்காத காரியம். நான் சொல்வதைக் கேளுங்கள். என்னை மறந்துவிடுங்கள். நான் அடைந்துவிட்டேனா இல்லையா என்பது என் பிரச்சினை. உங்கள் பிரச்சினை அல்ல. அதைப்பற்றி நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்.? நான் சொல்வது மனதுக்குப் பிடித்திருந்தால் அதை முயற்சி செய்து பாருங்களேன். மருத்துவரைச் சொல்லவில்லை. மருந்தைச் சொல்கிறேன்.

மருத்துவரைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். மருந்தைப் பற்றி மட்டுமே கவலைப்படுங்கள். மருந்துதான் உங்கள் நோயைத் தீர்க்கப் போகிறது. ஒரு போலி மருத்துவரிடமிருந்து கூட உண்மையான மருந்து கிடைக்கலாம். யார் கண்டது? இல்லை இதற்கு நேர் மாறாகவும் நடக்கலாம். ஒரு உண்மையான மருத்துவரிடமிருந்து போலி மருந்து கிடைக்கலாம். ஆக மொத்தம் மருந்துதான் முக்கியம்.

இந்த மனிதன் யென் புயி ஒரு அறிவுள்ள மனிதனாக இருக்க வேண்டும். அப்படி இல்லையென்றால் அவன் என்ன செய்திருப் பான்?

''இந்த இளவரசன் ஒரு முட்டாள். சிறப்புகளோடு வாழாதே என்று எனக்கு அறிவுரை கொடுத்துவிட்டு அவன் அதையேதான் செய்து கொண்டிருக்கிறான்.'' என்று நினைத்திருப்பான்.

அரசர்களைப் போல் யாருமே வாழ்வதில்லை. அவர்கள் வாழ்க்கையே ஒரு காட்சிப் பொருள். அரியணையில் அமர்ந் திருக்கிறார்கள். தங்கள் நடவடிக்கைகள் மூலம் தாங்கள் மக்களிலிருந்து வேறுபட்டவர்கள் என்று பறை சாற்றிக் கொண்டேயிருக்கிறார்கள். தங்களுக்கும் சாமானிய மக்களுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளியை உருவாக்கிக் கொண்டிருக் கிறார்கள்.

நீங்கள் ஒரு அரசனின் தோளில் சாதாரணமாகக் கை போட முடியாது. அரசனுக்கு மூக்கிற்கு மேல் கோபம் வந்துவிடும். 'என்ன செய்யத் துணிந்தாய் நீ? நீயும் நானும் ஒன்று என்றா நினைத்துக் கொண்டிருக்கிறாய்? தோளில் கை போடுகிறாயே?'

அந்தக் குற்றத்திற்காக நீங்கள் கொல்லப்படுவீர்கள்.

ஜெர்மானிய சர்வாதிகாரி ஹிட்லர் யாரையும் தன் தோள் மேல் கைபோட அனுமதிக்க மாட்டானாம். அவனுக்கு ஒரு நண்பன் கூடக் கிடையாது. யாருமே அவனை ஹிட்லர் என்று அழைக்கக் கூடாது. ஃப்யூரர் அல்லது தலைவர் என்றுதான் அழைக்க வேண்டும். பெயர் சொல்லி அழைத்தால் நட்பு வந்துவிடும் அல்லவா?

அதனால்தான் அவன் எந்தப் பெண்ணையும் காதலிக்க வில்லை. ஒரு பெண்ணைக் காதலித்தால் அவளை உங்களுக்குச் சமமாக நடத்த வேளண்டுமே! பெண்கள் புத்திசாலிகள். அவர்களைக் காதலித்தால் அவர்கள் உங்களுக்குச் சமமாக மட்டும் இல்லை உங்களைவிட மேலாக இருப்பதற்கும் முயற்சி செய்வார்கள். அதை நிரூபிக்கவும் செய்வார்கள்.

பல வருடங்களாக ஹிட்லர் ஒரு பெண்ணுடன் வாழ்ந்து வந்தான். ஒரு நாள், ஒரு சின்ன நிகழ்ச்சி நடந்தது. அந்தப் பெண்ணின் தாய் நோய்வாய்ப்பட்டு மருத்துவமனையில் இருந்தாள். அம்மாவைப் பார்த்துவிட்டு வருகிறேன் என்று ஹிட்லரிடம் அனுமதி கேட்டாள் அந்தப் பெண். கூடாது என்று மூர்க்கத்தனமாக மறுத்துவிட்டான் ஹிட்லர். அந்தப் பெண் அதற்கு மேல் அந்த விஷயத்தைப் பற்றிப் பேசவில்லை. ஹிட்லர் வெளியே போனவுடன் யாருக்கும் தெரியாமல் தன் தாயைப் பார்த்துவிட்டு வந்துவிடலாம் என்று திட்டம் போட்டாள்.

ஹிட்லர் வெளியே போனான். அந்தப் பெண் அவசரம் அவசரமாக மருத்துவமனைக்கு ஓடினாள். தாயைப் பார்த்துவிட்டு ஹிட்லர் வீடு திரும்புவதற்கு முன் திரும்பிவிட்டாள். ஹிட்லர் தன் வீட்டிற்குக் காவல் நின்றவனிடம் அந்தப் பெண் வெளியே போய்வந்தாளா என்று கேட்டான். ஆம் என்று சொன்னான் காவலன். அந்தப் பெண் மருத்துவமனைக்குப் போனாளா என்று கேட்டான். அதற்கும் ஆம் என்ற பதில்தான் கிடைத்தது. வீட்டிற்குள் நுழைந்தான். கையிலிருந்த துப்பாக்கியால் அந்தப் பெண்ணைச் சுட்டுக் கொன்றான். அதன்பிறகுதான் அவனுடைய கோபம் அடங்கியது.

இது என்ன காதல், கன்றாவிக் காதல்? அடிமைகளுக்கு மட்டும்தான் அனுமதி என்றால் அது காதல் இல்லை. வேறு ஏதோ ஒரு அசிங்கமான உறவு. அன்பும் காதலும் சமத்துவத்தைக் கொடுக்க வேண்டும். அகம் பிடித்தவர்கள் காதலிக்க முடியாது. காரணம் காதலில் இருவரும் சரிநிகர் சமானம். இந்த உலகிலேயே இரண்டு சக்திகள்தான் பரிபூரண சமத்துவத்தைக் கொடுக்கின்றன. ஒன்று காதல் மற்றொன்று சாவு.

நீங்கள் ஒருவரை நேசித்தால் அவருக்குச் சமமாகி விடுகிறீர்கள். நீங்கள் உண்மையிலேயே காதல் வயப்பட்டால் இருப்புநிலையில் அனைத்துமே சமம் என்பதை உணர்வீர்கள். யாரும் தாழ்ந்தவர்கள் இல்லை. யாரும் உயர்ந்தவர்கள் இல்லை. அனைவரிடமும் ஒரு தனித்தன்மை இருக்கிறது. காதல் வயப்படும்போது நீங்கள் மொத்த இருப்புநிலையுடன் ஒருமித்து

இருக்கிறீர்கள். எல்லாமே சமமாக இருக்கிறது. அனைத்திற்கும் ஒரே மதிப்புதான்.

சாவும் அதுபோல்தான். சாவு மனிதர்களுக்கிடையே இருக்கும் அனைத்து வித்தியாசங்களையும் அழித்துவிடுகிறது. ஹிட்லரின் பிணத்துக்கும் தெரு நாயின் பிணத்துக்கும் வித்தியாசம் கிடையாது. இல்லை செத்த ஹிட்லருக்கும் செத்த புத்தனுக்கும்தான் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியுமா? இரண்டுமே பிணங்கள்தான். மண்ணிலிருந்து வந்தது மண்ணிற்கே போய் விட்டது.

மனதில் அன்பு இருந்தால் பாறைகள் கூட உங்களுக்குச் சமமானது என்பதை உணர்வீர்கள். காதல் வயப்பட்டால் சமநிலையின் துடிப்பை அனைத்திலும் காண்பீர்கள். - ஒரு பாறாங்கல்லில் கூட அதைக் காண்பீர்கள். அந்த நிலையில் உங்களுக்கு மரணம் இல்லை. உங்களால் சாக முடியாது. காரணம் நீங்கள் இருப்புநிலையோடு ஒன்றிவிட்டீர்கள். இந்த ஒருமிப்பில் தொடரும். உருவங்கள் மாறலாம். உங்கள் உடல் ஒரு நாள் இல்லாமல் போகலாம்.. ஆனால் உள்ளே இருக்கும் ஒருமை அப்படியே இருக்கும். அலைகளில் எழுவீர்கள், மரங்களில் மலர்வீர்கள், புது உயிர்களில் நடனமாடுவீர்கள். எப்படியோ நீங்கள் முடிவில்லாமல் தொடர்வீர்கள்.

இது ஒரு சுவையான முரண்பாடு. நீங்கள் தனித்துவம் பெற்றவர் என்றாலும் இருப்புநிலையோடு ஒன்றியவர். இந்த முரண்பாட்டை விளக்க முடியாது. இதை அனுபவித்தே அறிய வேண்டும்.

***அவர்கள் வீடு திரும்பியதும் யென் புயி ஒரு துறவியிடம் சீடனாகச் சேர்ந்தான்.***

இளவரசன் தன் அறிவுரையைத் தானே கேட்டானா என்பதைப் பற்றி யென் புயி கவலைப்படவில்லை. இளவரசன் அப்படியேதான் இருந்தான். ஆனால் யென் புயி அடியோடு மாறிவிட்டான். அவன் ஒரு ஞானியின் சீடனானான். உங்கள் வாழ்க்கை மாற வேண்டுமென்றால் நீங்கள் சீடனாக மாற

வேண்டும். தனியே அந்த மாற்றத்தைக் கொண்டுவருவது முடியாத காரியம். ஒரு ஞானியின் உதவி தேவைப்படும். அந்தப் பாதையில் உங்களுக்கு முன்னால் நடந்த ஒருவரை நீங்கள் நம்பியேயாக வேண்டும்.

ஒழுக்கம் என்பது கற்றலே. வேறு ஒருவரிடம் கற்பது, அவரைச் சரணடைவது அவர் சொல்வதை உள்வாங்கிக் கொள்வது, அவரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றாமல் அவர் புரிந்துணர்வை உள்வாங்கிக்கொண்டு உங்களுக்குள் இருக்கும் தீயை எரிய வைப்பது - இவைதான் ஒழுக்கம். இது வந்து விட்டால் அதன் பின் உங்கள் வழியில் நீங்கள் போகலாம். இந்த நிலையில் நீங்கள் ஒரு பிரபஞ்சமாகியிருப்பீர்கள். ஆனால் இந்த நிலை வரும் முன்னால் சரியான வழியைத் தெரிவு செய்வதும் அதில் பயணிப்பதும் கொஞ்சம் கடினமான காரியங்கள்தான்.

ஒரு ஞானியின் அருகில் இருக்கும் போது பல அசாத்தியமான விஷயங்களைச் சாதிக்க முடியும். ஏனென்றால் ஞானிதான் இந்த உலகின் உண்மையான மகா அற்புதம். அவர் ஒரு உடலில்தான் வாழ்கிறார் என்றாலும் அவர் உடல் இல்லை. அவர் இங்கே உங்களுடன் இருக்கிறார் என்றாலும் அவர் உங்களைவிட்டு மிகவும் தூரத்தில் இருக்கிறார். அவர் உங்களைத் தொடுகிறார். என்றாலும் அவருக்கும் உங்களுக்கும் இடையே அளவிட முடியாத தூரம் இருக்கிறது.

இந்த உலகில் ஒரு ஞானி மட்டுமே உண்மையான அற்புதம்.

அவருடன் வாழ்ந்தால் அமைதியாக அவரை உள்வாங்கிக் கொண்டால் அவருடைய ஞானம் என்ற மதுவை அருந்தத் தொடங்கினால் அந்த அற்புதத்தை நீங்கள் உணர்வீர்கள். அதனால் உங்களிடம் படிப்படியாக மாற்றம் ஏற்படத் தொடங்கும்.

நீங்கள் சுவிட்சர்லாந்து நாட்டிற்குச் செல்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அங்கே ஒரு ஆரோக்கியமான தட்பவெப்ப நிலை இருக்கிறது. அந்த நிலையில் உங்களிடம் இருக்கும் பல நோய்கள் ஓடிவிடும். உங்கள் நோய்கள் தாக்குப் பிடிக்க அவற்றுக்கு ஆதாரம் தேவை. அந்த ஆதாரம் அங்கே கிடையாது. அதனால் நோய்கள் ஓடிவிடும்.

ஒரு ஞானியும் சுவிட்சர்லாந்து நாட்டைப் போலத்தான். அவருடன் வாழும் போது உங்கள் வாழ்க்கையின் தட்பவெப்ப நிலை அடியோடு மாறுகிறது.

தற்சமயம் உங்களைப் போல் அறியாமை மிக்கவர்களோடு வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். திடீரென்று ஒரு ஞானியில் அருகில் வருகிறீர்கள் தட்பவெப்ப நிலை அடியோடு மாறுகிறது. நீங்கள் இமய மலைக்கோ, ஆல்ப்ஸ் மலைச்சாரலுக்கோ சுவிட்சர்லாந்து நாட்டிற்கோ வந்தடைந்து விட்டீர்கள். இங்கே தட்பவெப்ப நிலை முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. அவர் உங்கள் நோய்களை ஆதரிக்க மாட்டார். கொஞ்சம் கொஞ்சமாக அவர் உங்கள் நோயின் ஆதாரங்களை எடுத்துக் கொண்டுவிடுவார். ஆதாரங்கள் இல்லாமல் உங்கள் நோய்கள் சிறிது சிறிதாக வீழ்ந்துவிடும். ஆரோக்கியம் மலரும்.

நோய்களை நீக்குவதுதான் குருவின் வேலை. ஆரேரக்கியம் ஏற்கனவே இருக்கிறது. நோய்களை நீக்கிவிட்டால் ஆன்மிக ஆரோக்கியம் தன்னைப் போல் மலரும். ஆனால் நீங்கள் திறந்த மனதுடன் இருக்க வேண்டும். ஒரு இரும்புக் கவசத்தை அணிந்து கொண்டு சுவிட்சர்லாந்து நாட்டிற்குப் போனால் உங்களுக்குள் எந்த மாற்றமும் நிகழாது. உங்கள் நோய்கள் அப்படியே இருக்கும். காரணம் உங்கள் தட்பவெப்பநிலையை நீங்கள் கூடவே கூட்டிச் சென்றுவிட்டீர்கள்.

எந்தக் கவசமும் இல்லாமல் எந்த பாதுகாப்பும் இல்லாமல் ஒரு ஞானியை அணுகுங்கள். சரணாகதித் தத்துவத்தின் தாத்பரியம் அதுதான்.

***அவர்கள் வீடு திரும்பியதும் யென் புயி ஒரு துறவியிடம் சீடனாகச் சேர்ந்தான். தன்னைச் சிறந்தவனாகக் காட்டும் எல்லாவற்றையும் தொலைத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தான்.***

நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம்? சிறப்பாக இருப்பதற்கு என்ன என்ன செய்யமுடியுமோ அனைத்தையும்

செய்து கொண்டிருக்கிறோம். வகுப்பில் முதலிடத்தைப் பிடிக்க வேண்டும், பல்கலைக்கழகத்திலேயே முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற வேண்டும், தங்கப்பதக்கம் வாங்க வேண்டும். நோபல் பரிசு வாங்க வேண்டும் என்று பாடுபட்டுக் கொண்டிருக் கிறோம். ஏதாவது ஒரு வழியில் நாம் மற்றவர்களைவிடச் சிறந்து நிற்க வேண்டும் என்று துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறோம்.

ஒரு முறை முல்லா நசிருதீன் ஒரு சர்க்கஸ் கம்பெனி நிர்வாகியைச் சந்தித்து வேலை கேட்டார்.

''நான் ஒரு குள்ளன். என்னை உங்கள் சர்க்கஸில் வேலைக்குச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.''

முல்லாவை அந்த நிர்வாகி மேலும் கீழும் பார்த்துவிட்டு எரிச்சலுடன் சொன்னார்.

''என்ன நீ குள்ளனா? ஆறடி இரண்டு அங்குலம் உயரம் இருப்பாய் போல் இருக்கிறது..''

''ஆமாம். அதுதான் என் உயரம். ஆனால் இந்த உலகத்தி லேயே மிகவும் உயரமான குள்ளன் நான் தான்.''

மற்றவர்களைவிட நாம் சிறந்தவர்கள் என்று காட்ட நம் மனம் துடித்துக் கொண்டிருக்கிறது. குறைந்த பட்சம் உலகிலேயே உயர்ந்த குள்ளனாக இருக்கலாமே! கல்வி, நாகரிகம் வாழ்க்கை முறை எல்லாமே உங்களுக்கு எப்படி மற்றவர்களைவிட உயர்ந்தவர்களாக வேண்டும் என்று சொல்லிக் கொடுக்கிறது.

மாறாக தாவோ என்ன சொல்கிறது? ''சிறப்புகளை விட்டுவிட்டு. சாதாரணமாக இரு. எளிமையாக இரு. எளிமையாக இருப்பதே சரி. சிறப்பானவராக இருக்க வேண்டும் என்று விரும்பினால் மற்றவர்களைவிட மேம்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினால் எப்போதும் அழுத்தத்துடனேயே வாழ்வீர்கள். உங்கள் மேன்மையை நீங்கள் நிரூபித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

மற்றவர்களை நம்ப வைக்க வேண்டும். உங்கள் மொத்த வாழ்க்கையும் ஒரு நிலையில்லாமல் போய்விடும். அடுத்தவர்

களுக்காக வாழ்ந்தால் உங்களுக்குள் ஒரு தடுமாற்றம் ஒரு நடுக்கம் இருந்து கொண்டேயிருக்கும்.

**யென் புயி ஒரு துறவியிடம் சீடனாகச் சேர்ந்தான். தன்னைச் சிறந்தவனாகக் காட்டும் எல்லாவற்றையும் தொலைத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தான். இன்பத்தைத் துறந்தான். தன்னிடம் உள்ள ஒவ்வொரு சிறப்பையும் மறைத்து வைக்கக் கற்றுக் கொண்டான். அவன் எப்படிப்பட்டவன் என்று யாராலும் கணிக்க முடியாத நிலை விரைவிலேயே ஏற்பட்டது.. இப்போது எல்லாரும் அவனை ஒரு பயம் கலந்த மரியாதையுடன் பார்த்தார்கள்.**

தாவோ என்ன சொல்கிறது? உங்களை யார் என்று அனுமானிக்க முடியாவிட்டால் - நீங்கள் அந்த அளவு சாதாரணமாக இருந்தால் - உங்களை வைத்து யாரும் பயனடைய முடியாது என்று மற்றவர்கள் நினைத்தால் - அந்த நிலையில்தான் உண்மையான ஆன்ம ரகசியம் உங்கள் மூலம் வெளிவரும்.

நீங்களே அந்த ஆன்ம ரகசியமாக மாறிவிடுவீர்கள். உங்களை மற்றவர்கள் பயன்படுத்த முடியாது என்னும்போது நீங்கள் இறைநிலையைப் பெறுகிறீர்கள். உங்களை மற்றவர்கள் பயன்படுத்த முடிந்தால் நீங்கள் ஒரு பொருளாகிவிடுகிறீர்கள்.

மனிதனுக்குப் பயன்பாடு இல்லை. அது பொருள்களுக்குத்தான் இருக்கிறது. நீங்கள் யாரென்று கேட்டால் என்ன சொல்கிறீர்கள்? ''நான் ஒரு டாக்டர்'' அதற்கு என்ன பொருள்? இந்தச் சமுதாயம் உங்களை ஒரு மருத்துவராகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது. அது ஒரு பணி. ஒரு பயன்பாடு. ஆளுமை இல்லை. அது உங்களுடைய இருப்புநிலை இல்லை. உங்களை ஒரு மருத்துவராகப் பயன்படுத்திக் கொள்வது போல் சிலரை இந்தச் சமுதாயம் மரத்தச்சராகப் பயன்படுத்திக் கொள்கிறது. சிலரை காலணிகள் செய்பவராக.

இது உங்கள் உண்மைநிலையா இல்லை சமுதாயப் பயன்பாடா? இந்தச் சமுதாயம் உங்களை ஒரு பொருளாகப்

பாவித்துத் துய்க்கிறது. உங்கள் பயன்பாடு அதிகமாக இருக்கும் போது உங்கள் சமுதாய மதிப்பும் அதிகமாகவே இருக்கும்.

உங்களிடம் உள்ள திறமைகளை எல்லாம் விட்டுவிட்டால் நீங்கள் ஒரு சாதாரண மனிதனாகிவிடுகிறீர்கள். உங்களை யாரும் பயன்படுத்த முடியாது. நீங்கள் பொருள் இல்லை.. மனிதன். அதனால் நீங்கள் இந்தச் சமுதாயத்திற்கு எதையும் செய்ய மாட்டீர்கள் என்று பொருள் இல்லை. செய்வீர்கள். ஆனால் யாரும் உங்களைப் பயன்படுத்திக் கொள்ள மாட்டார்கள். உங்கள் போக்கில் உங்கள் வேகத்தில் செய்வீர்கள். அதுதான் உங்கள் மலர்ச்சி.

ஒரு ரோஜா மலரைப் பலர் கடந்து செல்லலாம். ஆனால் அவர்களுக்கு அந்த மலர் சொந்தமில்லை. அதனைப் பார்ப்பவர்களுக்கும் அதன் நறுமணத்தை முகர்பவர்களுக்கும் கூட அந்த மலர் சொந்தமில்லை. அந்த மலர் அதன் போக்கில் மலர்கிறது. எந்த வற்புறுத்தலுமின்றி மணத்தைப் பரப்புகிறது. தாவோவின் பாற்பட்டவனும் அதுபோல்தான் மலர்கிறான். அவன் ஒரு பயன்பாடுள்ள ஒரு பொருள் இல்லை. அவன் தன்னிச்சையான ரோஜா மலர். தன் உள்ளார்ந்த இயல்பை அறியாதவன் கடைசி வரை காட்சிப் பொருளாகவே இருக்கிறான். கடைகளின் ஜன்னல்களில் விற்பனைக்காக வைத்திருக்கும் பொருளைப் போலவே இருக்கிறான். தன் சான்றிதழ்கள், சிறப்புகள், திறமைகள் இவற்றை எல்லாம் வைத்துக் கொண்டு ''ஐயோ யாராவது என்னை வாங்குங்களேன் என்னைப் பயபடுத்துங்களேன்! நான் ஒரு விலைமதிப்புள்ள பொருள். என்னைவிடச் சிறந்த பொருளை நீங்கள் பார்க்கவே முடியாது வாருங்கள் என்னைப் பயன்படுத்துங்கள்'' என்று அறைகூவுகிறான். அழுது புலம்புகிறான்.

நீங்கள் இப்படி அழுதால் ஒரு பொருளாகிவிடுவீர்கள்.

தாவோவில் இருப்பவன் தன் சிறப்புகளை நழுவ விடுகிறான். படித்துப் பெற்ற சான்றிதழ்களை எரித்துவிடுகிறான். கடந்து வந்த பாலங்களை அழித்துவிடுகிறான். அவன் தானாக இருக்கிறான். மலர்கிறான். அந்த மலர்தலுக்கு எந்த நோக்கமும்

காரணமும் கிடையாது. அந்த மலர்தலால் பலருக்கு நன்மைக் கிடைக்கிறது. ஆனால் அவன் அதை மற்றவர்களுக்காகச் செய்யவில்லை. தனக்காகவே செய்கிறான். அவன் தன் ஊழை நிறைவு செய்கிறான். அவனுக்குத் தன்னிறைவு கிடைத்துவிட்டது.

நீங்கள் ஒரு பொருளாக இருக்கும் வரை உங்களுக்குத் தன்னிறைவு கிடைக்காது. ஒரு மனிதனாக ஒரு உண்மையான மனிதனாக வாழ்ந்தால் மட்டுமே நிறைவு காண முடியும். நீங்கள் ஒரு பொருளாக இருக்கக் கூடாது. ஒரு கணவனாக, மனைவியாக இருக்கக் கூடாது. ஏனென்றால் கணவன் - மனைவி எல்லாமே பயன்பாடுள்ள பொருள்களே! ,மலராக இருங்கள். அப்போது தான் நீங்கள் நிஜமான நேசத்தைக் காட்ட முடியும். கணவனாக இருக்க வேண்டாம். மனைவியாக இருக்க வேண்டாம்.

அந்த நிலையில் நீங்கள் பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் விளம்பரப்படுத்தத் தேவையில்லை. மலர்ந்துவிட்ட மலருக்கு விளம்பரம் தேவையில்லை. பூக்கடைக்கு விளம்பரம் தேவை யில்லை. யாராவது அந்த மலரின் அழகையும் நறுமணத்தையும் அனுபவித்தால் நல்லது. யாருமே அந்தப் பக்கம் போக வில்லையென்றால் பாதகமில்லை.

உங்களுக்காக நீங்கள் மலர்ந்தால் எல்லாமே சரியாக இருக்கும். எதுவும் தவறாது. ஆனால் நீங்கள் மற்றவர்களுக்காக இருந்தால் - விலை அட்டையுடன், விளம்பரப்படுத்தப்பட்டு விலைப்பட்டியலில் கடையில் இருந்தால் - உங்களுக்கு நிறைவு ஏற்பட வழியே இல்லை. பொருள்களுக்கு உயிர் இல்லை. மனிதனுக்குத்தான் உயிர் இருக்கிறது, உயிர் இல்லாதவற்றுக்கு நிறைவு எதற்கு?

அடுத்தவர்களைப் பார்த்து அது மாதிரியே நடந்து கொண்டிருந்தால் கடைசிவரை நிறைவு இருக்காது. குரங்கு மலையில் நீங்கள் வசிக்கும் வரை நீங்கள் நிஜ மனிதனாக இருக்க முடியாது. போலியாகத்தான் வாழ்வீர்கள். உங்களிடம் இருக்கும் பொய்கள், போலிக் குணங்கள், உங்களைப் பெரிதாகக் காட்டிக்கொள்ள வேண்டும் என்ற உத்வேகம் - இவற்றைக் களைந்து எறியுங்கள். நீங்கள் நீங்களாகவே இருங்கள்.

சாதாரணமாக, தனித்தன்மை கெடாமல் இருங்கள். நிறைவு கிடைக்கும். இதை நீங்கள்தான் செய்ய வேண்டும். மற்றவர்கள் உங்களுக்காகச் செய்ய மாட்டார்கள். என்னை நீங்கள் உள் வாங்கிக் கொள்ளலாம். ஆனால் என்னைப் பின்பற்ற முடியாது.

நான் இதுவரை யாரையும் பின்பற்றியதில்லை. எனக்கென்று ஒரு பாதை இருக்கிறது. அது போல் உங்களுக்கென்று ஒரு பாதை இருக்கிறது. அதில் உங்களைத் தவிர வேறு யாராலும் செல்ல முடியாது. நீங்கள் அந்தப் பாதையைத் தவிர வேறு எந்தப் பாதையிலும் செல்ல முடியாது.

ஆன்மிக உலகில் காலடித்தடங்கள் கிடையாது. ஆன்மிக உலகம் பரந்து விரிந்த வானத்தைப் போலே இருக்கிறது. வானில் பறக்கும் பறவைகள் காலடித்தடங்களை விட்டுச் செல்வதில்லை. யாராலும் பறவைகளைப் பின் தொடர முடியாது. என்னுடன் மகிழ்ச்சியாக இருங்கள். என்னை உள்வாங்கிக் கொள்வீர்கள்.

அது உங்களுக்கு வழிகாட்டும் விளக்காக இருக்கும். ஆனால் என்னைப் பார்த்துக் காப்பியடிக்காதீர்கள். கண்மூடித் தனமான நம்பிக்கை வேண்டாம். அறிவு சொல்வதைக் கேட்காதீர்கள். இதயம் சொல்வதைக் கேளுங்கள்.

குரங்காக இருக்காதீர்கள். மனிதனாக இருங்கள்.

இன்று இவ்வளவு போதும்.

ஒரு சிறிய பையில் பெரிய சுமையைப் போட முடியாது

ஆழமான கிணற்றிலிருந்து சிறிய கயிறைக் கொண்டு நீர் இறைக்க முடியாது

காற்றின் வேகத்தால் லு நாட்டின் தலைநகரத்தை அடைந்த கடற்பறவையைப் பற்றிக் கேட்டதில்லையா?

அந்த நாட்டு இளவரசன் அதற்கு ஒரு பெரிய வரவேற்பை ஏற்பாடு செய்தான்

புனிதமான இடத்தில் அந்தப் பறவைக்கு மது வழங்கினான்.

ஷன் என்ற இசை வல்லுனர் உருவாக்கிய கீதங்களை இசை வல்லுனர்களைக் கொண்டு சேர்ந்திசையில் பாட வைத்தான். அந்தப் பறவைக்கு உணவளிக்க பல ஆடுமாடுகளை பலியிடச் சொன்னான்.

சேர்ந்திசையால் திகைத்துப் போன அந்தக் கடற்பறவை மனம் கசந்து இறந்து விழ்ந்தது.

ஒரு கடற்பறவையை எப்படி நடத்த வேண்டும்? அதை ஒரு பறவையைப் போல் நடத்துவீர்களா? இல்லை உங்களைப் போல் நடத்துவீர்களா? மரங்களடர்ந்த காட்டில் உள்ள ஒரு கூட்டில் அந்தப் பறவை இருக்க வேண்டாமா? வயல்

**வெளி அனைத்தையும் தாண்டிப் பறந்து செல்ல வேண்டாமா?**

**ஆறுகளிலும் குளங்களிலும் நீந்திச் செல்ல வேண்டாமா? மீன்களைக் கொத்தித் தின்ன வேண்டாமா? மற்றப் பறவைகளோடு அணி வகுத்துப் பறந்து செல்ல வேண்டாமா? நாணல் களில் அமர்ந்து ஓய்வு எடுக்க வேண்டாமா?**

**கடற்பறவையைச் சுற்றி நின்று கொண்டு அதனை மனிதர்கள் தங்கள் குரல்களால் பயமுறுத்தியதே தீமை! இதில் சேர்ந்திசை வேறு. சேர்ந்திசையால்தான் அந்தப் பறவையைக் கொன்றார்கள். மீன் உயிர் வாழ நீர் வேண்டும். மனிதனுக்குக் காற்று வேண்டும். மனிதன் - மீன் - இருவரின் தன்மையும் வேறு வேறு. தேவை களும் வேறு வேறு. அதனால் தான் அந்தக்கால அறிஞர்கள் அனைவருக்கும் ஒரே நியதியை வகுக்கவில்லை.**

மனித இயல்பு என்று பொதுவாக எதுவும் இல்லை. மனித இயல்புகள் இருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் ஒரு தனி உலகம். நீங்கள் எல்லாருக்கும் பொதுவான விதிகளை வகுக்க முடியாது. எல்லாப் பொதுவிதிகளும் ஒரு கட்டத்தில் பொய்யாகி விடும். இதனை நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் நீங்கள் செல்லும் பாதையில் ஒரு கட்டத்தில் சில விதிகளை நீங்கள் கடைப்பிடிக்கத் தொடங்கலாம். விரைவில் அந்த விதிகளுக்குப் பலியாகிவிடலாம்.

நீங்கள் விதிகளுக்குப் பலியாகிவிட்டால் நீங்கள் யாரென்றே உங்களுக்குத் தெரியாமல் போய்விடும். நீங்கள் சுதந்திரமாக இருந்தால்தான் உங்களைப் புரிந்து கொள்ள முடியும். விதிகள் உங்களை கட்டிப்போடும் சிறைச்சாலைகள். யாராலும் உங்களுக்கென்று பிரத்தியேகமாக விதிகள் வகுக்க முடியாது. அதனால்தான் வகுக்கப்படும் விதிகளெல்லாம் உங்களைக் கட்டுப்படுத்தும் சிறைகளாக மாறிவிடுகின்றன. அந்த விதிகளை

வகுத்தவர் அவற்றைக் கடைப்பிடித்து மெய்ப்பொருளைக் கண்டிருக்கலாம். அந்த விதிகள் அவருக்குச் சரியாக இருந்திருக் கலாம்.. அதனால் அவருக்கு உதவிய விதிகள் உங்களுக்கு உதவாது. உங்களுக்கு அந்த விதிகள் இடையூறாக இருக்கும்.

புரிந்துணர்வு மட்டுமே பொதுவிதியாக இருக்கட்டும். கற்றுக் கொள்ளுங்கள். உங்கள் புரிதல் வளரட்டும். ஆனால் எந்த விதிகளையும் பின்பற்றாதீர்கள். விதிகள் உயிரில்லாதவை. புரிதல் உயிர்ப்பு உள்ளது. விதிகள் உங்களைச் சிறைப்படுத்தும். புரிந்துணர்வு உங்களுக்கு அந்த முடிவில்லாத வானத்தையே வசப்படுத்தும்.

விதிகள்தான் ஒவ்வொரு மனிதனின் சுமை. ஒவ்வொரு மதத்திலும் விதிகள் தவிர வேறு எதுவும் இல்லை. ஏசு நாதர் ஞானம் பெற்றார். புத்தர் ஞானம் பெற்றார். மறுக்கவில்லை. அதனாலேயே அவர்களுடைய வாழ்க்கை மற்றவர்கள் பின்பற்ற வேண்டிய விதிகளாக மாறிவிட்டன. ஆனால் அவர்களைத் தவிர வேறு யாருமே ஏசுநாதரோ புத்தரோ இல்லையே! அதனால் அந்த விதிகளைப் பின்பற்றினால் நீங்கள் அவர்களின் அலங்கரிக்கப் பட்ட நகலாவீர்கள். எந்தக்காலத்திலும் உண்மையான மனிதனாக இருக்க மாட்டீர்கள். ஏசுநாதரைப் பின்பற்றினால் நீங்கள் ஒரு கிறிஸ்தவராகலாம். ஆனால் சத்தியமாக ஏசு நாதராக முடியாது. ஏசு நாதராகாமல் கிறிஸ்தவராவது என்பது பெரிய இழப்பு. அது உங்களுக்கு வேண்டாம். நீங்கள் ஏசு நாதராக வேண்டுமென்றால் அவர் உங்கள் விதியாக இருக்கக்கூடாது. உங்கள் புரிந்துணர்வு தான் விதியாக இருக்க வேண்டும்

ஏசுநாதர் யாரையும் பின்பற்றவில்லை. அவருக்கு ஜான் என்ற ஆசிரியர் இருந்தார். ஆனால் அவர் எந்த விதியையும் பின்பற்றவில்லை. அவர் தன் குருவை நேசித்தார். அவருடன் இருந்தார். அவரை உள்வாங்கிக்கொண்டார். எல்லாம் செய்தார் ஆனால் ஏசு எந்த விதியையும் பின்பற்றவில்லை. ஜானின் மற்ற சீடர்கள் ஜானிடம் ஏசுநாதர் பற்றிப் புகார் சொன்னார்கள். ''ஏசு நாதர் ஒரு நம்பிக்கைத் துரோகி. அவர் தன் வழியில்தான் நடக்கிறார். நமது விதிகளைப் பின்பற்றுவதில்லை.''

புரிந்துணர்வுள்ள யாருமே விதிகளைப் பின்பற்ற முடியாது. இறந்தவர்கள்தான் விதிகளை அப்படியே பின்பற்ற முடியும்.

ஏனென்றால் உங்களுக்கென்று எந்த விதியும் இல்லை. நீங்கள்தான் உங்கள் விதி. முதலில் உங்களைப் புரிந்து கொள்ளப் பாருங்கள். மற்றவர்களிடமிருந்து படியுங்கள். உங்களுக்கென்று இருக்கும் விதி என்னவென்று கண்டுபிடியுங்கள். அந்த விதியை மறந்தும் மற்றவர்கள் மேல் திணிக்காதீர்கள். அது வன்முறை. உங்கள் மகாத்மாக்கள் தொடர்ந்து தங்கள் விதிகளை மக்கள் மேல் திணித்துக் கொண்டே போகிறார்கள். அந்த விதிகள் மூலமாக அவர்கள் கொல்கிறார்கள். அழிக்கிறார்கள். வன்முறையை விரும்புகிறார்கள். அந்த வன்முறை நுட்பமானது. அது உங்களை நேரடியாகக் கொல்லாது. மறைமுகமாகக் கொல்லும். நேரடியாகத் தாக்குபவர்களிடமிருந்து எளிதாகத் தப்பித்துவிடலாம். ஆனால் மறைமுகமாகத் தாக்கினால் உங்களால் ஒன்றும் செய்யமுடியாது. விரைவிலேயே அந்தத் தாக்குதலுக்குப் பலியாகிவிடுவீர்கள்.

இன்று இருக்கும் பல குருமார்களிடம் வன்முறை இருக்கிறது. ஆனால் நுட்பமாக இருக்கிறது. எந்த மனிதனாவது உங்களுக்கு விதிமுறைகளைக் கொடுக்க விழைந்தால், உங்கள் வாழ்க்கை இப்படித்தான் இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்க விரும்பினால், மெய்ப்பொருளைப் பார்க்கத் தோதாக ஒரு ஜன்னல் தருவதாகச் சொன்னால் அவனிடமிருந்து தப்பித் தலைதெறிக்க ஓடிவிடுங்கள். அவன் ஆபத்தானவன். ஒரு உண்மையான குரு உங்களுக்கு மெய்ப்பொருளைப் பார்க்க ஜன்னலைத் தரமாட்டார். பரந்த வானத்தின் கீழ் உங்களைக் கொண்டு வந்து விட்டுவிடுவார். வாழ ஒரு வழிமுறையை வகுத்துத் தர மாட்டார். புரிதலையும் புரிந்து கொள்ளும் உணர்வையும் தருவார். அந்தப் புரிதலே உங்களை வளர்க்கும். புரிதல் உங்களுக்கே உங்களுக்குச் சொந்தமானது.

புரிந்து கொள்வது கடினம். ஏனென்றால் அதற்கு துணிவும் மாறும் மனமும் தேவை. அதனால் புரிதலை விட்டு ஓடுகிறீர்கள். யாராவது உங்களுக்கு விதிமுறைகளையும் வழிமுறைகளையும் வகுத்துக் கொடுத்தால் அவருக்கு அடிமையாகி உங்களையே

நீங்கள் இழக்கிறீர்கள். விதிமுறைகள் உண்மைக்கு மாற்றுப் பொருள்களே. அவை போலிகள். அவை எளிதாகக் கிடைக்கும். உங்கள் வாழ்க்கையைக் கட்டுக்கோப்பான வாழக்கையாக மாற்றிக்கொள்ளலாம். ஆனால் அது போலியாக இருக்கும். நீங்கள் நடிப்பீர்கள். பாசாங்கு செய்வீர்கள். உங்கள் வாழ்க்கையில் நிஜம் இருக்காது. நிழல்தான் இருக்கும்.

ஒரு யூதக் கதையைச் சொல்ல விரும்புகிறேன். ஏசு நாதர் அந்தக் கதையைக் கேட்டிருக்க வேண்டும். ஏனென்றால் இது அவர் காலத்திற்கும் முன்னால் நிலவிய கதை. அன்றைய காலகட்டத்தில் எல்லாருக்கும் இந்தக் கதை தெரிந்திருந்தது. ஏசு நாதர் தன் தாய் மேரியிடமோ தந்தை ஜோசஃப்பிடமோ கேட்டிருக்க வேண்டும். இது ஒரு அழகான கதை. நீங்களும் கேட்டிருக்கலாம். என்றாலும் இன்னும் ஒரு முறை கேளுங்கள்.

ஒரு யூதப் பாதிரியார் இருந்தார். அவர் ஒரு சாதாரன பூசாரிதான். இன்னும் ஞானம் பெறவில்லை. ஆனால் மக்கள் அவரை ஞானி என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் எங்கோ வெளியே சென்றுவிட்டுத் தன் கிராமத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்.

வழியில் ஒரு மனிதன் தன் கையில் ஒரு அழகான பறவையை வைத்திருப்பதைப் பார்த்தார். அவனிடம் நல்ல விலை கொடுத்து பறவையை வாங்கினார் பாதிரியார்.

'வீட்டிற்குப் போனதும் இந்தப் பறவையை சமைத்துச் சாப்பிடப் போகிறேன்' என்று நினைத்தார்.

திடீரென்று பறவை பேசியது.

''அப்படியெல்லாம் நினைக்காதே!''

''என்னது உனக்குப் பேசத் தெரியுமா?''

''நன்றாகத் தெரியும். நான் சாதாரணப் பறவையில்லை. பறவைகள் உலகில் நான் ஒரு பாதிரியாராக்கும் உன்னைப் போல். என்னை விடுவிப்பதாகச் சத்தியம் செய்து கொடுத்தால்

நான் உனக்கு மூன்று விலைமதிப்பில்லாத அறிவுரைகளைத் தருகிறேன்.''

பாதிரியார் மனக்கணக்குப் போட்டார். 'இந்தப் பறவை நன்றாகப் பேசுகிறது. இதற்கு எல்லா விஷயமும் தெரிந்திருக் கிறது.'

அப்படித்தான் நாம் முடிவுகள் எடுக்கிறோம். நன்றாகப் பேசுபவர்களை அறிவாளிகள் என்று நினைக்கிறோம். பேசுவது எளிது. அறிவதுதான் கடினம். இரண்டுக்கும் சம்பந்தமில்லை. அறிவில்லாமல் பேசிக் கொண்டேயிருக்கலாம். அறிவிருந்தும் பேசாமல் இருக்கலாம். இரண்டுக்கும் தொடர்பு இல்லை. ஆனால் நாம் நல்ல பேச்சாளரை பெரிய மேதையாக நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

''சரி அந்த அறிவுரைகள் என்னவென்று சொல். நான் உன்னை விடுவிக்கிறேன்.''

''ஒன்று: அபத்தம் எதையும் நம்பாதே. அதை யார் சொன்னாலும் சரி. சொல்பவன் பெரிய மேதையாக இருக்கலாம். பேர், புகழ் உடையவனாக இருக்கலாம். ஆனால் அவன் சொல்வது அபத்தமாக இருந்தால் நம்பாதே.''

'':சரி''

''இரண்டு: என்ன வேண்டுமானாலும் செய். முடியாததைச் செய்யாதே. முடியாததைச் செய்ய முயற்சித்தால் தோல்வி நிச்சயம். உன்னால் என்ன செய்ய முடியும் என்று அறிந்து கொண்டு அதற்கு மேல் எதையும் செய்யாதே. தன் குறைகளைத் தெரிந்து கொண்டவன் ஞானி. அதையும் தாண்டி எதையும் செய்வேன் என்று சொல்பவன் முட்டாள்.

''சரி''

''மூன்று: நல்லது செய்தால் அதற்காகப் பின்னால் வருத்தப்படாதே. கெட்டது செய்தால் மனம் வருந்தலாம். செய்தது நல்லதாக இருந்தால் அதனால் நஷ்டம் விளைந்தாலும் வருத்தப்படாதே.''

அருமையான அறிவுரை. அழகான வார்த்தைகளில் நச் சென்று சொல்லப்பட்ட நல்ல அறிவுரை. பாதிரியார் பறவையை விடுவித்தார். இப்போது தன் வீடு நோக்கி வேகமாக நடந்து கொண்டிருந்தார் பாதிரியார். அவர் மனதில் மகிழ்ச்சி பொங்கிக் கொண்டிருந்தது. 'இந்த மூன்று அறிவுரைகளையும் வைத்து அடுத்த வாரம் நமது யூதர் கோயிலில் பேசி விட வேண்டியது தான். இதை என் அறையின் சுவரிலும் எழுதி வைக்கப் போகிறேன். என் மேஜையின் மேலும் எழுதி வைப்பேன். இதை எந்தக் காலத்திலும் மறக்கக்கூடாது. இந்த மூன்று அறிவுரைகளும் ஒரு மனிதனையே மாற்றிப் போட்டுவிடும்.

திடீரென்று அந்தப் பறவை பக்கத்தில் இருந்த மரத்தில் பறந்து வந்து உட்கார்ந்தது.. பெரிய சத்தத்துடன் சிரித்தது.

''எதற்காக இப்படி சிரிக்கிறாய்?'' என்று கேட்டார் பாதிரியார்.

''முட்டாளே! என் வயிற்றில் ஒரு விலைமதிப்புள்ள வைரக்கல் இருக்கிறது. என்னைக் கொன்று அந்த வைரத்தை நீ எடுத்திருந்தால் இன்றைய தேதியில் நீதான் இந்த உலகிலேயே பெரிய பணக்காரனாக இருந்திருப்பாய்.''

பாதிரியாருக்கு ஒரே வருத்தமாகப் போய்விட்டது. ''சே! எவ்வளவு பெரிய முட்டாள்தனம்! இந்தப் பறவை சொன்னதை நம்பி இதை விட்டுவிட்டேனே!''

தன் கையில் இருந்த புத்தகங்களைக் கடாசினார். மரத்தில் ஏறி அந்தப் பறவையை மீண்டும் பிடிக்க முயன்றார். அவருகோ வயதாகிவிட்டது. அவர் வயதுக் காலத்தில் கூட மரம் ஏறியது இல்லை. என்றாலும் இப்போது வியர்க்க விறுவிறுக்க மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க மரத்தில் ஏறினார். அவர் ஏற ஏற பறவை இன்னும் மேலே மேலே போனது. அவர் பறவையைத் தொட்டுவிடும் தூரத்தில் இருப்பார். கையை நீட்டுவார். பறவை உடனே மேல்கிளையில் சென்று அமர்ந்து அவரைப் பார்த்துச் சிரிக்கும். கோபத்தில் இன்னும் வேகமாக ஏற ஆரம்பிப்பார். கடைசியில் பறவை மரத்தின் உச்சாணிக் கிளையில் போய் அமர்ந்தது. பாதிரியாரும் அந்தக் கிளையை அடைந்துவிட்டார் கையை நீட்டிப் பறவையைத் தொட்டும்விட்டார். அந்த சமயம்

பார்த்து பறவை மரத்திலிருந்து பறந்துவிட்டது. பறப்பதற்குள் அதைப் பிடிக்க வேண்டும் என்ற பதைபதைப்பில் பாதிரியார் தன் கால்களைச் சரியாக ஊன்றவில்லை. உச்சாணிக்கிளையிலிருந்து அப்படியே கீழே விழுந்தார். அவருடைய கால் முறிந்தது. உயிர் போகும் வலி. ரத்தம் ஆறாக ஓடிக்கொண்டிருந்தது.

பறவை மீண்டும் கீழ்க்கிளையில் வந்து அமர்ந்தது.

''முட்டாளே! என் வயிற்றில் வைரம் இருக்கிறது என்று சொன்னவுடன் நம்பினாய். நான் எப்படி வயிற்றில் வைரத்தை வைத்துக் கொள்ள முடியும்? அது வயிற்றை அறுத்துவிடுமே! அபத்தங்களை நம்பாதே என்று நான் சொன்ன அறிவுரையை நீ நம்பவில்லை. இரண்டாவதாக செய்ய முடியாததைச் செய்ய நினைத்தாய். உன் ஆயுசுக்காலத்தில் நீ மரம் ஏறியதே இல்லை. இப்போது மட்டும் ஏன் ஏறத்துணிந்தாய். சுதந்திரமாகப் பறக்கும் பறவையை வெறும் கையால் பிடிக்க முடியுமா? செய்ய முடியாத காரியத்தைச் செய்யத் துணியாதே என்ற என் அறிவுரையையும் நீ கேட்கவில்லை. மூன்று வைரம் இருக்கிறது என்று சொன்னவுடன் 'ஐயோ இந்தப் பறவையை விட்டுவிட்டோமே என்று வருந்தினாய். நல்ல காரியத்துக்கு வருந்தாதே என்று சொன்னேனே அதைக் கேட்கவில்லை. என்னை விடுவித்தது நல்ல காரியம்தானே அதற்கு ஏன் வருந்த வேண்டும்? அதிலும் என் அறிவுரையை நீ கேட்கவில்லை. போ. வீட்டிற்குப் போ. இப்போது உன் விதிமுறைகளை எழுது. அடுத்தவாரம் யூதர் கோவிலில் இதனையே நீ போதனை செய்யலாம்.''

நமக்குப் போதனை செய்பவர்கள் எல்லாம் இப்படித்தான் இருக்கிறார்கள். அவர்களிடம் புரிந்துணர்வு இல்லை. விதிமுறைகளும் செத்த அர்த்தங்களும்தான் இருக்கின்றன. புரிந்துணர்வு லேசானது. அதை நீங்கல் சுமக்க வேண்டாம். அது உங்களைச் சுமக்கும். அது உங்கள் சிறகுகளாகி நீங்கள் பறக்க உதவும். புரிந்துணர்வை நினைவில் வைத்துக் கொள்ளக் கூட வேண்டாம். அது உங்கள் ரத்தமாக, உங்கள் எலும்பாக ஆகிவிடும். அதுதான் நீங்கள் என்ற நிலையும் கூட வரும். நீங்கள் செய்வதெல்லாம் அந்தப் புரிந்துணர்வு மூலமாகவே செய்வீர்கள்.

விதிமுறைகள் உணர்வு நிலையில் உள்ளவை. புரிந்துணர்வு உணர்வின்மை நிலையில் உள்ளது. ஷுவாங் ட்சு உணர்வின்மை நிலையையே சிலாகிக்கிறார். தாவோ மரபும் உணர்வின்மை நிலையைத்தான் கொண்டாடுகிறது. விதிமுறைகளைத் திணிக்காதீர்கள். புரிந்து கொள்ள முயலுங்கள். உங்கள் மேல் விதிமுறைகளை வலுக்கட்டாயமாகத் திணித்துக் கொண்டால் ஞானம் வராது. உள்ளே முட்டாளாக இருப்பீர்கள். வெளியே பாராட்டுக்கள் குவியலாம்.

இப்படிப்பட்ட குருமார்களைப் பார்த்து ஏசுநாதர் சொன்னார். ''உங்களைப் பார்த்தால் எனக்கு நன்றாக வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள் நினைவிற்கு வருகின்றன. உள்ளே இருப்பதோ பிணம். ஆனால் வெளியில் வெள்ளையடித்த அலங்கரிக்கப்பட்ட சுவர்கள்.''

விதிமுறைகள் வெளிப்புறச் சுத்தத்தைத் தரலாம். ஆனால் உள்ளே நீங்கள் அதே பழைய முட்டாளாகத்தான் இருக்கிறீர்கள். முட்டாள்கள்தான் விதிகளைப் பின்பற்றுகிறார்கள். அறிவாளிகள் நிலைமையைப் புரிந்து கொண்டு விதிகளை மறந்துவிடுகிறார்கள்.

அறிவாளி இஷ்டம் போய் இயங்குகிறான். விதிமுறை களைப் பின்பற்றுபவன் நகர முடியாது. அதற்கும் ஏதாவது ஒரு விதிமுறை இருக்கும். அது அவனை ஒரு இடத்தில் கட்டிப் போட்டிருக்கும்.

வாழ்க்கையோ ஒவ்வொரு கணத்துக்கும் மாறிக்கொண்டிருக் கிறது.. அது உங்கள் விதிமுறைகளுக்காகக் காத்துக் கொண்டிருக் காது. ஒவ்வொரு கணமும் புதிதானது. விதிமுறைகளோ பழையது. அதனால் விதிமுறைகளைப் பின்பற்றி நடந்தால் நீங்கள் கால் இடறி விழ வாய்ப்பு இருக்கிறது. விதிமுறைகளை எப்போதும் பின்பற்றுபவன் எந்தச் சூழ்நிலையிலும் ஒட்டமாட்டான். அவன் விதிகளைக் கட்டி மாரடித்துக் கொண் டிருக்கும் போது வாழ்க்கை அவனைக் கடந்து வெகுதூரம் போயிருக்கும்.

நீங்கள் எல்லாமே விதிமுறைகளில் மாட்டித் தத்தளித்துக் கொண்டிருப்பது எனக்குக் கண்கூடாகத் தெரிகிறது. நீங்கள்

குழந்தையாக இருந்த போது உங்களை விதிமுறைகள் என்ற சிறையில் அடைத்துவிட்டார்கள். நீங்கள் இன்னும் அதிலிருந்து விடுபட்டு வரவில்லை. நீங்கள் அதே இடத்தில் நின்றபடி ஓட்டம் போடுவதாகப் பாவலா செய்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் இருக்கும் இடத்திலிருந்து இம்மிகூட நகரவில்லை. உங்களுக்கு வயதாகியிருக்கலாம். எழுபது வயது கூட ஆகியிருக்கலாம். என்றாலும் அடிப்படையில் நீங்கள் இந்தச் சிறையில் அடைப்பட்டிருக்கிறீர்கள். ஞானம் பெறுவது என்பது இந்தச் சிறையிலிருந்து முற்றிலுமாக விடுதலை பெறுவதுதான். விதிமுறைகள் என்ற சேற்றினிலே மாட்டிக் கொண்டிருக்கும் உங்களை வெளியே இழுத்துப் போடுவதுதான் ஞானத்தின் வேலை. பனிக்கட்டியாக உறைந்து போன உங்களை மீண்டும் நீரோட்டமாக ஓடவைப்பதுதான் ஞானத்தின் பணி. விதிமுறைகள் உங்களை லேசில் விடாது. பனிக்கட்டியைப் போல் உறைந்து கிடக்காதீர்கள். ஆற்று நீரைப் போல் எழுந்து ஓடுங்கள்.

முல்லா நசிருதீன் எப்போதும் எதிர்மறையாகவே பேசிக் கொண்டிருப்பார். சில சமயம் அவர் பேசுவது அச்சானியமாகக் கூட இருக்கும். அவர் என்னிடம் வந்த போது அவருக்கு அறிவுரை சொன்னேன்.

''நேர்மறை எண்ணங்களை வளர்த்துக் கொள்ளுங்கள். நல்லதையே நினையுங்கள். நல்லதையே செய்யுங்கள். அதன்பின் நீங்கள் காண்பதெல்லாம் மலர்களாகவே இருக்கும். முட்களைப் பார்க்கவே மாட்டீர்கள்.''

நான் சொன்னதை அவர் ஏற்றுக்கொண்டார்.

''இனிமேல் எதிர்மறையாக எதுவுமே பேசுவதில்லை என்று உங்கள் முன் வாக்குறுதி எடுத்துக் கொள்கிறேன்.'' என்று அழுத்தமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அடுத்த நாள் அவருடைய மனைவி சந்தைக்குச் சென்றபோது அவரிடம் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லியிருந்தாள். சந்தையிலிருந்து திரும்பி வந்தபோது ஏதோ பெரிய தப்பு நடந்திருக்கிறது என்பதைக் கண்டுபிடித்துவிட்டாள் மனைவி. மொத்த வீடும் துக்கத்தில் மூழ்கியிருந்தது. குழந்தைகள்

வழக்கம் போல் அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருக்கவில்லை. சத்தமே இல்லை. மயான அமைதி நிலவியது. அவளுக்குப் பயம் வந்துவிட்டது: கதவருகில் சோகமே உருவாக அமர்ந்திருந்த முல்லாவைப் பார்த்ததும் ஏதோ பெரிய விஷயம் நடந்திருக்கிறது என்பதை அவள் ஊகித்தாள்.

பயத்துடன் தன் கணவனைக் கேட்டாள்.

''தயவு செய்து எந்தக் கெட்ட செய்தியையும் சொல்லி விடாதீர்கள். என்னால் தாங்கமுடியாது. நல்ல ,செய்தியாகவே சொல்லுங்கள்.''

''நானும் இனிமேல் நல்ல செய்திகள் மட்டும்தான் சொல்வது என்று சபதம் எடுத்திருக்கிறேன். நமக்கு ஏழு குழந்தைகள் இருக்கின்றன என்று உனக்குத் தெரியுமல்லவா? அந்த ஏழில் ஆறு குழந்தைகள் நலமாக இருக்கின்றன. ஆறு குழந்தைகள் லாரியில் அடிபட்டுச் சாகாமல் பத்திரமாக இருக்கின்றன.''

நேர்மறையான எண்ணங்கள் வேண்டும் என்ற விதியைப் பின்பற்றினால் இப்படித்தான் நடக்கும். நீங்கள் வார்த்தைகளை மாற்றிப் போடலாம். ஆனால் உங்கள் மனதின் ஆழத்தில் அப்படியேதான் இருப்பீர்கள். உங்கள் நடத்தையை மாற்றிக் கொள்ளலாம் உங்கள் உண்மையான இயல்பை மாற்றிக் கொள்வது கடினம். உங்கள் உள்ளார்ந்த இயல்பை எப்படி மாற்றுவது என்பதுதான் கேள்வி. உங்கள் உடையையும், நடத்தையையும், வார்த்தைகளையும் மாற்றுவது பிரச்சினையே இல்லை. விதிமுறைகளைப் பின்பற்றுபவன் தன்னுடைய வெளிச் சுற்றை மட்டுமே மாற்றிக் கொள்கிறான். புரிந்துணர்வோடு வாழ்பவனோ தன் மையத்தையே மாற்றிக் கொள்கிறான். மையம் மாறும் போது வெளிச்சுற்று தன்னால் மாறிவிடும். அது மாறித்தான் ஆக வேண்டும். ஆனால் வெளிச்சுற்று மாறும் போது மையம் மாற வேண்டும் என்ற அவசியம் இல்லை.

விதிமுறைகள் பாவம் என்ன செய்யும்? ஒரு சூழ்நிலையில் இதைச் செய்யலாம் இதைச் செய்யக்கூடாது என்றுதான் சொல்லும். உங்களை அடியோடு மாற்றும் சக்தி அவற்றுக்கு

இல்லை. அவை உங்கள் செய்கைகளை மாற்றும். ஆனால் நீங்கள் உங்கள் செய்கைகள் அல்லவே! உங்களிடம் இருந்துதான் உங்கள் செயல்கள் தோன்றுகின்றன. ஆனால் நீங்கள் உங்கள் செயல்களைவிட ஆழமானவர் என்பதை மறந்துவிடாதீர்கள். விதிமுறைகள் உங்கள் நடத்தையை மாற்றும். நடத்தை என்பது என்ன? மற்றவர்களோடு உறவு கொள்ளும் போது நீங்கள் செய்யக்கூடியதும் செய்யக்கூடாததும்தான் நடத்தை.. விதிமுறைகளால் உங்களை மாற்ற முடியாது. உங்கள் இருப்பு நிலை என்பது உங்களின் முழுமையான தனிமையில் இருக்கிறது. உங்கள் உறவுகளில் இல்லை.

அதனால்தான் ஷுவாங் ட்சு மனித இயல்புகள் மனிதனுக்கு மனிதன் மாறுபடுகின்றன என்கிறார்.

என்னிடம் ஒருவர் வந்தார். அந்த மனிதர் சிரசாசனம் செய்வதை வழக்கமாக வைத்திருந்தார். சிரசாசனம் என்றால் தலையைக் கீழே வைத்து காலை மேலே வைத்துக் கொள்வது அதாவது தலைகீழாக நிற்பது. யோகாசன நூல்களில் சிரசாசனத்தால் விளையும் நன்மைகளைப் பற்றிப் பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார்கள். அதனால் இந்த மனிதர் சிரசாசனம் செய்யும் நேரத்தை அதிகரித்துக் கொண்டே வந்தார். ஆனால் அவருக்கு அந்த நூல்களில் சொன்ன மாதிரி ஞானமோ பரவசமோ கிட்டவில்லை. மாறாக பெரிய குழப்பத்தில் ஆழ்ந்திருந்தார். ''எனக்குக் பைத்தியம் பிடித்துவிடும் போல் இருக்கிறது'' என்று புலம்பிக் கொண்டிரிந்தார்.

''அப்படி நான் என்ன தவறு செய்துவிட்டேன்? அதைக் கொஞ்சம் கண்டுபிடித்துச் சொல்லுங்களேன்.'' என்று அழாத குறையாக என்னிடம் மன்றாடினார். அவர் விதிமுறைகளை அப்படியே பின்பற்றுபவர். பதஞ்சலி எழுதிய யோக சூத்திரத்தை வார்த்தைக்கு வார்த்தை கடைப்பிடிப்பவர். அதில் சொன்ன மாதிரியே அளவான உணவு, நேரத்தில் தூக்கம் நெறியான வாழ்க்கை என்று வாழ்ந்து கொண்டிருந்தார். எங்கோ தவறு நடந்திருக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அது எங்கு என்பதுதான் அவருக்குத் தெரியவில்லை.

தினமும் என்ன என்ன செய்கிறீர்கள் என்று கேட்டேன். சொன்னார். தினமும் காலை ஒரு மணிநேரமும் இரவு ஒரு மணி நேரமும் தவறாமல் சிரசாசனம் செய்து கொண்டிருந்தார். ஞானம் வரப்போகிறது என்று ஆவலுடன் காத்திருந்தார். ஞானம் வரவில்லை. உள்ள புத்தியும் பேதலித்துப் பைத்தியமாகும் நிலையில் இருந்தார் அவர்.

சில பேருக்குத்தான் சிரசாசனம் ஒத்து வரும். எவ்வளவுக்கு எவ்வளவு முட்டாள்தனம் அதிகமாக இருக்கிறதோ அவ்வள வுக்கு அவ்வளவு சிரசாசனம் ஒத்துவரும். அறிவுள்ள மனிதனுக்கு சிர்சாசனம் ஆபத்தான வழி. அறிவு எந்த அளவிற்கு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவிற்கு சிரசாசனம் ஆபத்தானது. அது வெறும் யோகாசனப் பயிற்சி மட்டுமில்லை. உங்கள் உடலின் அடிப்படை ரசாயனத்தையே மாற்றும் வல்லமை கொண்டது.

மனிதன் ஆறாம் அறிவைப் பெற்றுவிட்டான். விலங்கினம் எதுவும் பெறவில்லை. ஏன்? மனிதன் தன் கால்களில் நிற்கிறான். இது மிகவும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய நுட்பமான இடம். ஒரு குழந்தை வயதானபிறகும் தவழ்ந்து கொண்டிருந்தால் அது அறிவுள்ள மனிதனாக ஆகவே முடியாது. உங்கள் முதுகுத் தண்டு பூமிக்கு இணைகோட்டில் இருந்தால் ரத்தம் உங்கள் உடம்பில் ஒரு சீராக எல்லா இடத்துக்கும் போகும். கால்களுக்கு எந்த அளவு ரத்தம் போகிறதோ அதே அளவு ரத்தம் தலைக்கும் போகும். இந்த நிலையில் தலையில் நுட்பமான நரம்பு மண்டலம் தோன்றி வளர வாய்ப்பேயில்லை. அந்த அளவு ரத்தம் வரும் போது நரம்பு மண்டலம் சரியாக வளர்ச்சியடையாது. உங்கள் மூளையின் அமைப்பும் செயல்பாடும் மிகவும் நுட்பமானது.

உங்கள் தலை ஒன்றரை கிலோ எடைதான் இருக்கும். அது ஐன்ஸ்டீனைப் போல் பெரிய மேதையின் தலையாக இருந்தாலும் அதே ஒன்றரை கிலோ எடைதான் இருக்கும். இந்த தலையில் ஏழு கோடி செல்கள் அல்லது நியூரான்கள் இருக்கின்றன. ஒவ்வொரு நியூரானும் லட்சக்கணக்கான தகவல்களைக் கடத்தும் வல்லமை பெற்றது. இந்த நியூரான் மிகவும் நுட்பமான அமைப்பை

உடையது. அதில் ரத்த ஓட்டம் அதிகமானால் அது இறந்துவிடும். தலையில் ரத்த ஓட்டம் அதிகமாக இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் நுட்பமான நியூரான்கள் செயலிழந்துவிடும். அதனால் யாராவது அடிமுட்டாளாக இருந்தால் வடிகட்டின மடையனாக இருந்தால் அவனுக்கு சிரசாசனத்தால் எந்த பாதிப்பும் வராது. அதனால் அவனுக்கு ஒரு சுகமான உணர்வே கிடைக்கும். அவனுக்கு எந்தத் தீங்கும் நேராது. சிரசாசனம் செய்யும் போது வெள்ளப்பெருக்கு போல் ரத்தம் தலைக்குப் பாயும். பின் அது வடியும்போது அவனுக்கு ஒரு சுகமான உணர்வு கிடைக்கும். நீங்கள் குளித்துவிட்டு வந்தால் எப்படி புத்துணர்ச்சி கிடைக்கிறதோ அதே மாதிரியான ஒரு புத்துணர்வு அவனுக்குக் கிடைக்கும்.

ஆனால் நீங்கள் அறிவுள்ளவராக இருந்தால் சிரசாசனம் ஆபத்தானது. அது உங்கள் நுட்பமான நரம்புகள் அமைப்பைக் கெடுத்துவிடும். உடல் ரீதியாக நன்றாக இருப்பீர்கள். ஆனால் உங்கள் அறிவு மங்கிவிடும். அதனால் மனரீதியான பாதிப்புகள் வரலாம். அறிவாளிகள் சிரசாசனம் செய்தால் அவர்களுக்குப் பைத்தியம் பிடிக்க வாய்ப்பு இருக்கிறது. அதே ஆசனத்தை முட்டாள்கள் செய்தால் அவன் உடல்நலம் மேம்படும்.

அதை எவ்வளவு நேரம் செய்ய வேண்டும் என்பது அடுத்த கேள்வி. அறிவுள்ள மனிதன் ஒரு சில நொடிகள் செய்தால் நல்லது. சில நொடிகள் ரத்த ஓட்டம் அதிகமாகி உடனே வடிந்துவிட்டால் எந்தப் பாதிப்பும் ஏற்படாது. மாறாக மூளை இன்னும் துடிப்புடன் செயல்படத் தொடங்கும். அது எவ்வளவு கால,ம் என்பதை ஒரு தேர்ந்த யோகாசன குருதான் நிர்ணயிக்க வேண்டும். நீங்கள் இல்லை. அதைப் புத்தங்கள் மூலம் செய்ய முடியாது. ஒரு தேர்ந்த குரு உங்களுக்கு வழிகாட்டாவிட்டால் சிரசாசனம் செய்வது ஆபத்தில்தான் முடியும்.

ஆனால் மனித மனம் குழந்தைத்தனமானது. உங்கள் கைக்கடிகாரம் ஓடவில்லையென்றால் உடனே அதை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்து எதனால் ஓடவில்லை என்று பார்க்கத் தோன்றும். அப்படிச் செய்தால் கடிகாரத்தில் இன்னும் பல

கோளாறுகள் ஏற்படும். கைக்கடிகாரம் என்பது ஒரு நுட்பமான இயந்திரம். அதைப் பற்றி அறிந்தவர்தான் அதைக் கழற்றிப் பார்க்க வேண்டும். அதைப்பற்றி ஒன்றும் தெரியாத நீங்கள் அதைக் கழற்றிப் பார்த்தால் அப்போது எதையாவது தவறாக நோண்டிவிட்டால் அப்பறம் யாராலும் உங்கள் கடிகாரத்தைப் பழுதுபார்க்க முடியாது. ஒரு கைக்கடிகாரத்தைவிட ஆயிரம் மடங்கு லட்சம் மடங்கு நுட்பமானது நமது மூளை. மூளையின் நுட்பத்திற்கு முன்னால் கைக்கடிகாரம் ஒன்றுமே இல்லை.

அதனால் புத்தங்களைப் படித்துவிட்டு ஏதாவது ஏடாகூடமாகச் செய்யாதீர்கள். இந்த விஷயத்தில் புத்தகங்கள் உங்களுக்கு உதவி செய்யாது. சிரசாசனம் செய்யும் விஷயத்தில் உங்களுக்குச் சரியான அறிவுரை வேண்டுமென்றால் உங்கள் மூளையின் அமைப்பை ஊடுருவிச் சென்று பார்க்கும் வல்லமை படைத்தவரைத்தான் நீங்கள் அணுக வேண்டும். அவரால்தான் நீங்கள் எத்தனை விநாடிகள் சிரசாசனம் செய்ய வேண்டும் அது உங்கள் உடலுக்கு நல்லதா இல்லையா என்பதைத் தீர்மானிக்க முடியும்.

இது ஒரு சாதாரண உதாரணம்தான். ஆனால் இது உணர்த்தும் பாடம் மகத்துவம் வாய்ந்தது. இன்று பலர் புத்தகங்களைக் கொண்டே எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டுவிடலாம் என்று நினைக்கிறார்கள். வாழ்க்கை என்பது ஒரு நுட்பமான சிக்கலான விஷயம். புத்தகங்களால் உங்களுக்குச் செத்த விதி முறைகளைத்தான் தரமுடியும். அவற்றைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றினால் உங்களை அறியாமலேயே நீங்கள் அபாயங்கள் நிறைந்த இடத்திற்குச் செல்வீர்கள். தப்பாக எதையும் செய்வதைவிட ஒன்றும் செய்யாமல் இருப்பது நல்லது. ஒரு சாமானியனாக சாதாரண வாழ்க்கை வாழ்வது எப்போதும் நல்லது. உங்களால் எந்த ஆசார்யனையும் நம்ப முடியவில்லை யென்றால் வாழ்ந்து கொண்டிருக்கும் எந்த குருவும் உங்களுக்கு ஏற்றவரில்லை என்று தோன்றினால் ஒன்றும் செய்யாதீர்கள். சும்மா இருங்கள். குறைந்த பட்சம் உங்களுக்குப் பைத்தியம் பிடிக்காமலாவது இருக்கும். தப்பான குரு உங்கள் புத்தியைப் பேதலிக்க வைத்துவிடுவார்.

உங்கள் உயிர் சக்தியின் உள்ளார்ந்த அமைப்பு மிகவும் சிக்கலானது. இந்தப் பிரபஞ்ச அமைப்பை விடவும் அது பலமடங்கு சிக்,கலானது. பிரபஞ்சம் எளிமையான வழிகளில் இயங்குகிறது.

உயிரினங்களிலேயே மிகவும் சிக்கலான அமைப்பு உள்ளவன் மனிதன். ஒரு சிங்கத்திற்கு பைத்தியம் பிடித்ததாகச் சரித்திரமே இல்லை. ஆனால் ஒரு மனிதனுக்கு எப்போது வேண்டுமானாலும் பைத்தியம் பிடிக்கலாம்.

எந்த விநாடியிலும் உங்களுக்குப் பைத்தியம் பிடிக்கலாம். உங்கள் மன அமைப்பு அப்படிப்பட்டத்து. அதனால் அதீத விழிப்புணர்வுடன் செயல்பட வேண்டும். புரிந்துணர்வுதான் தேவை. விதிமுறைகள் இல்லை. புத்தகங்கள், புனித நூல்கள், வேதாகமப் புத்தகங்கள் எல்லாமே விதிமுறைகளைத்தான் கொடுக்கும் புரிந்துணர்வை அல்ல.

ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மாதிரி. ஆண் பெண்ணிலிருந்து வேறுபட்டவன். ஒவ்வொரு தனிமனிதனும் மற்றவர்களிலிருந்து வேறுபட்டவன். அது மட்டும் இல்லை. நீங்கள் நேற்று இருந்த மாதிரி இன்று இல்லை. இன்று இருப்பது போல் நாளை இருக்கப் போவதில்லை. உங்களைப் புரிந்து கொள்ளவே ஆழமான புரிந்துணர்வு வேண்டும். புரிந்துணர்வுக்கு மாற்றாக விதிமுறைகள் இருக்க முடியாது.

இப்போது கடற்பறவைக்காகச் சேர்ந்திசை என்ற இந்தச் சூத்திரத்திற்குள் நுழைவோம்.

***ஒரு சிறிய பையில் பெரிய சுமையைப் போட முடியாது.***

***ஆழமான கிணற்றிலிருந்து சிறிய கயிறைக் கொண்டு நீர் இறைக்க முடியாது.***

இதைத்தான் இப்போது எல்லாரும் செய்து கொண்டிருக்கிறார்கள் சிறிய பைக்குள் பெரிய சுமையைப் போடுவதையேத் தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். யாருமே பையின் கொள்ளளவைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

முதல் காரியமாக உங்களுக்கு இருக்கும் வரையறைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்குப் பிறகுதான் சாதனைகளைப் பற்றி யோசிக்க முடியும். உங்கள் சக்தி என்ன? உங்களால் என்ன செய்ய முடியும்? இதைப் பற்றி யாருமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. இசையில் உண்மையான ஆர்வம் இல்லாதவன் இசைக் கலைஞன் ஆனால் அவனுடைய மொத்த வாழ்க்கையும் வீணாகிவிடும். ஏனென்றால் ஒரு இசைக்கலைஞன் பிறக்கிறான். உண்டாக்கப்படுவதில்லை.

மென்மையான உணர்வுகள் இல்லாதவன் கவிஞனாகவோ ஓவியனாகவோ ஆக வேண்டும் என்று முயற்சி செய்து கொண் டிருக்கிறான். அழகைப் பார்க்கத்தெரியாதவன் ஓவியனானால் அவன் தோல்வியுறுவான். ஓவியனுக்கு என்று சிறப்பான ஒரு கண் வேண்டும் அதை மூன்றாம் கண் என்றே சொல்லலாம். பார்க்கும் காட்சிகளிலெல்லாம் அவன் அழகைக் காண வேண்டும். நீங்கள் மரத்தைப் பார்த்தால் ஒரே ஒரு பச்சை நிறத்தைத்தான் பார்ப்பீர்கள். ஆனால் ஒரு ஓவியன் அதில் ஆயிரம் பச்சை வண்ணங்களைப் பார்ப்பான். ஒவ்வொரு மரத்துக்கும் ஒரு தனியான பச்சை நிறம் இருக்கிறது. ஒரு ஓவியன் அந்த நிறத்தைத் தன் நரம்புகளில் உணர்கிறான். ஒவ்வொரு நிறமும் அவனுடைய இதயத்தில் ஒருவிதமான அதிர்வை உண்டாக்குகிறது. ஒரு ஓவியனைப் பொறுத்த மட்டில் இந்த உலகம் மொத்தமுமே வண்ணங்களினால் ஆனதுதான்.

இந்துக்கள் இந்த உலகம் சப்தங்களினால் ஆனது என்று சொல்கிறார்கள். நாதம் தான் அனைத்திற்கும் மூலம் என்பது அவர்கள் கருத்து. உபநிஷத்துக்கள் போன்ற தத்துவ நூல்களை எழுதியவர்கள் கவிஞர்களாகவும் இசைக்கலைஞர்களாகவும் இருந்திருக்க வேண்டும், அவர்களால் சப்தத்தை விசேஷமாகக் கேட்டுணர முடிந்தது

இந்தப் பிரபஞ்சமே ஓங்கார நாதமாகத்தான் அவர்களுக்குத் தோன்றியது. இசையை நேசிக்காத ஒருவன் தொடர்ந்து ஓம் என்ற மந்திரத்தைச் சொல்லிக் கொண்டிருந்தால் அதனால் எந்தப் பயனும் ஏற்படாது. அவன் சொல்லிக்கொண்டேயிருப்பான்.

எதுவுமே நடக்காது. குருவை அடிக்கடி மாற்றுவான். ஆனால் தனக்கு இருக்கும் பல - பலவீனங்களைப் பற்றி அவன் யோசிப்பதேயில்லை.

உங்கள் செவிக்கு இசை இனிமையாக இருந்ததென்றால், இசையை ரசிக்கும் இதயம் உங்களுக்கு இருந்ததென்றால் - இசையைப் புரிந்து கொண்டு அதன் மேன்மையை உணரும் மனம் இருந்ததென்றால் 'ஓம்' என்ற மந்திரத்தை உச்சாடனம் செய்வது உங்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும். நீங்களும் நீங்கள் உச்சரிக்கும் ஓங்காரமும் ஒரு நிலையில் ஒரு கட்டத்தில் ஒன்றிவிடுவீர்கள். அதன் பின் அந்த நாதத்தின் வடிவில் இன்னும் நுட்பமான படிமங்களுக்குச் சென்று பார்க்கலாம். ஒரு கட்டத்தில் மற்ற எல்லா சப்தங்களும் அடங்கிவிடும். பிரபஞ்சத்தில் ஓங்கார சப்தம் மட்டுமே தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கும். அந்த ஓங்காரத்தைத்தான் முனிவர்கள் ஓம் என்ற மந்திரத்தில் பொதித்து வைத்தார்கள். அதனால்தான் இந்துக்கள் இந்த உலகம் ஒலிகளால் ஆனது என்று சொல்கிறார்கள். இந்த உண்மை எல்லாருக்கும் செல்லுபடியாகாது. இது ஒரு இசைக்கலைஞனுக்கு மட்டுமே உண்மை..

எல்லாக் காலத்திற்கும் எல்லாருக்கும் பொருந்தும் உண்மை என்று ஒன்றும் இல்லை. உண்மை அல்லது மெய்ப்பொருள் ஒவ்வொருவருக்கும் வேறுபடுகிறது. நீங்கள் உணர்ந்தறிந்த உண்மை உங்களுடையது. அது எனக்குப் பொருந்தாது. நான் கண்டறிந்த உண்மை உங்களுக்குப் பொருந்தாது. உண்மை என்பது நம்மைவிட்டு தனித்து நிற்பதல்ல. என் உண்மையில் கொஞ்சம் நானும் கலந்திருப்பேன். அது போல் உங்கள் உண்மையில் கொஞ்சம் நீங்களும் கலந்திருப்பீர்கள்.

புத்தர் ஞானம் பெற்ற போது, ஏசுநாதரோ அல்லது ஷுவாங் ட்சுவோ மெய்ப்பொருளை உணர்ந்த போது அவர்கள் எல்லாருமே ஒரே பிரபஞ்ச மூலத்தைத்தான் தொட்டார்கள். ஆனால் அதை அவர்கள் புரிந்து கொண்டு சொன்ன விதம் வேறு. புத்தர் இசைக்கலைஞன் இல்லை. அதனால் அவர் அங்கே எந்த சப்தத்தையும் கேட்கவில்லை. அவர் ஒரு ஓவியர் இல்லை.

அதனால் அங்கே அவர் வண்ணங்களைப் பார்க்கவில்லை. அவர் அமைதியான மனிதர். அமைதிதான் அவருடைய இசை. அதனால்தான் அவர் அங்கே உருவும் அருவும் அற்ற ஒரு சூனியத்தைப் பார்த்தார். அதுதான் அவருடைய உண்மை.

மூலம் ஒன்றுதான் ஆனால் அதை அடைபவர்கள் வித்தியாசமானவர்கள். அவர்கள் வேறு வேறு வழிகளில் அந்த மூலத்தை பார்க்கிறார்கள். உணர்கிறார்கள். அதனால்தான் இன்று நம்மிடம் பலவகைப்பட்ட தத்துவங்கள் இருக்கின்றன. பல்லாயிரம் மதங்கள் இருக்கின்றன.

பக்த மீரா அதே மூலத்தை அடைந்தவுடன் நடனமாடத் தொடங்குகிறள். புத்தரோ ஏசுநாதரோ நடனமாடுவதை உங்களால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.. மீரா நடனமாடத் தொடங்குகிறாள். அவள் தன் காதலனான கண்ணனிடம் சேர்ந்துவிட்டாள். அவள் மனதில் காதல் இருந்தது. அதனால் பிரபஞ்ச மூலம் அவளுக்குக் காதலனாகத் தோன்றியது.

மெய்ப்பொருளில் எந்த மாற்றமும் இல்லை. அது அப்பபடியே தான் இருக்கிறது. ஆனால் அதை ஒருவர் பார்த்தவுடன் அதன் தன்மை மாறிவிடுகிறது. யார் கண்ட உண்மையும் உங்கள் உண்மையாகிவிடாது. உங்கள் உண்மையை நீங்கள்தான் கண்டு உணர வேண்டும்.

முதலில் உங்கள் சக்தி என்னவென்று உங்களுக்குத் தெரிய வேண்டும். உங்களால் என்ன செய்யமுடியும் என்று நீங்கள் உணர வேண்டும். அதனால்தான் உங்கள் நாடியைப் பிடித்துப் பார்த்து உங்கள் சக்தி என்ன என்று சொல்வதற்கு ஒரு குருதேவர் தேவைப்படுகிறார்.

நீங்கள் தவறான திசையில் தொடர்ந்து முயன்று கொண்டே இருக்கலாம். அதனால் எந்தப் பயனும் இல்லை. நீங்கள் ஒரு குறிப்பிட்ட வழியில்தான் பயணிக்க முடியும். அந்த வழி உங்களுக்குள்தான் இருக்கிறது.

**ஒரு சிறிய பையில் பெரிய சுமையைப் போட முடியாது.**

**ஆழமான கிணற்றிலிருந்து சிறிய கயிறைக் கொண்டு நீர் இறைக்க முடியாது.**

உங்களால் என்ன முடியும் உங்கள் சக்தி என்ன என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள். அதுதான் முதல்படி. உங்கள் பலம் என்னவென்று தெரிந்தால் முதலடி எடுத்து வைத்து விட்டீர்கள் என்று அர்த்தம். அதன்பின் கடைசிப் படி வெகு தூரத்தில் இல்லை. ஆனால் முதல் அடி தப்பாக இருந்ததென்றால் நீங்கள் எத்தனை ஜென்மங்களாகத் தொடர்ந்து நடந்தாலும் போய்ச் சேர வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேர மாட்டீர்கள்.

**காற்றின் வேகத்தால் லு நாட்டின் தலைநகரத்தை அடைந்த கடற்பறவையைப் பற்றிக் கேட்டதில்லையா?**

இது ஒரு அழகான கதை. ஒரு அழகான பறவை லு நாட்டின் தலைநகரத்திற்கு வெளியே வந்து இறங்கியது.

**அந்த நாட்டு இளவரசன் அதற்கு ஒரு பெரிய வரவேற்பை ஏற்பாடு செய்தான்.**

காரணம் அவன் ஒரு இளவரசன். தன்னைப் போலவே அந்தப் பறவையும் ராஜ குடும்பத்தைச் சேர்ந்தது என்று நினைத்தான். அந்தப் பறவை அதீத அழகுடன் இருந்தது. அதனால் அதற்கு ராஜ மரியாதை தரவேண்டும் என்று நினைத்தான் இளவரசன்.

அது சரி ஒரு பறவையை எப்படி வரவேற்பது? அந்த இள வரசன் தனக்கேயுரிய வழியில் அந்தப் பறவையை வரவேற்றான்.

**புனிதமான இடத்தில் அந்தப் பறவைக்கு மது வழங்கினான்.**

**ஷன் என்ற இசை வல்லுனர் உருவாக்கிய கீதங்களை இசை வல்லுனர்களைக் கொண்டு சேர்ந்திசையில் பாட வைத்தான். அந்தப் பறவைக்கு உணவளிக்க பல ஆடுமாடுகளை பலியிடச் சொன்னான்.**

**சேர்ந்திசையால் திகைத்துப் போன அந்தக் கடற்பறவை மனம் கசந்து இறந்து விழ்ந்தது.**

விருந்தாளியைத் தடபுடலாக வரவேற்க எல்லா ஏற்பாடு களையும் செய்தார்கள். ஆனால் அந்த விருந்தாளி யார் எப்படிப் பட்டவர் என்று யாருமே கவலைப்படவில்லை. இந்தக் கதையில் விருந்தாளி வரவேற்பவரின் தன்மைப்படி வரவேற்கப்பட்டார். ஒரு விருந்தாளியை அவர் தன்மையின்படி வரவேற்க வேண்டும். இங்கே அது நடக்கவில்லை. அந்தத் தவறுதான் அந்தப் பறவையைச் சாகடித்தது. நீங்கள் விருந்தாளியாகப் போகும் போது பல நேரங்களில் அந்த வீட்டுக்காரர்கள் தங்கள் அன்பாலேயே உங்களைக் கொன்றுவிடுவார்கள். உங்களையும் தங்களைப்போலே நினைத்துக் கொண்டு உங்களுக்கு அவர்கள் பாணியில் ராஜ உபசாரம் பண்ணியே உங்களைச் சாகடித்து விடுவார்கள்.

ஒரு குழந்தை பிறந்தவுடனேயே அதன் பெற்றோர்கள் அந்தக் குழந்தை எப்படி வளர வேண்டும் அவன் என்னவாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்துவிடுகிறார்கள். சில சமயம் அந்தக் குழந்தை பிறப்பதற்கு முன்பே அதன் வாழ்க்கையைத் தீர்மானித்துவிடுகிறார்கள்.

நான் ஒரு நண்பரின் வீட்டில் தங்கியிருந்தேன். நண்பர் ஒரு பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்தார். அவர் மனைவியும் ஒரு பேராசிரியை. இருவரும் மகா புத்திசாலிகள். வீடு முழுவதும் அவர்கள் வாங்கிய பதக்கங்களும் சான்றிதழ் களும் காணப்பட்டன.

அவர்களின் ஒரே மகளைப் பார்த்தேன். அவள் அழுத படியே பியானோ வாசித்துக் கொண்டிருந்தாள். அவள் தாயிடம் ''என்ன ஆயிற்று? எதற்காக அழுகிறாள்?'' என்று கேட்டேன்.

தாய் சொன்னாள்.

''நான் இசை பயில வேண்டும் என்று மிகவும் ஆசைப் பட்டேன். ஆனால் என் பெற்றோர்கள் விடவில்லை. எனக்கு நடந்த கொடுமை என் மகளுக்கும் நடக்கக் கூடாது. அவள் இசை

மேதையாகத்தான் வரவேண்டும். நான் வேண்டிய அளவு வாழ்க்கையில் துன்பப்பட்டுவிட்டேன். நான் பேராசிரியையாக வேண்டும் என்று என் பெற்றோர்கள் என்னை வற்புறுத்தினார்கள். ஆனால் நான் அப்படி இல்லை. நான் ஒரு ஆதர்சத் தாய். என் பெண்ணை பேராசிரியை ஆக வேண்டும் என்று வற்புறுத்த மாட்டேன். அவள் நிச்சயம் ஒரு இசை மேதையாகத்தான் வருவாள்.''

இப்போது அவளுடைய மகள் இன்னும் பலமாக அழுது கொண்டிருந்தாள்.

மற்றவர்கள்தான் உங்களைக் குழப்புகிறார்கள். உங்கள் தாய் நீங்கள் ஒரு தொழிலில் ஈடுபட வேண்டும் என்று விரும்பினாள் உங்கள் தந்தையோ நீங்கள் வேறு தொழிலில் ஈடுபடவேண்டும் என்று விரும்பினார். அவர்கள் இருவருக்கும் ஒத்துப் போகவில்லை. தாயும் தந்தையும் என்றாவது ஒரு சேர முடிவெடுத்திருக்கிறார்களா?

முல்லா நசிருதீனின் மகன் என்னிடம் சொன்னான்.

''நான் டாக்டராக வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஆனால் என் தாயோ நான் இஞ்சினியராக வேண்டும் என்று விரும்புகிறாள். என்ன செய்வது என்று தெரியவில்லை.''

நான் சொன்னேன். '' அவ்வளவுதானே! உன் தந்தை நீ இஞ்சினியராக வேண்டும் என்று விரும்புகிறார்'' என்ற வதந்தியை ஊரெல்லாம் பரப்பிவிடு.''

இப்போது அவன் பெரிய டாக்டராக இருக்கிறான்.

தாய்க்கும் தந்தைக்கும் எப்போதுமே ஒத்துப் போவதில்லை. எப்போதும் ஒருவரை ஒருவர் எதிர்க்கிறார்கள். அவர்களுக்கிடையே இருக்கும் அந்த எதிர்ப்புணர்வு உங்களுக்குள்ளும் ஆழமாக இறங்கியிருக்கிறது. உங்களுக்குள் இருக்கும் முரண்களாக அந்த எதிர்ப்பு பரிமளித்திருக்கிறது. உங்கள் தாய் - தந்தை இறந்திருக்கலாம். அவர்கள் இந்த உலகத்தில் இல்லாமல் இருக்கலாம். ஆனாலும் அவர்கள் உங்கள் உணர்வின்மை

நிலையில் இன்னும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிரார்கள். அங்கேயும் சண்டை போட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள். உங்களை ஒருபொழுதும் அமைதியாக இருக்க அவர்கள் விடமாட்டார்கள். உங்கள் தந்தை இதைச் செய் என்று அழுத்தமாகச் சொன்னால் அதைச் செய்யாதே என்று உங்கள் தாய் இன்னும் அழுத்தமாகச் சொல்லுவாள். உங்கள் பெற்றோர்களிடையே இருக்கும் முரண்பாடுதான் உங்களுக்குள்ளும் இருக்கின்றன. அது போக சகோதர- சகோதரிகள், அத்தைகள் மாமன்கள் என்று ஆயிரம் உறவுகள் இருக்கின்றன. இவர்கள் எல்லாம் உங்களுடைய நலம் விரும்பிகள். அவர்களுக்கிடையே நீங்கள் தனியாகக் மாட்டிக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்கள் எண்ணப்படி நடக்க வேண்டும் என்றுதான் ஒவ்வொருவரும் விரும்புகிறார்கள். அவர்கள் உங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்துக் கொண்டிருக்கிறார்கள். உங்கள் மொத்த வாழ்க்கையும் குழப்பமாகிவிடுகிறது. நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று உங்களுக்கே தெரியாமல் போய்விடுகிறது. உங்கள் மனதின் விருப்பம் என்ன, நீங்கள் எங்கே போக வேண்டும், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், அதை ஏன் செய்து கொண்டிருக் கிறீர்கள் என்பதே உங்களுக்குத் தெரியாமல் போய்விடுகிறது. சொல்ல முடியாத வேதனையில் வாடுகிறீர்கள். நீங்கள் இயல்பாக வளரவில்லை என்றால் உங்களுக்கு வேதனையான வாழ்க்கை தான் மிஞ்சும். நீங்கள் உங்கள் விருப்பப்படி வாழவில்லை யென்றால் வாழ்க்கையே வேதனையாகப் போய்விடும்.

அந்த வேதனைதான் அந்தக் கடற்பறவைக்கு நேர்ந்தது. எல்லாக் கடற்பறவைகளுக்கும் அந்த வேதனைதான் நேரும். ஒரு வகையில் நீங்கள் அனைவரும் கடற்பறவைகளே.

நீங்களும் அந்தப் பறவையைப் போல் ஒரு நாள் ஒரு கருவில் வந்து உதித்தீர்கள். உங்களையும் அதே போல் தடபுடலாக வரவேற்றார்கள். என்ன செய்யவேண்டும் என்பதை ஜோசியர்கள் நிர்ணயித்தார்கள். இசைக்கலைஞர்கள் தங்களுக்குப் பிடித்த இசையுடன் உங்களை வரவேற்றார்கள். உங்கள் பெற்றோர்கள் பாசத்துடன் வரவேற்றார்கள். இவையெல்லாம் சேர்ந்து உங்களைப் பைத்தியமாக்கிவிட்டன. இந்த இசையாலும்

ஜோதிடத்தாலும் பாசத்தாலும் வேறு எந்தப் பயனும் கிட்ட வில்லை.

ஒரு ஞானி உங்களை தன் முறையில் வரவேற்பதில்லை. உங்கள் முறையிலேயே வரவேற்கிறான். ஒரு கடற்பறவை இசைக்கலைஞர்களாலும் அவர்களுடைய அழகான சேர்ந்திசை யாலும் கொல்லப்பட்டது. இத்தனைக்கும் அந்த இளவரசன் தவறாக எதையும் செய்யவில்லையே! அந்த நாட்டில் அரண்மனை விருந்தினர்களை அப்படித்தான் வரவேற்பார்கள்.

ஒரு கடற்ப்றவையை எப்படி நடத்த வேண்டும்? உங்களைப் போல் நடத்த வேண்டுமா இல்லை ஒரு பறவையைப் போலா?

அடுத்தவர்கள் அவர்கள் போக்கில் இருக்க அனுமதியுங்கள். அதுதான் புரிந்துணர்வு. அதுதான் அன்பு. உங்களை உங்கள் விருப்பங்களை அடுத்தவர் மேல் திணிக்காதீர்கள். உங்கள் ஆசைகள் நன்றாக இருக்கலாம். ஆனால் அதன் விளைவுகள் மோசமாகவே இருக்கும். நல்லெண்ணம் மட்டும் போதாது. அதுவே அடுத்தவருக்கு விஷமாக மாறும் வாய்ப்பு இருக்கிறது. இங்கே நல்லெண்ணம் தீய எண்ணம் என்பது கேள்வியல்ல. அடுத்தவரை அவர் போக்கில் சுதந்திரமாக இருக்க அனுமதிக் கிறீர்களா என்பதுதான் பிரச்சினை. உங்கள் மனைவியை அவள் போக்கில் போக விடுங்கள். உங்கள் கணவரை அவர் போக்கில் போகவிடுங்கள். உங்கள் குழந்தை அவன் வாழ்க்கையை வாழட்டும். உங்கள் விருப்பங்களை அவன் மேல் திணிக்கா தீர்கள்.

நாம் எல்லாருமே கடற்பறவைகள்தான். நம்மை ஒருவருக்கு ஒருவர் தெரியாது. எல்லாருமே அன்னியர்கள்தான். நீங்கள் யாரென்று யாருக்கும் தெரியாது. உங்களுக்கு நாங்கள் எல்லாம் சேர்ந்து செய்யக்கூடிய அதிகப்பட்ச உதவி - நீங்கள் எப்படி இருக்க விரும்புகிறீர்களோ அப்படி இருக்கவிடுவதுதான். எதிர்காலம் இன்னதென்று யாருக்கும் தெரியாது. அதை யாராலும் யார் மேலும் திணிக்க முடியாது. அதைத் தெரிந்து கொள்ள எந்த வழியும் இல்லை. சத்தியமாக ஜோதிடம் உதவாது. இதெல்லாம்

முட்டாள்தனமான வழிகள். அவை முட்டாள்களை நம்பியே இருக்கின்றன. நாம் இன்னும் வருங்காலம் எப்படி இருக்கப் போகிறது என்று ஜோதிடர்களைக் கேட்டு அதன்படி வாழ்க் கையைத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். அதனால் தான் ஜோதிடம் போன்ற முட்டாள்தனங்கள் இன்னும் தொடர்கின்றன.

வாழ்க்கையைத் திட்டமிட முடியாது. காட்டாற்று வெள்ளம் போன்றது வாழ்க்கை. அதைத் திட்டமிடாமல் அதன் போக்கில் விடுவதுதான் நல்லது. வாழ்க்கை திட்டமிடப்பட்டால் நமக்குச் சலிப்புத் தட்டிவிடும். வருங்காலத்தை யாராலும் கணிக்க முடியாது. அப்படி இருப்பதுதான் நல்லது. வருங்காலம் தெரியாமல் இருப்பதில்தான் நம் சுதந்திரமே இருக்கிறது. வருங்காலம் இப்படித்தான் இருக்கும் என்று தெரிந்துவிட்டால் அதில் சுவையும் இருக்காது சுதந்திரமும் இருக்காது. நீங்கள் ஒரு இயந்திரத்தைப் போல்தான் வாழ்வீர்கள்.

ஆனால் உங்களுக்கு அதுதான் பிடித்திருக்கிறது. அப்படி வாழத்தான் நாம் அனைவரும் முயற்சி செய்து கொண்டிருக் கிறோம்.

உங்களுக்கு இது புரிந்ததென்றால் மற்றவர்களுக்கு அவர்கள் விருப்பம் போல் வாழும் சுதந்திரத்தைக் கொடுங்கள். யாரையும் உங்கள் சுதந்திரத்தில் குறுக்கிட அனுமதிக்காதீர்கள்.

யாரையுமே உங்களுக்கு அடிமையாக்காதீர்கள். நீங்கள் யாருக்கும் அடிமையாகாதீர்கள். இதுதான் உண்மையான சந்நியாசம். இதுதான் சந்நியாசத்திற்கு நான் கொடுக்கும் அர்த்தம். யாரையும் அடிமைப்படுத்தாமல் யாருக்கும் அடிமையாகாமல் எவன் இருக்கிறானோ அவனே உண்மையான சந்நியாசி. தனக்குத் தானே உண்மையாக இருப்பதாக எவன் உறுதி பூண்டிருக்கிறானோ அவனே உண்மையரன சந்நியாசி. இந்த உண்மை எங்கே அழைத்துச் செல்கிறதோ அங்கே போகத் தயாராக இருக்கிறான் அவன்.

இதுதான் உண்மையான துணிச்சல். இந்தத் துணிச்சலால் பாதுகாப்பின்மை ஏற்படலாம். உங்களுக்குப் பாதுக்காப்புதான்

முக்கியம் என்றால் அடுத்தவர்கள் சொன்னதைக் கேட்க வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக மற்றவர்களின் சேர்ந்திசை உங்களைக் கொன்றுவிடும். அது உங்களை ஏற்கனவே பாதிக்கு மேல் கொன்றுவிட்டது. நீங்கள் ஏன் மற்றவர்கள் பேச்சைக் கேட்கிறீர்கள்? அவர்களுக்கு உங்களைவிட அதிகம் தெரியும் என்று நினைக்கிறீர்கள்.

ஒரு ஐந்து வயதுக் குழந்தை அதன் பத்து வயதேயான அண்ணனிடம் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். தம்பி சொல்கிறான்.

''சினிமாவுக்குப் போகவேண்டும் ,என்று அம்மாவிடம் அனுமதி கேள்.''

''ஏன் அதை நீ கேட்க மாட்டாயோ?''

''உனக்குத்தான் அம்மாவை என்னை விட அதிக காலம் தெரியும்.''

இதுதான் பிரச்சினை. நீங்கள் உங்கள் தாய் சொல்வதைக் கேட்கிறீர்கள். ஏனென்றால் உங்கள் தாய்க்கு உங்களைவிட இந்த உலகத்தைத் அதிக காலம் தெரியும். அப்பாவிற்கும் அதே வாதம் தான்.

இந்த உலகத்தில் அதிககாலம் இருந்த ஒரே காரணத்தால் இந்த உலகத்தை நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. காலம் புரிந்துணர்வைக் கொடுக்குமா என்ன? அரசு அலுவலகங்களில் பணிபுரியும் மூத்த பணியாளர்களைப் பாருங்கள். அரசு அலுவல்களில் பணி மூப்பே ஞானமாக இருக்கலாம்.. வாழ்க்கையில் சத்தியமாக இல்லை.

அதிகக் காலம் வாழ்வதால் வாழ்க்கையைப் புரிந்து கொள்ள முடியாது. தியானத்தின் மூலமே வாழ்க்கையைப் புரிந்து கொள்ள முடியும். காலம் என்பது வெளிச்சுற்றில் நிகழும் ஒரு அசைவு. ஒரு மனிதன் ஆயிரம் வருடங்கள் வாழ்ந்தும் அடி முட்டாளாக இருக்கலாம். நாள் ஆக ஆக அவன் முட்டாள்தனம் வளரும் வாய்ப்பு இருக்கிறது. உங்களுக்குள் முட்டாள்தனத்தின் விதைகள்

இருந்தால் ஆயிரம் வருடங்களுக்குள் நீங்கள் ஒரு பரந்து விரிந்த முட்டாள்-மரமாக வளர்ந்துவிடுவீர்கள். அந்த மரத்தின் நிழலில் கோடிக்கணக்கான முட்டாள்கள் தங்குவார்கள். உங்களிடம் என்ன இருக்கிறதோ அதுதான் வளரும். எதுவுமே அப்படியே இருக்காது. எல்லாமே வளர்ந்துகொண்டும் மாறிக்கொண்டும் அழிந்துகொண்டும் இருக்கும். ஒரு முட்டாள் இன்னும் பெரிய முட்டாளாக வளர்வான். ஒரு ஞானி இன்னும் பெரிய ஞானியாக மலர்வான். அதனால்தன் சொல்கிறேன் - காலத்திற்கும் புரிந்துணர்விற்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

புரிந்துணர்வு காலத்தின்பாற்பட்டதில்லை. அதிகமாக அனுபவம் புரிந்துணர்வைக் கொடுக்காது. அனுபவத்தின் அளவு புரிந்துணர்வைக் கொடுக்காது. அதன் தன்மைதான் கொடுக்கும். பல வாழ்நாட்களில் கிடைக்காத ஞானத்தை ஒரே அனுபவம் கொடுக்கலாம். ஆனால் நீங்கள் அதீத விழிப்புணர்வுடன் அந்த அனுபவத்தை அணுக வேண்டும்.

ஒரு மனிதன் பல பெண்களுடன் உறவு கொண்டிருக்கலாம். ஆயிரக்கணக்கான பெண்களுடன் உடல் உறவு கொண்டிருக் கலாம். அவனுக்கு அன்பு, காதல் என்றால் என்னவென்று தெரியும் என்ற் நினைக்கிறீர்களா? சத்தியமாக இல்லை. பைரன், டான் ஜுவான் போன்றவர்கள் மிக அதிகமான பெண்களுடன் உறவு கொண்டிருந்தார்கள். இதில் டான் ஜுவான் எத்தனை பெண்களை வீழ்த்தினான் என்பதற்கு கணக்கு வைத்திருந்தான். மிக அதிகமான பெண்களுடன் உறவு வைத்திருந்தான் என்ற ஒரே காரணத்திற்காக அவனுக்கு அன்பு என்றால் என்னவென்று தெரியும் என்று அர்த்தம் இல்லை.

ஒரே ஒரு பெண்ணோடு உறவு கொள்வதன் மூலம் நீங்கள் காதலின் தன்மையைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் அந்த உறவில் ஒரு தரம் இருக்க வேண்டும். அந்தத் தரத்தை நீங்கள்தான் அந்த உறவில் கொண்டுவர வேண்டும். அந்தத் தரம்தான் விழிப்புணர்வு. ஒரே ஒரு பெண்ணுடன் ஒரே ஒரு முறை முழு விழிப்புணர்வுடன் முழுமையாக உறவு கொண்டால் அந்த உறவில் உங்கள் முழு இருப்புநிலையையும் கொண்டுவந்தால்

நீங்கள் அன்பு என்றால் என்னவென்று தெரிந்து கொள்ளலாம். அந்த விழிப்புணர்வு இல்லையென்றால் நீங்கள் மீண்டும் மீண்டும் உறவு கொள்வீர்கள் - உண்மைக் காதல் எதுவென்று தெரியாமலேயே அதை இயந்திரத்தனமாகச் செய்து கொண்டிருப் பீர்கள்.

ஒரு அனுபவத்தில் உங்கள் விழிப்புணர்வைக் கொண்டு வரும்போது உங்களுக்கு ஞானம் கிடைக்கிறது. அனுபவமும் விழிப்புணர்வும் சந்திக்கும்போது அங்கே ஞானம் பிறக்கிறது. ஆனால் வெறும் அனுபவம் - மேலும் கொஞ்சம் அனுபவம் - இன்னும் கொஞ்சம் அனுபவம் - அனுபவத்தின் அளவு அதிக மாகுமே தவிர அதில் தரம் இருக்காது. அனுபவத்தில் இருக்கும் தரம் தான் உங்களுக்குச் சுதந்திரத்தையும் ஞானத்தையும் கொடுக்கும்.

ஒரு குழந்தை பிறக்கிறது. அதன் தாயும் தந்தையும் அதனை மிகவும் நேசிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் தங்கள் விருப்பங்களை அந்தக் குழந்தை மேல் திணிக்க மாட்டார்கள். அவர்கள் வாழ்வில் தோற்றுவிட்டார்கள் என்று அவர்களுக்குத் தெரியும். பின் ஏன் அதே வாழ்க்கையை அதே வழிமுறையை அந்தக் குழந்தை மேல் திணிக்க வேண்டும்? இன்னொரு வாழ்க்கையை ஏன் கெடுக்க வேண்டும்?

இந்த அறியாமையைக் கொஞ்சம் கவனியுங்கள். தங்கள் சென்ற வழியில் அந்தக் குழந்தையும் செல்ல வேண்டும் என்று நினைக்கிறார்கள். அந்த வழியில் போய் அவர்கள் என்ன சாதித்தார்கள்? அவர்கள் தங்கள் மனதின் ஆழத்தில் வெறும் சூனியத்தை மட்டுமே உணர்ந்தார்கள். தங்கள் வாழ்க்கை எங்கும் செல்லாமல் ஒரு இடத்தில் தேங்கி நின்றுவிட்டது என்று அவர்களுக்குத் தெரியும். பின் எதற்காக குழந்தையையும் அதே பாதையில் செல்ல வைக்க வேண்டும்? அந்தக் குழந்தையும் ஏன் அதே வெற்றிடத்தையும் சூனியத்தையும் அடைய வேண்டும்? ஏன்? ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும். 'என் குழந்தையும் என் பாதையையே பின்பற்றுகிறான்' என்ற நினைப்பு நம் அகந்தைக்குச் சுகமாக இருக்கிறது.

நீங்கள் உங்கள் வாழ்க்கையில் எதையும் அடையாமல் இருக்கலாம். ஆனால் உங்கள் மகன் உங்கள் பாதையில் வருவது உங்களுக்கு ஒரு சுகமான உணர்வைத் தருகிறது. நீங்கள் எதையோ சாதித்துவிட்டீர்கள் என்ற உணர்வைத் தருகிறது. அதனால்தான் உங்கள் மகன் உங்களைப் பின் தொடர்கிறான்.

ஒரு மகனால் உங்களுக்குத் திருப்தியில்லை என்றால் நீங்கள் ஒரு கூட்டத்தையே சேர்த்துக் கொள்கிறீர்கள். உங்கள் சீடர்கள் கூட்டம். யாராவது ஒரு பொறிவைத்தால் அதில் மாட்டிக்கொள்ள ஆயிரம் பேர் காத்திருப்பார்கள். காரணம் யாரிடமும் நிறைவு இல்லை. அதற்குக் காரணம் அவர்கள் வேறு யாரோ சொல்வதைக் கேட்டு அதன்படி வாழ்கிறார்கள். அதனால் அவர்கள் மீண்டும் மீண்டும் அடுத்தவர்கள் சொல்வதைக் கேட்கத் துடிக்கிறார்கள்.

இந்த மனம் ஒரு கெட்ட மிருகம். அடுத்தவர் பேச்சைக் கண்மூடித்தனமாகக் கேட்பதினால்தான் உங்கள் வாழ்க்கை சூனியமாகப் போய்விட்டது. உங்கள் உள்ளே இருக்கும் அந்தக் குரலைக் கேட்காததனால்தான் நீங்கள் வாழ்க்கையை இழந்து விட்டீர்கள் என்பதை எப்போது புரிந்து கொள்ளப் போகிறீர்கள்?

ஒரு நல்ல குருதேவர் உங்களுக்கு விதிமுறைகளைக் கொடுக்க மாட்டார். அப்படி ஒருவர் விதிமுறைகளைக் கொடுத்தால் அவர் போலி என்பதைக் கண்டுக் கொள்ளுங்கள். அவரை விட்டு ஓடி வந்துவிடுங்கள். ஒரு நல்ல குருதேவர் உங்களுக்குப் புரிந்துணர்வை மட்டுமே கொடுப்பார். உங்களை நீங்களே எப்படிப் புரிந்து கொள்வது என்பதைச் சொல்லிக் கொடுப்பார். அதன் பின் விதிமுறைகள் தன்னால் வரும். ஆனால் அவை உங்கள் புரிந்துணர்விலிருந்துதான் வரும்.

***ஒரு கடற்பறவையை எப்படி நடத்த வேண்டும்? அதை ஒரு பறவையைப் போல் நடத்துவீர்களா? இல்லை உங்களைப் போல் நடத்துவீர்களா? மரங்களடர்ந்த காட்டில் உள்ள ஒரு கூட்டில் அந்தப் பறவை இருக்க வேண்டாமா? வயல் வெளி அனைத்தையும் தாண்டிப் பறந்து செல்ல வேண்டாமா?***

**ஆறுகளிலும் குளங்களிலும் நீந்திச் செல்ல வேண்டாமா? மீன்களைக் கொத்தித் தின்ன வேண்டாமா? மற்றப் பறவைகளோடு அணி வகுத்துப் பறந்து செல்ல வேண்டாமா? நாணல் களில் அமர்ந்து ஓய்வு எடுக்க வேண்டாமா?**

**கடற்பறவையைச் சுற்றி நின்று கொண்டு அதனை மனிதர்கள் தங்கள் குரல்களால் பயமுறுத்தியதே தீமை! இதில் சேர்ந்திசை வேறு. சேர்ந்திசையால்தான் அந்தப் பறவையைக் கொன்றார்கள்.**

அனைவருமே இசையால்தான் கொல்லப்படுகிறார்கள். அந்த இசை அவர்களுடைய நலம் விரும்பிகளிடமிருந்துதான் வருகிறது. நல்லது செய்கிறேன் பேர்வழி என்று கங்கணம் கட்டிக் கொண்டுவரும் நலம் விரும்பிகளிடமிருந்துதான் அந்தக் கொல்லும் இசை வருகிறது. எல்லாமே அபத்தமாகத் தோன்று கிறது. நீங்கள் ஆயிரம் மரக்கன்றுகள் நட்டு அதில் ஒன்றே ஒன்று மட்டும் வளர்ந்து பலன் கொடுத்தால், மிதம் உள்ள 999 கன்றுகளும் பட்டுப் போனால் உங்களைச் சிறந்த தோட்டக்காரன் என்று சொல்லிக் கொள்வீர்களா? வளர்ந்து பலன் தரும் அந்த ஒரு மரத்திற்காக யாராவது உங்களுக்குப் பாராட்டு விழா எடுப்பார்களா என்ன?

அந்த ஒரு மரம் உங்களையும் மீறி வளர்ந்திருக்கும் என்றுதான் சொல்வார்கள். ஏனென்றால் நீங்கள்தான் 999 மரக்கன்றுகளைக் கொன்றுவிட்டீர்களே! அந்த ஒரு மரத்திற்காக நீங்கள் நல்ல பெயர் வாங்க முடியாது. அது எப்படியோ உங்களிடமிருந்து தப்பித்திருக்கும். உங்கள் திறமை, அனுபவம் ஞானம் - இவற்றிலிருந்து அந்த ஒற்றை மரம் தப்பியிருக்கும்.

கோடிக்கணக்கான மனிதர்களில் ஒரே ஒருவர்தான் புத்தராக மலர்கிறார். என்ன நடக்கிறது இங்கே? ஏன் மற்ற மரங்களில் மலர்கள் இல்லை? மலர்கள் இல்லாமல் வளர்ந்து நிற்கும் அந்த மரங்களைப் பாருங்கள். அந்த மரத்தில் படிந்திருகும் சோகத்தைப் பாருங்கள். அதனால் சிரிக்க முடியாது. பாட முடியாது. நடனமாட முடியாது. அதற்கு மலர்கள் வேண்டும்.

உங்களால் எப்படி நடனமாட முடியும்? ''நடனமாடு'' என்று நான் கட்டளையிட்டாலும் உங்களால் ஆட முடியாது. நடனம் என்பது நிரம்பி வழியும் இன்பத்தால் நிகழ்வது. உங்கள் இதயத்தில் உள்ள நிறைவாலும் மகிழ்ச்சியாலும் உங்கள் உடலில் உள்ள ஒவ்வொரு அணுவும் சந்தோஷத்தில் ஆட வேண்டும். உங்கள் உடலே ஒரு நடனமாடும் பிரபஞ்சமாக இருக்கும். எப்படி?

சக்தி பாயவில்லை. சக்தி இல்லை. எப்படியோ கஷ்டப்பட்டு உங்களைச் சுமந்து கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இந்தச் சூழ்நிலையில் உங்களால் எப்படி ஆட முடியும்?

ஒரு மரத்தில் மலர்கள் எப்போது தோன்றுகின்றன? அந்த மரம் அன்பாலும் சக்தியாலும் நிரம்பி வழியும் போது - எதையாவது கொடுத்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்ற உந்துதல் இருக்கும் போது. மலர்கள் மரம் கொடுக்கும் பரிசுகள். அது ஒரு ஆச்சரியமான பகிர்தல். அந்த மரம் பிரபஞ்சத்தை நோக்கி முழங்குகிறது. ''என்னிடம் என் தேவையைவிட அதிகமாக இருக்கிறது.'' அந்த முழக்கம் ஒரு பாடல் அந்தப் பாடலில் மரம் என்ன சொல்கிறது? ''நான் இப்போது ஆடம்பரத் திற்குள் நுழைகிறேன். என் தேவைகள் எல்லாம் பூர்த்தியாகி விட்டன.'' தேவைக்கு மேல் அந்த மரத்திடம் இருப்பதுதான் மலர்களாகத் தோன்றுகிறது.

ஆனால் நீங்கள்? பயங்கரமான அதிருப்தியுடன் வாழ் கிறீர்கள். உங்கள் தேவைகளே இன்னும் பூர்த்தியாகவில்லை. அப்பறம் எப்படி நடனமாட முடியும்? பாட முடியும்? தியானம் செய்ய முடியும்?

தியான நிலைதான் உச்சகட்ட மலர்ச்சி. உங்களுக்குள் ஆனந்தம் வெள்ளம் போல் பிரவாகம் எடுக்கும்போது உண்டாகும் பரவச நிலையே தியானம். உங்களிடம் அபரிமிதமான சக்தி இருக்கிறது. அந்தச் சக்தி உங்களை ஒரு இடத்தில் சும்மா உட்காரவிடாது. எழுந்து ஆடச் சொல்லும். உங்களிடம் அந்த அளவிற்குச் சக்தி இருக்கும் போது உங்களால் அதைப் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க முடியாது. அந்தப்

பகிர்தலுக்கு விருந்தினர்களை அழைக்காமல் இருக்க முடியாது. பாடாமல், ஆடாமல் இருக்க முடியாது.

மனிதனுக்கு என்ன நேர்ந்துவிட்டது? ஏன் யாருமே மலர்வதில்லை? எங்கோ ஒரு கோடியில் ஒரு புத்தன் மலர்கிறான் என்றால் அதற்கு நீங்கள் காரணம் அல்ல. உங்களையும் மீறி அந்தப் புத்தன் மலர்ந்திருக்கிறான். அந்தப் புத்தனின் பெற்றோர்களையும் மீறி, அவனுடைய ஆசிரியர்களையும் மீறி அவன் மலர்ந்திருக்கிறான்.

பல்கலைக்கழகத்தில் எனக்குப் பாடம் எடுத்த ஒரு பேராசிரியர் என்னைக் காண வந்தார்.

''நான் உன் பேராசிரியர் என்பது நினைவிருக்கிறதா?''

''ஏன் இல்லாமல்? உங்களை எப்படி மறக்க முடியும்? உங்கள் முயற்சியையும் மீறித்தான் நான் இந்த நிலைக்கு வந்திருக்கிறேன். உங்கள் முயற்சி என் விஷயத்தில் வெற்றி பெறவில்லை. நீங்களும் பல வழிகளில் முயன்றீர்கள். என் விஷயத்தில் நீங்கள் தோல்வியடைந்ததற்கு நான் தான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்.''

அவர் என்மேல் அளவில்லாத அன்பு கொண்டிருந்தார். என்னை எப்படியாவது ஒரு கல்வியாளன் ஆக்கிவிடவேண்டும் என்று பலவாறாக முயற்சி செய்தார். தேர்வுகள் நடக்கும் போது தனது காரில் என் வீட்டிற்கு வந்து என்னை தேர்வு நடக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்வார். அப்படிச் செய்யாவிட்டால் நான் தேர்வு எழுதமாட்டேன் என்று அவருக்குத் தெரியும். நான் என் போக்கில் தியானம் செய்து கொண்டிருப்பேன் என்று அவருக்குத் தெரியும். அது மட்டும் இல்லை. தேர்வுக்கு சில நாட்களுக்கு முன்னால் ''அதைப் படி. இதைப்படி. இது பற்றிய வினாக்கள் நிச்சயமாகத் தேர்வில் வரும். நான் தான் கேள்வித்தாளை வடிவமைத்தேன்.'' என்று பாசத்தோடு சொல்வார். எனக்கு மீண்டும் மீண்டும் நினைவூட்டுவார். ''அதைப் படித்து விட்டாயா? இதைப் படித்துவிட்டாயா? நான் தான் கேள்வித்தாளை அமைத்தவன் என்பதை மறந்துவிடாதே'' என்று

அடிக்கடி சொல்வார். அவர் சொல்வதை நான் கேட்க மாட்டேன் என்று அவருக்குத் தெரியும்.

அவர் என்னை நேசித்தார். உங்கள் பெற்றோர்கள் உங்களை நேசிக்கிறார்கள். உங்கள் ஆசிரியர்கள் உங்களை நேசிக்கிறார்கள். இல்லை என்று மறுக்கவில்லை. என்றாலும் பாவம் அவர்களுக்கு என்ன செய்கிறோம் என்று தெரியவில்லை. உணர்வில்லாமல் செய்கிறார்கள். அவர்களிடம் அன்பு இருந்த போதிலும் அவர்கள் அறிவுரை தவறாகிவிடுகிறது. அவர்கள் தங்களை மனதில் வைத்துக்கொண்டு உங்களுக்கு வழிகாட்டுகிறார்கள். அவர் களைப் போலவே நீங்களும் வாழவேண்டும் என்று நினைக் கிறார்கள். உதாரணமாக என் பேராசிரியர் நானும் பேராசிரியராக வேண்டும் என்று நினைத்திருக்கலாம். மிகப் பிரபலமான பல்கலைக்கழகத்தில் ஒரு பேராசிரியராக ஒரு துறைத்தலைவராக இல்லை துணை வேந்தராக வர வேண்டும் என்று நினைத்திருக் கலாம்.

ஆனால் எனக்கு அப்படிப்பட்ட யோசனைகளைக் கேட்டால் சிரிப்புத்தான் வரும். அவரிடம் கேட்பேன்: ''அதனால் எனக்கு என்ன லாபம்? பேராசிரியராக இருப்பதனால் உங்களுக்கு என்ன லாபம்? நீங்கள் துறைத்தலைவராக இருக்கிறீர்கள். பெரிய பதவி. நிறைய சம்பளம். வால் நீளத்துக்கு முனைவர் பட்டங்கள். இறுதியில் என்ன சாதித்தீர்கள்?''

அவர் எல்லாம் தெரிந்த மாதிரி சிரிப்பார். ''காத்திரு. நான் சொல்வதைச் செய். உனக்கே தெரியும்.''

''உங்களுக்கு என்ன லாபம்?'' என்ற கேள்வியைக் கேட்ட வுடன் அவர் முகத்தில் குழப்ப ரேகைகளும் வருத்த ரேகைகளும் ஓடுவதைப் பார்த்திருக்கிறேன். வேறு என்ன சொல்ல?

அவர் எந்த லாபமும் பெறவில்லை. இதோ சாவின் விளிம்பில் அவர் இருக்கிறார். தனது ஆசையை என் மூலம் தீர்த்துக் கொள்ள நினைத்திருக்கலாம்.

ஒரு தந்தை மன நிறைவில்லாமலேயே சாகிறார். தன் மகனாவது லட்சியத்தை அடைந்து நிறைவு பெறுவான் என்ற

ஏக்கம் அவரிடம் இருக்கிறது. இது இப்படியே தொடர்கதையாகப் போய்க்கொண்டு இருக்கிறது. யாருமே நிறைவு பெற்றதாக வரலாறு இல்லை. அன்பு இருந்தால் மட்டும் போதாது. விழிப்புணர்வு வேண்டும். விழிப்புணர்வு இல்லாத அன்பு உங்களைச் சிறைப்படுத்திவிடும். அன்பும் விழிப்புணர்வும் சேர்ந்து இருந்தால்தான் உங்களுக்கு விடுதலை கிடைக்கும். நீங்கள் நீங்களாக இருக்க உதவும்.

***கடற்பறவையைச் சுற்றி நின்று கொண்டு அதனை மனிதர்கள் தங்கள் குரல்களால் பயமுறுத்தியதே தீமை! இதில் சேர்ந்திசை வேறு. சேர்ந்திசையால்தான் அந்தப் பறவையைக் கொன்றார்கள். மீன் உயிர் வாழ நீர் வேண்டும். மனிதனுக்குக் காற்று வேண்டும். மனிதன் - மீன் - இருவரின் தன்மையும் வேறு வேறு. தேவை களும் வேறு வேறு. அதனால் தான் அந்தக்கால அறிஞர்கள் அனைவருக்கும் ஒரே நியதியை வகுக்கவில்லை.***

உங்களை ஜடப் பொருளாக நடத்த முடியாது. ஜடப் பொருள்கள் எல்லாம் ஒரே மாதிரியாக இருக்கும் .மனிதர்கள் ஒரே மாதிரி இருக்க மாட்டார்கள். ஒரே மாதிரி பத்து லட்சம் ஃபோர்டு கார்களைத் தயாரிக்க முடியும். அதில் ஒரு ஃபோர்ட் காருக்குப் பதில் இன்னொரு ஃபோர்ட் காரை வைக்க முடியும். அப்படி மாற்றினால் யாருக்குமே தெரியாது. ஆனால் ஒரு மனிதனுக்குப் பதில் இன்னொரு மனிதனை வைக்க முடியாது. ஒரு மனிதன் மறைந்துவிட்டால் அவன் இடம் எப்போதுமே காலியாகத்தான் இருக்கும். சொல்லப் போனால் ஒவ்வொரு மனிதனின் இழப்பும் ஒரு வகையில் ஈடு செய்ய முடியாத இழப்பே. ஒரு மனிதனின் இடத்தை வேறு ஒருவன் இட்டு நிரப்ப முடியாது. ஒவ்வொரு வருக்கும் ஒரு தனித்தன்மை இருக்கிறது. விதிமுறைகளின் மூலம் அந்தத் தனித்தன்மையை அழிக்க முடியாது.

***அதனால் தான் அந்தக்கால அறிஞர்கள்***. வார்த்தைகளைக் கவனியுங்கள். இந்தக் கால அறிஞர்களிடம் போனால்

எல்லாவற்றுக்கும் விதிமுறைகளையே காண்பீர்கள். ஒரு இறுக்கமான அமைப்பைக் காண்பீர்கள். இந்த அமைப்பும் விதிமுறைகளும் உங்களை ஒரு சிப்பாயாக ஆக்கலாம், ஆனல் ஒரு போதும் உங்களை ஒரு சன்னியாசியாக ஆக்காது.

ஒரு சிப்பாய் இறந்த மனிதன். அவன் பணியே இந்த உலகில் சாவைக் கொண்டு வர வேண்டும் என்பதுதான். அவனைத் துடிப்புடன் வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படியிருந்தால் அவனால் சாவைக் கொண்டுவர முடியாது. இறந்த மனிதன் மூலமாகத்தான் சாவைக் கொண்டுவர முடியும். அடுத்தவர்களை அவன் கொல்லும் முன் அவனை கடுமையான விதிமுறைகளின் மூலம் கொன்றுவிட வேண்டும். இதுதான் இன்றைய தேதியில் மிகவும் முக்கியமான ராணுவ ரகசியம்.

ராணுவப் பயிற்சி என்பது ஒரு மனிதனை - குறிப்பாக அவனுடைய இதயத்தையும் உணர்வுகளையும் - படிப்படியாகக் கொன்று அவனை ஒரு இயந்திர மனிதனாக்குவதுதான். வருடக்கணக்கில் சிப்பாய்க்கு எந்த மாதிரி உத்தரவு போடு கிறார்கள் பாருங்கள். ''லெஃப்ட், ரைட் '' வலது பக்கம் திரும்பு'' இடது பக்கம் திரும்பு'' இந்தக் கூத்து தினமும் பல மணி நேரங்கள் நடக்கிறது. என்ன அபத்தம்! ஏன் இப்படி லெஃப்ட் ரைட் என்று வதைக்கிறார்கள்? இடது பக்கம் திரும்பு வலது பக்கம் திரும்பு என்று ஏன் தொடர்ந்து கட்டளையிட்டுக் கொண்டேயிருக்க வேண்டும்? அவர்கள் சிப்பாய்களை இயந்திர மனிதர்களாக்க முயற்சி செய்கிறார்கள். எந்த உணர்ச்சியும் இல்லாதவர்களாக சாவி கொடுத்தால் இயங்கும் பொம்மைகளாக மாற்றுகிறார்கள். ஒவ்வொரு நாளும் பல மணி நேரங்கள் அதையே செய்து கொண்டிருக்கிறீர்கள். அது உங்கள் உடலின் ஒரு பகுதியாக மாறிவிடுகிறது. அவர்கள் வலது பக்கம் திரும்பு என்று கட்டளையிட்டால் நீங்கள் அதைப்பற்றி யோசிக்கவே வேண்டாம். உங்கள் உடல் தானாகவே வலது பக்கம் திரும்பிவிடும். இப்போது நீங்கள் முழுமையான இயந்திரம் ஆகிவிட்டீர்கள். அதனால் அவர்கள் உங்கள் முன்னால் ஒரு மனிதனை நிறுத்து ''சுடு'' என்றால் கண்ணை மூடிக் கொண்டு

சுட்டுவிடுவீர்கள். உங்கள் செயல்களில் உங்கள் இதயத்தின் உணர்வுகள் குறுக்கிடாது.

உலகெங்கிலும் ராணுவப்பயிற்சியின் அடிப்படை உண்மை இதுதான். உங்கள் செயல்களிலிருந்து உங்கள் உணர்வைப் பிரித்து எடுக்க வேண்டும். அவ்வளவுதான் அவர்கள் நோக்கம். உங்கள் செயல்கள் தன்னிச்சையாக நடைபெறும். அதனால் நீங்கள் மிகவும் திறமை படைத்த வீரனாவீர்கள். இந்த உணர்வுகள் எப்போதுமே ஒரு இடைஞ்சல்தான். ஒரு மனிதனைக் கொல்லும் போது 'ஐயோ கொல்கிறோமே! அவன் எவ்வளவு துன்புறு வான்?' என்று நினைத்தால் உங்களால் கொல்லவே முடியாது.

''இவனை நான் ஏன் கொல்ல வேண்டும்? இவன் எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லையே! இவன் யாரென்றே எனக்குத் தெரியாதே! அவன் யாரோ ஒரு அன்னியன். அவனைக் கொல்வதா.. '' இப்படி எல்லாம் யோசிக்கத் தொடங்கினால் விரைவிலேயே உங்களுக்காக உங்கள் வீட்டில் காத்துக் கொண்டிருக்கும் உங்கள் தாயைப் பற்றி யோசிப்பீர்கள். உங்கள் மனைவி, குழந்தைகளைப் பற்றி யோசிப்பீர்கள். உங்களை எதிர்த்துப் போரிடும் பகைநாட்டு வீரனும் அப்படியே யோசிப்பான். அவனுக்கும் ஒரு தாய் இருக்க வேண்டும். அவன் பத்திரமாகத் திரும்பி வர வேண்டுமே என்று பிரார்த்திக்கும் மனைவி இருக்க வேண்டும். தந்தை நிச்சயம் திரும்பி வருவார் என்ற நம்பிக்கையுடன் காத்திருக்கும் அவனுடைய குழந்தை இருக்க வேண்டும். இவனைக் கொல்வதன் மூலம் ஒரு தாய் - ஒரு மனைவி - ஒரு குழந்தையின் நம்பிக்கை விளக்கை ஏன் ஊதி அணைக்க வேண்டும்? அவன் உங்களுக்கு எந்தக் கெடுதியும் செய்யவி8ல்லையே! எங்கோ தொலைதூரத்தில் இருக்கும் இரண்டு அரசியல்வாதிகளுக்கு வெறி பிடித்துவிட்ட ஒரே காரணத்தினால் சம்பந்தமில்லாத நீங்கள் இருவரும் ஏன் ஒருவரை ஒருவர் கொல்ல வேண்டும்? தேவைப்பட்டால் போர்வெறி பிடித்த அந்த இரண்டு அரசியல்வாதிகளும் மோதிக் கொள்ளட்டுமே. அவர்கள் பகையை ஏன் மற்றவர்கள் மூலமாகத் தீர்த்துக் கொள்ள வேண்டும்?

நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால் உங்களால் யாரையும் சுடவோ கொல்லவோ முடியாது. ராணுவப்பயிற்சியின் தாத்பரியமே விழிப்புணர்விற்கும் செயலிற்கும் இடையே இருக்கும் தொடர்பை அறுத்துவிடுவதுதான். அதனால் விழிப் புணர்வும் செயலும் ஒன்றை ஒன்று தொடாமல் இணை கோடுகளாகப் போய்க் கொண்டிருக்கும். அவை ஒன்றை ஒன்று எங்குமே சந்திக்காது.

ஒரு சன்னியாசிக்குக் கொடுக்கப்படும் பயிற்சி நேர் எதிரானது. விழிப்புணர்வுக்கும் செயலுக்கும் இடையே இருக்கும் இடைவெளியை முற்றிலுமாக அழிப்பதுதான் சன்னியாசத்தின் முதற்கட்ட பயிற்சி. அவரை இணை கோடுகளாக இல்லாமல் ஒரே கோடாக ஒருமையாக முழுமையாக விளங்க வேண்டும்.

ஒரு இயந்திரனாகச் செயல்படாமல் உணர்வுள்ள மனிதனாகச் செயல்படுவது எப்படி என்பதுதான் அந்தப் பயிற்சியின் சாரம். உங்களிடம் உள்ள அந்த இயந்திரத்தனமு முற்றிலும் மறைந்துவிட்டதென்றால் நீங்கள் ஞானம் பெற்று விடுவீர்கள். ஒரு புத்தனாகிவிடுவீர்கள்.

இதை விதிமுறைகளின் மூலம் செய்ய முடிய்யாது. விதிமுறைகளின் மூலம் உங்களை சிப்பாயாக்கலாம். சன்னியாசியாக்க முடியாது. விதிமுறைகளை அறவே விட வேண்டும். புரிந்துணர்வைப் பெற வேண்டும். விதிமுறைகளை விட்டு விட்ட ஒரே காரணத்தால் நீங்கள் சமூக விரோதியாகிவிட மாட்டீர்கள். விதிமுறைகளை விடுதல் என்றால் என்ன பொருள்? நீங்கள் சமுதாயத்தில் வாழ்வதனால் சில விதிமுறைகளைக் கடைப்பிடிக்கிறீர்கள். ஒரு விளையாட்டிற்கான விதிமுறைகளைப் போன்றவை அவை.

உதாரணமாக நீங்கள் சீட்டாடினால் சில விதிமுறைகள் வேண்டும். ஒரு சீட்டை ராஜாவாகக் கொள்ள வேண்டும். இன்னொரு சீட்டை ராணியாகக் கொள்ள வேண்டும். அது முட்டாள்தனம் என்று உங்களுக்குத் தெரியும். எந்தச் சீட்டும் ராஜாவும் இல்லை. ராணியும் இல்லை. ஆனால் அந்த

விளையாட்டு விளையாட வேண்டுமென்றால் சில விதிமுறைகள் தேவை. அவை விளையாட்டின் விதிமுறைகள். வாழ்க்கையின் விதிமுறைகள் இல்லை.

சாலையில் போனால் போக்குவரத்து விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒழுக்கம் சம்பந்தப்பட்ட விதிகளும் போக்குவரத்து விதிகளைப் போன்றவைதான். ஒரு சமுதாயத்தில் வாழ்கிறீர்கள். அங்கே நீங்கள் மட்டும் இல்லை. மற்றும் பலர் இருக்கிறார்கள். அதனால் சேர்ந்து வாழ்வதற்குச் சில விதி முறைகள் தேவைப்படுகிறது. ஆனால் அவை இறுதியானவை அல்ல. இறைவன் வகுத்த விதிகள் அல்ல. சாலையில் நடக்கும் போது இடது பக்கம் நடக்க வேண்டும் என்பது போன்ற சாதாரண விதிகள்தான். இதுவே ஊருக்கு ஊர் வேறுபடுகிறது. அமெரிக்கர்கள் சாலையின் வலது பக்கம்தான் நடப்பார்கள். அதனால் ஒன்றும் பிரச்சினையில்லை. எந்த ஊரில் இருக் கிறீர்களோ அந்த ஊரின் விதிகளைப் பின்பற்றுங்கள். இரண்டும் ஒன்றுதான். ஆனால் நமது பாதுகாப்பிற்காக ஏதாவது ஒரு விதியைக் கடைப்பிடித்தேயாக வேண்டும். ஒரே ஊரில் இரண்டு விதிகளும் இருந்தால் அங்கே போக்குவரத்து நெரிசல்தான் உண்டாகும். தேவையில்லாத பிரச்சினை வரும்.

மற்றவர்களோடு சேர்ந்து வாழும் போது வாழ்க்கை முழுவதும் சில விதிகளைக் கடைப்பிடித்தேயாக வேண்டும். இந்த விதிமுறைகளில் தெய்விகமோ, ஒழுக்கமோ, சமய உணர்வோ எதுவும் இல்லை. இவை எல்லாம் மனிதனால் மனிதனுக்காக உரு வாக்கப்பட்ட விதிகள்தான். விழிப்புடன் செயல்பட வேண்டும். அந்த விதிகளின் சார்புத் தன்மையைப் புரிந்து கொள்ள வேண்டும். எளிமையான வாழ்க்கைக்கான வழிமுறைகள் அவை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அதற்காக அந்த விதிகளைத் தகர்த்தெறிய வேண்டும் என்று சொல்லவில்லை. அப்படிச் செய்தால் நீங்கள் தேவையில்லாத சிக்கலில் மாட்டிக்கொள்வீர்கள். சந்நியாசியாவதற்குப் பதிலாகக் குற்றவாளியாவீர்கள்.

ஒரு சந்நியாசி சிப்பாய் இல்லை. அதே சமயம் அவன் ஒரு குற்றவாளியும் இல்லை. விதிமுறைகள் எல்லாம் இந்தச் சமூக விளையாட்டின் ஒரு பகுதி என்று அவனுக்குத் தெரியும். அவன் விதிமுறைகளை எதிர்ப்பதில்லை. அதைக் கடந்து அதற்கு அப்பால் செல்கிறான். அவை தன்னைக் கட்டுப்படுத்தாமல் பார்த்துக் கொள்கிறான். மற்றவர்களுக்காக அந்த விதிகளைக் கடைப்பிடிக்கிறான். அந்த விதிகள் அவனை ஒரு இயந்திர மாக்காமல் கவனமாகப் பார்த்துக் கொள்கிறான். அவன் எப்போதும் முழு விழிப்புணர்வுடன் செயல்படுகிறான். விழிப்புணர்வே நம் இலக்கு. அதனால்தான் ஷுவாங் ட்சு சொல்கிறார்

**அதனால் தான் அந்தக்கால அறிஞர்கள் அனைவருக்கும் ஒரே நியதியை வகுக்கவில்லை.**

அவர்கள் எந்த நியதியையும் வகுக்கவில்லை. பல வழிகளில் உங்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பப் பாடு பட்டார்கள். நீங்களோ அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் குறட்டைச் சத்தம் எனக்குக் கேட்கிறது. உங்களை எப்படி எழுப்புவது? உங்களுக்கு ஒரு அதிர்ச்சியைக் கொடுத்து அதன் மூலம் விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும். அதை எப்படிச் செய்வது?

நீங்கள் விழிப்புணர்வு பெற்றுவிட்டால் அந்தத் தூக்கத் திலிருந்து விழித்துக் கொண்டால் உங்களுக்கு விதிமுறைகளே தேவையில்லை. என்றாலும் நீங்கள் விதிமுறைகளைப் பின்பற்று வீர்கள். விதிமுறைகள் தேவையில்லை என்று உங்களுக்குத் தெரியும். நீங்கள் விதிமுறைகளைத் தகர்த்து அதனால் குற்றவாளியாக மாட்டீர்கள். அவற்றைக் கடந்து சென்று அதன் மூலம் சந்நியாசியாவீர்கள்.

இன்று இவ்வளவு போதும்.

ஷுவாங் ட்சு இலையுதிர்காலத்து வெள்ளம் பற்றிய கதையைச் சொன்னார்:

இலையுதிர்காலத்து வெள்ளம் வந்துவிட்டது. ஆயிரக்கணக்கான நீரோட்டங்களிலிருந்து வெள்ளம் மஞ்சளாற்றில் பாய்ந்தது. அதனால் மஞ்சளாற்றின் நீர் மட்டம் உயர்ந்து அதன் கரைகளையும் தாண்டி தண்ணீர் ஓட ஆரம்பித்தது. நீரின் போக்கு மிக அதிகமாக இருந்ததால் எதிர்க்கரையில் இருந்தது காளையா குதிரையா என்று கூடத் தெரியவில்லை. அப்போது உலகத்தில் உள்ள அழகெல்லாம் அவன் வசம் வந்துவிட்டது என்று ஆற்றின் தேவன் சிரித்தான் பின் அவன் ஆற்றின் வழியில் தாவி வந்து கடலை அடைந்தான். கிழக்கே பரந்து விரிந்து காலியாக இருந்த தொடுவானத்தில் அலைகள் சென்று மோதுவதைப் பார்த்தான். அவன் முகம் தொங்கியது. தொலைதூரத்தில் இருக்கும் தொடுவானத்தைப் பார்த்த போது அவனுக்கு அறிவு வந்தது. ஆற்றின் தேவனான அவன் கடலின் தேவனிடம் முணுமுணுத்தான்.

''அந்தப் பழமொழி சரிதான். நூறு சிந்தனைகள் உள்ள ஒருவன் மற்றவர்களைவிடத் தனக்குத்தான் அதிகம் தெரியும் என்று நினைத்துக் கொள் கிறான்.' நானும் அப்படித்தான். உங்களைப் பார்க்கும் போதுதான் 'பரந்து விரிந்த'' என்ற வார்த்தைகளின் அர்த்தம் புரிகிறது.

**கடலின் தேவன் சொன்னான்: ''கிணற்றுத் தவளையிடம் கடலைப் பற்றிப் பேசமுடியுமா? நெருப்பில் வாழும் ஒரு பூச்சியிடம் பனிக்கட்டியைப் பற்றிப் பேசமுடியுமா? தத்துவப் பேரறிஞரிடம் வாழும் வழியைப் பற்றிப் பேச முடியுமா?''**

வாழ்க்கை ஒரு அனுபவம். அது ஒரு கோட்பாடு அல்ல. அதற்கு விளக்கம் தேவையில்லை. அனைத்துச் சிறப்புகளுடனும் வாழ்க்கை ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. அதை வாழ்ந்து பார்க்க வேண்டும் அனுபவித்துப் பார்க்க வேண்டும். அதில் மகிழ்ந்து பார்க்க வேண்டும். அது ஒரு விடுகதை அல்ல. ரகசியம். ஒரு விடுகதைக்கு விடை கண்டுபிடிக்க வேண்டும். ரகசியத்திற்கு விடை கிடையாது. ரகசியத்துடன் நீங்கள் ஒன்றிவிட வேண்டும். அதனுள் உருகி கரைந்துவிட வேண்டும். அப்போதுதான் நீங்களே அந்த ரகசியமாக மாறுவீர்கள். தத்துவத்திற்கும் சமயத்திற்கும் அதுதான் வேறுபாடு. தத்துவம் வாழ்க்கையை ஒரு விடுகதை என்று சொல்கிறது. அதற்கு நீங்கள்தான் விடை கண்டுபிடிக்க வேண்டும் என்று சொல்கிறது. அதற்காக விளக்கங்கள் கோட்பாடுகள் தேற்றங்கள் எல்லாம் நாம் கண்டுபிடிக்கவேண்டுமாம். வாழ்க்கை என்ற இந்த விடுகதைக்கு எங்காவது ஒரு விடை இருக்க வேண்டும் என்று சொல்கிறது தத்துவம். வாழ்க்கை ஒரு கேள்வி. அதற்கான பதிலைக் கண்டுபிடிக்கக் கடுமையாக உழைக்க வேண்டும் என்பது தத்துவவாதிகளின் கொள்கை. வாழ்க்கையை ஒரு கேள்விக்குறியாக எடுத்துக் கொண்டால் உங்கள் முயற்சிகள் எல்லாமே அறிவு ஜீவித்தனமாகவே இருக்கும். வாழ்க்கை ஒரு கேள்வி என்ற தற்புனைவே உங்களை அறிவுஜீவித்தனமான முயற்சிகளில் மேலும் மேலும் ஈடு படுத்தும். அந்தக் கேள்விக்கு விடை கண்டுபிடிக்கும் முயற்சியில் நீங்கள் கோட்பாடுகளையும் தேற்றங்களையும் நாடுவீர்கள்.

வாழ்க்கையை ஒரு கேள்வி என்று எடுத்துக் கொள்ளும் அந்தத் தற்புனைவே தவறு என்கிறது சமயம். வாழ்க்கை கேள்வியில்லை. அது ஒரு திறந்த ரகசியம். அது ஒரு அழைப்பு. அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு அதனுள்ளே போக

வேண்டும். வாழ்க்கை உங்களை இருகை நீட்டி வரவேற்கத் தயாராக இருக்கிறது. அதனுடன் சண்டை போடாதீர்கள். அது கேள்வியல்ல. விடுகதையும் அல்ல. அதற்கு விடை கண்டுபிடிக்க முயலாதீர்கள். அதனுடன் ஒன்றிவிடுங்கள் அது என்னவென்று உங்களுக்கு அப்போது புரியும். அந்தப் புரிதல் உங்கள் அறிவிலிருந்து வராது. உங்கள் முழுமையான இருப்புநிலையிலிருந்து வரும். அறிவினால் செய்யப்படுவது அரைகுறை வேலை. பாதி முயற்சி. வாழ்க்கைக்கு உங்கள் முழுமையான ஈடுபாடு தேவைப்படுகிறது. வாழ்க்கையுடன் ஒன்ற வேண்டும் அதனுடன் ஓட வேண்டும், எது என்னவென்று தெரியாத அளவிற்கு வாழ்க்கையுடன் ஒன்ற வேண்டும். எங்கே நீங்கள் முடிகிறீர்கள் எங்கே வாழ்க்கை முடிகிறது என்று தெரியாத அளவிற்கு ஒன்ற வேண்டும். வாழ்க்கை முழுமையும் நீங்களாக வேண்டும். அதுதான் உண்மையான முக்தி நிலை. அது தீர்வு இல்லை. முக்தி. முழுமையான ஞானத்தின் மலர்ச்சி.

இதைத்தான் இந்துக்கள் மோட்சம் என்கிறார்கள். மோட்சம் ஒரு கோட்பாடு இல்லை. ஒரு முடிவு இல்லை. இருப்பு நிலையுடன் சேர்ந்து வாழ ஒரு வித்தியாசமானவழிதான் மோட்சம். அது உங்கள் அறிவு சம்பந்தப்பட்டது அல்ல. சொல்லப் போனால் அந்த்ஃஅ நிலையில் நீங்கள் உங்கள் தலையையே இழந்து விடுகிறீர்கள். உங்கள் வெளிச்சுற்று கரைந்துவிடும். வேறுபாடுகள் எல்லாம் மறைந்துவிடும். நீங்கள் கடலில் இருக்கும் ஒரு துளி நீராக மாறிவிடுவீர்கள். உங்கள் எல்லைகளைத் தொலைத்து விடுவீர்கள். எல்லையில்லாத இந்த அண்டசராசரங்களின் எல்லைகளே உங்கள் எல்லைகளாகிவிடும்.

ஆக நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டியது - வாழ்க்கை ஒரு கேள்வியில்லை என்பதைத்தான். அதைக் கேள்வி என்று எடுத்துக் கொண்டால் உங்களுக்குப் பிரச்சினைதான். அது தவறான பாதை. மேலே செல்ல முடியாத ஒரு முட்டுச் சந்தில் கொண்டு போய் விட்டுவிடும். எங்கோ ஒரு கோட்பாட்டில் ஒரு தேற்றத்தில் சிக்கிக் கொள்வீர்கள். அப்படித்தான் ஒவ்வொருவரும் ஏதாவது கோட்பாட்டில் சிக்கிக் கொள்கிறார்கள். அப்பறம் அந்தக் கோட்பாட்டை விட்டு வெளியே வருவது கடினமாக

இருக்கிறது. அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பீர்கள். ஏனென்றால் வாழ்க்கை என்ற கேள்வி உங்களைப் பயமுறுத்திக் கொண்டேயிருக்கும். ஒரு கோட்பாட்டிற்குள் வாழும் போது கொஞ்சம் ஆறுதல் இருக்கும். உங்களுக்கு விடை தெரிந்து விட்டது போன்ற ஒரு பிரமை உண்டாகும். உள்ளபடியே உங்களுக்கு ஒன்றும் தெரியாது. மனதால் எதையும் தெரிந்து கொள்ள முடியாது. மனதால் கோட்பாடுகளை மட்டுமே உருவாக்க முடியும். வார்த்தைகளை வைத்து வேகம் வேகமாகச் சுழற்ற முடியும். வார்த்தைகளுடன் விளையாட முடியும். அதை வெவ்வெறு வழிகளில் அடுக்கி வைக்க முடியும். ஆனால் அவை எதுவும் உண்மையில்லை. உண்மை பற்றிய உங்களுடைய கணிப்பு.

அது வரைபடத்தைப் போன்றது. இந்தியாவின் வரை படத்தைப் பார்க்கிறீர்கள். அதை உங்கள் பைக்குள் வைத்துக் கொள்கிறீர்கள். நீங்கள் போகும் இடம் எல்லாம் அதைக் கொண்டு செல்கிறீர்கள். இந்தியாவையே கொண்டு செல்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் ஒரு நாட்டின் வரைபடம் அந்த நாடு அல்ல. இந்தியாவின் வரைபடம் இந்தியா ஆகாது. ரோஜா மலரைப் பற்றி உங்களுக்கு ஒரு கோட்பாடு இருக்கலாம். ஒரு ரோஜாவின் புகைப்படத்தைக்கூட நீங்கள் வைத்திருக்கலாம். ஆனால் அது ஒரு புகைப்படம்தான். அது ரோஜாவாகிவிட முடியாது. உயிருள்ள நிகழ்வான ரோஜாவிற்கும் உயிரற்ற அதன் புகைப்படத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

ஒரு குழந்தையைப் பாருங்கள். அதன் மனம் இன்னும் வளரவில்லை. அது தன் கண்களால் உலகைப் பார்க்கிறது. அதனிடம் ஒரு ரோஜா மலரைக் கொடுங்கள். அதற்கு அதன் பெயர் என்னவென்று தெரியாது. அதற்கு ஒரு பெயர்ச்சீட்டை வழங்க குழந்தைக்குத் தெரியாது. அந்த மலரை வகைப் படுத்தவோ அதன் தன்மை இன்னதென்று விளக்கவோ அதற்குத் தெரியாது. இருந்தாலும் ஒரு ரோஜா மலர் அங்கே இருக்கிறது. அதன் வண்ணங்கள் அந்தக் குழந்தையைத் தாக்குகின்றன. அதன் அழகு குழந்தையைச் சூழ்ந்து கொள்கிறது. அதன் நறுமணம் குழந்தையின் இதயத்தைச் சென்றடைகிறது. அது என்னவென்று

குழந்தைக்குத் தெரியாது. ஆனால் அந்தக் குழந்தை ஒரு மகத்தான வாழும் தருணத்தில் பங்கேற்றுவிட்டது.

அந்தக் குழந்தையிடம் ''இதுதான் ரோஜா மலர்'' என்று சொல்லுங்கள். அதன்பின் அந்தக் குழந்தைக்கு மலரின் அனுபவம் அதுபோல் இருக்காது. ரோஜா என்ற அழகின் ரகசியத்தை அந்தக் குழந்தை இனிமேல் அனுபவிக்கவே முடியாது. அடுத்த முறை ஒரு ரோஜாவைப் பார்த்தால் அந்தக் குழந்தை ''இது ரோஜா'' என்று சொல்லும். அந்த வார்த்தையை மனதில் சுமந்து கொண்டிருக்கும். அதுவரை அனுபவத்தின் செல்வச் செழிப்பில் திளைத்திருந்த குழந்தையை வார்த்தையின் வறுமையில் தள்ளிவிட்டுவிட்டீர்கள். ,முதலில் ஒரு முழுமை யான ரோஜா இருந்தது. அந்தக் குழந்தை அதில் முழுமையாக வாழ முடிந்தது. அதை வேறு எப்படியும் வர்ணிக்கவோ வரையறுக்கவோ அந்தக் குழந்தைக்குத் தெரிந்திருக்கவில்லை.

ஒரு ரோஜா ஒரு ரோஜா. அதனை இது அது என்று பெயரிட்டுச் சொல்ல முடியாது. முதலில் அந்தக் குழந்தை அமைதியாக இருந்தது. அதன் மனம் செயல்படவில்லை. அதன் மனம் அங்கே இல்லவேயில்லை. ரோஜாவிற்கும் குழந்தைக்கும் நடுவே எந்தத் தடுப்புச் சுவரும் இல்லை. ரோஜாவின் இதயமும் குழந்தையின் இதயமும் உருகிக் கலந்துவிட்டன. அந்தக் குழந்தையும் ரோஜாவும் ஒன்றிவிட்டார்கள். எங்கே ரோஜா முடிந்தது எங்கே குழந்தை தொடங்கியது என்று யாராலும் சொல்ல முடியாத அளவிற்கு ஒன்றிவிட்டார்கள். நடுவே எந்தவிதமான எல்லைகளும் இல்லை. அந்த அழகின் அதிசயத்தில் இருவரும் ஒன்றிவிட்டார்கள். ஒரு நொடிப் பொழுது குழந்தை ரோஜா என்ற இருமை போய் அழகு என்ற ஒருமை மட்டுமே இருந்தது.

ஆனால் இப்போது அந்தக் குழந்தையிடம் இது ரோஜா என்று சொல்லிவிட்டீர்கள். இனிமேல் அந்தக் குழந்தைக்கு அந்த அனுபவம் எப்போதுமே கிட்டாது. அடுத்தமுறை அந்தக் குழந்த்தை ரோஜாவைப் பார்த்த அதே நொடியில் அதன் மனம் ''இது ரோஜா: என்று சொல்லும். ரோஜா மலரின் புதிர் தொலைந்துவிட்டது. அந்த அழகின் ரகசியம் எங்கோ

போய்விட்டது. இப்போது அந்தக் குழந்தையிடம் ஒரு பதில் இருக்கிறது. ஒரு கோட்பாடு இருக்கிறது. அழகின் அனுபவம் மட்டும் இல்லை. என்ன அபத்தம்! அந்தக் குழந்தையின் அறிவு வளர்கிறது என்று சொல்வீர்கள். ஆனால் அதற்கு நேர் எதிராகத்தான் நடக்கிறது. அந்தக் குழந்தையிடம் அது என்ன என்று சொல்வதற்கு முன்னாலும் அதற்கு ரோஜாவைத் தெரியும். அப்போது அதன் ஆன்மாவால் ரோஜாவை முழுமையாக அறிந்திருந்தது. அது வெறும் அறிவு இல்லை. ஒரு முழுமையான அனுபவம். ஆனால் நீங்கள் குழந்தை அறியாமையில் இருக்கிறது என்று நினைத்தீர்கள். இப்போது குழந்தையின் மனதில் அந்த ஒற்றை வார்த்தை இருப்பதால் அதற்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கிறீர்கள்.

ரோஜா என்ற வார்த்தை ரோஜா மலர் இல்லை. கடவுள் என்ற வார்த்தை கடவுள் இல்லை. அன்பு என்ற வார்த்தை அன்பாகாது. இது போன்ற வார்த்தைகளை நாம் தொடர்ந்து சேகரித்துக் கொண்டு வருகிறோம். சில புத்திசாலிகள் இந்த வார்த்தைகளை வாதங்களாகவும் தேற்றங்களாகவும் கோட்பாடுகளாகவும் வகைப்படுத்துகிறார்கள். வாதங்கள் இன்னும் தீவிரமாகும் போது, நீங்கள் தேற்றங்களில் மூழ்கும் போது ரோஜாவிலிருந்து இன்னும் அதிக தூரம் விலகிப் போகிறீர்கள். அந்தத் தூரத்தில் எதிரொலி கூடக் கேட்காது. உங்களிடம் எதுவும் வராது. நீங்களும் எதனிடமும் செல்வதில்லை. நீங்கள் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

மூன்று யூதர்கள் நடைப்பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் நெடுநாளைய நண்பர்கள். பல விஷயங்களைப் பற்றிப் பேசியபடியே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அந்த ஊர் மேயர் காரில் அந்த வழியே போய்க் கொண்டிருந்தார். அவர்களைப் பார்த்து அவர் கையாட்டி ''ஹலோ'' என்று சொன்னார்.

அப்போதுதான் அங்கு பிரச்சினையே ஆரம்பித்தது. முதல் யூதர் சொன்னார். ''அதிகமாகத் துள்ளாதீர்கள். அவர் என்னைப் பார்த்துத்தான் ''ஹலோ'' என்று சொன்னார். அவருக்கு வேறு வழியில்லை.''

இரண்டாமவர் கேட்டார். "நீ என்ன சொல்கிறாய்? ஒன்றுமே புரியவில்லையே?"

"நான் அவரிடம் ஆயிரம் டாலர் கடன் வாங்கியிருக்கிறேன். இரண்டு வருடங்களாகத் திருப்பித்தரவில்லை. அவரும் நான் தருவேன் தருவேன் என்று காத்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் எனக்கு அவர் ஹலோ சொன்னார். அது அவர் சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அவர் பணம் அவருக்குக் கிடைக்காதே."

இரண்டாமவர் சொன்னார். "நீ சொல்வது தவறு. அவர் எனக்குத்தான் ஹலோ சொன்னார். அதை அவர் சொல்லத்தான் வேண்டும். வேறு வழியில்லை. ஏனென்றால் நான் அவருக்குப் பத்தாயிரம் டாலர் கடன் கொடுத்திருக்கிறேன். அவர் கடன்காரர். என்னைப் பார்த்துப் பயப்படத்தான் வேண்டும். அந்தப் பயத்தில்தான் ஹலோ சொன்னார்."

இப்போது மூன்றாமவர் பலமாகச் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"அவர் எனக்குத்தான் ஹலோ சொன்னார். உங்களுக்கு இல்லை. நீங்கள் சொல்வது தவறு. அவர் என்னிடம் கடன் வாங்கவும் இல்லை. எனக்குக் கடன் கொடுக்கவும் இல்லை. அதனால்தான் நட்புறவில் ஹலோ சொன்னார். கடன் வாங்கியிருந்தாலோ கொடுத்திருந்தாலோதான் ஹலோ சொல்ல வேண்டுமா என்ன?"

உண்மையை மனம் மூலம் பார்க்கத் தொடங்கினால் எல்லாமே பிரச்சினையாகத்தான் தோன்றும். அகந்தை எல்லாவற்றுக்கும் அர்த்தம் கற்பிக்க ஆரம்பிக்கும். அதற்கெல்லாம் உங்களிடம் சான்றுகள் இருக்கும். அவை யாவுமே வலுவாக இருப்பதாகத்தான் தோன்றும். ஆனால் அப்படி உங்களுக்கு மட்டுமே தோன்றும். காரணம் உங்கள் அகந்தைதானே அந்த அர்த்தத்தைக் கற்பித்தது? ஒரு கட்டத்தில் நீங்களே அதை இன்னும் அதிகமாக நம்பத் தொடங்கிவிடுவீர்கள். அதில் உங்கள் உணர்வுகளை அதிகமாக முதலீடு செய்துவிட்டீர்களே!

கிறிஸ்தவ மதத்திற்கு எதிராக யாராவது ஏதாவது சொன்னால் ஒரு கிறிஸ்தவனின் மனம் மிகவும் புண்படுகிறது. இந்து மதத்தை யாராவது மட்டம் தட்டிப் பேசினால் ஒரு இந்துவின் மனம் புண்படுகிறது. ஏன்? நீங்கள் உண்மையைத் தேடுபவராக இருந்தால் - எல்லா மதவாதிகளும் நாங்கள் உண்மையைத் தேடுகிறோம் என்றுதானே சொல்கிறார்கள் - நீங்கள் ஏன் புண்பட வேண்டும்? யாராவது உங்கள் மதத்தைப் பற்றித் தப்பாகப் பேசினால் நீங்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும். யார் கண்டது அவர் சொன்னது சரியாகக் கூட இருக்கலாம். ஆனால் அந்த ஆராய்ச்சியின் குறுக்கே அகந்தை வந்துவிட்டது. இப்போது இந்து மதம் சரியா தவறா என்பது கேள்வியல்ல. நீங்கள் சரியா தவறா என்பதுதான் கேள்வி. நீங்கள் எப்படித் தவறாக இருக்க முடியும்? நீங்கள் தவறாக இருந்தால் உங்களைப் பற்றிய சுய கணிப்பு ஆட்டம் காணத் தொடங்குகிறது. நீங்கள் தவறாக இருக்க முடியாது. அதன் பின் சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் நீங்கள் சண்டை போடத் தொடங்குகிறீர்கள். வாதம் செய்யத் தொடங்குகிறீர்கள்.

ஆனால் நீங்கள் உண்மையிலேயே யாருடன் சண்டை போடுகிறீர்கள் தெரியுமா? எல்லா மதச் சண்டைகளின் அடிப்படை என்ன தெரியுமா? நீங்கள் வாழ்க்கையுடன் சண்டை போடுகிறீர்கள். உங்கள் பதில்களின் மூலம் வாழ்க்கையை வெல்ல முயல்கிறீர்கள். உங்கள் கோட்பாடுகள் மூலம் வாழ்க்கையை மாற்றியமைக்க முயல்கிறீர்கள். கோட்பாடுகள் தெரிந்துவிட்டால் நீங்கள் உங்களைப் பெரிய ஆசான் என்று நினைத்துக் கொள்கிறீர்கள்.

அறிவின் மூலமாக உங்கள் அகந்தையை மேலும் பலப்படுத்துகிறீர்கள். மனம் மூலம் எந்த உண்மையான அறிவையும் பெற முடியாது என்று யாராவது சொன்னால் உங்கள் அகந்தை காரியச் செவிடாகிவிடுகிறது. அப்படிப்பட்ட அறிவுரையை அது கேட்க மறுக்கிறது. ஏனென்றால் அது அகந்தைக்கு ஆபத்தானது.

அப்போது உங்கள் மனம் ''இதுவும் ஒரு கோட்பாடுதான்'' என்று சொல்கிறது. தத்துவத்திற்கு எதிரான வாதங்களும் ஒரு

வகையில் தத்துவம்தான் என்று உங்கள் மனம் தன்னைத்தானே சமாதானம் செய்து கொள்கிறது. ஷுவாங் ட்சு கூட ஒரு தத்துவவாதிதான் என்று மனம் தன்னைத்தானே தேற்றிக் கொள்கிறது. அப்போதுதான் மனதிற்கு நிம்மதியடைகிறது.

.பின் மீண்டும் மனம் எல்லாவற்றுக்கும் அர்த்தம் கற்பிக்கத் தொடங்குகிறது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். ஷுவாங் ட்சு தத்துவ ஞானி இல்லை. நானும் தத்துவ ஞானி இல்லை.

தத்துவம் என்பது வாழ்க்கையை அணுகும் ஒரு முறை. அணுகுமுறை தெரிவு பற்றியது. தெரிவு வந்துவிட்டாலே முழுமை போய்விடும். ஒரு பகுதியைத்தான் தெரிவு செய்ய முடியும்.

ஒரு ஞானி எப்போதுமே தெரிவு செய்யமாட்டான். எந்தத் தெரிவும் இல்லாமல் அவன் முழுமையை அப்படியே பார்க்கிறான். நீங்கள் தெரிவு செய்த மாத்திரத்தில் பிரச்சினை வந்துவிடுகிறது. ஏனென்றால் வாழ்வில் நிறைய முரண்கள் இருக்கின்றன. வாழ்க்கையே முரண்பாடுகள் மூலமாகத்தான் இயங்குகிறது. முடியாததை எப்படி வாழ்க்கை சமாளிக்கிறது என்பதில்தான் அதன் அழகே இருக்கிறது.

இரவும் பகலும் எதிரிகளாக இருந்தாலும் அடுத்தடுத்து வாழும் பக்கத்து வீட்டுக்க்காரர்களைப் போல் சேர்ந்து வசிக்கின்றன. பகல் இரவிற்குள் உருகிப் பின் இரவாகவே மாறிவிடுகிறது. அதே போல் இரவு பகலிற்குள் உருகிப் பின் பகலாகவே மாறிவிடுகிறது. அன்பும் வெறுப்பும் பக்கத்து வீட்டுக்காரர்கள்தான். அன்பு உருகி வெறுப்பாகிறது. வெறுப்பு உருகி அன்பாகிறது. வாழ்வும் சாவும் ஒரே வீட்டில் வசிக்கின்றன. வாழ்வு தொடர்ந்து சாவிற்குள் உருகிக் கொண்டிருக்கிறது. சாவோ இன்னொரு வாழ்விற்குள் உருகிக் கொண்டிருக்கிறது. இருப்பு நிலையே ஒரு முரண்தான். நேரெதிர் துருவங்களுக்கிடையே ஒரு ஆழமான இசைவு இருக்கத்தான் செய்கிறது.

இது மனதைப் பொறுத்தமட்டில் முடியாத காரியமாகத் தோன்றுகிறது. நேர்மறையும் எதிர்மறையும் எப்படி ஒன்றாக

இருக்க முடியும்? வாழ்விற்கும் சாவிற்கும் இடையே என்ன இசைவு இருக்க முடியும்? அன்பிற்கும் வெறுப்பிற்கும் இடையே எப்படி இசைவு இருக்க முடியும்?

''அன்பு ஒருகாலும் வெறுப்பாக முடியாது. வெறுப்பு ஒருகாலும் அன்பாக முடியாது'' என்று மனம் சொல்லிக் கொண்டிருக்கிறது. ''அ என்பது அ வாகத்தான் இருக்க முடியும். ஆ என்பது ஆ வாகத்தான் இருக்க முடியும். அ ஆ ஆக முடியாது. ஆ அ ஆக முடியாது.'' என்பதுதான் மனதின் கோட்பாடு.

மனம் தர்க்கரீதியானது. வாழ்க்கையோ முரண்களின் இருப்பிடம். அதனால்தான் மனமும் வாழ்க்கையும் சந்திப்பதே யில்லை. இந்த மனிதன் நல்லவன் என்று சொன்னால் இவன் கெட்டவனாகவும் இருக்கக்கூடும் என்ற சாத்தியக்கூறை உங்க ளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால் வாழ்க்கையில் இந்த முரண்கள் சாதாரணமாக இருக்கின்றன. ஒரு பாவிக்குள் ஒரு புனிதர் இருக்கிறார். ஒரு புனிதருக்குள் ஒரு பாவி இருக்கிறான்.

தர்க்க சாஸ்திரம் என்பது எல்லைகளையும் வரையறை களையும் பற்றியது. வாழ்க்கைக்கு அதெல்லாம் எதுவும் கிடையாது. அது ஒரு துருவத்திலிருந்து நேர் எதிர் துருவத்துக்கு அநாயாசமாகப் பயணிக்கும். இந்தக் கணத்தில் நீங்கள் புனிதராக இருக்கலாம். அடுத்தக் கணமே நீங்கள் ஒரு பாவியாக மாறிவிடலாம். அதனால் வாழ்க்கைக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை.

உள்ளே நடக்கும் நிகழ்வுகளைப் பாருங்கள். எப்படி ஒவ்வொன்றும் அதற்கு நேர் எதிரான நிகழ்வில் உருகி ஒன்றுகிறது என்று கவனியுங்கள். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். அன்றலர்ந்த மலர் போல் ஆகாயத்தில் ஒளிரும் விண்மீன் போல் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். திடீரென்று சோகம் வந்துவிடுகிறது. மகிழ்ச்சியும் சோகமும் நேர் எதிர் துருவங்களாக இருந்தால் இது எப்படிச் சாத்தியம்? உங்கள் சோகம் உங்கள் மகிழ்ச்சியிலிருந்து வேறுபட்டது இல்லை. ஒரே சக்திதான் மகிழ்ச்சியாகவும் சோகமாகவும் பரிமளிக்கிறது.

மகிழ்ச்சியாக இருந்தது யார்? சோகமாக இருந்தது யார்? உங்களுக்குள் இரண்டு மனிதர்கள் இருக்கிறார்களா? அல்லது அவை ஒரே மனிதனின் மாறுபட்ட நிலைகளா? ஒரே சக்திதான் இயங்கிக்கொண்டிருக்கிறது. சில சமயம் சோகமாகவும் சில சமயம் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது. இதைப் புரிந்து கொண்டால் மகிழ்ச்சி சோகம் என்ற இந்த இரண்டுக்கும் இடையே முரண்களை உருவாக்க மாட்டீர்கள். அதன் பின் உங்கள் சோகத்திலும் மகிழ்ச்சியின் வாசனை இருக்கும். உங்கள் மகிழ்ச்சியிலும் சோகத்தின் ஆழம் இருக்கும்.

ஒரு புத்தன் சோகமாக இருந்தால் அதிலும் ஒரு பரவச நிலையைக் காண்பான். அதன் ஆழத்தில் பெருங்கருணை இருக்கும். புத்தனுடைய சோகம் அழகானது. ஒரு புத்தன் மகிழ்ச்சியாக இருந்தால் அந்த சமயத்தில் உங்களால் புத்தனை ஊடுருவிப் பார்க்க முடிந்தால் அவனுடைய மகிழ்ச்சியிலும் ஒரு ஆழத்தைக் காண்பீர்கள். புத்தனுடைய மகிழ்ச்சி மேலோட்டமாக இருக்காது.

உங்கள் பிரச்சினை என்ன தெரியுமா? நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும் போது மேலோட்டமாக இருக்கிறீர்கள். சோகமாக இருக்கும் போது ஆழமாக இருக்கிறீர்கள். அதனால்தான் பெரும் சிரிப்பில் ஒரு ஆழமின்மை தெரிகிறது. சிரிக்கும் போது வாய் மட்டும் சிரிப்பதாக உணர்கிறீர்கள். அழும்போது மொத்த ஆன்மாவும் அழுவதைப் போன்ற ஒரு உணர்வு ஏற்படுகிறது. அதனால்தான் சிரிப்பது போல் நடிப்பது எளிது. அழுவது போல் நடிப்பது கொஞ்சம் கடினம்.. நடிப்பிற்காக அழ வேண்டுமென்றால் கூட கிளிசரின் போன்றவை தேவைப்படுகின்றன. சிரிப்பை வற்புறுத்திக் கொண்டுவந்துவிடலாம். அழுகையை அப்படிக் கொண்டுவர முடியாது. உங்கள் அழுகையில் ஒரு ஆழம் இருக்கிறது. சிரிப்பில் அது இல்லை.

ஆனால் ஒரு புத்தன் சிரிக்கும் போதும் அவன் கண்ணீர் கொண்டு செல்லும் ஆழத்திற்கு போய் விடுகிறான். அவனது அழுகையும் உங்கள் புன்னகையைப் போல் அழகாக இருக்கிறது. முரண்கள் தங்கள் முரண்-தன்மையை இழந்து ஒன்றாகிவிட்டன.

அதனால்தான் ஒரு புத்தனைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கிறது. இருப்புநிலையைப் போலவே அவனிலும் நிறைய முரண்கள் இருக்கின்றன. நமது கண்களுக்குப் புத்தன் ஒரு அபத்தமாக, ஒரு ரகசியமாக ஒரு விளங்காத புதிராகவே தோன்றுகிறான்.

சமய உணர்வுள்ளவன் மெய்ப்பொருளைத் தேடியலைகிறான். தத்துவவாதியோ அர்த்தம் கற்பிப்பதில் முனைப்பாக இருக்கின்றன்.

அது ஆண்களின் சங்கம். ஒரு சமயம் அங்கே மூன்று பேராசிரியர்கள் ஒரு பெண்ணின் எந்தப் பாகம் அழகு என்பதைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பேராசிரியர் சொன்னார்: ''ஒரு பெண்ணுக்குக் கண்கள்தான் அழகு. அவள் உடலிலேயே மிகவும் அழகான பகுதி கண்கள்தான்.''

அடுத்தவர் சொன்னார்: ''நான் ஒத்துக் கொள்ள மாட்டேன். பெண்ணுக்குத் தலைமுடிதான் அழகு. அதுதான் அவளை ஒரு தேவதையாகக் காண்பிக்கிறது.''

மூன்றாமவர் சொன்னார். ''என்னால் அதை ஏற்றுக் கொள்ள முடியாது. நீங்கள் சொல்வது தவறு. ஒரு பெண்ணின் அழகு அவளுடைய வாழைத்தண்டு போன்ற கால்களே. அவள் நடக்கும் போது பளிங்கு போன்ற அந்தக் கால்கள் அசைவது அவள் பெண்மைக்கு மெருகூட்டுகிறது. அதுதான் அவளுக்கு உண்மையான அழகைக் கொடுக்கிறது.''

இவர்கள் பேசுவதை ஒரு மூதாட்டி கேட்டுக் கொண்டிருந்தாள்.

''உங்களில் ஒருவர் உண்மையைச் சொல்வதற்குள் நான் வெளியே போய்விடுகிறேன். எனக்கு மிகவும் வெட்கமாக இருக்கிறது.''

ஒரு பெண் தத்துவவாதியில்லை. அவளிடம் தேற்றங்கள் கிடையாது. ஆனால் அவளுக்கு உண்மை தெரியும். சமய

உணர்வு உள்ளவன் உள்ளுணர்வால் புரிந்து கொள்கிறான். அவன் தன் அறிவை மட்டும் பயன்படுத்துவதில்லை தன்னுடைய முழுமையான இருப்பையும் பயன்படுத்திப் புரிந்து கொள் கிறான். அவன் அறிவான் என்பதைவிட அவன் உணர்வான் என்பதே சரி. உணர்வு நேரடியாக மையத்தைத் தாக்குகிறது. ஒன்றை மட்டும் மறந்துவிடாதீர்கள். தத்துவம் மூலம் உண்மையை அடையவே முடியாது. சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பீர்கள்

பாரசீகக் கவிஞன், உமர் கையாம் தன் நூலான ருபையாத்தில் சொல்கிறான்: ''நான் இளைஞனாக இருந்த போது அறிஞர் களையும் பார்த்தேன் புனிதர்களையும் பார்த்தேன். அவர்கள் பேசிக் கொண்டேயிருந்தார்கள். எந்தக் கதவு வழியாக உள்ளே போனேனோ அதே கதவு வழியாக வெளியே வந்துவிட்டேன்.''.

அதனால் எந்த லாபமும் இல்லை. வாழ்க்கை விரயமானது தான் அவன் கண்ட ஒரே பலன். எந்த அளவு விரைவாக விழித்துக் கொள்கிறீர்களோ அந்த அளவு நல்லது. தத்துவம் என்ற பொறியிலிருந்து எவ்வளவு விரைவாகத் தப்பித்துக் கொள்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. ஏனென்றால் வாழ்க்கை உங்கள் கோட்பாடுகளுக்காகக் காத்துக் கொண் டிருக்காது. அது தன் போக்கில் வேகமாக நகர்ந்து கொண்டே யிருக்கும். ஒருநாள் மரணம் உங்கள் வீட்டு வாசலில் உங்களுக் காகக் காத்துக் கொண்டிருக்கும். உங்கள் கோட்பாடுகளைக் கையில் பிடித்துக் கொண்டே செத்துவிடுவீர்கள். உங்களுடன் சேர்த்து உங்கள் கோட்பாடுகளையும் எரித்துச் சாம்பலாக்கி விடுவார்கள்.

ஷுவாங் ட்சு சொல்கிறார். ''வாழ். யோசிக்காதே'' ஞானிகள் எல்லாம் அதையேதான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

யோசனையைக் கைவிடுங்கள் உங்கள் இருப்பை நாடுங்கள். அதற்கு நீங்கள் முழுமையாகத் தேவை. விஞ்ஞானத்திற்கு உங்கள் தலையை மட்டும் பயன்படுத்தினால் போதும். கலையை ரசிக்க உங்கள் இதயத்தை மட்டும் பயன்படுத்தினால் போதும். ஆனால் சமயத்திற்கு உங்கள் முழுமையும் தேவைப்படுகிறது. தலை மட்டும் தனியாகச் செயல்பட்டால் காய்ந்து போன

தேற்றங்களை அது உற்பத்தி செய்து கொண்டேயிருக்கும். இதயம் மட்டும் தனியாகச் செயல்பட்டால் அது கனவுகளையும் கற்பனைகளையும் உற்பத்தி செய்து கொண்டேயிருக்கும்.

சமயத்திற்கு - ஆன்மிகத்திற்கு - உங்கள் முழுமையான இருப்பும் தேவைப்படுகிறது. நீங்கள் உங்கள் முழுமை நிலையில் இருந்து செயல்பட்டால் வெளியே இருக்கும் பிரபஞ்சம் என்ற முழுமையைச் சென்றடைவீர்கள். நீங்களும் பிரபஞ்சமும் ஒரே மாதிரி இருப்பீர்கள். நீங்கள் உங்கள் சிறிய வட்டத்தில் முழுமையாக இருப்பீர்கள். அந்த பிரம்மாண்டமான வட்டத்தில் முழுமையாக இருக்கும் பிரபஞ்சம் உங்களை இருகை நீட்டி வரவேற்கும்.

இது ஒன்று. நாம் இந்தக் கதைக்குள் நுழைவதற்குள் பார்க்க வேண்டிய இன்னொரு விஷயம் நமது மனம் எப்போதும் ஒரே வழியில் செல்லக்கூடியது. அது கட்டுப்படக்கூடியது. பயிற்சி யாலும் பழக்கத்தாலும் மனதை ஒரே மாதிரி சிந்திக்க எளிதாகப் பழக்கிவிடலாம். ஆனால் இருப்புநிலை மனக்கட்டுத்திட்டத்திற்கு அப்பாற்பட்டது. அதனைப் பழக்கத்திலோ பயிற்சியிலோ கட்டுப்படுத்த முடியாது. நீங்கள் வாழும் சமுதாயம் உங்கள் மனதிற்குப் பயிற்சி கொடுத்துக் கொண்டேயிருக்கும். நீங்கள் பெறும் அனுபவங்களும் உங்கள் மனதை ஒரே பாதையில் செல்ல பயிற்சி கொடுக்கும். அதனால் ஒரு தவளைக்கு தவளையின் மனமே இருக்கும். அந்தத் தவளை ஒரு கிணற்றில் வாழ்ந்தால் அந்தக் கிணறுதான் அதன் பிரபஞ்சம்.

உங்களுக்கும் அந்தத் தவளை மனம்தான் இருக்கிறது. ஏனென்றால் நீங்களும் ஒரு கிணற்றில்தானே வாழ்கிறீர்கள். நீங்கள் வாழும் கிணறுகளுக்குப் பல பேர்கள் இருக்கின்றன. இந்து மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாம் - பெயர் என்னவாக இருந்தாலும் எல்லா மதங்களும் கிணறுகளே. உங்களுக்கு ஒரு எல்லையும் இருக்கிறது. அந்த எல்லை உங்கள் கண்ணுக்குப் புலப்படாமல் இருக்கலாம். கண்ணுக்குப் புலப்படாத எல்லைகள் இன்னும் ஆபத்தானவை. கண்ணுக்குத் தெரியும் எல்லைகளை எளிதில் தாண்டிக் குதித்து விடலாம். கண்காணாத எல்லைகள்

உங்களிடம் அப்படியே ஒட்டிக்கொள்ளும். அவை இருப்பதே உங்களுக்குத் தெரியாது. அதனால் நீங்கள் ஒரு நாளும் அதைத்தாண்டி வெளியே வரமாட்டீர்கள்.

கிணற்றுத்தவளைகூட கிணற்றிலிருந்து வெளியே வந்துவிடலாம். ஆனால் நீங்கள் இந்துமதம் கிறிஸ்தவமதம் இஸ்லாம் என்ற கிணறுகளிலிருந்து வெளியே வருவது நடக்காத காரியம். காரணம் உங்கள் கிணறு கண்ணுக்குப் புலப்படாதது. தவளை ஒரு வரையறுக்கப்பட்ட கிணற்றுக்குள் வாழ்கிறது. எந்த நேரத்திலும் அதிலிருந்து அது வெளியே குதிக்கலாம். ஆனால் நீங்கள் உங்கள் கிணறைச் சுமந்து கொண்டு திரிகிறீர்கள். அது தட்பவெப்ப நிலை போல் எப்போதும் உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அது உங்களுடைய மறைந்திருக்கும் ஆளுமை. நீங்கள் போகும் இடமெல்லாம் உங்கள் கிணறும் கூடவே வரும். இந்த உலகத்தில் நீங்கள் பார்ப்பதெல்லாம் அந்தக் கிணற்றின் மூலமாகத்தான் பார்ப்பீர்கள்.

மனக்கட்டுத்திட்டத்திலிருந்துதான் (conditioning) உங்கள் பொருள்விளக்கங்கள் தோன்றுகின்றன. மனக்கட்டுத்திட்டம் இல்லாதவனால்தான் மெய்ப்பொருளை உணர முடியும் உண்மை என்னவென்பதைப் புரிந்துகொள்ள முடியும். ஒரு இந்துவிற்கோ, ஒரு கிறிஸ்தவனுக்கோ ஒரு யூதனுக்கோ இருப்புநிலைபற்றித் தெரியாது. ஏனென்றால் இவை எல்லாம் வெறும் மனங்கள் தான். 'நான் இந்து இல்லை. இஸ்லாமியன் இல்லை. யூதனும் இல்லை என்று எவன் உணருகிறானோ அவனால்தான் உண்மையை உணர முடியும்.

ஒரு இந்தியனோ, ஜப்பானியனோ சீனாக்காரனோ உண்மையை உணர முடியாது. காரணம் உண்மைக்கு எல்லைகள் கிடையாது. ஒரு நாட்டைச் சேர்ந்தவன் என்று சொல்லும் போது அது ஒரு வகையில் உங்கள் மனதைக் கட்டுப்படுத்துகிறது. பயிற்றுவிக்கிறது. அந்த மனக்கட்டுத் திட்டங்களை முற்றிலுமாகக் கைவிட்டால்தான் உண்மையை உணர முடியும். உண்மையை அறிய அதன் முன் நிர்வாணமாக நிற்க வேண்டும். துணிகளும் இருக்கக்கூடாது. மனக்கட்டுத்திட்டங்களும் கூடாது. ஒரு

இந்துவாக இல்லாமல் ஒரு இந்தியனாக இல்லாமல் ஒரு இஸ்லாமியனாக இல்லாமல் ஒரு சீனனாக இல்லாமல் - வெறும் இருப்பாக, தூய்மையான இருப்பாக இருந்தால் மட்டுமே உண்மையை உணர முடியும். அப்போதுதான் நீங்கள் கிணற்றிலிருந்து வெளியே வர முடியும். கிணற்றையே பிடித்துத் தொங்கிக்கொண்டிருந்தால் நீங்கள் எப்படிக் கடலை அடைவீர்கள்? கிணறு கொடுத்த மனக்கட்டுத் திட்டங்களை கூடவே சுமந்து சென்றால் கடலைக் கண் முன் பார்த்தாலும் அது கடல் என்று நம்பமாட்டீர்கள். அதைப் பார்க்கவே மாட்டீர்கள். கடலின் பரப்பு உங்கள் கண்ணுக்குத் தெரியாமலேயே போய் விடும். கிணறைப் போல் குறுகலாக இருப்பது மட்டுமே கண்ணுக்குத் தெரியும்.

மூன்றாவதாக நினைக்க வேண்டியது - இந்த மனம் எப்போதும் தன்னைவிடத் தாழ்ந்தவர்களுடன் வசிப்பதைத்தான் விரும்பும். தன்னைவிட மேம்பட்டவர்களைக் கண்டால் அதற்குப் பயம். அதனால்தான் எல்லாரும் தன்னைவிடத் தாழ்ந்தவர்களைத் தேடிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். நண்பர்கள், மனைவி, கணவன் - இவர்கள் எல்லாருமே உங்களைவிடத் தாழ்வான நிலையில் இருப்பதைத்தான் விரும்புவீர்கள். அப்போதுதான் நீங்கள் மேலானவர் என்று உங்களுக்குத் தோன்றும்.

இந்தியாவில் ஒரு பழமொழி இருக்கிறது. ஒட்டகத்திற்கு இமய மலைக்குச் செல்லவே பிடிக்காதாம். அதனால்தான் அது எப்போதும் பாலைவனங்களிலேயே வாழ்கிறது என்று சொல்வார்கள். பாலைவனத்தில் இருக்கும் போது தன்னைதானே இமயம் என நினைத்துக் கொள்கிறது. உண்மையான இமய மலைக்கு அருகில் வந்தால் அதன் அகந்தை என்ன ஆகும்? அகந்தை அஞ்சும் போது நீங்களும் அஞ்சி ஓடுகிறீர்கள். ஒரு புத்தனைப் பார்த்தால் நீங்கள் தப்பி ஓடப் பார்க்கிறீர்கள். காரணம் - நீங்கள் ஒரு ஒட்டகம். புத்தனோ இமயம் போன்றவன். உங்களுக்கு உங்கள் பாலைவனம் பிடித்திருக்கிறது. அங்கே நீங்கள்தான் பெரிய ஆள்.

பெர்னார்ட் ஷா ஒரு முறை சொன்னார்: ''சொர்க்கத்தில் நான் முதல் ஆளாக இல்லை என்றால் எனக்கு அங்கு போக விருப்பம்

இல்லை. நரகத்தில் முதன்மை நிலையில் இருப்பேன் என்றால் நான் அங்கே போகவே விரும்புகிறேன்.''

அவர் உங்களைப் பற்றித்தான் சொல்கிறார். சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் முதன்மை நிலையில் இல்லையென்றால் சொர்க்கத்தில் சந்தோஷமாக இருக்க முடியுமா? முடியாது. காரணம் சொர்க்கத்தில் ஏசுநாதர் இருப்பார். புத்தர் இருப்பார். அவர்களே அங்கே வரிசையில் நின்று கொண்டிருப்பார்கள். நீங்கள் அவர்களுக்கு மிகவும் பின்னால் இருப்பீர்கள். ஆனால் நரகத்தில் நீங்கள் முதல் ஆளாக இருப்பதற்கு நிறைய வாய்ப்பு இருக்கிறது. அது சுலபமும் கூட. நரகத்தில் துன்பம்தான் இருக்கும். என்றாலும் அங்கே நீங்கள் பெரிய மனிதர். ஆள் யாரென்று தெரியாமல் ஆனந்தமாக இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லை. நரகத் தீயில் உழன்றாலும் அங்கே முதல் ஆளாக இருப்பது உங்களுக்குப் பிடித்திருக்கிறது. இதுதான் பிரச்சினை. முகம் தெரியாதவர்கள் தான் பரவச நிலையை அடையமுடியும். ''பெரிய மனிதர்கள்'' எப்போதும் வேதனையில் வாடுவார்கள். ''நான் பெரிய மனிதன்'' என்ற அந்த எண்ணமே வேதனையின் வித்து. அந்த எண்ணம் போட்டியிலும் முரண்பாடுகளிலும் கொண்டுபோய்த் தள்ளிவிடும். மற்றவர்களோடு இருக்கும் போது மன அழுத்தம் அதிகமாக இருக்கும். காரணம் மற்றவர்களை எல்லாம் பகைவர்களாகவே பார்ப்பீர்கள். மனம் எப்போதுமே தாழ்ந்தவர்களையே தேடும். அப்போதுதான் நீங்கள் உயர்ந்த வராக இருக்க முடியும்.

இந்த மனப்போக்கைக் கொஞ்சம் ஆராய்ந்து பாருங்கள். இது தொடர்ந்து நீடித்தால் நீங்கள் படிப்படியாக உங்கள் நிலையிலிருந்து சரிந்து கொண்டேயிருப்பீர்கள். அதற்கு ஒரு முடிவே இல்லை. நீங்கள் நிஜமாகவே உண்மையைத் தேடினால் உங்களுக்கு மேலே இருப்பவர்களைத் தேடி அவர்களுடன் சேர்ந்து இருங்கள். இருப்பதிலேயே உயர்ந்தது உண்மை. நீங்கள் தொடர்ந்து தாழ்ந்தவர்களையே தேடிக்கொண்டிருந்தால் கடைசியில் உச்சகட்டப் பொய்யில்தான் உங்கள் தேடல் முடியும்.

தெய்விகம் வேண்டுமென்றால் மேன்மையை நாடுங்கள். மேன்மைதான் தெய்வாம்சம் பொருந்தியது. மேன்மையையே

எப்போதும் நாடுங்கள். ஆனால் அப்படிச் செய்யும் போது நீங்கள் பணிவுடன் இருக்க வேண்டும். வணங்க வேண்டும். சரணாகதி செய்ய வேண்டும். மனதிற்கும் அகந்தைக்கும் இதுதான் பிரச்சினை.

மனம் அதனால் தாழ்வையே நாடுகிறது. அதனால்தான் மனதினால் வாழ்க்கையின் சிகரத்தைத் தொடமுடியாது என்று சொல்கிறேன். மனம் இறுதியில் உங்களை நரகத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். மனமே நரகம்தான். மன்மின்மையே சொர்க்கம்.

இப்போது இந்தக் கதையைப் பார்ப்போம்.

**இலையுதிர்காலத்து வெள்ளம் வந்துவிட்டது. ஆயிரக்கணக்கான நீரோட்டங்களிலிருந்து வெள்ளம் மஞ்சளாற்றில் பாய்ந்தது. அதனால் மஞ்சளாற்றின் நீர் மட்டம் உயர்ந்து அதன் கரைகளையும் தாண்டி தண்ணீர் ஓட ஆரம்பித்தது. நீரின் போக்கு மிக அதிகமாக இருந்ததால் எதிர்க்கரையில் இருந்தது காளையா குதிரையா என்று கூடத் தெரியவில்லை. அப்போது உலகத்தில் உள்ள அழகெல்லாம் அவன் வசம் வந்துவிட்டது என்று ஆற்றின் தேவன் சிரித்தான் பின் அவன் ஆற்றின் வழியில் தாவி வந்து கடலை அடைந்தான். கிழக்கே பரந்து விரிந்து காலியாக இருந்த தொடுவானத்தில் அலைகள் சென்று மோதுவதைப் பார்த்தான். அவன் முகம் தொங்கியது. தொலைதூரத்தில் இருக்கும் தொடுவானத்தைப் பார்த்த போது அவனுக்கு அறிவு வந்தது. ஆற்றின் தேவனான அவன் கடலின் தேவனிடம் முணுமுணுத்தான்.**

**''அந்தப் பழமொழி சரிதான். நூறு சிந்தனைகள் உள்ள ஒருவன் மற்றவர்களைவிடத் தனக்குத்தான் அதிகம் தெரியும் என்று நினைத்துக் கொள் கிறான்.' நானும் அப்படித்தான். உங்களைப்**

**பார்க்கும் போதுதான் 'பரந்து விரிந்த'' என்ற வார்த்தைகளின் அர்த்தம் புரிகிறது.**

மஞ்சளாறு இந்த உலகில் உள்ள பிரம்மாண்டமான நதிகளில் ஒன்று. மிகவும் ஆபத்தானதும் கூட. அந்த மஞ்சளாற்றில் இலையுதிர்கால வெள்ளம். பெருக்கெடுத்து ஓடுகிறது. ஆயிரம் ஆயிரம் காட்டாறுகள், ஓடைகள் சிறு நதிகள், நீரோட்டங்கள் அதனுள் விழுகின்றன. அதுவே இப்போது ஒரு கடல் போல் ஆகிவிட்டது. ஆற்றின் தேவன் நினைத்தான் ''இப்போது எனக்கு ஒப்பாரும் இல்லை மிக்காரும் இல்லை. இந்த உலகின் மொத்த அழகும் என் வசம்தான் உள்ளது. இப்போது நான் பரந்து விரிந்து ஓடுகிறேன். எனக்கு உவமையாகச் சொல்லக் கூட ஒன்றும் இல்லை. என்னைப் போல் பரந்து விரிந்த நீரோட்டம் எங்காவது இருக்கிறதா?''

இப்படித்தான் நமது அகந்தை நினைக்கிறது. ஒவ்வொரு அகந்தையும் அந்த மஞ்சளாற்றைப் போலத்தான் செயல்படு கிறது. நீங்கள் குழந்தையாக இருந்த போது நீரோட்டம் சிறிதாக இருந்தது. ஆற்றின் உற்பத்தி ஸ்தானத்தில் இருப்பது போல் சிறிதாக இருந்தது. பரந்து விரிந்து பெரிதாக இல்லை. அதன் பின் பல நீரோட்டங்கள் ஆற்றில் பாய்கின்றன. நீங்கள் அறிவையும் அனுபவத்தையும் சேகரிக்கிறீர்கள். சான்றிதழ்கள், பட்டங்கள், செல்வம், கௌரவம், புகழ் மரியாதை என்று போகப் போகச் சேர்த்துக் கொண்டே போகிறீர்கள். ஆயிரம் ஆயிரம் நீரோட் டங்கள் உள்ளே பாய்ந்து ஆறு இன்னும் பெரிதாகிக் கொண்டே போகிறது. இதுதான் உங்கள் இளமைக்காலத்தில் வரும் இலையுதிர்கால வெள்ளம்..

உங்கள் இளமைக்காலத்தில் உங்களுக்கு நிகர் யாரும் இல்லை என்று நீங்கள் நினைத்துக் கொள்கிறீர்கள். உங்கள் அகந்தை அசுரத்தனமாக வளர்ந்திருக்கிறது. இளமையில் அனைவரும் அகந்தையும் உச்சகட்ட வளர்ச்சியில் இருக்கிறது. இதுதான் இலையுதிர்கால வெள்ளம். ''உலகில் உள்ள அழகெல்லாம் என் வசம் தான்'' என்று இளைஞன் நினைக்கிறான்.

இதை யாரிடமாவது கேட்டுப் பாருங்களேன். அவன் சொல்வதைக் கேட்காதீர்கள். அதை எப்படிச் சொல்கிறான் என்பதை மட்டும் கவனியுங்கள். அவன் தன்னிடம் பணிவு இருக்கிறது என்று சொல்லிக் கொள்வான். அவன் கண்களைப் பாருங்கள். ''உலகத்திலேயே நான்தான். மிகவும் பணிவான மனிதன். பணிவில் எனக்கு நிகராக எவருமே கிடையாது.'' என்று அவன் கண்கள் பீற்றிக் கொண்டிருக்கும்.

அவன் மேலோட்டமாகச் சொல்வான் ''நான் மற்றவர்களைப் போல் அழகானவன் இல்லை''. நீங்கள் இதை எதிர்க்க வேண்டும் என்று காத்துக் கொண்டிருப்பான். அவன் சொல்வதைக் கேட்டு நீங்கள் தலையை ஆட்டி ''ஆமாம் நீ சொல்வது சரிதான். நீ அழகானவன் இல்லை.'' என்று சொன்னால் நீங்கள் ஒரு பகைவனைச் சம்பாதித்துக் கொள்வீர்கள்.

அவன் நாசூக்காகச் சொல்கிறான். அவன் சொல்ல விரும்பியது வேறொன்று. தான் அழகு என்று உங்கள் வாயால் சொல்லிக் கேட்க வேண்டும் என்பதே அவன் ஆசை

இளமைக்.காலத்தில் எல்லாரும் ஆற்று வெள்ளம் போல் இருக்கிறார்கள். உங்கள் சிந்தனையும் செயலும் உங்கள் அகந்தையால் ஆக்கிரமிக்கப்படுகிறது.. உங்கள் நடை உடை பாவனை உங்கள் நட்பு உறவுகள் அனைத்துமே அகந்தையால் ஆளப்படுகிறது.. உங்களைப் பற்றி இல்லாததைக் கற்பனை செய்து கொள்வதால் நீங்கள் வேதனைப் படுகிறீர்கள். நிஜத்தை விட்டுவிட்டு நிழலை நம்புவதால் வேதனைப் படுகிறீர்கள். விரைவிலேயே அந்த வெள்ளம் வடிந்துவிடும்.. இலையுதிர் காலம் நிரந்தரம் இல்லையே.! உங்களுக்கு வயதாகிவிடும். உங்களுக்குள் நீரோட்டங்கள் வந்து பாயாது. உங்கள் நீரோட்டம் வற்றிவிடும்.. கரை தெரிய ஆரம்பிக்கும். குளிர்காலமும் முடிந்து வெயில்காலம் வரும். பரந்து விரிந்து கிடக்கும் இந்த மஞ்சளாறு ஒரு சிறிய ஓடையைப் போல் காட்சியளிக்கும். நீங்கள் காய்ந்த மணல்படுகையாகக் காட்சியளிப்பீர்கள். இதுதான் வாழ்க்கை

இதுதான் முதுமை. முதுமையில் எல்லாருக்கும் எரிச்சல் வருகிறது. தாங்கள் வஞ்சிக்கப்பட்டுவிட்டதாக உணர்கிறார்கள்.

உங்களை யாரும் வஞ்சிக்கவோ ஏமாற்றவோ இல்லை. நீங்கள் முட்டாள்தனமாக உங்களையே ஊதி ஊதிப் பெரிதாக்கிக் கொண்டீர்கள். இப்போது நிஜ அளவைக் காண்கிறீர்கள். உங்கள் அகந்தைதான் இந்தப் பிரச்சினையை ஆரம்பித்து வைத்தது. இப்போது நீங்கள் வஞ்சிக்கப்பட்டுவிட்டதாக உணர்கிறீர்கள். மகிழ்ச்சியாக இருக்கும் முதியவனைக் காண்பது அரிது. அப்படி யாரையாவது பார்க்க நேர்ந்தால் அவருடன் சேர்ந்து வாழுங்கள். அவர் ஒரு ஞானியாகத்தான் இருக்க வேண்டும். மகிழ்ச்சியாக இருக்கும் இளைஞர்களைப் பார்ப்பது எளிது. மகிழ்ச்சியான முதியவர்கள் அரிதானவர்கள். இலையுதிர்கால வெள்ளம் வடிந்து வேனிற்காலம் வந்தபோதும் மகிழ்ச்சியாக இருக்கும் ஒருவனுக்கு எல்லாம் தெரிந்திருக்கும். வற்றாத மூலத்தை அவன் கண்டுபிடித் திருப்பான்.

உங்கள் இளமையில் உங்கள் கால்களில் நாட்டியம் இருந்தது. அது வெள்ளத்தின் விளைவு. வயதானபின் இயற்கை அனைத்தையும் திருப்பி எடுத்துக் கொண்டுவிட்டது. உங்களை யாரும் நினைப்பதில்லை, உங்களைப் பற்றி யாரும் கவலைப் படுவதில்லை. நீங்கள் உதாசீனப்படுத்தப்படுகிறீர்கள். குப்பையைப் போல் தூக்கியெறியப்படுகிறீர்கள். அந்த நிலையில் ஒருவன் மகிழ்ச்சியாக இருந்தால்..

புத்தர் சொல்வார்: ஒரு இளைஞனைப் போல் மகிழ்ச்சியாக இருக்கும் முதியவனைப் பார்த்தால் அவன் காலில் விழுந்து வணங்குங்கள். அவன் சொல்வதைக் கேளுங்கள் அவனிட மிருந்து பாடம் கற்றுக் கொள்ளுங்கள். இந்தியாவில் அந்த மரபு இருந்தது. மகிழ்ச்சியில் நடனமாடிக் கொண்டிருக்கும் முதிய வனைப் பார்த்தால் அவனை ஆச்சார்யன் ஆக்கிவிடுவோம். அவன் காட்டிற்குள் சென்று அங்கே ஒரு சிறிய பல்கலைக் கழகத்தை நிறுவுவான். அதுதான் குருகுலம். நாட்டின் எல்லாப் பாகங்களிலிருந்தும் சீடர்கள் வந்து குவிவார்கள்..

இந்தியாவில் இளைஞர்களை ஒருபோதும் குருவாக ஆக்கமாட்டார்கள். வயது முதிர்ந்தவர்கள்தான் குருவாக இருக்க முடியும். அதுதான் சரி. இதற்கு ஆங்காங்கே விதிவிலக்குகள்

இருக்கலாம். ஆனால் இந்த விதி பொதுவாகச் சரியாகத்தான் இருக்கிறது. வயது முதிர்ந்தவன் தான் சிறந்த ஆசானாக இருக்க முடியும். அவன் வாழ்க்கையின் எல்லாப் பருவங்களையும் பார்த்திருப்பான். பக்குவப்பட்டிருப்பான். இருந்தும் மகிழ்ச்சி யாக இருப்பான். பரவச நிலையில் இருப்பான். அவனே ஆசா னாக இருக்கத் தகுதி பெற்றவன். வெள்ளம் பெருக்கெடுத்தோடும் போது மகிழ்ச்சியாக இருப்பது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. ஆற்று வெள்ளம் வற்றிப் போகும் போது, ஆற்று மணல் மட்டுமே மிஞ்சியிருக்கும் போது உடலில் ஆயிரம் கோளாறுகள் வந்து விட்ட போதும் மகிழ்ச்சியாக இருப்பது ஒரு ஆன்மிக சாதனை.

வாழ்க்கையின் உச்சத்தில் துடிப்புடன் இருப்பதும் ஆடுவதும் பாடுவதும் பெரிய சாதனையில்லை. ஆனால் மரணம் உங்களை நெருங்கி வரும்போது அதனைச் சந்திக்க நடன மாடிக்கொண்டே போவது சாதனை. அது அதிசயம். அப்போது மிகச்சிறப்பான ஒன்று உங்கள் வாழ்வில் நடைபெற்று விட்டது என்று கொள்ளலாம். தெய்விகம் உங்களுக்குள் நுழைந்துவிட்டது என்று கொள்ளலாம்.

நீங்கள் இளமையாக இருப்பதால் மகிழ்ச்சியாக இருந்தால் அது அதிகநாள் நீடிக்காது. அது சீக்கிரமே சிதறிவிடும். அது சிதறுவதற்குள் உங்களுக்கு விழிப்புணர்வு வந்துவிட்டால் நல்லது. அதுதான் இங்கே ஆச்சரியமான விஷயம். இளமையாக இருக்கும் போது உங்களால் வருத்தமாக இருக்க முடிந்தால் வயதான பிறகும் உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியும். இளமையின் மகிழ்ச்சி இலையுதிர்காலத்து வெள்ளம் என்று உங்களுக்கு தெரியும். கொஞ்சம் நிலமையைக் கூர்ந்து கவனித்தால் நீங்கள் பரந்து விரிந்து இருப்பது உங்களால் இல்லை - உங்களுக்குள் வந்து பாயும் இலையுதிர்க்கால நீரோட் டங்களால் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். உங்களுக்குக் கொடுக்கப்பட்டது விரைவில் எடுத்துக் கொள்ளப்படும். அப்போதும் உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடிந்தால் உங்கள் மகிழ்ச்சியை எந்தக் கொம்பனாலும் அசைக்க முடியாது. அந்த மகிழ்ச்சியே பின்னால் பரவச நிலையாக மலரும்.

மகிழ்ச்சிக்கும் பரவசத்திற்கும் அதுதான் வேறுபாடு. மகிழ்ச்சி மற்றவர்களைச் சார்ந்திருக்கிறது. உங்களுக்குள் வந்து பாயும் ஆயிரம் ஆயிரம் நீரோட்டங்களைச் சார்ந்திருக்கிறது. பரவசமோ உங்களையே சார்ந்திருக்கிறது. அந்த வகையில் பார்த்தால் பரவசம் சுதந்திரமானது. அதற்கு எந்த நிபந்தனையும் கிடையாது. நீங்கள் இருக்கிறீர்கள் என்பதால்தான் பரவசம் இருக்கிறது. அதற்கு வேறு காரணங்கள் கிடையாது. நீங்கள் தோழனுடன் தோழியுடன், காதலன் அல்லது காதலியுடன் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள்.. அது விரைவில் உங்களிடமிருந்து பறிக்கப்படும். காரணம் அதுவும் ஒரு இலையுதிர்கால வெள்ளம் தான். வாழ்க்கையில் பருவங்கள் மாறிக்கொண்டே இருக்கும். வாழ்க்கைச் சக்கரம் சுழன்று கொண்டேயிருக்கும். கொடுக்கப்பட்டது எடுக்கப்படும். எடுக்கப்பட்டது கொடுக்கப்படும்.

ஒரு காரணத்தால் உருவானது நிலையாக இருக்காது. காரணம் இல்லாமல் உண்டானது காலம் முடிந்த பின்னும் நிலைத்து நிற்கும். மகிழ்ச்சியாக இருக்கும் போது இதை மட்டும் நினைத்துப் பாருங்கள். அந்த மகிழ்ச்சி ஒரு காரணத்தால் வந்ததா? இல்லை காரணமின்றி வந்ததா? ஒரு காரணத்தால் வந்ததென்றால் அப்போதே வருத்தமாக இருக்கப் பழகிக் கொள்ளுங்கள். ஏனென்றால் அது எப்படியும் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படும். அது ஏற்கனவே உங்களிடமிருந்து தள்ளிச் செல்லத் தொடங்கிவிட்டது. வெகு விரைவில் அது உங்களை விட்டு அகன்றுவிட்டது என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். காரண - காரிய உறவு என்பது மாறிவரும் உலகத்தின் ஓர் அங்கம். அந்த உலகைத்தான் இந்துக்கள் மாயை என்கிறார்கள். அந்த மாயை ஒரு கனவைப் போல் எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கும். அதை நம்ப ஆரம்பித்தால் அதுவே கெட்ட கனவாகிவிடும். அதை நம்பாமல் ஒதுக்கிவைத்தால் உங்களால் காரண - காரியத்திற்கு அப்பால் இருக்கும் உண்மையை உணரமுடியும்.

***அவன் ஆற்றின் வழியில் தாவி வந்து கடலை அடைந்தான்.***

ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் நீங்கள் கடலை அடைவீர்கள். கடல் என்றால் என்ன? மரணம் தான் அந்தப் பரந்து விரிந்த கடல்.

வாழ்க்கைக்கு ஒரு மூல காரணம் இருக்கிறது. மரணத்திற்கு அது கிடையாது. வாழ்க்கைக்குக் கரைகள் உண்டு. சில சமயம் வாழ்க்கையில் நீரோட்டம் பாயும் போது அது பரந்ததாகக் காட்சியளிக்கும். நீரோட்டம் வடிந்தவுடன் மீண்டும் சிறிய ஓடையைப் போலாகிவிடும். ஆனால் மரணத்திற்குக் கரைகள் கிடையாது. அது கடலைப் போன்றது.

ஒவ்வொரு ஆறும் இறுதியில் கடலுக்குத்தான் வந்தாக வேண்டும். அதேபோல் உணர்வுகளின் ஆறும் மரணத்திற்கு வந்தேயாக வேண்டும். நீங்கள் எங்கே போனாலும் சரி எந்தப் பாதையைத் தேர்ந்தெடுத்தாலும்ச் சரி, எந்தத் திசையில் பயணித்தாலும் சரி, இறுதியில் கடலையே சென்றடைவீர்கள். எல்லாத் திசைகளிலும் உங்களைக் கடல் சூழ்ந்திருக்கிறது. மரணத்தை அடைந்தவுடன் உங்கள் கனவுகள் எல்லாம் சிதறிவிடும். உங்கள் அகந்தை ஆட்டம்கண்டு விடும்.

**பின் அவன் ஆற்றின் வழியில் தாவி வந்து கடலை அடைந்தான். கிழக்கே பரந்து விரிந்து காலியாக இருந்த தொடுவானத்தில் அலைகள் சென்று மோதுவதைப் பார்த்தான். அவன் முகம் தொங்கியது.**

இப்படித்தான் முதியவர்கள் வருத்தப்படுகிறார்கள். அவர்கள் முகங்கள் தொங்கிப் போகின்றன. அவர்களின் மகிழ்ச்சி மறைந்துவிடுகிறது. அவர்கள் உற்சாகம், உத்வேகம், கன்வுகள் எல்லாமே செத்துவிடுகின்றன. அவர்கள் கண் முன் னால் ஒரு உயிரற்ற மாபெருங்கடலைப் பார்க்கிறார்கள். அந்தக் கடலிற்குள் அவர்கள் கலந்து கரைந்து மறைய வேண்டியதுதான் என்பதை உணர்கிறார்கள். அவர்கள் காலம் முடிந்துவிட்டது.

கடலில் விழும் ஒவ்வொரு ஆறும் இப்படித்தான் எண்ணு கிறது. ஒவ்வொரு ஆறும் வருத்தப்படுகிறது. வெள்ளத்தால் தான்

பெருகிப் பரந்து வாழ்ந்த காலத்தை நினைத்து ஏங்குகிறது. கடந்தகாலத்தை ஏக்கத்தோடு நினைத்துப் பார்க்கிறது. அந்த இலையுதிர்கால வெள்ளம் தன்னுள் பாய்ந்த நீரோட்டம் அதனால் தான் இன்னும் பருத்து பரந்து விரிந்து பெரிதாக இருந்தது எல்லாவற்றையும் நினைத்துப் பார்க்கிறது. ஆனால் காலத்தில் நீங்கள் பின்னோக்கிச் செல்ல முடியாதே. முன்னால் மட்டும் தானே போகமுடியும்! ஒவ்வொரு ஆறும் ஒரு கட்டத்தில் கடலில் வீழ்ந்து கலக்கத்தான் வேண்டும். அழுதுகொண்டே கடலில் விழுகிறது ஆறு. கடலுக்குச் செல்லுங்கள். ஆறு கடலினுள் கலக்கும் இடத்தைப் பாருங்கள். உங்களால் ஆற்றின் சோகத்தை உணர முடியும்.

வயதான ஒவ்வொரு மனிதனும் பின்னோக்கியே பார்க்கிறான். முதியவர்கள் நினைவுகளிலேயே வாழ்கிறார்கள். அன்று பெரிய புள்ளிகளாக இருந்ததை, மக்கள் அவர்களை மதித்ததை, விரும்பியதை நேசித்ததை அசை போட்டபடியே காலத்தைக் கடத்துகிறார்கள். அதையே மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் முதியவர்களிடம் பேசும் போது விரைவில் சலிப்புத்தட்டி விடுகிறது. உங்களுக்கு எரிச்சல் கூட வந்துவிடுகிறது.. ஏன்? அந்தக்காலக் கதைகளை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அது ஒரு கனாக்காலம் என்ற ரீதியில் கழுத்தை அறுப்பார்கள். எந்த முதிய வனும் இந்தக் காலம் நன்றாக இருப்பதாகச் சொல்வதில்லை. அவர்களைப் பொறுத்தமட்டில் அந்த நாட்களே நல்ல நாட்கள். அது ஒரு பொற்காலம் என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் எப்போதும் இறந்த காலத்தில்தான் வாழுகிறார்கள்.

கடந்த காலமே சிறந்தது என்று சொல்கிறார்கள். ஏன் நிகழ்காலத்திற்க்கு என்ன குறைச்சல்? கடந்த காலமே சிறந்தது என்று சொல்லும் போது அவர்கள் பொருளாதார அமைப்பையோ அரசியல் நிலமையையோ பற்றிப் பேசவில்லை. அப்போது அவர்கள் இளைஞர்களாக இருந்தார்கள். எல்லாமே நன்றாக இருந்தது. இப்போது வயதாகிவிட்டது. எதுவுமே நன்றாக இல்லை. அப்போது ஆற்றில் வெள்ளம் ஓடியது. இன்று நீரோட்டம் இல்லை. அதுதான் வித்தியாசம்.

அமெரிக்க நாட்டு உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி ஒருவர் ஓய்வு பெற்றபின் பாரீசுக்குப் போனார். பாரீசுக்கு அவர் போவது இரண்டாவது முறை. முதல் முறை முப்பது ஆண்டு களுக்கு முன் தன் புதுமனைவியுடன் தேனிலவிற்குப் போயிருந் தார். இப்போது வயதான தன் மனைவியுடன் அங்கு சென்றிருந்தார்.

அந்த நகரை இரண்டு மூன்று நாட்கள் சுற்றிப் பார்த்துவிட்டு அவர் வருத்தமாகச் சொன்னார். ''பாரீசைப் பார்க்க வேண்டும் என்று எவ்வளவு எதிர்பார்ப்புடன் வந்தோம். ஆனால் இங்கு எல்லாமே மாறிவிட்டது. முன்னால் இருந்தது போல் எதுவுமே இல்லை.''

அவர் மனைவி பெரிதாகச் சிரித்தாள். பிறகு சொன்னார். ''எல்லாமே முன்பு இருப்பது போல்தான் இருக்கிறது. அப்போது நாம் இளைஞர்களாக இருந்தோம். இப்போது நமக்கு வயதாகிவிட்டது. பாரீஸ் அப்படியேதான் இருக்கிறது.''

இப்போது மற்ற ஆறுகளில் இலையுதிர்கால வெள்ளம். உங்கள் ஆற்றுக்கு வெயிற்காலம். உங்கள் ஆறு மட்டும் வறண்டு விட்டது. நீங்கள் இளைஞனாக இருந்தபோது பார்த்த பாரீஸ் நகரமும் இப்போது பார்க்கும் பாரீஸ் நகரமும் எப்படி ஒன்றாக இருக்க முடியும்?

புலனின்பம் துய்க்கும் இளைஞர்களின் நகரம் பாரீஸ். ஒவ்வொரு வயதிற்கும் ஒரு நகரம் இருக்கிறது. இளைஞர் களுக்குப் பாரீஸ்; முதியவர்களுக்கு நமது காசி நகரம். காசி துறவறத்தைச் சொல்கிறது. பாரீஸ் இன்பங்களைக் கோடிட்டுக் காட்டுகிறது. இந்தியாவில் எல்லாரும் வயதானவுடன் காசியில் போய்ச் சாக வேண்டும் என்று விரும்புகிறார்கள். அது முதியவர்களின் நகரம். வேனல்காலத்தில் வறண்டு போன ஆறுகளின் உறைவிடம். உங்களுக்கு வயதாகிவிட்டால் மொத்த உலகமும் வயதாகிச் செத்துக் கொண்டிருப்பது போல் தோன்றும்.

உலகம் அப்படியேதான் இருக்கிறது. நீங்கள்தான் மாறிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் மனதை விட்டுவிடுங்கள். அதன் பின் உங்களுக்கு வயது கிடையாது. பருவங்கள் கிடையாது.

ஏனென்றால் நம் உள்ளே இருக்கும் ஆன்மாவிற்குப் பருவங்கள் கிடையாது. - வேனிற்காலம், இலையுதிர்காலம், குளிர்காலம் எதுவுமே ஆன்மாவிற்குக் கிடையாது. ஆன்மா அப்படியே இருக்கும் சாசுவதமாக மாற்றமில்லாமல் இருக்கும். அந்த ஆன்மாவில் நீங்கள் ஊன்றவில்லையென்றால் மரணம் என்னும் மாகடலைப் பார்க்கப் போகும் போது உங்கள் முகம் சோகத்தில் சுருங்கிவிடும். பழைய நினைவுகளின் பாரம் அழுத்தும். இப்போது வருங்காலம் என்று ஒன்றும் இல்லையாதலால் இறந்த காலத்திலேயே உங்கள் மனம் வாழ்ந்து கொண்டிருக்கும்.

ஒரு குழந்தை எப்போதும் கடந்தகாலத்தைப் பற்றி நினைப்பதில்லை. குழந்தை அன்றலர்ந்த மலராக புத்துணர்வுடன் இருக்கிறது. அது ஒரு வெற்றுத்தாள். காலம் இன்னும் எதுவும் எழுதாத வெள்ளைத்தாள். ஒரு குழந்தையால் பின்னோக்கி நகர முடியாது. அதனால் அது எப்போதும் வருங்காலத்திலேயே வாழ்கிறது.

ஒரு குழந்தையிடம் பேசிப்பாருங்கள். அது வேகமாக வளர்வதிலேயே முனைப்பாக இருக்கிறது. எப்போது அப்பா மாதிரி பெரிய ஆளாகலாம் என்று கனவு கண்டு கொண்டிருக் கிறது. அதற்குப் பாவம் அப்பா என்ன கஷ்டப்படுகிறார் என்று தெரியாது. அப்பாவைப் போல் உயரமாக, பலம் உள்ளவனாக, பெரிய மனிதனாக வேகமாக வளர வேண்டும் என்று கனவு கண்டுகொண்டிருக்கிறது. ஒரு அற்புதம் நிகழாதா? அதன் மூலம் அடுத்த நொடியே அப்பா போல் ஆகிவிடமாட்டேனா என்று ஏங்கிக்கொண்டிருக்கிறது. குழந்தையாகத் தூங்கி மறுநாள் காலை எழும்போது அப்பாவைப் போல் பலம் உள்ளவனாக எழுந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறது. ஒவ்வொரு குழந்தையும் வருங்காலத்தைப் பற்றி மட்டுமே நினைக்கிறது. ஏனென்றால் ஒரு குழந்தைக்கு வருங்காலம் மட்டுமே பரந்து விரிந்து கிடக்கிறது. அது இன்னும் எழுபது வருடங்கள் வாழப் போகிறது. இன்னும் ஒரு வருடம் கூட முழுதாக வாழ்ந்து முடிக்கவில்லை. அதற்கு இறந்தகாலம் என்பதே இல்லை. அதனால் தான் குழந்தைக்கு அவ்வளவாக ஞாபகசக்தி இருப்பதில்லை.

ஒரு குழந்தைக்குக் கோபம் வரலாம். ஆனால் அடுத்த நிமிடமே அதை மறந்து விட்டுச் சிரிக்க அதனால்தான் முடியும். காரணம் கடந்த காலம் என்ற பாரம் அதனை அழுத்துவதில்லை. கடந்த காலத்தைத் தொடர்ந்து மறந்து கொண்டேயிருக்கிறது. காரணம் அதன் சக்தியெல்லாம் எதிர்காலத்திலேயே இருக்கிறது. எந்தக் குழந்தையாலும் பின்னோக்கிப் பார்க்க முடியாது.

ஒரு இளைஞன் நிகழ்காலத்தில் வாழ்கிறான். அவன் நடுவில் இருக்கிறான். இன்று இங்கு வாழ்வதுதான் அவனுடைய லட்சியம். அவனுடைய நிகழ்காலம் அழகாக இருப்பதால் அவனுக்குக் கடந்த காலத்திற்குச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. அவன் ஆற்றில் இப்போது இலையுதிர்கால வெள்ளம் அவன் அகந்தை உச்சத்தில் இருக்கிறது. வருங்காலத்திற்குச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால் வருங்காலம் இதைவிட நன்றாக இருக்க வாய்ப்பில்லை என்று அவனுக்குத் தெரியும்

முதியவர்கள் இருப்பது போல் வயது முதிர்ந்த நாடுகளும் இருக்கின்றன. உதாரணமாக இந்தியா வயதான நாடு. அது எப்போதும் தன் கடந்தகாலத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறது. அ,மெரிக்கா போன்ற நாடுகள் இளம் வயது நாடுகள். அவை நிகழ்காலத்திலேயே வாழ்கின்றன. சீனா போன்ற நாடுகள் குழந்தைப் பருவத்தில் இருப்பவை. இப்போதுதான் சீனா புதிதாகப் பிறந்திருக்கிறது. அதனால் அது வருங்காலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அங்கே பெரிய மாற்றங்கள் பிரம்மாண்டமான நிகழ்வுகள் வரப்போகின்றன. இந்த உலகமே ஒரு கனவுலகமாக மாறப் போகிறது. நாடுகளும் மனிதர்களைப் போல்தான் இருக்கின்றன.

இளமைக்காலம் அதிக நாள் நீடிக்காது. முதுமை வந்தவுடன் மனிதன் தன் இறந்த காலத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பிக்கிறான்.

மனம் இந்த மூன்று காலங்களில் ஏதோ ஒன்றில் இருக்கிறது. இந்தக் காலங்கள் யாவுமே மனதின் பகுதிகள்தான். மனதை விட்டுவிட்டால் காலம் கடந்த நிரந்தர நிலையை அடைவீர்க்ள். அந்த நிலை எந்தக் காலத்திலும் இல்லை. மூன்று காலங்களையும்

கடந்து விட்டீர்கள். எல்லாப் பருவங்களையும் கடந்து விட்டீர்கள். உங்கள் மகிழ்ச்சியில் சோகமாகவும் சோகத்தில் மகிழ்ச்சியாகவும் இருக்கிறீர்கள். இளமையில் முதுமையையும் முதுமையில் இளமையையும் அனுபவிப்பீர்கள். இறக்கும் போது குழந்தை யாகவும் பிறக்கும் போது பக்குவப்பட்ட முதியவனாகவும் இருப்பீர்கள்.

ஷுவாங் ட்சுவின் குருவான லாவோ ட்சுவைப் பற்றி ஒரு கதை சொல்வார்கள். அவர் எண்பது வயது முதியவராகத்தான் பிறந்தாராம். எண்பது வருடங்கள் அவர் தன் தாயின் கருப்பை யில் இருந்தாராம். பிறக்கும் போதே வெள்ளைத்தாடியுடன் பிறந்தாராம். இது நாணயத்தின் மற்றொரு பக்கம். ஏசுநாதர் என்ன சொல்கிறார்? ''உங்களால் மீண்டும் குழந்தையாக முடிந்தால் நீங்கள் இறைவனின் ராஜ்ஜியத்திற்குள் பிரவேசிக்க முடியும்.''

இது நாணயத்தின் ஒரு பக்கம். லாவோ ட்சு வலியுறுத்துவது அதே நாணயத்தின் மற்றொரு பக்கம். ''பிறக்கும்போதே முதியவனாகப் பிறந்தால் நீங்கள் இறைவனின் ராஜ்ஜியத்தில் நுழைந்துவிட்டீர்கள் என்று பொருள்.''

இருவர் சொல்வதும் ஒரே கருத்தைத்தான். ஆனால் இந்த பாழாய்ப்போன மனம் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். முதியவனாகப் பிறப்பவன் இறக்கும்போது குழந்தையாகத்தான் இருப்பான். நீங்கள் பிறக்கும் போது குழந்தையாக இருந்தால் இறக்கும் போது முதியவராகத்தான் இருப்பீர்கள். அதனால் பிறக்கும்போதே முதியவராக இருங்கள் - அது மிகவும் கடினம் ஆனால் அதற்கு வழிமுறைகள் இருக்கின்றன. அல்லது இறந்து குழந்தையாக மாறுங்கள். இரண்டும் ஒன்றுதான். ஏனென்றால் ஜனனமும் மரணமும் ஒரு வட்டத்திற்குள் அடக்கம்.

நீங்கள் இங்கே இறந்தால் வேறு எங்காவது பிறப்பீர்கள். இங்கே குழந்தையாக இறந்தால் - அன்றலர்ந்த மலராக, பாரங்கள் இல்லாமல் வெகுளியாக இறந்தால் - வயது முதிர்ந்தவனாக அடுத்துப் பிறப்பீர்கள். ஏனென்றால் இந்தப் பிறவியின் அனுபவங்கள் உங்களை ஞானியாக்கியிருக்கும். அதனால் பிறக்கும் போதே ஒரு முதியவனுக்கு உரிய ஞானம் இருக்கும்.

நீங்கள் பிறவி எடுத்த முதல் கணத்திலிருந்தே ஞானத்துடன் இருப்பீர்கள். நீங்கள் இறங்கும் போது புத்துணர்வுடனும் குழந்தைத்தனத்துடனும் இருந்தால் அடுத்து பிறக்கும்போது ஞானியாகப் பிறப்பீர்கள். ஏனென்றால் ஞானம் எப்போதுமே காலியான மனதில் வெகுளித்தனமான மனதில்தான் பிறக்கும். பிறக்கும்போதே அறிவாளியாக, முதிர்ந்த வயதுக்குரிய பக்குவத்துடன் இருந்தால் மற்றவர்கள் வாழ்க்கையில் வழக்கமாகச் செய்யும் முட்டாள்தனங்களைச் செய்ய மாட்டீர்கள். வாழ்க்கையில் எப்போதுமே புத்துணர்வுடனும் ஞானத்துடனும் இருப்பீர்கள். அதன்பின் உங்களுக்கு மரணம் என்பதே இல்லை.

ஞானி ஒரே ஒரு முறைதான் பிறக்கிறான். மற்ற பிறவிகள் எல்லாம் அதற்காக அவனைத் தயார்ப்படுத்திக் கொள்கிறான். பிரபஞ்சத்துடன் இரண்டறக் கலப்பதற்கு முன்னால் ஒரே ஒரு முறை தான் இந்த பூமியில் பிறக்கிறான். அவன் மகாநிர்வாணம் அடைவதற்கு முன் ஒரே ஒரு பிறவிதான் அவனுக்கு இருக்கிறது.

அதனால் நீங்கள் இந்தப் பிறவியில் இறக்கும்போது ஒரு குழந்தையின் மனதுடன் இருந்தால் இன்னும் ஒரே ஒரு முறைதான் பிறப்பீர்கள். ஆனால் அப்போது முதியவராகத்தான் பிறப்பீர்கள். அறிவில் முதிர்ந்தவராகத்தான் பிறப்பீர்கள். பிறந்த முதல் கணத்திலிருந்து ஒரு ஞானியாகத் திகழ்வீர்கள். அதன் பின் உங்களுக்கு பிறவியே கிடையாது. பிறப்பும் இறப்பும் அற்ற ஒரு நிலையை நீங்கள் அடைவீர்கள்.

***தொலைதூரத்தில் இருக்கும் தொடுவானத்தைப் பார்த்த போது அவனுக்கு அறிவு வந்தது. ஆற்றின் தேவனான அவன் கடலின் தேவனிடம் முணுமுணுத்தான்.***

***''அந்தப் பழமொழி சரிதான். நூறு சிந்தனைகள் உள்ள ஒருவன் மற்றவர்களைவிடத் தனக்குத்தான் அதிகம் தெரியும் என்று நினைத்துக் கொள் கிறான்.' நானும் அப்படித்தான். உங்களைப் பார்க்கும் போதுதான் 'பரந்து விரிந்த'' என்ற வார்த்தைகளின் அர்த்தம் புரிகிறது***

உங்களைவிட மேம்பட்டவரை அணுகும்போதுதான், தாவோவில் நிலைபெற்றிருக்கும் ஒருவரை அணுகும்போதுதான் ஞானம் என்றால் என்னவென்று உங்களுக்குப் புரிகிறது. அறிவின் ஆழம் என்றால் என்னவென்று புரிகிறது. பக்குவம் என்றால் என்னவென்று புரிகிறது. பரந்து விரிந்த என்ற சொற்களின் பொருள் புரிகிறது. ஒருமைப்பாட்டுடன் உணர்வுகளில் நிலைபெற்றிருப்பது என்றால் என்னவென்று புரிகிறது.

ஞானம் பெற்றவனைப் பார்க்கும்போதுதான் ஞானத்தில் இருப்பது என்னவென்று தெரிகிறது. அதற்கு முன்புவரை நீங்கள் கனவுகளிலும் நிழல்களிலும் காலத்தைக் கழித்தீர்கள். சூரிய ஒளியைப் பார்க்கவேயில்லை. பரந்த வானத்தின் கீழ் இருந்ததே இல்லை. உங்கள் அகந்தை என்ற காட்டின் இருண்ட குகைகளில் வாழ்ந்தீர்கள்.

**கடலின் தேவன் சொன்னான்: ''கிணற்றுத் தவளையிடம் கடலைப் பற்றிப் பேசமுடியுமா?**

முடியாது. காரணம் மொழி வேறுபடுகிறது. கிணற்றில் வாழும் தவளைக்குக் கிணற்றின் பாஷைதான் தெரியும்.

இந்தக் கதையை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

ஒரு முறை கடலில் வாழ்ந்து கொண்டிருந்த ஒரு தவளை வெளியே வந்து ஒரு கிணற்றுக்குள் குதித்தது. கிணற்றில் வாழும் தவளையுடன் பேசிப் பழக ஆரம்பித்தது.

''நீ எங்கிருந்து வருகிறாய்?''

''கடலில் இருந்து.''

''கடல் என்ன இந்தக் கிணற்றை விடப் பெரியதா என்ன?''

அதன் கண்களில் சந்தேகம். மனதில் நம்பிக்கையின்மை.

''நான் வாழும் கிணற்றைவிட பெரியதாக எப்படி இருக்க முடியும்?''

கடல் தவளை பெரிதாகச் சிரித்தது.

''என்னால் எதுவும் சொல்ல முடியாது. நான் எதை வைத்துக் கடலை அளப்பேன்?''

''கடலை அளப்பதற்கு நான் அளவைகள் தருகிறேன்.''

கிணற்றுத் தவளை அந்தக் கிணற்றின் கால் பகுதி இடத்தைத் தாண்டிக் குதித்தது.

''இந்த அளவிற்கு கடல் பெரிதாக இருக்குமா?''

''இல்லை இதைவிட மிகவும் பெரியது.

கிணற்றுத்தவளை பாதிக்கிணறைத் தாண்டிக் குதித்தது.

''இந்த அளவு இருக்குமா?''

கடல் தவளை சிரித்தபடியே சொன்னது. ''சத்தியமாக இதைவிட மிகப் பெரியது கடல்.''

அடுத்து கிணற்றின் முக்கால் பகுதியைத் தாண்டிக் குதித்தது.

''கடல் இதைவிடவா பெரிதாக இருந்துவிடப் போகிறது?''

கடல் தவளை இன்னும் பெரிதாகச் சிரித்தபடி ''இதை விடவும் மிகவும் பெரிது கடல்.'' என்றது.

இப்போது கிணற்றுத் தவளை முழுக்கிணறையும் தாண்டிக் குதித்தது.

''இதைவிடக் கடல் சத்தியமாகப் பெரிதாக இருக்க முடியாது.''

கடல் தவளைக்கு கிணற்றுத் தவளையைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

''நான் சொல்வது உன்னைக் காயப்படுத்தான் செய்யும் என்றாலும் உன்னிடமிருந்து உண்மையை மறைக்க விரும்பவில்லை. கடல் இதைவிடவும் மிக மிகப் பெரிது.''

கிணற்றுத் தவளைக்குக் கோபம் வந்துவிட்டது.

''பொய் சொல்வதற்கு ஒரு அளவு வேண்டாமா? பொய்யனே இங்கிருந்து ஓடிவிடு. என் கிணற்றைவிடப் பெரிது இந்த உலகத்தில் எதுவும் இல்லை.''

உங்களுக்கு சந்தேகம் வரும்போதெல்லாம் நீங்கள் அந்தக் கிணற்றுத்தவளையைப் போல்தான் இருக்கிறீர்கள் உங்களை விடப் பெரிதாக எதுவும் இருக்க முடியாது என்று நினைக்கிறீர்கள். உங்களைவிடப் புனிதமானதாக எதுவும் இருக்க முடியாது என்று நினைக்கிறீர்கள்.. உங்களைவிட உயர்ந்ததாக, உங்களைவிடத்

தெய்விகம் வாய்ந்ததாக எதுவுமே இருக்க முடியாது என்று உறுதியாக நம்புகிறீர்கள். அதனால் தான் நீங்கள் வாழ்க்கையில் சந்திக்கும் புத்தபிரான்களையும் ஏசு நாதர்களையும் கண்மூடித் தனமாக நிராகரிக்கிறீர்கள். ஏனென்றால் அவர்கள் எல்லாரும் கடல் தவளைகள். உங்களிடம் கிணற்றை அளக்கும் அளவு கோல் மட்டுமே இருக்கிறது. அவர்கள் அளவைக்கு அப்பாற்பட்ட விஷயத்தைக் கொண்டு வருகிறார்கள்.

கிணற்றுத்தவளையிடம் அவர்களுக்கு இரக்கம் பிறக்கிறது. கடுமையாக நடந்து கொள்ள மனம் இல்லை. தவளை பாவம் என்ன செய்யும்? அதன் அறிவும் அனுபவமும் அவ்வளவுதான். கிணற்றுத்தவளை கடலையே பார்த்ததில்லை. அதன் பிரம் மாண்டத்தை அதனால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?

அதுதான் புத்தர்களின் கருணை. நீங்கள் அவர்களை நிராகரித்துக் கொண்டேயிருக்கிறீர்கள். அவர்களோ உங்கள் மேல் கருணை மழையைப் பொழிந்து கொண்டேயிருக்கிறார்கள். நீங்களும் பாவம் என்ன செய்வீர்கள். காலம் காலமாக நீங்கள் அந்தக் கிணற்றுக்குள் வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். கிணற்றுத் தவளையால் வானத்தைப் பார்க்க முடியும். ஆனால் அதன் கோணத்திலிருந்து அந்த வானம் கூட ஒரு ஓட்டைதான். அதுவும் அந்தக் கிணற்றளவுதான் இருக்கிறது. அதன் பார்வையில் வானம் கிணற்றுக்கு ஒரு ஜன்னல். வானத்தின் விஸ்தீர்ணம் கிணற்றுக்கு வெளியே வந்தால்தான் தெரியும். உங்களுக்கு வானம் ஒரு ஜன்னல்தான். அந்த ஜன்னலின் பின்னால் நின்றுக்கொண்டுதான் உலகைப் பார்க்கிறீர்கள்.

ஜன்னலின் அமைப்பே வானத்தின் அமைப்பாக இருக்கிறது.

''இந்த வானம் தான் என் வீட்டு ஜன்னல்'' என்று நினைக் கிறீர்கள். அப்படித்தான் ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள்.

புத்தர்களால் என்ன செய்யமுடியும்? உங்களிடம் இரக்கம் காட்ட முடியும். அவ்வளவுதான். ஏசு நாதரைச் சிலுவையில் அறைந்தார்கள் அப்போது கூட அவர் என்ன சொன்னார்?

''பரமபிதாவே! இவர்களை மன்னியுங்கள். பாவம் இவர்கள்! என்ன செய்கிறோம் என்பதையே அறிய மாட்டாதவர்கள்!.''

இதையேதான் அந்தக் கடல் தவளையும் செய்தது. அதுவும் ஒரு கட்டத்தில் இறைவனிடம் பிரார்த்தனை செய்திருக்கும்.

''கடவுளே! இந்தத் தவளையை மன்னியுங்கள். இதற்கு என்ன செய்கிறோம் என்ன பேசுகிறோம் என்பதே தெரியவில்லை.''

கிணற்றுத்தவளை அதனிடம் என்ன சொன்னது?

''பொய்யனே இங்கிருந்து வெளியே போய்விடு. என்னை நீ ஏமாற்ற முடியாது. நீ ஏதோ சூழ்ச்சித் திட்டத்துடன் வந்திருக் கிறாய் என்று நினைக்கிறேன். உன் அபத்தத்தை என்னால் நம்ப முடியாது. இந்த உலகத்திலேயே என் கிணற்றைவிடப் பெரியது எதுவும் இருக்க முடியாது.''

***கடலின் தேவன் சொன்னான்: ''கிணற்றுத் தவளையிடம் கடலைப் பற்றிப் பேசமுடியுமா?***

புத்தர்களுக்குத் தெரிந்ததை நம்முடன் பேச முடியாது. இந்த விஷயத்தில் அவர்களால் நம்முடன் தொடர்பு கொள்ள முடியாது. காரணம் உங்கள் மொழி வேறு. புத்தர்களின் மொழி வேறு. அவர்கள் சொல்ல நினைப்பதை உங்கள் மொழியில் சொல்ல வேண்டுமென்றால் கடலைக் கொண்டு வந்து கிணற்றில் போட வேண்டும். கடல் ஒருநாளும் அதைச் செய்யவிடாது. அதனால் புத்தர்கள் சொல்வது பொய்யெனத் தோன்றும். அந்தச் சிக்கலைப் புத்தர்கள் இப்படி வர்ணிக்கிறார்கள். ''நாங்கள் என்ன சொல் கிறோமோ அதைச் சொன்னவுடன் அது உண்மையில்லாமல் போய்விடுகிறது.''

இதையே ஞானியான லாவோ ட்சு இப்படிச் சொன்னார். ''மெய்ப்பொருளைச் சொல்ல முடியாது. எதைச் சொல்ல முடியுமோ அது மெய்ப்பொருளாக இருக்காது.''

மொழிதான் பிரச்சினையே தவிர மெய்ப்பொருள் இல்லை. நீங்களும் உங்கள் மொழியும்தான் பிரச்சினை. மெய்ப்பொருள் இல்லை. மெய்ப்பொருளைச் சொல்லலாம். ஆனால் அதற்குக்

குறைந்த பட்சம் இரண்டு புத்தர்கள் வேண்டும். இரண்டு புத்தர்கள் சந்தித்தால் அவர்கள் எதையும் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. அவர்கள் மெய்ப்பொருளைப் 'பற்றிப் பேச வேண்டியதே இல்லை. அவர்கள்தான் மெய்ப்பொருள். அதனால் பேச வேண்டிய அவசியமே இல்லை. பேச வேண்டிய தேவை ஏற்படும்போது மொழிப்பிரச்சினையும்வ் வந்துவிடுகிறது.

***''கிணற்றுத் தவளையிடம் கடலைப் பற்றிப் பேசமுடியுமா? நெருப்பில் வாழும் ஒரு பூச்சியிடம் பனிக்கட்டியைப் பற்றிப் பேசமுடியுமா?***

அந்தப் பூச்சியோ நெருப்பிலேயே வாழ்கிறது. அதனிடம் பனிக்கட்டியைப்பற்றிப் பேச முடியுமா? அதற்குப் பனிக்கட்டி என்றாலே என்னவென்று தெரியாது. அதன் உலகமே நெருப்பு தான். அந்தப் பூச்சியிடம் தீயைப் பற்றிப் பேசலாம். பனிக்கட்டியைப்பற்றிப் பேச முடியாது. 'ஆஹா இது பனிக்கட்டியைப் போல் குளிர்ச்சியாக இருக்கிறது '' என்று அதனிடம் சொல்ல முடியாது. அப்படிச் சொன்னாலும் அந்தப் பூச்சி அதனை ஏற்றுக் கொள்ளாது. அதனைப் பொறுத்தமட்டில் எல்லாமே நெருப்புதான்.

துக்கம் என்ற நெருப்பில் வாழும் உங்களிடம் பரவசநிலை பற்றிப் பேச முடியுமா? வேதனை என்ற நெருப்பில் சதா வாழ்ந்து கொண்டிருக்கும் உங்களிடம் பரவசம் என்ற பனிக்கட்டியைப் பற்றிப் பேச முடியுமா? உங்களுக்கு எப்படி ஒரு புத்தனின் குளிர்ச்சி தெரியும்? அதைச் சொன்னாலும் உங்களுக்குப் புரியாது. ஒரு புத்தனுடைய தலைக்குள் எண்ணங்களே இல்லை என்று எப்படி உங்களுக்குப் புரியவைப்பது? அவருடைய மனம் என்னும் வானில் மேகங்களே இருக்காது என்று உங்களால் உணர முடியுமா? முடியாது. அதை லேசாக எட்டிப்பார்க்கக்கூட உங்களால் முடியாது. உங்களிடம் ஒரு நொடிப்பொழுதிற்குக்கூட எண்ண ஓட்டம் நிற்கவில்லை. உங்கள் மண்டைக்குள் ஓடும் எண்ணங்கள் ஒரு பைத்தியக்காரக் கும்பல் என்று உங்களுக்குத் தெரியும்

புத்தல் அமைதியாக அமர்ந்திருக்கும் போது அவர் மனதில் எண்ணங்களே இல்லை என்பதை நீங்கள் எப்படிப் புரிந்து

கொள்வீர்கள்? நீங்கள் அந்தப் பூச்சியைப் போல் நெருப்பில் வாழ்கிறீர்கள். புத்தரோ பரவசம் என்ற பனிக்கட்டியில் வாழ்கிறார். நெருப்பிற்கும் பனிக்கட்டிக்கும் நடுவே பாலம் கட்ட முடியுமா என்ன? நீங்கள் படிப்படியாக குளிர்ந்தால்தான் உங்களால் ஒரு புத்தனைப் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் அமைதியாக, குளிர்ச்சியாக இருந்தால்தான் புத்தன் உங்களுடன் தொடர்பு கொள்ள முடியும்.

**தத்துவப் பேரறிஞரிடம் வாழும்வழியைப் பற்றிப் பேச முடியுமா?''**

சத்தியமாக முடியாது. நான் ஒரு படி மேலே போகிறேன். சில சமயங்களில் நம்மால் கடலைப் பற்றிக் கிணற்றுத்தவளையிடம் பேச முடியும். பனிக்கட்டியைப் பற்றி நெருப்பில் வாழும் பூச்சியிடம் பேச முடியும். ஆனால் மெய்ப்பொருளைப் பற்றி ஒரு தத்துவப் பேரறிஞரிடம் பேசவே முடியாது..

ஏன்? கிணறு எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அதுவும் கடலின் ஒரு பகுதிதானே! கடலினுள்ளும் கிணற்றினுள்ளும் இருக்கும் பதார்த்தம் ஒன்றுதானே! அது தண்ணீர்தானே!

சரி என்னதான் நெருப்பு பனிக்கட்டிக்கு நேர் எதிராக இருந்தாலும் அவை இரண்டுமே ஒரே பதார்த்தத்தின் வெவ்வேறு வடிவங்கள்தானே.

குளிர்ச்சியும் வெப்பமும் இருவேறு பொருள்கள் இல்லை,. அவை இரண்டுமே ஒரே சக்திதான். அந்த சக்திதான் வெப்பமாக மாறுகிறது. பின் குளிர்ச்சியாக மாறுகிறது.. அடிப்படை சக்தி ஒன்றுதான். பரிமாணங்கள்தான் வேறு வேறு.. தீவிரம் வேறு. படிகள் வேறு. அதனால்தான் வெப்பமானியை வைத்துக் கொண்டு சூட்டையும் அளக்கிறோம். குளிர்ச்சியையும் அளக்கிறோம். எந்த நிலையில் குளிர்ச்சி வெப்பமாகிறது என்று யாராலும் சொல்ல முடியாது. நாமாக சில அளவைகளை வைத்துக் கொள்ளலாம். ஆனால் நூறு டிகிரி வரை குளிர்ச்சி அதன்பின் சூடு என்று நிர்ணயம் செய்ய முடியாது

ஒரு சிறிய பரிசோதனையைச் செய்து பாருங்கள். உங்கள் இடது கையை ஒரு பனிக்கட்டியின் மேல் வையுங்கள். வலது

கையை நெருப்பிற்கு அருகில் வையுங்கள். வலது கை சூடாகட்டும். இடது கை குளிரட்டும். பின் இரண்டு கைகளையும் ஒரு பாத்திரத்தில் இருக்கும் தண்ணீருக்குள் விடுங்கள். அந்தத் தண்ணீர் சூடாக இருக்கிறதா குளிர்ச்சியாக இருக்கிறதா என்று சொல்லுங்கள் பார்ப்போம். இடது கை தண்ணீர் கொதிக்கிறது என்று சொல்லும். வலது கையோ தண்ணீர் மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறது என்று சொல்லும். சூடு என்றால் என்ன? குளிர்ச்சி என்றால் என்ன? ஒரே சக்தியின் அளவில் உள்ள மாற்றங்கள் தானே சூடாகவும் குளிர்ச்சியாகவும் பரிமளிக்கிறது.

ஒரு கிணற்றுத்தவளையிடம் கூட கடலைப் பற்றிச் சொல்லிவிடலாம். சொல்பவன் அறிவாளியாக இருந்தால் எப்படி யாவது கடலின் பிரம்மாண்டத்தை உணர வைத்துவிடுவான். தொடர்பு கொள்ள சில உத்திகளையும் சில சாதனங்களையும் உருவாக்கி அவன் முயற்சியில் வெற்றி பெற்றுவிடுவான்.

அதைத்தான் புத்தர்களும் ஏசுநாதர்களும் செய்து கொண்டிருக்கிறார்கள். கடலைப் பற்றிக் கிணற்றுத்தவளையிடம் சொல்ல சாதனங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு விஷயம் பொதுவாக இருக்கிறது. அது தண்ணீர். இந்தப் பொதுவான விஷயத்தை வைத்துக் கொண்டு ஒரு பாலத்தைக் கட்டிவிடலாம்.

நெருப்பில் வாழும் பூச்சியிடம் பனிக்கட்டியைப் பற்றிச் சொல்லிப் புரியவைத்துவிடலாம். பனிக்கட்டி நெருப்பைப் போல் சூடாக இருக்காது என்று சொல்லிவிட்டாலே நம் பணியில் பாதி முடிந்துவிடும். அதனால்தான் நமது புனித நூல்கள் எல்லாம் எதிர்மறையாகவே பேசுகின்றன. இதுதான் உண்மை என்று அவை சொல்வதில்லை. எது உண்மையில்லை என்று அவை சொல்கின்றன. நெருப்புப் பூச்சிகளுக்குப் புரிய வைப்பதற்காக. இதுதான் பனிக்கட்டி என்று சொல்ல முடியாது. ஆனால் பனிக்கட்டி நெருப்பு இல்லை என்று சொல்லலாமே. அந்த அளவிற்காவது புரிய வைக்கலாமே

ஆனால் அந்த முறையை வைத்துக் கொண்டு கூட தத்துவ அறிஞரிடம் வாழ்க்கை முறையைப் பற்றிப் பேசமுடியாது.

இருப்புநிலையைப் பற்றிப் பேச முடியாது. தத்துவத்துறையில் அவர் இருப்புநிலைவாதியாகக் கூட இருக்கலாம். என்றாலும் அவரிடம் இருப்புநிலையைப் பற்றிப் பேச முடியாது.

ஒரு சொல்லிற்கும் அந்த சொல் சுட்டிக்காட்டும் உண்மைக்கும் இடையே எந்தப் பாலமும் இல்லை. 'ரோஜா' என்ற வார்த்தைக்கும் அந்தப் பெயருடைய மலருக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அப்படி ஒரு சம்பந்தம் இருந்ததென்றால் ரோஜா என்ற பெயரே எல்லா மொழிகளிலும் இருக்க வேண்டும். இந்தியில் அதை குலாப் என்று சொல்ல முடியாது. வார்த்தைக்கும் அது காட்டும் பொருளிற்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

உலகத்தில் முந்நூறு பிரபலமான மொழிகள் இருக்கின்றன. ரோஜா மலரைக் குறிப்பதற்கு குறைந்த பட்சம் முந்நூறு வார்த்தைகள் இருக்கின்றன. வார்த்தைக்கும் மலருக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. நாமாகப் புனைந்து கொண்ட சம்பந்தம்தான்: குளிர்ச்சிக்கும் சூட்டிற்கும் தொடர்பு இருக்கிறது. கிணற்றுக்கும் கடலுக்கும் சம்பந்தம் இருக்கிறது. இந்த சம்பந்தம் புனைவு இல்லை. உண்மை.

ஆனால் ஒரு சொல்லிற்கும் அது சுட்டிக்காட்டும் பொருளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. நீங்களே கூட வார்த்தைகளை உருவாக்கலாம். உங்களுக்கென்று தனியாக ஒரு மொழியை வைத்துக் கொள்ளலாம். 'ஜாரோ' என்றால் அது ரோஜா மலரைக் குறிக்கட்டும் என்று உங்கள் மொழிக்கு விதிகள் அமைத்துக்கொள்ளலாம். ரோஜாவை நீங்கள் ஜாரோ என்று அழைத்தால் அந்த மலர் உங்கள் மேல் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்காது. 'என் வார்த்தைதான் சரி. உன் வார்த்தை தவறு என்று யாராலும் நிரூபிக்க முடியாது. வார்த்தைகளுக்கு இங்கே வேலையே இல்லை. அவற்றுக்கும் அந்தப் பொருளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. தத்துவ அறிஞர் வார்த்தைகளிலேயே வாழ்கிறார்.

இருப்பதிலேயே மிகவும் போலியானவர் தத்துவ அறிஞர்தான். தத்துவ அறிவு அதிகமாக அதிகமாக உங்கள்

வாழும் திறன் குறைகிறது. காதலைப் பற்றி ஆழமாக யோசிப்பீர்கள். ஆனால் காதலிக்க மாட்டீர்கள். தெய்விகத்தைப் பற்றி பேருரையாற்றுவீர்கள். உங்களால் தெய்விகமாக இருக்க முடியாது. நீங்கள் பேசிக் கொண்டேயிருப்பீர்க்ள். உங்கள் சக்தி எல்லாமே வார்த்தைகளில் விரயமாகிவிடும். இருப்புநிலைக்குள் நுழைய ஒரு நொடி கூட உங்களுக்குக் கிடைக்காது.

ஷுவாங் ட்சு சொல்கிறார் ''எல்லா வகையான தத்துவங் களிடமும் ஜாக்ரதையாக இருங்கள். அனைத்திற்கும் அடிப்படை ஒன்றுதான். எல்லாமே வார்த்தைகளைச் சார்ந்தே இருக்கின்றன. மெய்ப்பொருள் வார்த்தையில்லை.

நிஜத்திற்குள் செல்லுங்கள். நீங்கள் நிஜம். இருப்புநிலை நிஜம். உங்களுக்கும் நிஜத்திற்கும் நடுவே தடுப்புச் சுவர் எழுப்பாதீர்கள். அந்தச் சுவரை ஊடுருவிச் செல்வது கடினம். உங்கள் சுவரே உங்களுக்குச் சிறையாகிவிடும். அதற்குள்ளிருந்து உங்களால் வெளியே வர முடியாது.

தத்துவ அறிஞராக இருக்காதீர்கள். இன்று எல்லாருமே அப்படித்தான் இருக்கிறார்கள். தத்துவ அறிஞராக இல்லாத மனிதரைப் பார்ப்பது கடினம். சில தத்துவ அறிஞர்கள் நல்ல வர்கள் சிலர் தீயவர்கள். ஆனால் எல்லாருமே தத்துவவாதிகள் தானே! சிலரின் தர்க்கபலம் அதிகமாக இருக்கும். சிலரிடம் அது குறைவாக இருக்கும். என்றாலும் எல்லாரும் செய்வது தர்க்கம்தானே!

தத்துவத்தை விட்டு வெளியே வந்தால்தான் நிஜத்திற்குள் செல்ல முடியும்.

இன்று இவ்வளவு போதும்.

ஒரு நாள் ஷுவாங் ட்சு பூ ஆற்றில் ஒரு மூங்கில் கழியைக் கொண்டு மீன் பிடித்துக் கொண்டிருந்தார். சூ நாட்டு இளவரசன் இரண்டு அமைச்சர்கள் மூலம் ஒரு ராஜாங்க ஆவணத்தை ஷுவாங் ட்சூவிற்கு அனுப்பியிருந்தான். அதன் சாரம் இதுதான். "நாம் உங்களை இந்த நாட்டின் முதல் அமைச்சராக நியமிக்கிறோம்."

ஷுவாங் ட்சு அந்த மூங்கில் கழியைப் பிடித்துக் கொண்டு பூ ஆற்றைப் பார்த்தபடி பேசினார். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கண்டெடுக்கப்பட்ட ஒரு ஆமையைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அது நம் மதகுருமார்களின் ஆணைகளால் புனிதமானதாகக் கருதப்படுகிறது. நம் இளவரசரால் மதிக்கப்படுகிறது. அந்த ஆமையைப் பட்டுத் துணியில் சுற்றி கோவிலின் புனிதமான சந்நிதியில் பலிபீடத்தில் வைத்திருக்கிறார்கள்.

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று சொல்லுங்கள். தன் உயிரைக் கொடுத்துவிட்டு ஒரு புனிதமான ஓடாக சாம்பிராணிப் புகைக்கு மத்தியில் மூவாயிரம் ஆண்டுகள் இருப்பது சிறந்ததா?

அல்லது ஒரு சாதாரண ஆமையாக ஆற்றிலும் சேற்றிலும் வாலை இழுத்துக் கொண்டு வாழ்வது சிறந்ததா?"

**வந்தவரில் ஒருவர் சொன்னார். ''ஆமையின் கோணத்தில் இருந்து பார்த்தால் ஆற்றிலும் சேற்றிலும் வாலை இழுத்துக் கொண்டு உயிர்வாழ்வதே சிறந்தது.''**

**அப்போது ஷுவாங் ட்சு சொன்னார். ''உங்கள் வீட்டிற்குச் செல்லுங்கள். என்னை இந்தச் சேற்றில் வாலை இழுத்துக்கொண்டு வாழ விடுங்கள்.''**

ஒவ்வொரு குழந்தையும் பிறக்கும்போது தெளிவாகவே இருக்கிறது. ஆனால் ஒவ்வொரு மனிதனும் பைத்தியமாக இருக்கிறான். மொத்த மனித இனத்திற்கும் ஏதோ ஒரு வகையில் கிறுக்குப் பிடித்திருக்கிறது. இந்த கிறுக்குத்தனம் ஒரு நுட்பமான அமைப்பால் வருகிறது. அந்த அமைப்பு இருப்பதே உங்களுக்குத் தெரியாது. இது சிலருக்கு மட்டுமே இருக்கிற மனக் கோளாறு இல்லை. மனிதனுக்கு இயல்பாகவே இந்தக் கோளாறு இருக்கிறது.

இந்தக் கோளாறு உணர்வின்மை நிலையில் இருக்கிறது. என்றாலும் உங்களை அதிகமாகப் பாதிக்கிறது. உங்கள் நடத்தையை உங்கள் உறவுகளைப் பாதிக்கிறது. உங்கள் மொத்த வாழ்க்கையும் இதனால் நிறம் மாறுகிறது. அது உங்கள் வேர்களில் ஆழமாகப் பாய்ந்திருக்கிறது. அது மிகவும் ஆழத்தில் இருப்பதால் உங்கள் வாழ்க்கையின் வேதனை முரண் கவலை மன அழுத்தம் இதெல்லாம் எங்கிருந்து தோன்றுகிறது என்றுகூட உங்களுக்குத் தெரியாது.

சில விஷயங்களைப் புரிந்து கொண்டல் இந்தக் கதை தெளிவாகப் புரியும். இது நம் வாழ்க்கைக்கு உதவும். முதலாவது: பிரிவினையை உண்டாக்குகிறீர்கள் என்று உங்களை நீங்களே வெறுக்கத் தொடங்கினால் அந்தப் பிரிவினையே உங்கள் வேதனையாகிவிடும்.

உங்களை நீங்களே வெறுத்தால் இயற்கையையே வெறுக்கிறீர்கள் என்று பொருள். இயற்கையை எதிர்த்து உங்களால் வெல்ல முடியாது.

இயற்கை என்னும் மாகடலில் நீங்கள் ஒரு நீர்த்துளி மட்டுமே. ஒரு நீர்த்துளி கடலோடு போராட முடியாது.

எல்லா மதங்களும் உங்களுக்குச் சண்டை போடக் கற்றுக் கொடுக்கின்றன. இயற்கையை வெறுத்து செயற்கையை ஊக்குவிக்கின்றன. இயற்கையை வெறுக்கும்போது மதங்கள் என்ன சொல்கின்றன? ''சேச்சே!இது விலங்குகள் செய்வது. விலங்குகளைப் போல் வாழாதீர்கள்.'' பெற்றோர்கள் இதே வார்த்தையைத் திருப்பித் திருப்பிச் சொல்கிறார்கள். ''மிருகமாக இருக்காதே!'' மிருகங்களிடம் என்ன குறை.? அவை அழகானவை. ஆனால் உங்கள் மனதில் விலங்குகள் என்றாலே வெறுத்து ஒதுக்க வேண்டிய ஒன்று என்ற எண்ணம் வந்து விட்டது.. விலங்குகள் கெட்டவை. தீமை பயப்பவை. என்ற எண்ணத்தை உங்களுக்குள் விதைத்துவிட்டார்கள். நீங்கள் விலங்குகளை விட மேலானவர். நீங்கள் விலங்கு இல்லை. நீங்கள் தேவதைகளின் வழி வந்தவர் என்று உங்களை நம்பவைத்துவிட்டார்கள். விலங்குகளை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அவற்றைச் சுரண்ட வேண்டும். அவற்றால் லாபம் சம்பாதிக்க வேண்டும் என்று சொல்லித் தந்துவிட்டார்கள்.

அதனால்தான் விஞ்ஞானி டார்வின் மனிதன் விலங்கி லிருந்து வந்தவன் என்று சொன்னபோது, மனிதனுக்கும் விலங்கு களுக்கும் முன்னோர்கள் ஒன்றுதான் என்று சொன்னபோது எல்லாரும் அவரை எதிர்த்தார்கள். ஒவ்வொரு தேவாலயத் திலிருந்தும், ஒவ்வொரு கோவிலில் இருந்தும் ஒவ்வொரு மசூதியிலிருந்தும் அவரைக் குதறினார்கள்.

''அவர் புரட்சிக்காரர். பாவி. நாத்திகன். தவறான கருத்து களைப் போதிக்கிறார். அவர் சொல்வதை நம்பினால் நம்முடைய நாகரிக வளர்ச்சியும் கலாசாரமும் நாசமாகப் போய்விடும்'' என்றார்கள்.

அவர் சொன்னது சரிதான். விலங்குகள், பறவைகள், மரங் களைப் போல் மனிதனும் இயற்கையிலிருந்து வந்தவன்தான். விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் புத்தி பேதலித்ததாக வரலாறு இல்லை. அந்த விலங்குகளை கூண்டில் அடைத்துவைத்தால்

அப்படியாகலாம். சுதந்திரமாக இருக்கும் விலங்குகள் மன அழுத்தத்தாலோ மனச்சிதைவினாலோ அவதிப்படுவதில்லை.

மிருகக்காட்சிசாலையில் அது நடக்கலாம். அங்கே விலங்குகளுக்கு பைத்தியம் பிடிக்க வாய்ப்பு இருக்கிறது. காரணம் மனிதனோடு இருக்கும் தொடர்பு. மனிதனிடம் இருக்கும் மனநோய் பயங்கரமான தொற்று நோய். சில நேரங்களில் நாய்களுக்கு வெறி பிடிக்கும். அதுகூட காட்டு நாய்களுக்கு ஏற்படுவதில்லை. வீட்டில் வளர்க்கும் நாய்களுக்குத்தான் வெறி பிடிக்கும்.

வளர்ப்புப் பிராணிகளுக்கு வெறிபிடிக்க வாய்ப்புகள் அதிகம். மனிதனோடு வாழ்வது இயற்கைக்கு எதிரான செயல். காட்டில் வாழும் எந்த மிருகமும் தற்கொலை செய்து கொள்வதில்லை. கிறுக்குப் பிடித்து அலைவதில்லை. உணவிற்காகவன்றி எந்த விலங்கும் மற்றொரு விலங்கைக் கொலை செய்வதில்லை. ஆனால் மனிதனுடன் வாழும் மிருகங்கள் காட்டு விலங்குகள் செய்யாததை எல்லாம் செய்கின்றன. ஓரினச் சேர்க்கையில் ஈடுபடுகின்றன. மனநோய்க்கு ஆளாகின்றன. கொலை செய்கின்றன. சில விலங்குகள் தற்கொலைகூட செய்து கொள்வதாக வல்லுனர்கள் சொல்கிறார்கள்.

வீட்டில் வளர்க்க நாய் வாங்கினால் என்ன செய்கிறீர்கள்? உடனே அதற்குக் கற்றுக் கொடுக்க ஆரம்பிக்கிறீர்கள். அதனிடம் ஏதோ குறை இருப்பது போலவும் அதை நீங்கள்தான் நிவர்த்தி செய்ய முடியும் என்பது போலவும் மனிதப் பழக்க வழக்கங்களை அதற்குக் கற்றுத் தருகிறீர்கள். நாய் என்னவோ சரியாகத்தான் இருக்கிறது. அதற்குத் தேவையானவற்றை எல்லாம் இயற்கை அதற்குக் கொடுத்திருக்கிறது. உங்களால் அதற்குத் தரக்கூடியது ஒன்றும் இல்லை.

நீங்கள் என்ன செய்கிறீர்கள்? அதை மனித சமுதாயத்தின் ஒரு அங்கமாக ஆக்க முயற்சி செய்கிறீர்கள். இப்போதுதான் நாய்க்குப் பிரச்சினையே ஆரம்பிக்கிறது. நாய் தன்னையே வெறுக்கத் தொடங்குகிறது. ஏதாவது தவறு செய்துவிட்டது போல்

அதற்குக் குற்ற உணர்வு தோன்றுகிறது. அதனுள் வெறுப்புணர்வு புகுந்துவிட்டது.

ஒரு முறை ஒரு பிச்சைக்காரன் - அவன் ஒரு உதவாக்கரை - ஒரு பணக்காரனிடம் காபி குடிக்கக் காசு கேட்டான்.

''நீதான் ஆள் வாட்ட சாட்டமாக இருக்கிறாயே! ஏதாவது ஒரு வேலை செய்ய வேண்டியதுதானே! இப்படி அடுத்தவர் கையை எதிர்பார்க்காமல் உனக்கு நீயே உதவியாக இருக்கலாம் அல்லவா?''

வெறுப்புடன் சொன்னான் அந்த உதவாக்கரைப் பிச்சைக்காரன்.

''என்னைப் போல் ஒரு உதவாக்கரைக்கு உதவியாக இருக்க நான் விரும்பவில்லை''

நீங்கள் உங்களையே ஏற்க மறுக்கிறீர்கள். முதலில் இருந்தே 'இயற்கை உங்களுக்குக் கொடுத்தது போதாது. நீங்கள் அதைவிட அதிகமாக இருக்க வேண்டும்' என்று உங்களுக்கு உருவேற்றி விட்டார்கள். அந்த வழியில் நீங்கள் முயற்சியும் செய்தீர்கள். அதில் தோல்வியும் அடைந்தீர்கள். அது முடியாத காரியம். இயற்கையைவிட நீங்கள் சிறந்தவராக எப்படி இருக்க முடியும்? அந்த வழியில் அதிகம் முயற்சி செய்தால் இயற்கையைவிடக் குறைவாகத்தான் இருப்பீர்கள். இயற்கையைவிடச் சிறந்து இருக்க முடியாது. ஏனென்றால் இயற்கை பரிபூரணமானது. இயற்கைக்கு வேறு எதுவும் தேவையில்லை. அதை இன்னும் மெருகேற்ற வேண்டாம். அதை இன்னும் நன்றாக ஆக்க முடியாது. அந்த முயற்சி அதிகமானால் நீங்கள் இயற்கையின் பூரணத்துவத்திலிருந்து கீழே விழுந்துவிடுவீர்கள். மனநோய் உள்ள விலங்காக மாறிவிடுவீர்கள். மனிதன் விலங்குகளிலிருந்து வந்தவன். ஆனால் விலங்குகளைவிட உயர்ந்தவன் இல்லை. மன நோய் உள்ள விலங்காக மாறியதுதான் அவன் வளர்ச்சியாக இருந்திருக்கிறது.

உங்களையும் உங்கள் தன்மையையும் ஏற்றுக் கொள்ள உங்களுக்கு யாருமே சொல்லித் தருவதில்லை. நீங்கள் இயற்கை

என்ற முழுமையிலிருந்து தோன்றினீர்கள். அந்த முழுமையை வணங்குங்கள். அதற்கு நன்றியுணர்வுடன் இருங்கள். உங்களுக்குக் கொடுக்கப்பட்டது அனைத்திற்கும் ஒரு அர்த்தம் இருக்கிறது. ஒரு முக்கியத்துவம் இருக்கிறது. அதை வெட்டிவிட முடியாது. அதைக் குறைக்கவோ நீட்டவோ முடியாது. அப்படிச் செய்ய முயற்சி செய்தால் தொல்லைதான். உங்களுக்கு மட்டுமல்ல உங்களோடு வசிப்பவர்களுக்கும்தான்.

மனிதன் ஏன் தன்னைத்தானே கண்டனம் செய்கிறான்? வெறுக்கிறான்? அவனால் ஏன் இயற்கையை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.?

அந்த வெறுப்பிலும் கண்டனத்திலும்தான் அவனுடைய அகந்தை உருவாகிறது. வேறு எந்த வழியிலும் அகந்தை உருவாக முடியாது. அகந்தையை உருவாக்க ஒரு போராட்டம் தேவை. அகந்தை உருவாக வேண்டுமென்றால் ஏதாவது ஒன்றைத் ''தீது'' என்று வெறுத்து ஒதுக்க வேண்டும்; மற்றொன்றை நன்று என்று பாராட்டி ஏற்றுக் கொள்ள வேண்டும். அகந்தை உருவாக வேண்டுமென்றால் முதலில் கடவுளையும் சாத்தானையும் உருவாக்க வேண்டும். அதன் பின் சாத்தானோடு சண்டை போட்டுக் கடவுளை அடையும் வழியைத் தேட வேண்டும். இப்படி ஒரு முரண் இருந்தால்தான் அகந்தை தழைக்க முடியும். முரண் இல்லாத இடத்தில் அகந்தை இருக்காது. கொஞ்சம் சிந்தித்துப் பாருங்களேன்: உங்களுக்குள் போராட்டம் இல்லையென்றால் - நீங்கள் உங்களை முழுமையாக ஏற்றுக் கொண்டால்- ஆழமான நிறைவுடனும் திருப்தியுடனும் மகிழ்ச்சியுடனும், நன்றியுணர்வுடனும், எந்தப் புகாரும் இல்லாமல் நீங்கள் இருந்தால் உங்களுக்கு அகந்தை இருக்க வாய்ப்பேயில்லை. நான் என்றே உங்களால் சொல்ல முடியாது நான் என்று சொல்லும் போது அகந்தை உருவாகிறது.

உங்களிடம் புனிதர்கள் என்று பெயர் வாங்கினவர்களைச் சோதித்துப் பாருங்கள். அவர்களைவிட அதிகம் மன நோய் உள்ளவர்களை எங்குமே பார்க்க முடியாது. இன்னொன்றையும் பாருங்கள். எந்தச் சமூகத்தில் புனிதர்கள் அதிகம் இருக்கிறார்களோ அங்கேதான் பைத்தியக்காரர்களும் அதிகம் இருப்பார்கள்.

ஆனால் பாருங்கள் கீழை நாடுகளில் பைத்தியக்காரர்கள் குறைவாகவே இருக்கிறார்கள். மேலைநாடுகளில் பைத்தியங்கள் அதிகம். ஒரு சின்னக் கணக்குப் போட்டுப் பார்த்தால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். கிழக்கே பல பைத்தியங்களைப் புனிதர்களாக வழிபடுகிறார்கள். அதனால் அவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளில் இருப்பதில்லை.

மேலை நாடுகளிலோ பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளில் இருக்க வேண்டியவர்கள் மனவியல் மருத்துவர்களின் அறைகளில் உள்ள சாய்வு நாற்காலிகளில் காலத்தைப் போக்குகிறார்கள். அவர்களைப் பைத்தியங்களாகக் கணக்கெடுப்பதில்லை. ஆனால் அவர்கள் பைத்தியங்கள்தான். காரணம் அகந்தையே ஒரு பைத்தியம்தான்.

உங்கள் புனிதர்களைப் பாருங்கள். அவர்களுக்கு நுட்பமான அகந்தை இருக்கிறது. அது அலங்கரிக்கப்பட்டு, மெருகேற்றப் பட்டு அழகூட்டப்பட்டு இருக்கிறது. ஆனால் அது இருக்கிறது என்பதை யாராலும் மறுக்க முடியாது.

அடுத்தவர்களுடன் நீங்கள் சண்டை போட்டால் உங்கள் அகந்தை நுட்பமாக இருக்க முடியாது. ஏனென்றால் நீங்கள் அந்தச் சண்டையில் தோற்க வாய்ப்பிருக்கிறது. அப்படியே நீங்கள் ஜெயித்தாலும் இன்னும் பலர் இருக்கிறார்களே! எப்போதாவது தோற்கும் வாய்ப்பு இருக்கத்தான் செய்கிறது. என்றாவது ஒருநாள் உங்களிடம் தோற்றவர் பலம் பெற்று வந்து உங்களைத் தோற்கடிக்கலாம். உங்கள் வெற்றி நிரந்தரம் இல்லை. உங்கள் பகைவர் இன்னும் இருக்கிறாரே! அதுவும் ஒரு பகைவர் இல்லை; ஓராயிரம் பகைவர்கள். யாருடன் எல்லாம் நீங்கள் போட்டி போடுகிறீர்களோ அவர்கள் எல்லாருமே உங்கள் பகைவர்கள்தான். நீங்கள் எப்போதும் நிச்சயமற்ற தன்மையில் தத்தளித்துக் கொண்டிருப்பீர்கள். உங்கள் அகந்தை ஒரு வலுவான இடத்தில் வாழ முடியாது. மற்றவர்களுடன் சண்டை போடுவது மண்வீட்டில் வாழ்வது போல். நீங்கள் உங்களுடனேயே சண்டை போடுவது திடமான அஸ்திவாரத்தில் அமைந்த கல் வீட்டில் வாழ்வது போல். இப்போது உங்கள்

வெற்றி நிச்சயம். இப்போது உங்கள் அகந்தை இன்னும் நுட்பமாக இருக்கும்.

உங்களுக்கு அந்த ''நான்'' உணர்வு வேண்டுமென்றால் நீங்கள் இயற்கையை அழிக்க வேண்டும். ஏனென்றால் இயற்கையில் அகந்தைக்கு இடமில்லை. மரங்களுக்கும் விலங்குகளுக்கும் நான் என்ற உணர்வு கிடையாது. அவை உணர்வின்மை நிலையில் வாழ்கின்றன. பசிக்கும் போது உணவு தேடுகின்றன. வயிறு நிறைந்தவுடன் தூங்கச் செல்கின்றன. உந்துதல் ஏற்படும் போது காதல் செய்கின்றன. உண்கின்றன. உறங்குகின்றன. அவை இருக்கின்றன. ''நாங்கள் இருக்கிறோம்'' என்று சொல்வதில்லை. வாழ்க்கை என்ற பரந்த சமுத்திரத்தில் அவை எல்லாம் அலைகளாகச் செயல்படுகின்றன. அவை எந்தச் சுவடுகளையும் விட்டுச் செல்வதில்லை. அலைகளின் சுவடுகளை கடலில் பார்க்கமுடியுமா என்ன? அவை வரலாறுகள் படைப்பதில்லை சுயசரிதைகள் எழுதுவதில்லை.

ஒரு சிங்கமானது கடலில் தோன்றும் ஒரு பெரிய அலை போல் வருகிறது. அதன் காலம் முடிந்தபின் வந்த சுவடு தெரியாமல் மறைந்து போய்விடுகிறது. அது வாழ்ந்ததற்கான எந்த அடையாளத்தையும் விட்டுச் செல்வதில்லை. அகந்தைதான் காலடிச் சுவடுகளை விட்டுச்செல்ல ஆசைப்படும். .

அகந்தை சாக விரும்புவதில்லை. செத்தபின்பும் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் வரலாறுகளும் சுயசரிதைகளும் எழுதப்படுகின்றன. அப்போதுதான் முட்டாள்தனமும் கிறுக்குத்தனமும் பிறக்கிறது. அகந்தையை உருவாக்க மனிதன் முரண்பாடுகளை உருவாக்குகிறான். இந்த முரண்களுக்கு இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. முதல் அம்சம் வெளியே இருக்கும் இயற்கையோடு தொடர்புடையது. இதனால்தான் விஞ்ஞானம் உருவாகுகிறது. நாம் வெளியே இருக்கும் இயற்கையோடு போடும் சண்டைதான் விஞ்ஞானம். இதனால்தான் பெட்ரண்ட் ரஸல் போன்ற ஒரு மாமேதை கூட இயற்கையை வெல்ல வேண்டும் என்று வாய்க்கு வாய் சொல்கிறார். இயற்கையை எப்படி வெல்ல முடியும்? கடலிலே

தோன்றும் ஒரு அலை கடலையே வெல்லமுடியுமா? அது அப்பட்டமான முட்டாள்தனம். ஒரு பகுதி எப்படி முழுமையை வெல்ல முடியும்? அப்படி வெல்ல நினைத்தால் அந்தப் பகுதிக்குப் பைத்தியம்தான் பிடிக்கும். அதனால் முழுமைக்கு இழப்பில்லை. ஆனால் பகுதி அனைத்தையும் இழந்துவிடும். ஏனென்றால் பகுதி முழுமைக்குள்தானே இயங்குகிறது? அது எப்படி முழுமைக்கு எதிராக இயங்க முடியும்? விஞ்ஞானம் நம்மை அழிவுப் பாதையில் வேகமாக அழைத்துச் செல்லக் காரணம் இயற்கையை வெல்ல வேண்டும் என்ற செயற்கை வெறிதான்.

அந்த முரண்களின் இரண்டாவது அம்சம் தான் மதங்களாகத் தோன்றுகிறது. ஒரு அம்சம் வெளியில் உள்ள இயற்கையோடு போராடுகிறது. அதனால் விஞ்ஞானம் பிறக்கிறது. அது அழிவுக்கு வழி வகுக்கிறது. அதன் உச்சகட்ட இலக்கு ஹிரோஷி மாவைத் தவிர வேறில்லை. அந்த இலக்கை விஞ்ஞானம் விரைவிலேயே எட்டிப்பிடித்துவிடும். மொத்த பூமியும் ஹிரோஷிமாவாகிவிடும். போர் அழிவுக்கு முதற்படி. முரண்கள் மரணத்தில்தான் முடிகின்றன. அந்த அழிவுப்பாதையில் நம்மைக் கையைப் பிடித்து அழைத்துப் போய்க்கொண்டிருக்கிறது விஞ்ஞானம்.

இது போக உள்ளார்ந்த முரண் ஒன்று இருக்கிறது. நாமே நம்முடன் சண்டை போட்டுக் கொள்வது. அதற்குப் பெயர் மதம்.. ''உன்னையே நீ வெல்ல வேண்டும்'' என்று மதகுருமார்கள் அடிக்கடி சொல்கிறார்கள். இந்தப் போராட்டமும் அழிவிற்காகத் தான். விஞ்ஞானம் இயற்கையை வெளியில் இருந்து அழிக்கிறது. மதம் உள்ளேயிருந்து அழிக்கிறது.

ஷுவாங் ட்சு இந்த இரண்டு முரண்களையும் எதிர்க்கிறார். இந்த விஞ்ஞானமும் மதமும் எதிரிகள் இல்லை. கூட்டாளிகள். அவற்றுக்கு இடையே ஆழமான தொடர்பு இருக்கிறது.

உங்களுக்கு ஷுவாங் ட்சுவைப் புரிந்து கொள்ள வேண்டுமா? லாவோ ட்சுவைப் புரிந்து கொள்ள வேண்டுமா? தாவோவைப் புரிந்து கொள்ள வேண்டுமா? இவர்கள்

எந்தவிதமான முரணையும் சண்டையையும் விரும்பமாட்டார்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

அவர்கள் என்ன சொல்கிறார்கள்? ''சண்டை போடாதீர்கள். நடப்பதை நடக்க விடுங்கள். இயற்கை உங்களை ஊடுருவிச் செல்லட்டும். நீங்களும் இயற்கையை ஊடுருவிச் செல்லலாம்.

''சாதாரணமாக இருங்கள் விசேஷமாக இருக்க வேண்டும் என்று விரும்பாதீர்கள். முகம் தெரியாதவராகவே இருங்கள் பிரபலமாகவேண்டும் என்று ஆசைப்படாதீர்கள். அப்போதுதான் வாழ்க்கையை நன்றாக அனுபவிக்க உங்களிடம் போதிய சக்தி இருக்கும்.''

உங்களிடம் இருக்கும் மகத்தான சக்தி எல்லாம் வெட்டியாகப் போரிடுவதில் விரயமாகிவிடுகிறது. உங்களையே இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு ஒரு பகுதியை மற்றொரு பகுதியுடன் மோதவிடுகிறீர்கள்.

இரண்டு பகுதிகளில் இருந்தும் சண்டை போடுவது நீங்கள்தான்.

சண்டையில் விரயமாகும் அதே சக்தியை இசைவுடன் பயன்படுத்தினால் பரவசநிலையை அடைவீர்கள். வருவதை எதிர்கொள்வதுதான் தாவோவின் அஸ்திவாரம். 'இதைச் செய்ய வேண்டும் என்று தாவோ எதையுமே வற்புறுத்தவில்லை. வேறொரு இடத்தில் ஷுவாங் ட்சு சொல்கிறார் ''நீங்கள் இதைச் செய்ய வேண்டும், இப்படி இருக்கக் கூடாது என்று யாரிடமும் சொல்லாதீர்கள்.'' இவை எல்லாம் ஆபத்தானவை. ஆன்மாவிற்கு விஷம் போன்றவை என்கிறார்.

நான் பின்பற்ற வேண்டியது நம் இயற்கையைத்தான். அதனை முழுதாக நம்பி அது எங்கே நம்மை நடத்திச் செல்கிறதோ அங்கே சென்றால் போதும்.

ஆனால் நமக்கோ இயற்கையைப் பின் தொடர்ந்து செல்லப் பயமாக இருக்கிறது. நமக்கு ஒழுக்கத்தைப் போதிக்கிறேன் பேர்வழி என்று இயற்கையையே நமக்கு வில்லனாக்கி

விட்டார்கள். அவர்கள் நமக்குப் பல விதிகளைக் கற்றுத் தந்திருக்கிறார்கள். அப்படி இருக்க வேண்டும் இப்படி இருக்க வேண்டும் என்று சதா போதித்து நாம் எப்படி இருக்கிறோம் என்பதைக் காணவிடாமல் செய்துவிட்டார்கள். எந்தச் சூழ்நிலையிலும் நாம் செய்ய வேண்டியது என்ன என்பதை மட்டுமே பார்க்கிறோம். ஒரு ரோஜாவைப் பார்த்தால் கூட அது எப்படி இருக்கவேண்டும் என்றுதான் யோசிக்கிறோம். அது இன்னும் கொஞ்சம் பெரிதாக இருந்தால் நல்லது. இன்னும் கொஞ்சம் சிவப்பாக இருந்தால் இன்னும் அழகாக இருக்கும் என்று யோசிக்கிறோம். ஊசி மூலம் அந்த ரோஜாவிற்கும் ரசாயனப் பொருள்களைச் செலுத்தினால் அது இன்னும் பெரிதாகிவிடும். அதன் மேல் லேசாக வர்ணம் பூசினால் இன்னும் சிகப்பாகிவிடும். ஆனால் நம்மால் அந்த ரோஜாவை உள்ளபடியே ஏற்க முடியவில்லை. சிறியதோ பெரிதோ, இளம் சிகப்போ, கடும் சிவப்போ அந்த ரோஜா மலர் அதன் போக்கில் அங்கே இருக்கிறது. அதை அப்படியே பார்த்து அனுபவித்தால் என்னவாம்? அதை ஊசி போட்டுப் பெரிதாக்கி, இல்லை வர்ணம் அடித்து இன்னும் சிவப்பாக்கினால்தான் என்னால் அதன் அழகை அனுபவிக்க முடியும் என்று சொன்னால் உங்களுக்குள் அடிப்படையான கோளாறு ஏதோ இருக்கிறது என்றுதான் பொருள்.

அதன் அழகை ரசிப்பதைத் தள்ளிப் போடுகிறீர்கள். இந்தத் தள்ளிப் போடுதலே பின்னால் பழக்கமாகிவிடுகிறது. அந்த ரோஜாவைப் பெரிதாக்கியவுடன் உங்கள் மனம் ''கொஞ்சம் முயற்சி செய்தால் இன்னும் கூடப் பெரிதாக்கலாமே'' என்று சொல்லும். மரணம் வந்து உங்கள் வீட்டுக் கதவைத் தட்டும் வரை தள்ளிப் போட்டுக் கொண்டேயிருப்பீர்கள். அப்போதுதான் உங்களுக்கு ஞானம் வரும். ''ஐயையோ! எல்லாம் அப்படி இருக்க வேண்டும் இப்படி இருக்க வேண்டும் என்று வாழ்நாளையே வீணடித்துவிட்டேனே! கண் முன்னால் கிடைத்த இயற்கை அழகை அனுபவிக்கத் தவறிவிட்டேனே! எது எப்படி இருக்கிறதோ அதுவே அழகு என்பதை உணராமல் வாழ்க்கையை வீணடித்துவிட்டேனே.

எது எப்படி இருக்கிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்ளும் மதம் தான் ஷுவாங் ட்சுவின் மதம்.

''இருக்கிறது'' ''இருக்க வேண்டும்'' என்ற இந்த இரண்டிற்கும் இடையேயான முரண் அடிப்படையானது. ''இருக்க வேண்டும்'' என்பதை விட்டுவிட்டால் உங்களுக்கு இப்போது கிடைக்கும் மதிப்பு கிடைக்காது. அந்த ''வேண்டும்'' என்பதை வைத்துத்தான் மக்கள் உங்களை மதிக்கிறார்கள்.

''இந்த மனிதனைப் பாருங்கள் எவ்வளவு நல்லவனாக இருக்கிறான்! எப்போது பார்த்தாலும் சிரித்துக் கொண்டு இருக்கிறானே!'' என்று சொல்வார்கள். பாவம் அவர்கள் அந்தப் புன்னகை போலி என்று அவர்களுக்குத் தெரியாது. கோபமே வராதவன் புன்னகை உண்மையானதாக இருக்காது என்று அவர்களுக்குத் தெரியாது. பிரச்சினையே இதுதான். அவன் கோபத்திலும் இயற்கையாக இருக்க முடியாது. புன்னகை சிந்தும்போதும் இயற்கையாக இருக்க முடியாது.

குழந்தைகள் இயற்கையாக இருக்கிறார்கள். அவர்கள் கோபப்படும்போது நிஜமாகவே கோபப்படுகிறார்கள். அவர்களைப் பாருங்கள். அவர்கள் கோபம் கூட அழகாகத்தான் இருக்கிறது.. காட்டு விலங்குகளைப் போல் குதித்துக் கொண்டும் கத்திக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்கள் முகம் எப்படி கோபத்தால் சிவக்கிறது என்று பாருங்கள். அவர்கள் சிங்கங்களைப் போன்றவர்கள். மொத்த உலகத்தையும் அரை நொடியில் அழித்துவிடுவார்கள். அவர்கள் கோபம் உண்மையானது. அதனாலேயே அது அழகானது.

ஒரு குழந்தை கோபப்படும் போது அதனைப் பாருங்கள். அங்கே ஒரு மலர்ச்சியைக் காண்பீர்கள். அங்கே சக்தி மலர்கிறது. அடுத்த நிமிடமே அந்தக் குழந்தை வழக்கம் போல் மகிழ்ச்சியாகச் சிரிக்கிறது. அந்தப் புன்னகையும் நிஜம்தான். அதனால் தான் அது அழகாக இருக்கிறது. இயல்பாக இருப்பது எல்லாமே அழகாக இருக்கிறது.

அந்தக் குழந்தையிடம் போய்,. ''நீ கோபப்படக் கூடாது. உன் கோபத்தை அடக்கிக் கொள். இது நல்லதல்ல.'' என்று சொன்னால்

என்ன ஆகும்? கோபப்படக்கூடாது என்று சொல்வது யார்? அதன் இயற்கையைத் தாண்டிச் செல்ல முடியுமா? இது நல்லதல்ல என்று நன்மை - தீமையை நிர்ணயிக்க நீங்கள் யார்?

உங்களால் அதிகப்பட்சமாக என்ன செய்ய முடியும்? குழந்தையைக் கோபப்படக் கூடாது என்று வற்புறுத்திப் பணிய வைக்கலாம். குழந்தை உங்களைச் சார்ந்தே இருக்கிறது. உங்கள் பேச்சை அது கேட்டேயாக வேண்டும். இல்லையென்றால் நீங்கள் அதன்மேல் அன்பு காட்டமாட்டீர்கள். குழந்தைக்கு உங்கள் அன்பு மிகவும் தேவைப்படுகிறது. அதைப் பெற குழந்தை என்ன வேண்டுமானாலும் செய்யும். இப்போது நீங்கள் சொன்னதைக் கேட்டு குழந்தை தன் கோபத்தை அடக்கிக் கொள்கிறது.

அடக்கிவைக்கப்பட்ட கோபம் குழந்தையின் ரத்தத்திற்குள் நுழைகிறது. கோபமும் ஒரு ரசாயனப்பொருள்தான். இந்தக் கோபத்தால் மொத்த உடம்பும் நச்சுத்தன்மையைப் பெறுகிறது.

குழந்தை கோபத்தைத் தன்பாணியில் இயற்கையாக வெளிப் படுத்தியபோது அது ஒரு அழகான நிகழ்வு. அடக்கி வைக்கப் பட்ட கோபம் ஒரு மோசமான வியாதி. இப்போது அந்தக் குழந்தை சிரிக்கும்போது அதில் கூட அடக்கிவைக்கப்பட்ட கோபம் இருக்கும். கோபம் என்னும் விஷம் இருக்கும். அந்த விஷம் இப்போது குழந்தையின் ரத்தத்தில் கலந்துவிட்டது..

அடக்கி வைக்கப்பட்ட கோபம் உங்களை முழுதாகப் புன்னகை செய்யவிடாமல் தடுக்கிறது. புன்னகை என்பது எல்லாவற்றையும் விட்டுவிட்டு நிம்மதியாகச் சிரிப்பது. உள்ளே செயல்படுத்த முடியாத கோபம் இருக்கும் போது உங்களுக்கு அனைத்தையும் விட்டுவிட்டுச் சிரிப்பது கடினமாக இருக்கிறது. சிரிக்கும்போது கண்ணாடிக்கு முன்னால் நின்று உங்களைப் பாருங்கள். அந்தப் புன்னகையின் பின்னால் ஒரு கோபம், ஒரு வருத்தம் ஏன் கொஞ்சம் காமம் கூட இருக்கும். உங்கள் புன்னகை தூய்மையானது அல்ல. அப்படி இருக்கவும் முடியாது. அதன் மூலத்தில் விஷம் பாய்ந்துவிட்டதே! எதிலுமே தூய்மை இல்லை. இப்போது கலப்படம் என்பது சந்தைச் சரக்கில் மட்டும் இல்லை. உங்களிடமும் இருக்கிறது.

இப்போது உங்களால் புன்னகை புரிய முடியாது. சிரிக்க முடியவில்லை என்றால் எப்படி முத்தம் கொடுப்பீர்கள்? உங்கள் முத்தமும் ஒருவகை விஷம்தான். எப்படிக் காதலிப்பீர்கள்? அன்பு காட்டுவீர்கள்? வாழ்க்கையை எப்படிக் கொண்டாடு வீர்கள்? உங்களால் எதையுமே முழுமையாக, தூய்மையாகச் செய்ய முடியாது. ''இப்படிச் செய்ய வேண்டும். அப்படி இருக்க வேண்டும்'' என்பதிலேயே உங்கள் காலம் கழிந்துவிடும்.

உங்களுக்கு வாழவே பயமாக இருக்கிறது. அதனால் அதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போகிறீர்கள். அந்தத் தள்ளிப்போடுதலினால்தான் சொர்க்கத்தையும் நரகத்தையும் உருவாக்குகிறீர்கள். 'இப்போது எதுவும் வேண்டாம். விதிகளின் படி ஒழுங்காக இருந்துவிடுவோம். அனுபவிக்க வேண்டிய வற்றை எல்லாம் இறந்து சொர்க்கத்துக்குப் போய் அனுபவிப் போம்' என்பது உங்கள் மனநிலை. துய்க்க வேண்டிய இன்பத்தின் உச்சகட்ட தள்ளிப்போடுதல்தான் சொர்க்கம்.

சொர்க்கத்தில் என்றும் நிலைத்திருக்கும் அழகு இருக்கும் என்று சொல்கிறீர்கள். அந்த நிலைத்திருக்கும் அழகு இன்று இங்கே இருக்கிறது. சொர்க்கத்தில் அன்பு தூய்மையாகவும் வலிமையாகவும் இருக்கும் என்று சொல்கிறீர்கள். அன்பு இங்கேயே தூய்மையாகவும் வலிமையாகவும்தான் இருக்கிறது. சொர்க்கம் போகும் வரை அன்பிற்காகக் காத்திருக்க வேண்டாம். எங்கெல்லாம் அன்பு இருக்கிறதோ அது தூய்மையாகவும் சாசுவதமாகவும் இருக்கிறது. அன்பு இருக்கும் இடத்தில் காலம் இருக்காது. அதனால் அன்பிற்கு அழிவு கிடையாது.

நிலையாய் இருப்பது என்றால் நிரந்தரமாக இருப்பது என்று பொருள் கொள்ளாதீர்கள். நிலையாய் இருப்பது என்றால் அந்த இடத்தில் காலம் இல்லை என்று பொருள். ஒரு நொடிப் பொழுதிற்கு அன்பு இருந்தாலும் அந்த நொடி நிலைபெற்று விடுகிறது.. அந்த நொடியில் அவ்வளவு ஆழம் இருக்கிறது. அதில் காலம் இல்லை. அந்த நொடியில் வருங்காலம் இல்லை. இறந்தகாலம் இல்லை. அந்த நொடியில் நீங்கள் இருப்புநிலை முழுவதும் பரவி நிற்கிறீர்கள். எல்லா உயிரினங்களிலும்

பரிமளிக்கிறீர்கள். இருப்புநிலை மொத்தமும் உங்களுக்குச் சொந்தம். நீங்கள் மொத்தமும் இருப்பு நிலைக்குச் சொந்தம். அந்த ஒரு கணம் சாசுவதமானது. அன்பு நிறைந்திருக்கும் கணங்கள் எல்லாம் சாசுவதமானவை. வழிபாட்டுணர்வுக்கு வழி வகுப்பவை.

உங்கள் புன்னகை போலியானால் உங்கள் முத்தமும் போலியே. உங்கள் காதல் உண்மையாக இருக்காது. உங்கள் வழிபாடு வெறும் வார்த்தைக்கோலமாகவே இருக்கும்.

உங்களிடம் உண்மை இல்லாவிட்டால், உங்களிடம் இறைத்தன்மை இல்லாவிட்டால் வேறு எங்கு அதனைக் காண்பீர்கள்? நீங்கள் பொய்யாக வாழ்ந்து கொண்டு உண்மையை எப்படித் தேட முடியும்? பொய்யில் வாழ்பவன் உண்மையை எப்படிக் காண முடியும்? அப்படி நடக்கவே நடக்காது.

உண்மை உங்கள் வீட்டுக் கதவைத் தட்டும். நீங்கள் அதைத் தேடி எங்கும் போக வேண்டாம். உண்மையாக வாழ்ந்தால் போதும். உண்மையாக இருங்கள். இயல்பாக இருங்கள்.

இயற்கைதான் உண்மை. அதைத்தவிர வேறு எதுவும் உண்மையில்லை. இதுதான் ஷுவாங் ட்சு நமக்கு விடுக்கும் மகத்தான செய்தி.

இப்போது இந்த அழகான கதைக்குள் நுழைவோம்.

***ஒரு நாள் ஷுவாங் ட்சு பூ ஆற்றில் ஒரு மூங்கில் கழியைக் கொண்டு மீன் பிடித்துக் கொண்டிருந்தார்.***

ஒரு புத்தரோ மகாவீரரோ பூ நதியில் மீன்பிடிப்பதைக் கற்பனை செய்து பார்க்க முடியுமா?

***ஒரு நாள் ஷுவாங் ட்சு பூ ஆற்றில் ஒரு மூங்கில் கழியைக் கொண்டு மீன் பிடித்துக் கொண்டிருந்தார்.***

இதற்கு என்ன பொருள்? ஷுவாங் ட்சு ஒரு சாதாரண மனிதர். அவர் தன்னைப் பெரிய மனிதர் என்று எப்போதும்

சொல்லிக்கொண்டதில்லை. சாதாரண வாழ்க்கையை விரும்பி ஏற்றுக் கொண்டவர். கொள்கையின் படி அவர் வாழவில்லை. உணர்வின்படி வாழ்ந்தவர். தன் அகந்தையை அவர் இயற்கையின் மேல் திணிக்கவில்லை. மாறாக இயற்கையின் நீரோட்டத்தில் இரண்டறக் கலந்துவிட்டார். அவர் ஒரு சாமானியர்.

''பூ ஆற்றில் மீன் பிடித்துக் கொண்டிருந்தார்'' என்பதன் பொருள் இதுதான். அதை ஒரு சாமானியன் தான் செய்ய முடியும். பெரிய மனிதர்கள் செய்ய மாட்டார்கள். அவர்களால் எப்படிச் செய்ய முடியும்? 'இதைத்தான் செய்ய வேண்டும். இதைச் செய்யக்கூடாது' என்ற விதிகளின்படி வாழ்கிறவர்கள் பெரிய மனிதர்கள். அவர்கள் கொள்கைககளின் படி, ஒழுக்க விதிகளின் படி வாழ்கிறவர்கள். ஆனால் இங்கு ஷுவாங் ட்சு மீன் பிடித்துக் கொண்டிருக்கிறார். ஒரு ஞானிக்கும் மீன் பிடித்தலுக்கும் என்ன தொடர்பு? அவர் மீன்களைக் கொல்வதை நம்மால் சிந்தித்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

ஷுவாங் ட்சு இயற்கையை நம்பினார். எது இயற்கையானதோ அது நன்றாகவே இருக்கும் என்று அடிக்கடி சொல்வார். இந்த விஷயத்தில் அவர் ஒரு விலங்கைப் போலவே இருந்தார். ஒழுக்கம் என்று செயற்கையாக ஒன்றை உருவாக்கிக்கொண்டு தன்னை மேலானவனாகக் காட்டிக்கொள்வதில் அவருக்கு விருப்பம் இல்லை.

சாதாரணமாக வாழுங்கள். அந்தச் சாதாரண வாழ்க்கையை அனுபவியுங்கள் என்றுதான் இந்தக் கதை சொல்கிறது. அப்போதுதான் நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாக இயற்கையில் இணைய முடியும். இல்லாவிட்டால் நீங்கள் செயற்கையாக வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். மீன்பிடித்தல் இங்கு ஒரு குறியீடுதான். அவர் மீன்பிடித்தாரா இல்லையா என்பதல்ல கேள்வி. அவர் ஒரு சாதாரண மனிதர். தேவைப்பட்டால் மீன்பிடிக்கவும் செய்வார்; ஒரு நீண்ட மூங்கில் கழியுடன் ஆற்றங்கரையில் அமர்ந்திருக்கவும் செய்வார் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

அதனால்தான் உங்களால் ஷுவாங் ட்சுவிற்கு சிலை யெழுப்ப முடியாது. அது கடினமான காரியம். புத்தர் பூரண மானவர். அவருக்குக் கோடிக்கணக்கில் சிலைகள் இருக்கின்றன. சிலை வடிப்பதற்காகத்தான் அவர் பிறந்தாரோ என்று கூட எண்ணத் தோன்றுகிறது. அவரைவிடச் சிலை செய்ய உகந்தவர் களைப் பார்ப்பது அரிது. சிலை செய்ய மிகச் சிறந்த மாதிரிப்படிவம் புத்தர்தான். அதுவும் போதி மரத்தடியில் ஒன்றும் செய்யாமல் கண்களை மூடிக்கொண்டு அமர்ந்திருக்கும் நிலை சிலை செய்ய மிகவும் ஏற்றது. ஒரு மனிதன் எப்படியெல்லாம் இருக்க வேண்டுமோ அப்படி எல்லாம் இருந்தவர் புத்தர். - அகிம்சா மூர்த்தி, அன்பு வழி நடந்த அண்ணல்,, உண்மையின் உரு, தியானத்தின் சின்னம். அவர் மனிதனே அல்ல. பளிங்கு உருவைப் போன்றவர்.

ஆனால் ஷுவாங் ட்சுவை வைத்துக் கொண்டு சிலை செய்ய முடியாது. எல்லாத் தப்பான இடங்களிலும் அவரைப் பார்க்கலாம். அவர் ஒரு சாதாரண மனிதர். அதுதான் அவருடைய அழகு. அதுதான் இந்தக் கதை சொல்லும் செய்தி. சாதாரணமாக இருங்கள். ஒரு மூங்கில் கழியை வைத்துக் கொண்டு மீன்பிடித்துக் கொண்டிருங்கள். இதுதான் மோனநிலை என்பதுதான் ஷுவாங் ட்சு சொல்கிறார்.

புத்தர் ஞானம் பெற்றிருக்கலாம். அவருடைய இயல்புக்கு அது எளிதாக இருந்தது. மரத்தின் கீழ் அமர்ந்தபடியே அவரால் ஞானம் பெற முடிந்தது. ஆனால் நீங்கள் அவர் வழியைப் பின்பற்றினால் கல்லாக மாறிவிடுவீர்கள். உங்களுக்குச் சிறந்த முன்மாதிரி ஷுவாங் ட்சுதான்.

சாதாரணமாக இருங்கள். புத்தரின் சாதாரணத்தன்மை உட்கார்வதில் இருந்தது. அதனால்தான் அதே நிலையில் அவர் ஞானம் பெற்றார். எனக்கு உங்களை நன்றாகத் தெரியும், ஒரு சராசரி மனிதனின் தன்மைகளும் இயல்புகளும் நான் அறிவேன். அதனால்தான் ஷுவாங் ட்சு உங்களுக்கு ஏற்றவர் என்று சொன்னேன். புத்தரைவிட ஷுவாங் ட்சு சிறந்தவர் என்று நான் சொல்லவில்லை. அவர் இன்னும் சாதாரணமாக இருப்பதால்

நமக்கு அருகில் இருக்கிறார்,, பிரச்சினை இல்லாமல் அவரை அணுகி அவர் வழியில் செல்லலாம் என்று சொன்னேன்.

புத்தரைப் பின் தொடர்ந்து சென்றால் உங்களுக்குப் பைத்தியம் பிடிக்க வாய்ப்பு இருக்கிறது. ஷுவாங் ட்சுவைப் பின் தொடர்ந்தால் நீங்கள் இன்னும் இயல்பாக இருப்பீர்கள்.

***ஒரு நாள் ஷுவாங் ட்சு பூ ஆற்றில் ஒரு மூங்கில் கழியைக் கொண்டு மீன் பிடித்துக் கொண்டிருந்தார். சூ நாட்டு இளவரசன் இரண்டு அமைச்சர்கள் மூலம் ஒரு ராஜாங்க ஆவணத்தை ஷுவாங் ட்சூவிற்கு அனுப்பியிருந்தான். அதன் சாரம் இதுதான். ''நாம் உங்களை இந்த நாட்டின் முதல் அமைச்சராக நியமிக்கிறோம்.''***

அரசியல் என்பது நம் அகந்தை சம்பந்தப்பட்ட சமாசாரம். அது அகந்தையின் விளையாட்டு. அகந்தை நமக்கு வைக்கும் பொறி. ஷுவாங் ட்சு ஒரு ஞானி என்று நாட்டிற்கே தெரியும். அவருக்கும் விளம்பரம் தேவைப்படவில்லை. அந்த ஒளிவீசும் ஞானத்தை உங்களால் மறைத்துவைக்க முடியாது. ஷுவாங் ட்சுவால் கூட மறைக்க முடியவில்லை. அவ்வளவு ஏன் உங்களால் காதலைக்கூட மறைத்துவைக்க முடியாது. ஒரு இளைஞனோ இளைஞியோ காதலில் விழுந்துவிட்டால் அவர்களுடைய நடையை வைத்தே காதலைக் கண்டுபிடித்து விடலாம். ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு அசைவும் அந்தக் காதலால் ஒளிரும். அதற்கு ஒரு புதுத்தன்மை வந்துவிடும். அதனால்தான் காதலை மறைக்கமுடியாது என்று சொன்னேன்.

சாதாரண மனிதக் காதலையே மறைக்க முடியாதென்றால் மொத்த இருப்புநிலையின் மீது கொண்டிருக்கும் தணியாக் காதலை எப்படி மறைப்பதாம்? வழிபாட்டுணர்வு வந்துவிட்டால் அதை எப்படி மறைப்பதாம்? எதையும் வெளிக்காட்டிக் கொள்ளாதீர்கள் என்று வாய்க்கு வாய் சொன்ன ஷுவாங் ட்சுவால் கூட அதனை மறைக்க முடியவில்லை. அது முடியாத காரியம். மக்கள் கண்டுபிடித்துவிடுவார்கள்.

ஒளிய்ய எப்படி மறைக்க முடியும்? உங்கள் வீட்டில் விளக் கெறிந்தால் பக்கத்துவீட்டுக்காரர்கள் எப்படியும் கண்டுபிடித்து விடுவார்கள். காரணம் ஜன்னல்கள் வழியாக ஒளி வெளியே தெரியும். உங்களால் ஒளியை மறைக்க முடியாது. ஆனால் அதை மறைக்க முயற்சி செய்வது நல்லது.

உள்ளொளி கொழுந்து விட்டு எரியும் போது அதை மறைக்க வேண்டும் என்று ஏன் ஷுவாங் ட்சு சொல்கிறார்? பொதுவாக அந்த சமயத்தில் உங்களுக்கு அதை விளம்பரப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று தோன்றும்.

சிலருக்கு இன்னும் உள்ளொளி தோன்றவில்லை. அவர்கள் வீடு இன்னும் இருளில் மூழ்கிக்கிடக்கிறது. ஞானம் என்னும் நெருப்பு தோன்றவில்லை. என்றாலும் அவர்கள் ஞானம் பெற்றுவிட்டதாக விளம்பரப்படுத்த நினைக்கிறார்கள். அகந்தை எப்போதுமே ஞானம் பெற்றுவிட்டதாகப் பாசாங்கு செய்யும்.

அதனால்தான் ஷுவாங் ட்சு சொல்கிறார். ''உங்களைப் பற்றி எதையும் சொல்லாதீர்கள். மறைவாகவே இருங்கள்.''

கண் இருப்பவர்கள் உங்களைத் தேடி வருவார்கள். உங்களைப் பின் தொடர்வார்கள். அவர்கள் தானாகவே உங்களிடம் வருவார்கள். நீங்கள் போய் அவர்கள் வீட்டுக் கதவைத் தட்ட வேண்டாம். உங்கள் தன்மையே அவர்களை வசீகரிக்கும். உண்மையை உண்மையாகத் தேடுபவர்கள் தாங்க ளாகவே உங்களைத் தேடி வந்துவிடுவார்கள். உண்மையைத் தேடாதவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவர்கள் வருவதால் எந்தப் பயனும் இல்லை. அவர்கள் உங்களுக்கும் உங்களை உண்மையாகப் பின் தொடர்பவர்களுக்கும் இடைஞ்ச லாகவே இருப்பார்கள். அதனால் ஞானத்தை மறைத்து வையுங்கள் என்கிறார் ஷுவாங் ட்சு.

என்றாலும் மக்கள் கண்டுபிடித்துவிடுவார்கள். ஷுவாங் ட்சு ஞானம் பெற்றுவிட்டார் என்று இளவரசனுக்குத் தெரியும்.

**சூ நாட்டு இளவரசன் இரண்டு அமைச்சர்கள் மூலம் ஒரு ராஜாங்க ஆவணத்தை ஷுவாங்**

**ட்சூவிற்கு அனுப்பியிருந்தான். அதன் சாரம் இதுதான். ''நாம் உங்களை இந்த நாட்டின் முதல் அமைச்சராக நியமிக்கிறோம்.''**

அந்தக் காலத்தில் முதல் அமைச்சர்கள் தேர்தல் மூலமாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை. மக்களின் வாக்குமூலம் எப்படி அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பது? மக்கள் எப்படித் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுப்பார்கள்? அவர்களுக்கு ஆசைதான். ஆனால் அது அவர்களால் முடியாத காரியம், உண்மையான ஜனநாயகம் என்பது ஒரு கனவுதான். இதுவரை அது எங்குமே நனவாகவில்லை. நனவாகவும் முடியாது. ஜனநாயகம் வந்தால் பிரச்சினையும் வந்துவிடுகிறது. நோயைவிட மருந்து கொடுமையானது என்பதற்குச் சரியான எடுத்துக்காட்டும் ஜனநாயக ஆட்சிமுறைதான்.

அந்தக்காலத்தில் முதலமைச்சரை அரசன் நியமித்தான். அரசன் அறிவாளிகளைத் தேடிப் பிடித்து அமைச்சர்களாக்கினான். பதவியைக் கொடுக்க ஞானிகளைத் தேடி அலைய வேண்டும். ஏனென்றால் ஒரு ஞானி எந்தக்காலத்திலும் தேர்தலில் நிற்க சம்மதிக்க மாட்டான். ஓட்டுக்கேட்க மாட்டான். அவன் தன்னை மறைத்துக் கொள்வான். அரசர்கள் அவனைத் தேடிப் போவார்கள். மறைவிடத்திலிருக்கும் ஞானியை வெளிச்சத்திற்குக் கொண்டுவர வேண்டும். அவனால் உலகத்திற்கு நன்மை விளையும்.

இளவரசனுக்கு ஷுவாங் ட்சு ஒரு ஞானி என்று தெரியும். அதனால் அவன் இருவரை அனுப்பி வைத்தான். அவரைத் தன் முதலமைச்சராக நியமித்தான்.

**ஷுவாங் ட்சு அந்த மூங்கில் கழியைப் பிடித்துக் கொண்டு பூ ஆற்றைப் பார்த்தபடி பேசினார்.**

ஷுவாங் ட்சுவைப் பொறுத்தமட்டில் எதுவும் மாறவில்லை. அவருக்குப் பக்கத்தில் நாட்டின் அமைச்சர் ஒருவர் இருக்கிறார். அவர் கையில் ஒரு ஆவணம் இருக்கிறது. ''நீங்கள் முதலமைச்சராக நியமிக்கப்பட்டிருக்கிறீர்கள்'' என்று அந்த

ஆவணம் சொல்கிறது. அது அந்த நாட்டின் மிகப்பெரிய பதவி. ஆனால் ஷுவாங் ட்சுவின் நிலையில் எந்த மாற்றமும் இல்லை. கையில் இருந்த மூங்கில் கழியைப் பிடித்தபடி பூ ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் அமைச்சர்களைப் பார்க்க வில்லை. அவர்கள் கொண்டுவந்திருந்த அந்த ஆவணத்தையும் பார்க்கவில்லை. அவரைப் பொறுத்தமட்டில் அந்த ஆவணம் கால் காசுக்கு உதவாது.

***மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கண்டெடுக் கப்பட்ட ஒரு ஆமையைப் பற்றிக் கேள்விப்பட் டிருக்கிறேன். அது நம் மதகுருமார்களின் ஆணைகளால் புனிதமானதாகக் கருதப்படுகிறது. நம் இளவரசரால் மதிக்கப்படுகிறது. அந்த ஆமையைப் பட்டுத் துணியில் சுற்றி கோவிலின் புனிதமான சன்னிதியில் பலிபீடத்தில் வைத்திருக் கிறார்கள்.***

அந்த ஆமை இன்னும் அங்கேயே தான் இருக்கிறது. அதைத் தங்கத்தாலும் ரத்தினங்களாலும் அலங்கரித்திருக்கிறார்கள். சீனாவின் பீகிங் நகரின் அந்த ஆமை இன்னும் இருக்கிறது. ஆனால் அதை எல்லாரும் பார்த்துவிட முடியாது. இப்போது ஆறாயிரம் ஆண்டுகள் ஆகியிருக்கும். ஒரு செத்த ஆமை. அதனைப் பதப்படுத்தி தங்கத்தாலும் ரத்தினங்களாலும் மூடி வைத்திருக்கிறார்கள்.

அந்த நாட்டு இளவரசரே அதனை வணங்குகிறார்.

***நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று சொல் லுங்கள். தன் உயிரைக் கொடுத்துவிட்டு ஒரு புனிதமான ஓடாக சாம்பிராணிப் புகைக்கு மத்தியில் மூவாயிரம் ஆண்டுகள் இருப்பது சிறந்ததா?***

***அல்லது ஒரு சாதாரண ஆமையாக ஆற்றிலும் சேற்றிலும் வாலை இழுத்துக் கொண்டு வாழ்வது சிறந்ததா?''***

நம் அனைவரின் முன்பும் இரண்டு தெரிவுகள் இருக்கின்றன. ஒன்று, மக்கள் உங்களை வணங்குவார்கள். ஆனால் நீங்கள் உயிருடன் இருக்க மாட்டீர்கள். நீங்கள் உயிருடன் இருந்தால் வணங்க மாட்டார்கள்.

வாழ்க்கை ஒழுக்கத்திற்கு அப்பாற்பட்டது. வாழ்க்கையை ஒழுங்கு என்றோ ஒழுங்கீனம் என்றோ வகைப்படுத்தமுடியாது. வாழ்க்கைக்கு ஒழுக்க விதிகள் தெரியாது. அது தன் போக்கில் உணர்வின்மை நிலையிலிருந்து இயங்கிக்கொண்டிருக்கிறது.

நீங்கள் சாதாரணமாக உயிருடன் இருந்தால், உங்களை மற்றவர்கள் வழிபடுவது கடினம். நீங்கள் சாதாரணமாக வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருந்தால், மீன்பிடித்தல் ஆற்றங்கரையில் வேடிக்கை பார்த்தல் போன்ற சின்னச் சின்ன இன்பங்களைத் துய்த்தபடி சாமானியனாக வாழ்ந்து கொண்டிருந்தால் உங்களுக்கு யாரும் கோயில் கட்டமாட்டார்கள். உங்கள் முன்னால் ஊதுபத்தி ஏற்றிவைக்க மாட்டார்கள். உங்களுக்கு என்று ஒரு கூட்டம் இருக்காது. உங்களை ஆயிரக் கணக்கான ஆண்டு வழிபட்டுக்கொண்டு இருக்க மாட்டார்கள்.

ஏசுநாதர் ஞானம் பெற்றதால் அவரை வழிபடவில்லை. அவர் சிலுவையில் அறைபட்டதால்தான் அவரை வழிபடுகிறார்கள். ஒரு வேளை ஏசு நாதர் சிலுவையில் அறையப்படவில்லையென்றால் .. இன்று கிறிஸ்தவ மதமே இருந்திருக்காது. கிறிஸ்தவ மதம் தோன்றியது ஏசுவால் அல்ல; அவர் அறையப்பட்ட சிலுவையினால். அதனால்தான் சிலுவை அவர்களின் புனிதமான மதச்சின்னமாகிவிட்டது. அது சரி ஏன் அந்தச் சிலுவை? ஒரே காரணம்தன். இந்த பாழாய்ப்போன மனித மனம், கிறுக்குப் பிடித்த மனித மனம் வாழ்வை வணங்குவதில்லை. மரணத்தைத்தான் வணங்குகிறது.

நீங்கள் உயிருடன் இருந்தால் வழிபடும் அளவிற்கு நீங்கள் உயர்ந்தவர் அல்ல. ஏனென்றால் நீங்கள் எதையும் தியாகம் செய்யவில்லையே! தியாகத்தை வழிபடலாம்; காரணம் நீங்கள் உங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்கிறீர்கள். கொஞ்சம்

கொஞ்சமாகச் சிலுவையில் அறையப்படுவதற்குச் சமம் இந்தத் தியாகம்.

மற்றவர்கள் உங்களைச் சிலுவையில் அறைந்தால் மக்கள் உங்களை வழிபடுவார்கள். நீங்களே உங்களைச் சிலுவையில் அறைந்து கொண்டால் இன்னும் அதிகமாக வழிபடுவார்கள். மக்கள் மரணத்தையே வழிபடுகிறார்கள். ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டதால்தான் அவரை வணங்குகிறார்கள். அந்தச் சிலுவைக் கதையை மறந்துவிடுங்கள். யார் இந்த ஏசுநாதர்? அவரை நினைவில் வைத்துக் கொள்வதுகூட கஷ்டம். ஏசுவும் ஷுவாங் ட்சுவைப் போல் ஒரு நாடோடி. அவர்கள் கதைகளில் உள்ள ஒரே வித்தியாசம் - ஏசுவைச் சிலுவையில் அறைந்தார்கள். ஷுவாங் ட்சுவை அறையவில்லை.

ஏசு நாதர் ஆற்றங்கரையில் மீன்பிடித்துக் கொண்டிருந்ததைக் கூட யாராவது பார்த்திருப்பார்கள். யார் கண்டது? கலிலி கடலுக்கு அருகில் அவர் மீன்பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். அவருடைய சீடர்களும் நண்பர்களும் பெரும்பாலும் மீனவர்களே. ஏசு நாதர் ஒரு கணிகையுடன் இருப்பதைப் பார்த்திருக்கலாம். ஏனெனில் மேரி மேக்டலீன் என்ற அந்தக் கணிகை ஏசுவை நேசித்தாள். வழிபட்டாள். ஏசு நாதர் அவளுடனும் வேறுபாடில்லாமல் பழகினார். சூதாடிகள், குடிகாரர்கள் என்று மக்கள் வெறுத்து ஒதுக்கியவர்களுடன் ஏசு நெருக்கமாகப் பழகினார். அதுதான் அவர் செய்த பெரும் குற்றம். சாதாரண மக்களுடன் சாதாரண வாழ்க்கை வாழ்ந்ததற்காகத்தான் அவர் சிலுவையில் அறையப்பட்டார். போலி சமுதாய மதிப்பைத் தேடிய பிறரால் அதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. விலைமகளிர், சூதாடிகள், குடிகாரர்கள், அடித்தட்டு மக்கள் தப்பான மனிதர்களுடன் நெருங்கிப்பழகும் அந்த மரத்தச்சனின் மகன் தன்னை இறைவனின் குழந்தை என்று சொல்லிக் கொள்கிறான்! என்ன தெனாவட்டு! என்ன திமிர்!

இவன் அதிகமாகப் பேசுகிறான். தப்புத் தப்பாய்ச் செய்கிறான். இவனைத் தண்டித்தேயாக வேண்டும். இல்லா விட்டால் இந்த உலகத்தில் ஒழுக்கம் என்பதே இல்லாமல்

போய்விடும். இந்த மனிதன் எந்தச் சமுதாய விதியையும் மதிப்பதில்லை. வாழ்க்கையைத் தவிர வேறு எந்த விதியையும் மதிப்பதில்லை.

ஏசு நாதரும் ஷுவாங் ட்சுவும் ஒரே ரகம் தான். ஒரே வித்தியாசம். ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார். ஏனென்றால் யூதர்கள் தங்கள் விதிகளை மிகவும் மதித்தார்கள். அவர்கள் விதிமுறைகளின்படி வாழ்ந்தார்கள். விதிகளின்படி வாழாத ஒருவர் நன்றாக வாழ்கிறார் என்பதை அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவர்கள் வணங்கியது பழிவாங்கும் கடவுள்களைத்தான்.

யூதரின் கடவுள் மிகவும் கோபமுள்ளவர். நீங்கள் அந்தக் கடவுளுக்குக் கீழ்ப்படியவில்லையென்றால் உங்களை நெருப்பில் போட்டுப் பொசுக்கிவிடுவார். கீழ்ப்படிதலே சிறந்த விதியாகக் கருதப்பட்டது.

அந்தச் சூழ்நிலையில் ஒரு சாதாரண மரத்தச்சனின் பிள்ளையான ஏசு நாதர், சந்தேகத்துக்கு இடமான மனிதர்களிடம் நெருங்கிப் பழகிய ஒரு மிகச்சாதாரண சாமானியன் ''யூதர்கள் காலம் காலமாக ஒரு தீர்க்கதரிசிக்காகக் காத்துக் கொண்டிருக் கிறார்கள். அது நான் தான்.'' என்று சொல்லிக்கொண்டால் யூதர்களுக்கும் கோபம் வருமா வராதா, நீங்களே சொல்லுங்கள். அவரைத் தண்டித்தேயாக வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டார்கள்.

சீன நாட்டில் அந்த அளவு வெறி இல்லை. அவர்கள் உக்கிரமான கடவுளை வணங்கவில்லை. அங்கே கடவுளே இல்லை. சீன அறிஞர் கன்ஃபூசியஸ் கடவுளை நம்பவில்லை. விதிமுறைகளை நம்பினார். அவர்தான் சீனாவின் அஸ்தி வாரத்தை அமைத்தவர். சட்டங்களும் விதிமுறைகளும் மனிதனால் உருவாக்கப்பட்டவை. அவற்றில் எந்தத் தெய்விகத்தன்மையும் கிடையாது.. தேவைப்பட்டால் அவற்றை மாற்றிக்கொள்ளலாம். சமுதாய நலனுக்காக அந்த விதிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால் அதற்காக

அந்த விதிகளே தெய்விகமானவை என்று நினைக்க முடியாது. இப்படி ஒரு எண்ணம் சீனாவில் இருந்ததால்தான் லாவோ ட்சுவும் ஷுவாங் ட்சுவும் பயமில்லாமல் வாழ முடிந்தது. சீன மக்கள் இந்த ஞானிகளைச் சிலுவையில் அறையவில்லை.

ஷுவாங் ட்சு மட்டும் சிலுவையில் அறையப்பட்டிருந்தால் இன்று அவர் பெயரால் ஒரு மதம் உருவாகியிருக்கும். கோடிக் கணக்கானவர்கள் அந்த மதத்தைக் கடைப்பிடித்திருப்பார்கள். ஆனால் இன்று ஷுவாங் ட்சுவின் வழியில் செல்பவர்கள் யாருமே இல்லை. அப்படி இருக்கவும் முடியாது. மக்கள் மரணத்தை வழிபடுகிறார்கள். அவரோ வாழ்க்கையை வழிபட்டார்.

மக்கள் அவரிடம் என்ன சொன்னார்கள்?

''நாங்கள் உங்களை வழிபடத் தயார். ஆனால் ஒரு நிபந்தனை. நீங்கள் சாக வேண்டும். படிப்படியாகவாவது சாக வேண்டும். எதுவும் செய்ய வேண்டாம். உங்களையே தியாகம் செய்யுங்கள் போதும். ஒரு இடத்தில் அமர்ந்து இருங்கள் மூச்சுக்கூட விட வேண்டாம். அப்போது நீங்கள் செத்துப் போன ஆமையாக மாறியிருப்பீர்கள். அப்போது உங்களை வணங்கு கிறோம்.

***ஷுவாங் ட்சு கேட்டார்***

***நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று சொல்லுங்கள். தன் உயிரைக் கொடுத்துவிட்டு ஒரு புனிதமான ஓடாக சாம்பிராணிப் புகைக்கு மத்தியில் மூவாயிரம் ஆண்டுகள் இருப்பது சிறந்ததா?***

***அல்லது ஒரு சாதாரண ஆமையாக ஆற்றிலும் சேற்றிலும் வாலை இழுத்துக் கொண்டு வாழ்வது சிறந்ததா?''***

***வந்தவரில் ஒருவர் சொன்னார். ''ஆமையின் கோணத்தில் இருந்து பார்த்தால் ஆற்றிலும்***

**சேற்றிலும் வாலை இழுத்துக் கொண்டு உயிர்வாழ்வதே சிறந்தது.''**

**அப்போது ஷுவாங் ட்சு சொன்னார். ''உங்கள் வீட்டிற்குச் செல்லுங்கள். என்னை இந்தச் சேற்றில் வாலை இழுத்துக்கொண்டு வாழ விடுங்கள்.''**

நான் சாதாரண ஆமையாகவே இருந்துவிடுகிறேன். என்னைப் புனிதமாக்க முயற்சி செய்யாதீர்கள். எனக்கு உங்கள் நிபந்தனை தெரியும். நான் புனிதமாக வேண்டுமென்றால் முதலில் சாக வேண்டும். அதன் பின் என் பிணத்தை ஆமையின் ஓட்டைப் புனிதமாக்கி அதைச் சுற்றி ஒரு கோவில் கட்டி, கற்பூரம் ஏற்றி, ஊதுபத்தி காட்டி ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு வழிபடுவீர்கள். அப்படித்தானே! சரி அதனால் எனக்கு என்ன ல்ாபம்? நான் ஒரு ஆமை. ஆமையை வழிபடுவதால் ஆமைக்கு என்ன லாபம்? ஆமைக்குத் தங்கத்தைப்பற்றியும் ரத்தினக் கற்களைப் பற்றியும் என்ன தெரியும்? அவை எல்லாம் மனிதனின் முட்டாள்தனங்களே. ஆமைக்குச் சேறுதான் பிடித்திருக்கிறது. அந்தச் சேற்றில் தன் வாலை இழுத்துக் கொண்டு போவதுதான் பிடித்திருக்கிறது.

சேறு என்ற இந்தக் குறீயிடு அர்த்தம் செறிந்தது. நம்மைப் பொறுத்தமட்டில் சேறு என்பது அழுக்கானது. ஆனால் சேறுதான் இயற்கை. அது சுத்தமோ அசுத்தமோ அது உங்கள் கண்ணோட்டத்தைப் பொறுத்தது.

சேறு இயற்கை. ஒரு ஆமை தனக்கு காலம் இருக்கும் வரை சேற்றில் வாலை இழுத்துக்கொண்டு வாழ்க்கை என்ற விளை யாட்டை விளையாடுவது - அது நல்ல குறியீடு. ஒரு மனிதன் இப்படித்தான் இருக்க வேண்டும். சேற்றை வெறுத்து ஒதுக்கக் கூடாது. 'இந்த உடல் ஒரு அழுக்குப் பை. மண்ணிலிருந்து வந்தது மண்ணிற்கே போகட்டும்' என்று தத்துவம் பேசக்கூடாது.

இயற்கையும் சேறு போன்றதே. நீங்கள் இயற்கையிலிருந்து தான் வந்தீர்கள். அதில்தான் கரைந்து போகப் போகிறீர்கள்.

ஆனால் ஆயிரம் ஆண்டுகள் உங்களை மக்கள் வழிபட வேண்டுமென்றால் பிரச்சினையில்லை. நீங்கள் ஒரு தெய்வமாக விரும்பினால், உங்கள் பெயரைச் சுற்றி ஒரு இயக்கம் இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் தப்பில்லை. ஆனால் அதற்காக நீங்கள் சாக வேண்டும். மக்கள் வழிபாடு, உங்களைச் சுற்றி ஒரு இயக்கம் இத்தியாதி அந்த அளவிற்கு மதிப்புள்ளதா? உயிரைக் கொடுத்து மதிப்பைப் பெற வேண்டுமா? உங்கள் வாழ்க்கையின் ஒரு நொடியைத் தியாகம் செய்து மொத்த உலகத்தின் மதிப்பைப் பெறுவது அறிவார்ந்த செயலா? இல்லை.

இந்த மொத்த உலகமும் உங்கள் கால்களில் விழுந்து வணங்கட்டுமே! ஆனால் அதற்காக உங்கள் வாழ்க்கையின் ஒரு கணத்தைத் தியாகம் செய்வதும் முட்டாள்தனம்.

வாழ்க்கைதான் விலை மதிப்பு மிக்கது. வாழ்க்கைதான் தங்கம் அதைவிடச் சிறந்த தங்கம் எங்குமே இல்லை. வாழ்க்கையே ஆலயம். அதைவிடப் புனிதமான ஆலயம் எங்குமே இல்லை. வாழ்க்கைதான் மணம், ஊதுபத்தி, சாம்பிராணி எல்லாமே! வாழ்க்கையை விடுத்து வேறு மணம் இல்லை. இதைத்தான் ஷுவாங் ட்சு சொல்கிறார்.

''நான் உயிருடன் வாழவே விரும்புகிறேன். நான் சேற்றில் வாலை இழுத்துக்கொண்டிருக்கும் ஒரு ஆமைதான். அதற்காக நீங்கள் என்னை வெறுக்கலாம். ஆனால் ஆமையைப் பொறுத்த மட்டில் இதுவே சிறந்தது. என் கருத்தை நீங்களும் ஏற்றுக் கொள்கிறீர்கள். அதனால் வீட்டிற்குச் செல்லுங்கள். எனக்கு முதலமைச்சர் பதவி வேண்டாம்.. நீங்கள் என்னை வழிபடு வீர்கள். உண்மைதான். ஆனால் அதற்கு முன்னால் என்னைக் கொன்று விடுவீர்கள்.

ஒரு மனிதனைப் பல வகைகளில் சிலுவையில் அறைய லாம். ஏசுநாதரை சிலுவையில் அறைந்தது ஒரு முறை. ஒரு மனிதனை அரியாசனத்தில் அமர்த்தலாம்.. அதுவும் சிலுவையில் அறைதல்தான். கொஞ்சம் நுட்பமானது. வன்முறையில்லாமல் ஒரு மனிதனைக் கொல்லும் வழி அது. ஒரு மனிதனை அதீதமாக

மதிக்கும் போது நீங்கள் அவனைக் கொன்றுவிடுகிறீர்கள். ஏனென்றால் இனிமேல் அவன் உங்களைப் பார்த்துக் கொண்டே யிருக்க வேண்டும். என்ன செய்வது என்ன செய்யக்கூடாது என்று உங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு முறை நான் எனக்குத் தெரிந்த வீட்டில் தங்கியிருந்தேன். அவர்கள் சமண மதத்தைத் சார்ந்தவர்கள். அந்த வீட்டில் இருந்தவர்கள் என் புத்தகங்களைப் படித்திருந்தார்கள். என்றாலும் அதுவரை என்னை நேரில் பார்த்ததில்லை. என் புத்தகங்களைப் படித்துவிட்டு என் மேல் மிகவும் மதிப்பு வைத்திருந்தார்கள். அவர்கள் பெரிய செல்வந்தர்கள். நான் அவர்கள் ஊருக்குச் சென் றிருந்த சமயம் தங்களோடு வந்து தங்கியிருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். நானும் அவர்கள் அழைப்பை ஏற்றுக் கொண்டேன்.

அன்று மாலை என்னைப் பார்க்க சிலர் வந்திருந்தார்கள். அவர்களுடன் நான் பேசிக்கொண்டிருந்தேன். சமணர்கள் இரவு உணவை சூரியன் மறைவதற்குள் உண்டுவிடுவார்கள். நான் தங்கியிருந்த வீட்டுக்காரர்கள் அந்த விஷயத்தில் கண்டிப்பாக இருந்தார்கள். அந்த வீட்டின் பெண்மணி என்னிடம் சொன்னார் ''இருட்டிக் கொண்டேயிருக்கிறது. வந்தவர்களை விரைவில் அனுப்பிவிட்டுச் சாப்பிட வாருங்கள். இல்லாவிட்டால் காலத்தில் உணவு உண்ண முடியாது.''

நான் சொன்னேன். ''சிறிது நேரம் கழித்துச் சாப்பிடுகிறேன். எனக்கு ஒன்றும் அவசரமில்லை. இவர்கள் தொலைதூரத்தில் இருக்கும் கிராமத்திலிருந்து என்னைக் காண வந்திருக்கிறார்கள். உண்மையைத் தேடுபவர்கள். அவர்களிடம் நான் சில விஷயங் களைச் சொல்ல வேண்டியிருக்கிறது. அவ்வளவு தொலைவி லிருந்து வருபவர்களுக்கு நான் ஏதாவது தர வேண்டாமா?''

அந்தப் பெண்மணியால் நான் சொன்னதை நம்பமுடிய வில்லை. வந்தவர்கள் விடைபெற்றுச் சென்ற போது மிகவும் நேரமாகிவிட்டது. சூரியன் மறைந்துவிட்டது வெளியில் நன்றாக இருட்டிவிட்டது.

''ஐயா நீங்கள் இப்போது சாப்பிட முடியாதே! இரவில், இந்தக் கூடாத வேளையில் நீங்கள் சாப்பிடத் தயாரா?''

''எனக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. பசிக்கு இரவா பகலா என்று தெரியாது. எனக்குப் பசிக்கிறது. நான் சாப்பிடுகிறேன்.''

இதைக் கேட்டவுடன் என்னைப் பற்றி அவர்கள் வைத் திருந்த கருத்து அதல பாதாளத்துக்குச் சரிந்துவிட்டது.

''நாங்கள் உங்களை பெரிய ஞானி என்று நம்பிக் கொண்டிருந்தோம். அந்த நம்பிக்கையைத் தகர்த்து விட்டீர்களே! ஞானம் பெற்றவர் எப்படி இரவு சாப்பிடலாம்?''

ஒரு சமணனால் அதைப் புரிந்து கொள்வது கடினம். காரணம் நாம் விதிமுறைகளின்படி வாழ்கிறோம். செத்த விதிமுறைகளின் படி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். உங்களுக்கு அவர்களின் மதிப்பு வேண்டுமென்றால் நீங்கள் அவர்களுடைய விதிமுறை களைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்தால் நீங்கள் சிறையில் மாட்டிக் கொள்வீர்கள்.

அதனால் நான் அந்தப் பெண்மணியிடம் சொன்னேன்.

''ஞானம் பெறாமல் இருப்பதே நல்லது. என்னால் பசியோடு தூங்க முடியாது. ஆனால் ஞானம் இல்லாமல் தூங்கமுடியும் அதனால் உணவுக்காக ஞானத்தை விட்டுவிடுகிறேன்.''

அன்று நான் அவர்களுக்கு இந்தக் கதையைச் சொன்னேன். ''நான் சாதாரண ஆமை. என் வாலை இழுத்துக்கொண்டு சேற்றில் போய்க்கொண்டிருக்கிறேன். '' என்று சொன்னேன்.

யாராவது என்னை ஞானி என்று நினைத்துக் கொண்டிருந் தால் அவர்களுக்காக நான் பட்டினி கிடந்து சாக முடியுமா என்ன?

ஆனால் இன்று பலரும் அப்படித்தான் இருக்கிறார்கள்.

அதனால் பிறர் உங்களை மதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். காரணம் உங்கள் அகந்தைதான் மதிப்பைத் தேடுகிறது. அது ஒரு நுட்பமான சிறை. அது உங்களை

ஆயுளுக்கும் சிறைப்படுத்தி வைத்துவிடும். சாதாரணமாக வாழுங்கள் உங்கள் உணர்வுகள் சொல்வதைக் கேளுங்கள். அதன்படி வாழுங்கள். ,மற்றவர்களைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்.

உங்கல் வாழ்க்கைக்கு நீங்களே பொறுப்பு. மற்றவர்கள் அல்ல. உங்களுக்கு மட்டும் பொறுப்புள்ளவர்களாக நடந்து கொள்ளுங்கள். மற்றவர்களுக்காக எதையும் செய்யாதீர்கள். அப்படி இருந்தால் உங்களைச் சுற்றி ஒரு கூட்டம் கூடாது. உங்களை வைத்து ஒரு இயக்கம் தொடங்கப்படமாட்டாது.

நீங்கள் சாதாரணமாக இருந்த போதிலும் உங்களைத் தேடி வருபவர்கள் உண்மையைத் தேடும் உண்மையானவர்களாக இருப்பார்கள். உங்களை மற்றவர்கள் மதிக்க வேண்டும் என்று எதிர்பார்த்தால் போலிகள் தான் உங்களை நாடி வருவார்கள்.

நீங்கள் இயல்பாக இருந்தால் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தால் நேர்மையான ஆர்வலர்கள் மட்டுமே வருவார்கள். அவர்கள் உங்களைப் பந்தப்படுத்த மாட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்குத்தான் நீங்கள் உதவ முடியும்.

இல்லாவிட்டால் தொண்டர்கள்தான் தலைவர்களை வழி நடத்திச் செல்வார்கள். சீடர்கள்தான் குருவின் மேல் விதிமுறை களைத் திணிப்பார்கள். என்ன அபத்தம்! இருவருமே இருட்டில் தான் இருப்பார்கள்.

ஒன்றை மட்டும் மறந்துவிடாதீர்கள். இயற்கையைவிட மேலானது எதுவும் இல்லை. இயற்கைதான் முழுமை. அதனால் தான் சமுதாயம் நிர்ணயித்த வாழ்க்கைப் பாதையிலிருந்து விலகி உங்களுடைய இயற்கையான வழியைத் தேர்ந்தெடுத்து அதில் நடப்பது மிகவும் அவசியமாகிறது.

இந்தச் சமுதாயமும் நாகரிகமும் உங்களை உறைய வைத்துவிட்டது. ஒரு ஆறாக ஓடிக்கொண்டிருந்த நீங்கள் பனிக்கட்டியாக உறைந்து ஓரிடத்தில் தேங்கி நிற்கிறீர்கள். உங்களை மீண்டும் உருக்கி ஆறாக ஓட வைக்க வேண்டும்.

எப்படி? கொஞ்சம் கடினமான காரியம்தான். ஏனென்றால் உறைந்த பனிக்கட்டிகளைத்தான் இந்தச் சமுதாயம் வழிபடுகிறது. உங்கள் அகந்தை என்ன சொல்லும் தெரியுமா? '' என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நீ ஆறாக ஓட ஆரம்பித்தால் உன்னை யாருமே மதிக்க மாட்டார்கள். உனக்கு இந்தச் சமுதாயத்தில் எந்த மதிப்பும் இருக்காது. விதிகளின்படி நட;. அதனால் உனக்கென்ன நஷ்டம்?''

விதிகளின் மேல் நீங்கள் மிக அதிகமாக முதலீடு செய்து விட்டீர்கள். அந்த விதிகளைக் கடைப்பிடித்தால் எல்லாருமே உங்களை வணங்குவார்கள். அந்த வழிபாட்டால் உங்களுக்கு என்ன லாபம்? அது வாழ்க்கைக்கு மாற்று இல்லை. சமுதாய மதிப்பினால் உங்களுக்கு என்ன லாபம்? அது இருப்பு நிலைக்கு மாற்றா என்ன? நிச்சயமாக இல்லை.

இருப்புநிலையில் இருங்கள் நிகழ்வுகள் தானாக நிகழட்டும்.

உங்களை யாராவது மதித்தால் அது அவர் தீர்மானிக்க வேண்டிய பிரச்சினை. அதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படு கிறீர்கள்? அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட ஆரம்பித்தால் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். அப்படித்தான் எல்லாருக்கும் பைத்தியம் பிடிக்கிறது. உங்களைச் சுற்றிப் பலர் இருப்பார்கள். அவர்கள் நீங்கள் அதைச் செய்ய வேண்டும் இதைச் செய்ய வேண்டும் என்று எதிர்பார்த்துக்கொண்டே யிருப்பார்கள். எத்தனை மக்கள். எத்தனை எதிர்பார்ப்புகள். அவர்களை உங்களால் திருப்திப் படுத்தவே முடியாது. எல்லா முயற்சியும் பயங்கரமான தோல்வியில் முடியும். யாருக்குமே திருப்தி இருக்காது. உங்களால் யாரையுமே திருப்திப்படுத்த முடியாது - ஒரே ஒரு ஆளைத் தவிர. அது நீங்கள்தான். உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டால் அதனால் உங்களுடன் இருக்கும் சிலருக்குத் திருப்தி ஏற்படும். ஆனால் அது உங்கள் கவலையில்லை.

அடுத்தவர்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுவதற்காக நீங்கள் இங்கே பிறக்கவில்லை. உங்களுக்கு நிறைவு தேடிக்

கொள்ளவே பிறந்திருக்கிறீர்கள். அதுதான் மதங்களின் சாரம். அதுதான் உங்கள் ஊழ். அதிலிருந்து விலகாதீர்கள். அதிலிருந்து விலகிப் போகும் அளவிற்கு எதுவுமே முக்கியம் இல்லை.

அதிலிருந்து விலகிச் செல்ல பல கவர்ச்சிகரமான தூண்டுதல்கள் இருக்கும். அவை எல்லாம் பார்க்க தீதற்றவைகளாகத் தோன்றும். ஆனால் உண்மையிலேயே அவை எல்லாம் சூழ்ச்சிகள்தான்.

''இரவு சாப்பிடாமல் இருந்துதான் பாருங்களேன்! அதனால் என்ன நஷ்டம் உங்களுக்கு? சூரியன் மறைவதற்குள் சாப்பிடுவதைப் பழக்கமாக வைத்துக் கொண்டால் சமணர்கள் உங்களை மதிப்பார்கள் அல்லவா!'' என்று சிலர் சொல்லலாம்.

இரவு எந்த நேரத்தில் சாப்பிடுகிறீர்கள் என்பது முக்கியம் அல்ல. இரவில் சாப்பிடப் பிடிக்கவில்லையென்றால் சாப்பிடாதீர்கள். தினமும் காலை ஐந்து மணிக்கு எழுந்திருந்தால் இந்துக்கள் உங்களை மதிப்பார்கள். காலை ஐந்து மணிக்கு எழுந்திருப்பது பிரச்சினை அல்ல. அப்படி எழுந்திருப்பது உங்களுக்கு நல்லது என்று தோன்றினால் அப்படியே செய்யுங்கள். ஆனால் இந்துக்களை நினைத்துக் கொண்டு அப்படிச் செய்யாதீர்கள். இந்துக்களுக்காக நீங்கள் அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்திருந்தால் வாழ்க்கையில் எதையோ இழக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். இது போகப் போக இன்னும் சிக்கலாகிவிடும்.

சிலர் பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்திருக்கிறேன் பேர்வழி என்று நாள் முழுவதும் கடுப்புடன் இருப்பார்கள்.

ஒரு நாளின் குறிப்பிட்ட நேரத்தைத் தூக்கத்தில்தான் கழிக்க வேண்டும். ஒவ்வொரு இரவும் இரண்டு மணி நேரம்தான் முக்கியமான தூக்கம் நிகழுகிறது. ஒவ்வொரு இருபத்திநான்கு மணி நேரத்திற்கும் இரண்டு மணி நேரம் நமது உடலின் வெப்பம் விழுகிறது என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அந்த இரண்டு மணி நேரமும் நாம் ஆழ்ந்து உறங்க வேண்டும். அதைத் தவறவிட்டால் அடுத்த நாள் முழுவதும் எதையோ பறிகொடுத்தது போல் இருப்போம். அந்த இரண்டு மணி நேரமும்

நன்றாகத் தூங்கிவிட்டால் போதும். ஆறு, ஏழு மணி நேரம் தூங்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

அந்த இரண்டு மணி நேரம் எப்போது என்பது ஒவ்வொரு வருக்கும் வேறுபடும். சிலருக்கு அந்த இரண்டு மணிநேரம் - உடலின் வெப்பம் குறையும் நேரம் - என்பது அதிகாலை மூன்று மணியிலிருந்து ஐந்து மணை வரைக்கும் இருக்கும். அந்த சமயத்தில் தூங்கிவிட்டு காலை ஐந்து மணிக்கு பிரம்ம முகூர்த்தத்தில் கண் விழித்தால் நாள் முழுவதும் புத்துணர்வுடன் இருப்பார்கள்.

சிலருக்கு அந்த இரண்டு மணி நேரம் என்பது காலை ஐந்து மணியிலிருந்து ஏழு மணி வரை இருக்கும். இவர்கள் இந்துக் களின் பழக்கத்தைக் கடைப்பிடித்து பிரம்ம முகூர்த்தத்தில் அதாவது காலை ஐந்து மணிக்கு எழுந்திருந்தால் அவர்கள் வாழ்க்கையையே இழந்துவிடுவார்கள். அவர்களால் எப்போதுமே புத்துணர்வுடன் இருக்க முடியாது.

உங்கள் நேரத்தைக் கண்டுபிடித்துச் செயல்பட வேண்டும். தூக்கத்தைப் போல் மற்ற எல்லா விஷயங்களுமே ஆளாளுக்கு மாறுபடுகிறது. அடுத்தவர்கள் செய்வதைப் போல் செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை.

இதைப் புரிந்து கொள்ளுங்கள். எந்த வழி உங்களுக்கு மகிழ்ச்சியையும் அமைதியையும் நிறைவையும் தருகிறதோ அந்த வழியில் செல்லுங்கள். இன்னும் சிறப்பாக இருப்பீர்கள். அது தான் அளவு கோல். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்களா? அப்படி என்றால் உங்களிடம் சமய உணர்வு அதிகமாக இருக்கிறது நீங்கள் கோவிலுக்குப் போகாதவராக இருக்கலாம். அது இங்கே பேச்சில்லை.

நீங்கள் நாள் தவறாமல் கோவிலுக்குப் போகிறீர்கள். ஆனால் உங்கள் மனதில் கொஞ்சம் கூட மகிழ்ச்சியில்லை என்றால் உங்களிடம் சமய உணர்வு இல்லை என்று தான் பொருள்.

நீங்கள் ஆனந்தமாக, பரவசமாக இருந்தால் உங்கல் மொத்த இருப்பும் அமைதியிலும் பரவசத்திலும் நிரம்பி வழிந்தால்

பிரபஞ்ச இருப்புநிலையை உங்கள் வீடாகக் கொண்டிருந்தால் நீங்கள் ஒரு ஆன்மிகவாதி. நீங்கள் கடவுளை நம்புகிறீர்களா இல்லையா என்பது கேள்வியில்லை. அதெல்லாம் வெறும் வார்த்தைகள். அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள்.

உங்கள் அமைதியைத் தேடுங்கள். உங்கள் சேற்றில் உங்கள் வாலை இழுத்துக்கொண்டு வாழுங்கள். அதுதான் உங்கள் கோவில். அடுத்தவர்கள் கோயில் உங்களுக்கு ஒத்துவராது. ஒவ்வொரு கோயிலும் ஒவ்வொருவருக்காகக் கட்டப்பட்டது. உங்களுக்கு உங்கள் கோவிலும் உங்கள் சேறும்தான் சரி.

புத்தர் தன் வழியில் வாழ்ந்தார். அங்கே ஒரு கோயில் உருவானது. ஆயிரக்கணக்கான மக்கள் அவரைப் பின்பற்றி அவரைப் போலவே வாழ ஆரம்பித்தார்கள். அவர்கள் தங்கள் இலக்கைத் தவறவிட்டுவிட்டார்கள். புத்தர் யாரையும் பின்பற்றிச் செல்லவில்லை. அவர் வழி தனிவழி. அதில் அவர் மகிழ்ச்சியாக இருந்தார். அவரைப் பொறுத்தமட்டில் அது போதும். ஆனால் அவரை நீங்கள் பின்பற்றினால் உங்களுக்கு மகிழ்ச்சி இருக்காது. யாரையும் பின்பற்றாதீர்கள். அப்படிச் செய்தால் சந்தோஷமாக இருக்க மாட்டீர்கள்.

ஏற்கனவே உங்கள் தந்தை, தாய், ஆசிரியர், மதம் - ஆகியோரைப் பின்பற்றி அதனால் உங்கள் மகிழ்ச்சியைத் தொலைத்துவிட்டீர்கள். இன்னும் பலரைப் பின்பற்றுகிறீர்கள். அவர்கள் பல குரல்களில் பல விதமாய்ப் பேசி உங்களைக் குழப்புகிறார்கள். நீங்கள் எல்லாத் திசைகளிலும் இழுக்கப் படுகிறீர்கள். நீங்கள் ஒரு ஒருமைப்பாடில்லாத நிகழ்வாகவே வாழ்கிறீர்கள். உன்க்களுக்குள் ஒரு கூட்டமே இருக்கிறது. உங்களில் ஒரு பகுதி கிழக்கே போனால் மற்றொன்று மேற்கே போகிறது. கீழ்ப்பகுதி தெற்கே போனால் மேற்பகுதி வடக்கே இமயத்தை நோக்கிச் செல்கிறது. உங்களுக்குள் முதலில் ஒருமைப்பாடு தோன்றட்டும்.

நீங்கள் ஒன்றி இருந்தால் மற்றவர்கள் சொல்வதைக் கேட்காமல் இருந்தால் உங்கள் உள்ளேயிருந்து வரும் குரலை மட்டுமே கேட்டு அதன்படி வாழந்தாலே போதும் சில சமயம் சில

தவறுகள் நிகழலாம். அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். நீங்கள் வழி தவறுவீர்கள். காரணம் பல யுகங்களாக அடுத்தவர் சொல்வதையே கேட்டு வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் உள்ளே இருந்து வரும் குரலைத் தொலைத்துவிட்டீர்கள். உள்ளே யிருந்து வரும் குரல் என்னவென்றே உங்களுக்குத் தெரியாது.

உள்ளே பல குரல்கள் இருக்கின்றன. எல்லாமே மற்றவர் களிடமிருந்து வந்தவை. சில சமயம் ''இதைச் செய்'' என்று உங்கள் தாய் சொல்கிறாள். ''அதைச் செய்யாதே'' என்று உங்கள் தந்தை சொல்கிறார். அது போக புத்தர், ஏசு, ஷுவாங் ட்சு.. அனைத்தையும் விட்டுவிடுங்கள். கவனியுங்கள்.

தியானம் என்பது என்ன? ஊன்றி கவனித்தல். உங்கள் உள்ளேயிருந்து வரும் குரலை ஊன்றி கவனித்தல். நீங்கள் அமைதியானவுடன் உங்கள் உள்ளே இருக்கும் குரல்கள் உங்களைவிட்டுச் சென்றுவிடுகின்றன. புத்தர் தன் வீட்டிற்குப் போய்விடுகிறார். ஏசு நாதர் அங்கே இல்லை. ஷுவாங் ட்சு அவர் வீட்டுக்குப் போய்விடுகிறார். உங்கள் தாய் தந்தையர் எப்போதோ போய்விட்டார்கள். எல்லாரும் போய்விட்டார்கள். நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். உங்களுக்குள் இருக்கும் அந்த வெற்றிடம் மட்டுமே உங்களுக்குத் துணையாக இருக்கிறது. அப்போதுதான் உங்கள் இயற்கை தன்னை நிலைநிறுத்திக் கொள்கிறது. ஒரு மலர்தல் நிகழ்கிறது. உங்கள் உள்ளே இருக்கும் விதையில் இருந்து செடி துளிர் விடும்போது உங்கள் உள்ளே யிருந்து அந்தக் குரலும் கேட்கிறது. அதைப் பின்பற்றுங்கள். அது உங்களை எங்கே அழைத்துச் செல்கிறதோ செல்லுங்கள். வேறு யார் சொல்வதையும் கேட்காதீர்கள். இறைமைக்கான உங்கள் வழி அதுதான். உங்கள் குருதேவர் உங்களுக்குச் செய்யும் அதிகபட்ச உதவி உங்களை அந்த உள் குரலைக் கேட்க வைப்பதுதான். குருதேவர் உள்ளிருந்து வரும் குரலுக்கு மாற்றுப்பொருளாக இருக்க மாட்டார்.; அப்படி இருந்தால் உங்களுக்குள் இருக்கும் கூட்டம் இன்னும் அதிகமாகும்.

என்னை உங்கள் குரலாக வைத்துக் கொள்ளாதீர்கள். நான் உங்கள் பகைவன் இல்லை. என்னைக் கவனிக்காதீர்கள்.

உங்களுக்குள் ஆழமாகச் சென்று உங்கள் குரலைக் கேளுங்கள். அது போதும். அதை செய்ய நான் உங்களுக்கு உதவி செய்தால் நான் உங்கள் குருவாக இருக்கலாம். இல்லாவிட்டால் நான்தான் உங்கள் முதல் எதிரி. உங்களுக்குள் இருக்கும் குரலைக் கேட்க ஆரம்பித்துவிட்டால் அதன்பின் உங்களுக்கு நான் தேவைப்பட மாட்டேன் என்னை ஒதுக்கித் தள்ளிவிடலாம்.

நான் சொல்வதைக் கவனியுங்கள். மூன்றாம் கண் இருக்கிறது என்று யோக சாஸ்திரத்தில் சொல்கிறார்கள் அல்லவா? அதைப்போல் மூன்றாம் காது ஒன்றும் இருக்கிறது. மூன்றாம் கண்ணைக் கொண்டு உங்கள் இருப்பைப் பார்க்கலாம். மூன்றாம் காதைக் கொண்டு உங்கள் உள்ளே இருந்து வரும் குரலைக் கேட்கலாம். உங்கள் புறக்காதுகள் எதையும் கேட்காத போது நீங்கள் வேறு யார் பேசுவதையும் கேட்காத போது நீங்கள் புறச்செவிடாகிவிட்ட போது, உங்களுக்குள் இருக்கும் புறக்குரல்களையெல்லாம் வெளியே தூக்கியெறிந்துவிட்ட போது, வெளியில் இருந்து எந்தச் சத்தமும் உங்களை ஊடுருவமுடியாது என்ற நிலையில் நீங்கள் உங்கள் உள்ளே இருந்து வரும் குரலைக் கேட்பீர்கள். அதை உணர்வீர்கள். அது உள்ளேயேதான் இருக்கிறது.

ஒவ்வொரு குழந்தையும் அந்த உள் குரலோடுதான் பிறக்கிறது. ஒவ்வொரு மரமும் அந்தக் குரலோடுதான் பிறக்கிறது. ஒவ்வொரு பறவையும் அதனோடுதான் வாழ்கிறது. ஒரு ஆமை கூட அந்தக் குரலோடுதான் பிறக்கிறது. உங்களால் ஆமையைக் குழப்ப முடியாது.

''இங்கே வந்து நீ செத்தால் உன்னைச் சுற்றிக் கோவில் எழுப்புவோம்'' என்று அதனை உங்கள் பக்கம் இழுக்க முடியாது. உடனே ஆமை உங்களிடம் ''வீட்டிற்குச் செல்லுங்கள். நான் இந்த சேற்றில் என் வாலை இழுத்துக் கொண்டு நிம்மதியாக வாழ்கிறேன்.''

அந்த உள் குரலை உங்களால் உணர முடிந்தால் அதன்பின் உங்களுக்கு எந்த விதிகளும் தேவையில்லை. நீங்களே ஒரு

விதியாகிவிடுவீர்கள். அந்தக் குரல் எந்த அளவிற்குத் தெளிவாக இருக்கிறதோ அந்த அளவிற்கு நீங்கள் எடுத்து வைக்கும் அடி தெளிவாக இருக்கும். சரியான திசையில் இருக்கும். போகப் போக அந்தக் குரல் இன்னும் தெளிவாகக் கேட்கும். நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் உங்களை உங்கள் இலக்குக்கு அருகே இட்டுச் செல்லும். அப்போது உங்கள் மனதில் ஒரு சாந்தி ஏற்படும். எதுவுமே தப்பாக நடக்கவில்லை என்ற ஆழமான நிறைவு ஏற்படும். அந்த சமயத்தில் நீங்கள் மற்றவர்களை ஆசீர்வதிக்கலாம். நீங்களும் ஆசீர்வதிக்கபடுவீர்கள்.

ஒரு வகையில் மதம் என்பது ஒருவகையான புரட்சி. மற்றவர்களுக்கு எதிராக, உங்கள் நலவிரும்பிகளுக்கு எதிராக நல்லது செய்கிறேன் பேர்வழி என்று உங்களைச் சுற்றிக் கொண்டிருப்பவர்களுக்கு எதிராகச் செய்யப்படும் புரட்சி. அது ஒரு மகத்தான புரட்சி. ஏனென்றால் உங்கள் பக்கம் போராட நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். வேறு யாரும் இல்லை. அந்தப் பாதையில் நீங்கள் மட்டுமே பயணிக்க வேண்டும். ஒரு கூட்டத்திற்கு எதிராக ஒரு தனிமனிதன் செய்யும் புரட்சி அது.

அந்தக் கூட்டம் மிகவும் வலிமை வாய்ந்தது. அது உங்களை நசுக்கக் கூடும். ஏற்கனவே ஓரளவிற்கு உங்களை நசுக்கியிருக் கிறது. அதனால் நீங்கள் நசுங்கிப்போயிருக்கிறீர்கள். நீங்கள் குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடக்கிறீர்கள். நீங்கள் உயிருடன் இருந்தால், துடிப்புடன் வாழ்ந்தால் அது அந்தக் கூட்டத்திற்கு ஆபத்து. நீங்கள் துடிப்புடன் இருந்தால் உங்களுக்கென்று ஒரு பாதையைத் தேர்ந்தெடுப்பீர்கள். அந்தக் கூட்டத்திற்கென்று ஒரு பாதை இருக்கிறது. அந்தப் பாதையில்தான் நீங்கள் நடக்க வேண்டும் என்று அந்தக் கூட்டம் விரும்புகிறது. அந்தக் கூட்டம் நீங்கள் ஒரு தபால் துறை குமாஸ்தாவாக வேண்டும் என்று விரும்புகிறது. இல்லை ஒரு ஆரம்பப்பள்ளி ஆசிரியராக, இல்லை மருத்துவமனையில் செவிலியராக ஆக வேண்டும் என்று விரும்புகிறது. உங்கள் உள்ளே இருந்து வரும் குரல் அதனை எதிர்க்கலாம். உங்கள் உள் குரல் உங்களை ஒரு கவிஞனாக, நடனக்கலைஞனாக அல்லது பாடகனாக வேண்டும்

என்று சொல்லலாம். இல்லை நீங்கள் ஒரு புத்தனாக அல்லது ஷுவாங் ட்சுவாக வேண்டும் என்று சொல்லலாம். ஆனால் இந்தச் சமுதாயத்திற்கு புத்தன் தேவையில்லை. அதற்கு ஒரு தபால் ஆபீஸ் குமாஸ்தா போதும். எதற்காக புத்தன் வேண்டும்? அவனால் எந்தப் பொருளியல் பயனும் இல்லையே!

ஒரு முறை முல்லா நசிருதீன் ஒரு நீண்ட அங்கியை அணிந்து கொண்டு நீண்ட தாடியுடன் ஒரு மனவியல் வல்லுனரைப் பார்க்கப் போனார்.

''நீங்கள் என்ன ஓவியரா?''

''இல்லை. நிச்சயமாக இல்லை.''

''பின் ஏன் இந்த நீண்ட அங்கி, இந்த நீண்ட தாடி?''

''அதைக் கேட்கத்தான் நான் இங்கே வந்திருக்கிறேன். ஏன்? நான் எப்போதுமே ஓவியராக விரும்பியதில்லை. என் தந்தை நான் ஓவியனாக வேண்டும் என்று விரும்பினார். அது ஏன் என்று கேட்கத்தான் நான் வந்திருக்கிறேன்.''

இன்று நீங்கள் இவ்வளவு மோசமாக இருக்கக் காரணம் பலர் உங்களிடம் பலவற்றை எதிர்பார்க்கிறார்கள். அவற்றை எல்லாம் நிறைவேற்ற வேண்டும் என்று புறப்பட்டால் நீங்கள் எந்த நாளிலும் நிறைவைக் காண மாட்டீர்கள். நீங்கள் எதற்காக இந்த பூமிக்கு வந்தீர்களோ அதை யாரும் உங்களிடமிருந்து எதிர்பார்க்க மாட்டார்கள். அதை நீங்கள்தான் தேடியுணர வேண்டும். அது உள்ளே நடக்கும் ஒரு விசாரணை,. அதுதான் ஆன்மா. அதனைக் கடவுள் என்றும் உண்மை என்றும் மெய்ப் பொருள் என்றும் சொல்லலாம். பெயர்கள் மாறுபடலாம். அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள்.

நீங்கள் எதற்காக இந்த பூமிக்கு வந்தீர்கள் என்பதைக் கண்டுபிடிப்பதுதான் உண்மையான ஆன்மிகத் தேடல். இல்லாவிட்டால் முல்லாவைப் போல் ஒரு நாள் நீங்களும் மனவியல் வல்லுனரை நாடிப் போக வேண்டும். அப்படித்தான் எல்லாரும் செய்து கொண்டிருக்கிறார்கள். மனவியல்

வல்லுனர்களுக்கே இந்தப் பிரச்சினை இருக்கிறது. அவர் தன் மனதை அறிந்து கொள்ள மற்றொரு வல்லுனரிடம் போய்க் கொண்டிருக்கிறார். மனவியல் வல்லுனர்கள் ஒருவருக்கொருவர் சிகிச்சை செய்து கொள்கிறார்கள். இதில் என்ன கொடுமை என்றால் இன்று அதிகம் தற்கொலை செய்து கொள்வது மனவியல் வல்லுனர்கள்தான். மற்ற தொழிலில் இருப்பவர்களை விட இந்தத் துறையில், இருப்பவ்ர்கள் இரண்டு மடங்கு அதிக மாகத் தற்கொலை செய்து கொள்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் நமக்கு உதவுகிறார்களாம். எல்லாருமே மோசமான நிலையில் தான் இருக்கிறார்கள். ஏனென்றால் யாருமே உள்ளே இருந்து வரும் குரலைக் கேட்பதில்லை.

அதைக் கேட்டால் நீங்கள் வேறு எதையும் கேட்க வேண்டாம்.

ஆனால் அது அவ்வளவு எளிதானது அன்று. மிகவும் கடினமான பாதையில் பயணம் செய்ய வேண்டும். இழப்புகள் அதிகம் இருக்கலாம். பல முதலீடுகளை இழக்க வேண்டி வரும். போலி முதலீடுகளை தியாகம் செய்ய வேண்டி வரும். மற்றவர்களையும் அவர்கள் உங்கள் மேல் வைத்திருக்கும் எதிர்பார்ப்புகளையும் தியாகம் செய்ய வேண்டி வரும். நீங்கள் நீங்களாகவே இருப்பீர்கள் அப்படி இருக்க வேண்டும் என்று எடுக்கும் முக்கியமான முடிவு அது.

இன்று இவ்வளவு போதும்.

ஷுவாங் ட்சு அடுத்து ஹ்வான் பிரபுவும் வண்டிச்சக்கரம் செய்பவனும் என்ற கதையைச் சொன்னார்.

கி நாட்டைச் சேர்ந்த ஹ்வான் பிரபு, அந்த வம்சத்தின் முதல் பிரபு, குடை நிழலில் அமர்ந்து தத்துவம் படித்துக் கொண்டிருந்தான். ஃபியன் என்ற வண்டிச்சக்கரம் செய்பவன் அருகே அமர்ந்து சக்கரங்கள் செய்து கொண்டிருந்தான். ஃபியன் தனது உளியையும் சுத்தியலையும் தள்ளி வைத்துவிட்டுப் படியேறி ஹ்வான் பிரபுவிடம் போனான்.

''மகா பிரபு நீங்கள் என்ன படிக்கிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?''

''வல்லுனர்கள், ஆளுமைகள் தத்துவ மேதைகளின் கூற்றை படித்துக் கொண்டிருக்கிறேன்.''

''அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லை இறந்துவிட்டார்களா?''

''அவர்கள் இறந்து பலகாலம் ஆகிவிட்டது.''

''அப்படியென்றால் இறந்தவர்கள் விட்டுச் சென்ற அழுக்கைப் படித்துக் கொண்டிருக் கிறீர்கள்.''

''உனக்கு என்ன தெரியும் இதைப்பற்றி? நீயோ சக்கரங்கள் செய்யும் ஒரு சாதாரணத் தொழிலாளி.

**உன் கூற்றுக்குச் சரியான விளக்கம் கொடுக்க வில்லையென்றால் உனக்கு மரணம் நிச்சயம்.''**

**அப்போது அந்தத் தொழிலாளி சொன்னான்.**

**''இந்த விஷயத்தை என் கோணத்திலிருந்து பார்ப்போம். நான் செய்யும் சக்கரங்கள் மிகவும் தளர்வாக இருந்தால் நிற்காமல் விழுந்துவிடும். மிகவும் இறுக்கமாக இருந்தால் வண்டியில் பொருந்தாது. மிகவும் தளர்வாகவும் இல்லாமல் மிகவும் இறுக்கமாகவும் இல்லாமல் செய்தால் தான் சரியாக இருக்கும். அப்போதுதான் என் மனதிற்குப் பிடித்தமாதிரி அமையும்.**

**''இதை வார்த்தையில் சொல்ல முடியாது. இது எப்படி என்று நீங்களே தெரிந்து கொள்ள வேண்டும். என்னால் என் மகனுக்குக்கூட இந்த பதத்தைச் சொல்லித் தர முடியவில்லை. அதனால் தான் இந்த எழுபது வயதிலும் நான் சக்கரங்கள் செய்து கொண்டிருக்கிறேன்.**

**''அந்தக்காலத்தில் வாழ்ந்தவர்கள் தங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் தங்களுடன் கல்லறைக்குக் கொண்டு சென்று விட்டார்கள். அதனால், மகாபிரபு, நீங்கள் படித்துக் கொண்டிருப்பது அவர்கள் விட்டுச் சென்ற அழுக்கைத்தான்.''**

அமெரிக்காவின் கிராமப்புறப் பகுதிகளில் காரோட்டிக் கொண்டிருந்த ஒருவன் காரில் ஏதோ பெரிய கோளாறு இருக்கிறது என்பதை உணர்ந்தான். வண்டியை ஒரு ஓரமாக நிறுத்தி காரின் முன் பகுதியைத் திறந்து அதன் என்ஜினைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது பக்கத்தில் ஒரு குரல் கேட்டது.

''என்னிடம் கேட்டால் காரில் என்ன குறை என்று எளிதாகச் சொல்லிவிடுவேன்.''

அவனுக்கு ஒரே ஆச்சரியம். சுற்றி முற்றி யாரும் இல்லை. பக்கத்தில் இருந்த பண்ணையில் ஒரு குதிரை மட்டும் நின்று கொண்டிருந்தது. அவன் மிகவும் பயந்து போய்விட்டான். காரில் ஏறி அமர்ந்து அந்த இடத்தை விட்டுப் பறந்துவிட்டான். இருபது நிமிடங்கள் கழித்து ஒரு பெட்ரோல் விற்பனை நிலையத்தை அடைந்தான். நடந்ததைச் சொன்னான்.

''எனக்கு நிச்சயமாகத் தெரியும். அங்கே யாருமே இல்லை. ஆனால் என் காதுக்கருகில் ஒரு மனிதக் குரல் தெளிவாகக் கேட்டது. ''என்னிடம் கேட்டால் காரில் என்ன குறை என்று எளிதாகச் சொல்லிவிடுவேன்.'' என்று சொன்னது அந்தக் குரல்.''

''அந்தக் குதிரை கறுப்பாக இருந்ததா?''

''ஆமாம்.''

''அதன் பின் பகுதி தாழ்ந்திருந்ததா?''

''ஆமாம்.''

''அதற்குக் கப்பைக் கால்கள் இருந்ததா?''

''ஆமாம்.''

''அது சொன்னதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாதே. அது ஒரு பழைய தத்துவவாதி. பல வருடங்களுக்கு முன் இறந்து விட்டார். அந்தப் பகுதியில் பேயாக உலவுகிறார். பழைய பழக்கம் காரணமாக 'என்னிடம் எதையாவது கேளுங்கள்' என்று மக்களிடம் கெஞ்சிக்கொண்டிருப்பார். அவருக்கு கார் என்ஜினைப் பற்றி ஒன்றுமே தெரியாது. அவர் குதிரை இல்லை. அந்த வயதான குதிரையின் உடலிற்குள் புகுந்து படாதபாடு படுத்துகிறார். அவரைப் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டாம்.''

இப்படித்தான் வாழ்க்கையின் எல்லா சாலைகளிலும் நடக்கிறது. பழைய பேய்கள் இன்னும் உலவிக்கொண்டுதான் இருக்கின்றன. அவற்றுக்கு எல்லாக் கேள்விகளுக்கும் விடை தெரியும். நீங்கள் கேட்க வேண்டும் என்பதற்காகவே காத்துக்

கொண்டிருக்கின்றன. கேட்டால் போதும் உங்களுக்கு எல்லா பதில்களும் கிடைக்கும்.

ஆனால் இங்கே வாழ்க்கை நிமிடத்திற்கு நிமிடம் மாறிக் கொண்டேயிருக்கிறது. இந்தப் பழைய பிசாசுகளுக்கு கார் என்ஜினைப் பற்றி ஒன்றுமே தெரியாது

உங்களின் இன்றைய கேள்விக்குக் கடந்த காலத்திலிருந்து பதில் தேட முடியாது. ஏனென்றால் இன்று நிலமை மாறிவிட்டது. இங்கே பதில் கண்டுபிடிப்பது முக்கியம் அல்ல கேள்வி எழுப்புவதுதான் முக்கியம். அதனால்தான் கடந்தகாலம் கவைக்கு உதவாது. கடந்த காலத்தில் கேள்விக்குக் கண்டுபிடிக்கப்பட்ட்ட பதில் அதைக் கண்டுபிடித்தவனோடு செத்துவிட்டது.. ஆனால் பேய்கள் இன்னும் உலவிக்கொண்டுதான் இருக்கின்றன. உங்கள் வேதங்கள், பைபிள், குரான் பகவத் கீதை எல்லாமே பேய்கள் தான். அவை உண்மை அல்ல. எப்போதோ செத்துவிட்டன. என்றாலும் அவற்றுக்கு ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது.

முதலில் இந்தக் கவர்ச்சியைப் புரிந்து கொள்ளுங்கள். இறந்தகாலத்திற்கு நிகழ்காலத்தைவிட அதிகம் கவர்ச்சி ஏன் இருக்கிறது? அவை ஏன் இன்னும் உங்கள் கால்களைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அவற்றை ஏன் இன்னும் சுமந்து கொண்டிருக்கிறீர்கள்? ஏன் இன்னும் அவற்றைக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் நீங்கள் புதிதாக வந்தவர்கள். ஏன் கடந்த காலத்தையும் வல்லுனர்களையும் ஆளுமைகளையும் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்?

முதல் காரணம்:

ஒரு மனிதன் செத்து அதிக காலம் ஆகிவிட்டால் அவன் ஆரம்பித்து வைத்த மரபு இன்னும் மகத்தானதாகக் கருதப்படும். காலம் எல்லாவற்றையும் புனிதமாக்கிவிடும். இன்று புத்தர் உயிருடன் இருந்தால் அவரை நீங்கள் பொறுத்துக் கொண்டிருக் கலாம். அவரிடம் அன்பு கொண்டிருந்தால் அதிகப் பட்சமாக அவர் பேச்சைக் கேட்கலாம். ஆனால் உங்களால் அவரைத்

தெய்வமாக மதிக்க முடியாது. இந்த மனிதனுக்கு உச்ச கட்ட ஞானம் வந்துவிட்டது என்று உங்களால் நம்ப முடியாது காரணம் அவர் உங்களைப் போல்தான் இருப்பார். ரத்தமும் சதையும் உள்ளவராக வயதானவராகவோ இளைஞராகவோ, ஆரோக்கியமாகவோ இல்லை நோயாளியாகவோ உங்களைப் போலவே எப்போதும் மரணத்தின் நிழலில் இருப்பார். அவருக்கும் பசித்தால் உணவு வேண்டும். படுக்க படுக்கை வேண்டும். உங்களைப் போல் அவரும் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். தாகம் எடுத்தால் அதே தண்ணீரைத்தான் குடிக்க வேண்டும். பசித்தால் நீங்கள் சாப்பிடும் அதே ரொட்டியைத்தான் சாப்பிட வேண்டும். அவருக்கு எப்படி மரணமில்லாப் பெருவாழ்வின் ரகசியம் தெரிந்தது? அதை நம்புவதே உங்களுக்குக் கஷ்டமாக இருக்கும்.

அது முயன்றாலும் நடக்காது. உங்களை வற்புறுத்திக் கொண்டாலும் உங்கள் மனதின் ஆழத்தில் ஒரு சந்தேகம் இருந்துகொண்டே இருக்கும்.

ஆனால் இன்றைய நிலை வேறு. இருபத்தியைந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. இன்று புத்தர் ரத்தமும் சதையும் உள்ள ஒரு மனிதர் அல்ல. இன்று புத்தர் நோய்வாய்ப்பட மாட்டார். அவருக்குப் பசி எடுக்காது. அவருக்கு உணவோ மருந்தோ தேவையில்லை. இன்று அவர் சாக மாட்டார். காலம் அவரைப் புனிதமாக்கிவிட்டது. காலம் ஆக ஆக அவரும் உங்களைப் போல் ஒருவர் என்பதையே மறந்து விடுகிறீர்கள். இறந்து போனவரின் உருவம் பொன்னுருவமாகிவிடுகிறது. அது மேலே மேலே போய் சொர்க்கத்தில் எங்கேயோ தொலைந்து போய்விட்டது. இப்போது அதன் ஒரு சிறு துகளைத்தான் உங்களால் காணமுடிகிறது. இந்தச் சூழ்நிலையில் புத்தருக்கு உச்சகட்ட ஞானம் இருந்தது என்பதை நம்புவது எளிது.

அதனால்தான் உங்கள் இறந்தகாலம் உங்களை இன்னும் பேயுருவில் வந்து ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் தெய்வமாக வழிபடும் புத்தர் இன்று உயிருடன் வந்தால் அவரை நீங்கள் ஒட்டுமொத்தமாக நிராகரித்து விடுவீர்கள். அதனால்தான்

ஏசுநாதர் இன்று வணங்கப்படுகிறார். அவர் வாழ்ந்த காலத்தில் சிலுவையில் அறையப்பட்டார். வாழும்போது கொல்வதும் செத்த பிறகு வணங்குவதும் மனித இனத்தின் பழக்கம். மரணம் ஏன் அவரை அவ்வளவு முக்கியமானவராக மாற்றுகிறது? சாவு ஏன் அவர் வார்த்தைகளைச் செறிவுள்ளதாக மாற்றுகிறது? மரணம் உடலை அழைக்கிறது. அதோடு உங்களுக்கும் அவருக்கும் உள்ள மனிதரீதியான தொடர்பு அறுந்துவிடுகிறது. இப்போது உங்களுக்கு அவருடைய ஆன்மிக வடிவம் மட்டுமே மிஞ்சியிருக்கிறது. இது ரத்தம் எலும்பு சதை எதுவுமே இல்லாத வடிவம். பௌதிக வடிவத்தைவிட மேலானது.. இப்போது அந்த வடிவத்தின் மேல் உங்களுக்குப் பிரியப்பட்ட தன்மைகளை ஏற்றிக் கொள்ளலாம்.

அது போல் வாழும் மனிதருக்குச் செய்வது கடினம். அவர் உண்மையிலேயே அங்கு இருக்கிறாரே! நீங்கள் அவர் மேல் ஏற்றிச் சொல்லும் தன்மைகளை அவர் தகர்த்துவிடுவார். நீங்கள் உருவேற்றிச் சொல்லும் வார்த்தைகளுக்கு அடிமையாக அவர் ஒருநாளும் உடன்படமாட்டார். ஆனால் அவர் இறந்துவிட்டால் அவரால் ஒன்றும் செய்யமுடியாது. இறந்துவிட்ட ஏசுநாதரால் என்ன செய்ய முடியும்? இல்லை காலம் முடிந்துவிட்ட புத்தரால்தான் என்ன செய்யமுடியும்?

இறந்துவிட்ட குருதேவர் விஷயத்தில் உங்கள் கற்பனைகள் எல்லாமே செல்லுபடியாகும். நீங்களே அவருக்கு முக்கியத்துவத் தையும் மேன்மையையும் கொடுக்கலாம்.

ஆனால் வாழும் ஒருவருக்கு அந்த மேன்மையைக் கொடுப்பது முடியாத காரியம் - உங்களிடம் அபரிமிதமான நம்பிக்கை இருந்தாலொழிய அதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. புத்தர் இருக்கும் போதும் சரி இறந்தபிறகும் சரி முழுநம்பிக்கை உடையவர்களுக்கு அவர் உடலாகத் தோன்றவில்லை. அவர்கள் இன்னும் ஆழமாக ஊடுருவிப் பார்க் கிறார்கள். புத்தர் ஒளிபுகவல்ல வடிவமாகத்தான் அவர்களுக்குத் தோன்றினார். அவர் உடலில் இருந்திருக்கலாம். ஆனால் அவர் உடல் அல்ல. அவர் உங்களுடன் வாழ்ந்திருக்கலாம். ஆனால்

அவர் உங்களுக்குச் சொந்தம் அல்ல. அவர் மேலேயிருந்து வந்தவர். ஏசு நாதர் பரமபிதாவின் திருமகன் என்று சொல்வதன் தாத்பரியம் இதுதான். அவதாரம் என்பதன் அர்த்தம் இதுதான்,. தெய்விகத்தன்மை மேலிருந்து கீழ் இறங்குவதுதான் அவதாரம். சமணர்கள் சொல்லும் தீர்த்தங்கரர் என்ற வார்த்தையின் பொருளும் அதுதான். கண்ணுக்குப் புலப்படாத ஒன்றிலிருந்து அவர் தோன்றினார். முழு நம்பிக்கை என்ற கண் மூலம் அவரின் மூலத்தைப் பார்க்கலாம். மனம் அவரைப் பார்க்க முடியாது. ஆனால் இறந்துவிட்டால் மனம் தன் எண்ணங்களை அவர் மேல் ஏற்றிச் சொல்ல முடியும்.

முதல் விஷயம்: உங்களுக்கும் புத்தன் போன்றவர்களுக்கும் கால இடைவெளி அதிகமாகும் போது .அவர்கள் மேல் உங்கள் கற்பனைகளை ஏற்றிச் சொல்லும் சுதந்திரம் இன்னும் அதிக மாகிறது. அவர்களைச் சுற்றி ஒரு கனவை உருவாக்கலாம். அதன்பின் அந்தக் கனவை வழிபடலாம். அந்தக் கனவுருவம் சொல்வதைக் கவனிக்கலாம்.

ஆனால் நமது பிரச்சினையே இங்குதான் தொடங்குகிறது. உயிருடன் இருக்கும் புத்தரால் உங்களுக்கு உதவி புரிய முடியும். அவர் உயிருடன் இருக்கும் போது அவருடைய ஆன்மிகத் தன்மையை உள்வாங்கிக் கொள்ள முடியும். அவர் உயிருடன் இருக்கும் போது உங்களுக்கு எதையாவது சொல்ல முடியும். ஆனால் அவர் இறந்துவிட்டால் அது முடியாமல் போய்விடும். ஏன்? புத்தர் போன்றவர்களிடம் இருப்பதை மொழி மூலம் கொடுக்க முடியாது. மொழி மூலம் அதைக் கொடுக்க முடியும் என்றால் புனித நூல்கள் இருக்கின்றனவே! புத்தர் என்ற வார்த்தை இருக்கின்றதே! ஆனால் அதை வார்த்தைகள் மூலம் கொடுக்க முடியாது. வார்த்தை ஒரு சால்ஜாப்பு. அவ்வளவுதன்.

உயிருடன் இருக்கும் புத்தர் உங்களுடன் பேசுகிறார். அது ஒரு சாக்குதான். உங்களுடன் மனதளவில் ஒரு தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள அந்தப் பேச்சு ஒரு சாக்கு. நீங்கள் கொஞ்சம் உன்னிப்பாகக் கவனித்தால் வேறு ஏதோ ஒன்று நிகழ்வதை உணா முடியும் வார்த்தைகளுக்கு இடையில் வரிகளுக்கு இடையில்

புத்தர் உங்களை வந்தடைகிறார் என்று உணர முடியும். அது அவர் வாழும் போது மட்டுமே கிடைக்கக்கூடிய ஒரு வாழும் அனுபவம்.

அவர் உங்களுக்கு ஒரு கோட்பாட்டைச் சொல்லிக் கொடுக்க வரவில்லை. அவர் மனதில் இருக்கும் தேற்றங்களை உங்களுக்கு மாற்றித்தர வரவில்லை. அவர் தன்னையே மாற்றித்தர வேண்டும். அவர் ஒரு புனைவையோ தத்துவத்தையோ சொல்லித்தர வேண்டியதில்லை ஒரு வாழும் அனுபவத்தைச் சொல்லித்தர வேண்டும். அது ஒரு திறமை. தத்துவமல்ல.

உங்களுக்கு நீச்சல் தெரியும் என்று வைத்துக் கொள்வோம். அதை மற்றவர்களுக்கு வார்த்தைகளால் சொல்லித் தர முடியுமா? என்ன சொல்வீர்கள்? நீச்சல் குறித்து நீங்கள் எது பேசினாலும் போதாது. ஒரே வழி உங்கள் சீடனை ஆற்றுக்கு அழைத்துப் போவதுதான். அங்கே முதலில் நீங்கள் அவனுக்கு நீந்திக் காட்ட வேண்டும். அதன் மூலம் அவனுக்கு நம்பிக்கையையும் தைரியத்தையும் தரவேண்டும். அதன் பின் "நீயும் உள்ளே வா" என்று அவனைக் கூப்பிட வேண்டும். உங்கள் மேல் நம்பிக்கை இருந்தால் அவன் வருவான். கொஞ்சம் கொஞ்சமாக அந்த நீச்சல் அனுபவத்தில் அவன் திளைக்க வேண்டும். அந்த அனுபவம் தான் அவனுக்குக் கற்றுக் கொடுக்கும்.

ஆன்மிகமும் நீச்சல் போலத்தான். அதைப் பற்றி எதையும் வார்த்தையில் சொல்லிப் புரியவைக்க முடியாது. நீங்கள் அதை வர்ணிக்கலாம். ஆனால் வர்ணனை என்பது ஒரு செத்த பாம்பு. ஆன்மிகமோ ஒரு உயிர்த்துடிப்பான அனுபவம். அந்தத் திறமை உள்ளவர் யாராவது இருக்கும் போது ஏதோ நிகழ்கிறது. அவர் உங்களிடம் எதையும் சொல்ல மாட்டார். ஆனால் நீங்கள் கற்கத் தொடங்குவீர்கள். அதுதான் இதில் உள்ள மர்மம். அவரால் உங்களுக்குக் கற்பிக்க முடியாது. ஆனால் நீங்களாகக் கற்க முடியும் - அவரை ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் நீங்கள் இருந்தால்.

அதனால் ஆன்மிகப்பாடங்கள் சீடனையும் அவனுடைய ஏற்கும் திறனையும் சார்ந்தே இருக்கின்றன. அவை குருவைச் சார்ந்து இல்லை. குருதேவர் இருக்கிறார். ஆனால் நீங்கள்தான்

அவரை உள்வாங்கிக் கொள்ள வெண்டும். அவரை அனுமதிக்க வேண்டும். உங்களை ஊடுருவி உள்ளே செல்ல அவருக்கு உரிமை கொடுக்க வேண்டும்.

நீங்கள் பயந்தால் உங்கள் இருப்பே சுருங்கிவிடும். நீங்கள் உங்களையே மூடிக்கொண்டு விடுவீர்கள். அந்த நிலையில் உங்கள் குரு உங்கள் கதவைத் தட்டிக் கொண்டேயிருப்பார். அவருக்கு எந்த பதிலும் கிடைக்காது. அவர் இன்னும் அதிகமாகத் தட்டத் தட்ட நீங்கள் இன்னும் அதிகமாகப் பயந்து இன்னும் அதிகமாகச் சுருங்கிவிடுவீர்கள். அந்த சமயத்தில் ஒரு நல்ல குரு உங்கள் நிலையைத் தெரிந்துகொண்டு கதவைத் தட்டுவதை நிறுத்திவிடுவார். கதவைத் தட்டுவதும் ஒரு வகை வன்முறை தானே! பொறுமையாக உங்கள் கதவிற்கு வெளியே காத்துக் கொண்டிருப்பார்,. நீங்கள் எப்போது தயாராகிக் கதவைத் திறக்கிறீர்களோ அப்போது உங்களிடம் உங்கள் பாடங்களைக் கொடுத்துவிடுவார்.

இது வாழும் குருதேவரிடம்தான் சாத்தியம். இறந்து போன குருவிடமிருந்து நீங்கள் எதையும் கற்க முடியாது. அந்தக் குருவின் வார்த்தைகள் உங்களிடம் இருக்கும். பைபிள் இருக்கும். நீங்கள் அதைப் படித்து பெரிய மேதையாகலாம். தத்துவ அறிஞர் ஆகலாம். அதைவைத்து பல புதிய தேற்றங்களையும் கோட்பாடுகளையும் உருவாக்கலாம். அதைவைத்து ஒரு இறையியல் தத்துவத்தைக்கூட உருவாக்கலாம். ஆனால் ஏசு நாதர் அங்கே இருக்க மாட்டார். ஏசு நாதருடன் வாழ வேண்டும். அவருடைய முன்னிலை முக்கியத்துவம் வாய்ந்தது.

இரண்டாவது விஷயம் - மனம் எப்போதும் தேற்றங் களையும் வார்த்தைகளையும் தத்துவங்களையும் நம்பிக்கொண் டிருக்கும். அவற்றை நிர்வகிப்பது எளிது. அது மனதிற்குப் பிடித்த விளையாட்டுக்களில் ஒன்று. ஏனென்றால் அந்த விளையாட்டில் எந்த இழப்பும் இல்லை. மாறாக அதனால் மனம் இன்னும் வலிமை பெறும். இன்னும் நிறைய விஷயங்கள் தெரியத் தெரிய உங்கள் மனம் ''ஆஹா! நான் இப்போது பெரிய மனிதனாக்கும்'' என்று மனம் பூரித்துப் பெருமிதம் அடையும்.

வாழும் குருவிடம் ஒரு பிரச்சினை இருக்கிறது. நீங்கள் அவரிடம் முழுமையாகச் சரணடைய வேண்டும். உங்கள் அகந்தை அங்கே கரைந்து ஆவியாக வேண்டும். ஒரு குரு தேவருடன் வாழ்வது என்பது மரணத்துக்குச் சமமான அனுபவம். ஆமாம் நீங்கள் இறந்தேயாக வேண்டும். நீங்கள் இறக்காமல் எதுவும் நடக்காது. இறந்தால்தான் மறுபிறப்பு நிகழும்.

நீங்கள் அங்கு இல்லாத போது திடுதிப்பென்று அங்கே தெய்வம் வந்துவிடுகிறது. எனவே வாழும் குருநாதர் மனதிற்கு மரணத்தின் அனுபவத்தைக் கொடுக்கிறார். அது ஆன்மாவின் மறுபிறப்பு. அகந்தையின் மரணம். இறந்து போன குருதேவர் களைப் பார்த்து நீங்கள் பயப்பட வேண்டாம். அவர்களுடன் நீங்கள் இந்த ஆளுமைகள் - வல்லுனர்கள் விளையாட்டை ஆடிக்கொண்டு இருக்கலாம். அவர்கள் விட்டுச் சென்ற வார்த்தைகளின் அர்த்தம் உங்கள் கையில் இருக்கிறது. எந்தக் கோட்ப்பாட்டிலும் அதன் பொருள் அதில் உள்ளார்ந்து இல்லை. நீங்கள்தான் அர்த்தத்தைக் கற்பிக்க வேண்டும். நீங்கள் கிருஷ்ணரின் வார்த்தைகளில் கீதை படித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று நினைத்தால் அது தவறு. வார்த்தை இருக்கிறது. ஆனால் அர்த்தம்? அது நீங்களாகக் கற்பிப்பது.

ஒவ்வொரு புனித நூலும் ஒரு கண்ணாடியே! அதில் நீங்கள் உங்கள் முகத்தைத்தான் காண்பீர்கள். உங்களுக்குப் பிடித்ததை அதில் படித்துக் கொள்ளலாம். உங்கள் மனம் மிகவும் சாமர்த்தியமானது. தனக்கு எதிராகச் சொல்லப்படும் எதனையும் அது கவனிக்காது. அது தன் வழியில் அர்த்தத்தைக் கற்பித்துக் கொள்ளும். அதைக் கண்டிக்க கிருஷ்ண பரமாத்மா அங்கில்லையே! ''நான் இந்த அர்த்தத்தில் சொல்லவில்லை'' என்று சொல்ல அவர் அருகில் இருக்க மாட்டார்.

பிரபல மனவியல் மேதை சிக்மண்டு ஃப்ராய்டுக்கு மிகவும் வயதாகிவிட்டது. தன் வாழ்க்கையின் கடைசி வருடத்தில் தன் சீடர்களை எல்லாம் ஒன்று திரட்டினார். அவருக்கு உலகெங்கிலும் சீடர்கள் இருந்தார்கள். மன ஆராய்ச்சி என்ற மிகப்பெரிய

துறையை அவர் உருவாக்கியிருந்தார். அவர் உலகெங்கிலும் போற்றப்பட்டார்.

அவருடைய இருபது மாணவர்கள் அவருடன் சேர்ந்து மதிய உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி ஃப்ராய்டு என்ன சொல்லியிருக்கிறார் என்று காரசாரமாக விவாதிக்க ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு இருந்த பரபரப்பில் ஃப்ராய்டு அங்கு அன்று அவர்களுடன் இருக்கிறார் என்பதையே மறந்துபோய்விட்டார்கள்.

தங்களை மறந்து சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவரை ஒருவர் வெட்டிப் பேசுவதும், மூர்க்கத்தனமாக வாதம் புரிவதுமாக இருந்தார்கள். ஒரே ஒரு கோட்பாடு. இருபது அர்த்தங்கள். அந்தக் கோட்பாட்டை உருவாக்கிய மேதையும் அங்கே அவர்களுடன் அமர்ந்திருந்தார். ஒரு கட்டத்தில் பொறுமை இழந்த ஃப்ராய்டு மேஜையைப் பலமாகத் தட்டினார். பேச்சு நின்றது.

''ஐயா சிஷ்ய சிகாமணிகளே நான் இன்னும் உயிருடன்தான் இருக்கிறேன். நீங்கள் பேசுவதைக் கேட்கும் போது என் காலத்திற்குப் பின்னால் என்ன நடக்கப்போகிறது என்று என்னால் உணர முடிகிறது. நான் எந்த அர்த்தத்தில் அந்த வாசகத்தைச் சொன்னேன் என்று என்னிடம் கேட்க உங்கள் யாருக்குமே தோன்றவில்லையே! நான் உயிருடன் இருக்கும்போதே என் வார்த்தைகளுக்கு இருபது அர்த்தங்கள் இருக்குமானால் நான் செத்தபிறகு இருநூறு, இரண்டாயிரம் இருபது லட்சம் அர்த்தங்கள் கூட உண்டாகலாம். அப்போது ஃப்ராய்டு உண்மையிலேயே எதை நினைத்து இதை எழுதினார் என்பதைக் கேட்கும் வாய்ப்புக் கூட உங்களுக்கு இருக்காது.

இப்படித்தான் மதங்களும் பிரிவுகளும் பிறக்கின்றன.

ஏசு நாதர் ஒரு எளிமையான மனிதர். ஆனால் கத்தோலிக்கர் களையும் பிராட்டஸ்டண்ட்களையும் அவர்களுக்கிடையே இருக்கும் ஆயிரக்கணக்கான உட்பிரிவுகளையும் பாருங்கள்.

அவர்கள் பைபிளுக்குக் கொடுக்கும் அர்த்த பேதங்களைப் பாருங்கள்.

ஏசுநாதர் பாவம் எளியவர். ஒரு மரத்தச்சரின் மகன். அவர் வாழ்ந்த காலத்தில் இறையியலின் கோட்பாடுகளைப் போதித்ததில்லை. அவர் வார்த்தைகளின்பாற்பட்டவர் அல்லர். அனுபவத்தின் பாற்பட்டவர். அவர் கதைகள் துணுக்குகள் மூலமாகத் தன் செய்தியைச் சொன்னார். அவர் படிக்காத பாமர மக்களிடம்தான் அதிகம் பேசினார். அவர் அர்த்தங்கள் மிகவும் எளிமையாக இருந்தன. ஆனால் அவரைப் பின்பற்றி வந்த கத்தோலிக்கர்களும் பிராட்டஸ்டண்ட்களும் ஏசு நாதர் சொன்ன வார்த்தைகளிலிருந்து பல புத்தக மலைகளையே உருவாக்கி விட்டார்கள். சின்னச் சின்ன விஷயங்களுக்குக்கூட முடிவில்லாத விவாதங்கள் செய்கிறார்கள். இந்தப் பரபரப்பில் அவர்கள் ஏசுநாதரை மொத்தமாக மறந்துவிட்டார்கள்.

ஃப்ராய்டையே மறக்கும் போது இறந்து போன ஏசுவை எப்படி நினைவில் வைத்துக் கொள்வார்கள்? இந்துக்களைக் கேளுங்கள். பகவத் கீதைக்கு ஆயிரக்கணக்கான அர்த்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டும் புதிது புதிதாக யாராவது கீதைக்குப் பொருள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஒருவர் சொன்ன பொருளை மற்றவர் ஏற்றுக் கொள்வதில்லை. பகவத் கீதையின் முக்கிய செய்தி துறவுதான் என்று சங்கரர் சொல்கிறார். செயலில்லாமல் இருப்பதுதான் கீதையின் தாத்பர்யம் என்று சொல்கிறார்.

லோகமான்ய திலகரோ கீதையின் சாரம் செயலாற்றலே என்கிறார். ராமானுஜரோ கீதை துறவைப் பற்றியும் சொல்லவிலை செயலாற்றலைப் பற்றியும் சொல்லவில்லை. கீதையின் தத்துவம் பக்திதான் என்பது அவருடைய வாதம்.

வேடிக்கையைப் பாருங்கள். ஆயிரம் அர்த்தங்கள். யாருக்கும் யாருடனும் உடன்பாடில்லை. நீங்கள் படிக்கும் போது ஆயிரத்தி ஒன்றாவது அர்த்தம் கிடைக்கும். அது உங்களுடைய அர்த்தம். உங்கள் மனதை உள்ளே கொண்டுவருவீர்கள். உங்கள்

மனம் சேகரிக்கும் செய்தியினாலும் அதில் பெறும் அறிவினாலும் இன்னும் வலுப்பெற்றுவிடும்.

ஆக உங்கள் மனதுக்கு இதனால் எந்த ஆபத்தும் இல்லை. ஆனால் ஒரு வாழும் குருவின் முன்னிலையில் இருக்கும் போது உங்கள் மனம் மரணத்தின் விளிம்பில் இருக்கிறது. கிருஷ்ணர் களிடமிருந்து தப்பித்து உங்கள் மண்டைக்குள் கீதையைச் சுமந்து கொண்டு திரியலாம். ஏசுநாதர்களிடமிருந்து தப்பித்துச் சட்டைப்பையில் பைபிள்களை வைத்துக் கொண்டு உலாவலாம்.

பைபிளைத்தான் உங்கள் சட்டைப்பையில் வைத்துக் கொள்ள முடியும். ஏசுநாதரை அல்ல. பைபிள் உங்களுக்குச் சொந்தம். ஆனால் ஏசு நாதருக்கு நீங்கள் உரியவராக ஆனால்தான் அவர் அருகே செல்ல முடியும். அவர் உங்களைத் தன் உடைமையாக்கிக் கொள்ள வேண்டும்.

மூன்றாவதாக விஞ்ஞானத்தை எழுத்தில் வடிக்கலாம். அதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. விஞ்ஞானம் என்பது தேற்றங்களும் விளக்கங்களும்தான். அதை வார்த்தையில் வடிப்பது கடினமல்ல. அது ஒன்றும் புரியாத புதிர் அல்ல. விஞ்ஞானத்தின் அடிப்படையே பொருள்களைச் சுற்றி இருக்கும் புதிரை அவிழ்ப்பதுதான். விஞ்ஞானத்திற்கு என்று சில சட்டதிட்டங்கள் இருக்கின்றன சில கோட்பாடுகள் இருக்கின்றன. அவற்றை எழுத்தில் வடிக்கலாம். அவற்றைப் புரிந்து கொண் டால் போதும். விஞ்ஞானம் உங்களுக்கு அத்துப்படியாகிவிடும்..

மதம் விஞ்ஞானம் போன்றதல்ல. கலையைப் போன்றது. குறியீடுகள் நிறைந்தது. அது யதார்த்தமானது அல்ல. அது குறியீட்டு இயல்.

பிரபல ஓவியர் பிக்காசோவைப் பார்க்க அவருடைய நண்பர் வந்திருந்தார். அந்த நண்பர் ராணுவத்தில் பணிபுரிந்து கொண் டிருந்தார். பிகாசோவின் கலைக்கூடத்தைச் சுற்றிப் பார்த்தார்.

''என்ன அபத்தம் இது! ஒரு ஓவியம் கூட உண்மையாக இல்லையே! ஒன்று கூட உண்மையைப் பிரதிபலிக்கவில்லையே! எல்லாமே பொய்யாக, கற்பனையாக அல்லவா இருக்கிறது.''

நிஜ வாழ்வில் பிகாசோவின் ஓவியத்தில் இருப்பது போல் எதையும் பார்க்க முடியாது. அவருடைய ஓவியம் யதார்த்தம் இல்லை. யதார்த்தம் பற்றிய அவருடைய உணர்வு.

வெளியில் இருப்பதைக் கண்டுபிடிக்க விஞ்ஞானம் முயல்கிறது. கலையோ வெளியில் காணும் பொருள்களில் உணர்வுகளைக் கண்டுபிடிக்க பாடுபடுகிறது. ஒரு மலரைப் பார்க்கிறீர்கள். அதைப் பற்றி ஒரு விஞ்ஞானியிடம் கேட்டால் என்ன மாதிரியான ரசாயன பொருள்கள் அந்த மலரில் இருக்கின்றன என்று புட்டுப் புட்டு வைப்பார். அவை எல்லாம் இருக்கின்றன. நாம் மறுக்கவில்லை. ஆனால் அந்த ரசாயனப் பொருள்கள் மட்டும் மலர் என்றாகிவிடாதே. அந்தப் பொருள் களில் எல்லாம் இல்லாத ஒரு அழகு மலரில் இருக்கிறதே. அழகு பற்றித் தெரியவேண்டும் என்றால் ஒரு கலைஞனிடம் கேட்க வேண்டும். ஆனால் அவன் ரசாயனப் பொருள்களைப் பற்றிப் பேசமாட்டான். அவன் அந்த மலரைப்பற்றி கவிதைகள் கொடுப் பான். அது விஞ்ஞானியின் விளக்கத்தைவிட உண்மையானதாக இருக்கும்.

ஓவியர் பிகாசோ நண்பர் சொன்னதைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தார். பேச்சு வேறு விஷயங்களுக்குத் தாவியது. தன் காதலியின் படத்தைக் காட்டினார் நண்பர். அது ஒரு சிறியப் புகைப்படம். பிகாசோ பலமாகச் சிரிக்கத் தொடங்கினார்.

''இது என்னய்யா இந்தப் பெண் ஆறு அங்குலம் கூட இல்லை. இவளை எப்படிக் காதலித்தீர்கள்? இவளோடு எப்படி உறவு கொள்வீர்கள்''

''என்ன பினாத்துகிறீர்கள் பிகாசோ? இது பெண் அல்ல. பெண்ணின் புகைப்படம்.''

''படம் என்பது ஒரு குறியீடுதான். அதுவே பொருள் அல்ல. அது வேறு எதையோ ஒன்றைக் குறிக்கிறது. அது ஒரு வர்ணனை. அது குறிக்கும் பொருள் போல் படம் இருக்காது. அந்தப் பொருளை உங்களுக்குச் சூசகமாக உணர்த்தும்.''

மதம் விஞ்ஞானம் அல்ல. கலை. கலையை விடவும் நுட்பமானது மதம். கலை கூட வெளி உலகைத்தான் குறிக்கிறது. மதம் நமக்குள்ளே இருக்கும் உலகைக் குறிக்கிறது. வெளியுலகிற்குக் காட்ட கலையிடம் குறியீடுகள் உண்டும். கலை ஒரு ரோஜா மலரை அழகான சித்திரமாகக் கொடுக்கும். ஆனால் உண்மையான ரோஜா அது அல்ல. பிகாசோவின் ரோஜாவும் வேன் கோ வரைந்த ரோஜாவும் தோட்டத்தில் மலர்ந்த ரோஜாவைப் போல் இருக்காது. என்றாலும் அவையும் ரோஜாக் களே. ஆங்காங்கே ஒற்றுமைகள் இருக்கும். ஒன்று மற்றொன்றை நினைவூட்டும்.

ஆனால் புத்தர் நிர்வாண நிலையைப் பற்றிப் பேசும் போது அதை ஒப்பிட்டுப் பார்க்க வெளியுலகில் எதுவும் இல்லை. அதைப் போல் எதையும் உங்களால் வெளியே பார்க்க முடியாது. அது போல் ஏசு நாதர் இறைவனின் சாம்ராஜ்ஜியத்தைப் பற்றிப் பேசுவார். அது உலகில் உள்ள ஒரு ராஜ்ஜியம் அல்ல. கலை வெளியுலகத்தைக் குறிக்கிறது. குறியீடு கொஞ்சம் கஷ்டம் என்றாலும் கொஞ்சம் முயன்றால் கலை எதனைக் குறிக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

ஆனால் மதமோ உள்ளார்ந்த நிலையைக் குறிக்கிறது. அதற்கு இணையாக வெளியுலகில் நீங்கள் எதையும் காண முடியாது. உங்களுக்குள் ஆழமாகப் போனால் ஒழிய அதன் பொரு ளையோ முக்கியத்துவத்தையோ புரிந்து கொள்ள முடியாது. அதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையென்றால் அதனைக் குறிக்கும் வார்த்தையை மட்டும் சுமந்து கொண்டிருப்பீர்கள். அந்த வார்த்தை அது குறிக்கும் நிலை அல்ல. 'வரைபடம் இடமாகாது. ஒரு அழகான பெண்ணின் படம் அந்தப் பெண் அல்ல. கடவுள் என்ற வார்த்தையைக் கிளிப்பிள்ளை போல் சொல்லிக் கொண்டிருப்பீர்கள். ஆனல் கடவுள் என்றால் என்னவென்று உங்களால் உணர முடியாது. ஆன்மிகம் என்பதும் நுண்கலை களைப் போன்றதுதான்.

ஒரு புத்தன் என்ன செய்கிறான்? அவன் ஒரு கலைஞன். உங்களை வைத்து கடவுள்கள் செய்கிறான் புத்தன். கல்லா

யிருக்கும் உங்களைச் உளியால் அடித்துச் செதுக்கிக் கொண்டிருக்கிறான் - ஒரு சிற்பியைப் போல.

தேவையில்லாத பாகங்களை எல்லாம் வெளியில் தூக்கி யெறிகிறான். உள்ளே இருக்கும் இறையுருவம் படிப்படியாக வெளியே வருகிறது. முதலிலேயே அது அங்குதான் இருந்தது. சிற்பி தன் உளியை எடுத்துச் செதுக்கும் முன்பும் அது அங்குதான் இருந்தது. ஆனால் கூடவே தேவையில்லாதவையும் இருந்தன. சக்கையைச் சதையிலிருந்து பிரித்துக் கடாசியபின் உள்ளே இருக்கும் சாரம் முழுதாக அதன் முழு மகாத்மியத்துடன் வெளி வருகிறது. இப்படி மகாத்மியம் வெளிப்படும் போது அந்தத் தெய்விக உலகம் இந்தச் சாதாரண உலகில் ஊடுருவுகிறது. புத்தன் புதிதாக எதையும் கொண்டுவரவில்லை. அவன் உங்களை மாற்றுகிறான். அவ்வளவுதான்.

உங்களுக்குள் ஏற்கனவே தெய்விகம் இருக்கிறது. ஆனால் அது இந்த உலக அழுக்கோடு கலந்துவிட்டது. அதைப் பிரித்து எடுக்க வேண்டும். சாரத்தைச் சக்கையிலிருந்து பிரித்து எடுக்க வேண்டும். எது நீங்களாக இருக்கிறீர்களோ அதை உங்கள் உடமைகளிலிருந்து பிரிக்க வேண்டும். உடமைகளை உடைய வரிடமிருந்து பிரிக்க வேண்டும். ஆன்மாவை உடலிலிருந்து பிரிக்க வேண்டும். மையத்தை வெளிச்சுற்றிலிருந்து பிரிக்க வேண்டும். அது ஒரு தனித்திறமை.

எந்த ஓவியனாலும் உங்களுக்குப் படம் வரையச் சொல்லித்தர முடியாது. ஒரு பெரிய ஓவியனுடன் நீங்கள் சேர்ந்து வாழ வேண்டும். பிகாசோவிடம் போய் ''எப்படி படம் வரைவது? கொஞ்சம் வழிமுறைகளைச் சொல்லித் தாருங்களேன்.'' என்று கேட்டால் அவர் மௌனமாக இருப்பார். ஏனென்றால் அவருக்கும் வழிமுறைகள் தெரியாது.

ஓவியம் வரைதல் என்பது ஒரு உன்னதமான நிகழ்வு. அது உணர்வின்மை நிலையிலிருந்து உண்டாகிறது. பிகாசோ படம் வரையும். போது அவருக்கு வழிமுறைகள், விதிமுறைகள் சட்டதிட்டங்கள் என்று எதுவும் தெரியாது. அவர் தன்

ஓவியத்திற்குள் நுழையும் போது நீங்கள் அவருடன் இருக்க வேண்டும். அவரே ஓவியமாக மாறுகிறார். அதில் முழுவதுமாக ஆழ்ந்து போகிறார். ஒரு கட்டத்தில் ஓவியர் மறைந்து அந்த இடத்தில் ஓவியம் மட்டுமே இருக்கிறது. அந்தக் கட்டத்தில் ஓவியர் எந்த முயற்சியும் எடுத்துக் கொள்வதில்லை. இந்த நிகழ்வை அனுபவித்து உணர்ந்தால் தான் புரிந்து கொள்ள முடியும். ஓவியம் வரையும் கைகள் பிகாசோவினுடையது அல்ல. உணர்வின்மை நிலை, தாவோ தான் அதைச் செய்கிறது. அதற்கு பிகாசோவின் கைகள் ஒரு கருவி மட்டுமே. அங்கே வேறு ஏதோ ஒரு சக்தி இருக்கிறது.

பிகாசோ வரைவதைப் பாருங்கள். அப்போது அவர் ஒரு மனிதனாக இருப்பதில்லை. அவர் உங்களில் ஒரு பகுதி இல்லை. அவர் படைக்கும் பிரம்மாவாகிவிட்டார். அந்த சமயத்தில் அவர் படைக்கப்பட்டவராக இருப்பதில்லை. அதனால் ஒவ்வொரு சிறந்த ஓவியமும் இறைவனிடமிருந்து ஏதோ ஒன்றை நமக்குக் கொண்டுவருகின்றன.

புத்தர் பேசும்போது கேட்கவேண்டும். பேசுபவர் அவர் இல்லை. அவர் நகர்ந்து செல்லும்போது நடப்பவர் அவர் இல்லை. புத்தர் உங்கள் மேல் தன் கையைப் போடும்போது அவர் அந்தக் கையில்லை. தாவோ அல்லது கடவுள் அல்லது இருப்புநிலை - இல்லை வேறு எந்தப் பெயர் வேண்டுமானாலும் கொடுத்துக் கொள்ளலாம். - அது அவரை நடத்திச் செல்கிறது. புத்தரின் கை வெறும் கருவி மட்டுமே. இருப்புநிலை அவர் மூலமாக உங்களைத் தொடுகிறது. அந்த இடத்தில் புத்தர் இல்லை. உங்களுக்கும் இருப்பு நிலைக்கும் இடையே அவர் நிற்க வில்லை. ஆனால் இதை அனுபவித்து உணர்ந்தால்தான் புரியும். இறந்து போய்விட்ட புத்தரிடமிருந்து கற்றுக் கொள்வது இயலாத காரியம். வாழும் புத்தரிடமிருந்தே உங்களால் கற்க முடியவில்லையென்றால் இறந்துவிட்ட புத்தரிடமிருந்து எப்படிக் கற்பீர்களாம்?

வாழும் புத்தர்களிடம் கற்பது என்பது ஒரு திறமை. மிகப்பெரிய திறமை. அந்தத் திறமை மென்மையானது.

நுட்பமானது. உங்களால் வெளிப்படையாக எதையும் செய்ய முடியாது. பக்கத்தில் இருந்துகொண்டு அவர்களின் சாரத்தை அப்படியே உள்வாங்கிக்கொள்ள வேண்டும். ''உள் வாங்குதல்'' என்ற வார்த்தைதான் இங்கே மிகவும் முக்கியமானது. ஒரு புத்தரை அப்படியே உள்வாங்கிக்கொள்ள வேண்டும். அவரை உண்டுவிட வேண்டும். அதன் பின் அவர் உங்கள் ரத்தமாகவும் எலும்பாகவும் மாறிவிடுவார். உங்களுக்குள் அவர் ஓடிக் கொண்டிருப்பார். உங்களுக்குள் அவர் சதா இருந்து கொண்டே இருக்க வேண்டும்.

இதுதான் உலகிலேயே மிகப்பெரிய திறமை. ஒரு மனிதனைக் கடவுளாக்குவது. விலங்காகப் போகக்கூடிய மனிதனை கடவுளாக்குவது, மனதை மாற்றுவது, அகந்தையைக் களைவது, அவனுள் உச்சகட்ட மாற்றத்தை உண்டாக்குவது.

கடலை ஒரு நீர்த்துளியிடம் கொண்டுவந்து, பின் அந்தக் கடலை அந்த நீர்த்துளிக்குள் போடுவதற்குச் சமமான செயல். இதுதான் இருப்பதிலேயே மிகவுன் உன்னதமான திறமை. எந்தப் புனித நூலும் இதைக் கற்றுக் கொடுக்காது. இதைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லலாம்.

இந்த வாக்கியங்களைப் புரிந்து கொள்ள ஒரு வாழும் புத்தனுக்கு அருகில் இருக்க வேண்டும். ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் புத்தரைப் போன்ற ஒருவன் பிறப்பான். அதன் பின் அவனைத் தொடர்ந்து செத்த இயக்கங்கள் தோன்றும். தாங்கள் செய்வது என்னவென்றே அறியாத மக்கள் புத்தருக்குக் கோவில்கள் கட்டி அவரை இயந்திரத்தனமாக வழிபட்டுக் கொண்டிருப்பார்கள்.

இப்போது ஷுவாங் ட்சுவின் வார்த்தைகளைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். இது ஒரு அழகான கதை. -

**ஹ்வான் பிரபுவும் வண்டிச்சக்கரம் செய்பவனும்**

**சீ நாட்டைச் சேர்ந்த ஹ்வான் பிரபு, அந்த வம்சத்தின் முதல் பிரபு, குடை நிழலில் அமர்ந்து தத்துவம் படித்துக் கொண்டிருந்தான். ஃபியன்**

**என்ற வண்டிச்சக்கரம் செய்பவன் அருகே அமர்ந்து சக்கரங்கள் செய்து கொண்டிருந்தான். ஃபியன் தனது உளியையும் சுத்தியலையும் தள்ளி வைத்துவிட்டுப் படியேறி ஹ்வான் பிரபுவிடம் போனான்.**

**''மகா பிரபு நீங்கள் என்ன படிக்கிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?''**

**''வல்லுனர்கள், ஆளுமைகள் தத்துவ மேதைகளின் கூற்றை படித்துக் கொண்டிருக்கிறேன்.''**

நீங்கள் மதிக்கும் எல்லா வல்லுனர்களும் ஆளுமைகளும் இறந்துவிட்டார்கள். அவர்களைப் பற்றிய செய்தி உங்களை அடையும் போது அவர்கள் மறைந்துவிட்டிருப்பார்கள். புத்தனைப் பற்றி உங்களுக்குத் தெரியவரும் போது அவர் இறந்திருப்பார். உங்கள் உணர்வுநிலை பெரிய சோம்பேறி. உங்களுக்கு என்ன நடக்கிறது என்பது தெரிவதற்குள் எல்லாமே நடந்து முடிந்துவிடும். ஒரு அழகான அபூர்வமான மலர் மலர்ந்திருக்கிறது என்ற செய்தி உங்களுக்கு வரும். நீங்கள் நீட்டி நெளித்துக் கிளம்பித் தோட்டத்திற்குச் செல்வதற்குள் அந்த மலர் வாடி விழுந்திருக்கும்.

ஒரு புத்தன் வந்திருக்கிறான் என்பதை உணரவே நமக்கு அதிக நேரமாகிறது. சில சமயம் புத்தன் வாழ்ந்து முடிந்து பல நூற்றாண்டுகள் கழித்துத்தான் அவரைப் பற்றி உங்களுக்குத் தெரியவரும். விழிப்பாக இருங்கள் அப்போதுதான் உங்களால் நேரத்துக்கு ரயிலைப் பிடிக்க முடியும்.

இதுவரை நீங்கள் தொடர்ந்து ரயிலைத் தவறவிட்டிருக்கிறீர்கள். இப்போது நீங்கள் இங்கே வந்திருப்பது உங்கள் முதல் பிறவி அல்ல. ராஜகுமாரனான சித்தார்த்தன் கௌதம புத்தனாக மலர்ந்த போதும் நீங்கள் இங்கே இருந்தீர்கள். இந்த உலகில் எங்கேயோ இருந்தீர்கள்.. ஏனென்றால் இந்த உலகில் எதுவுமே அழிவதில்லை.

நீங்கள் புத்தரைத் தவற விட்டுவிட்டீர்கள். புத்தரைப் பற்றி உங்களிடம் யாரோ சொல்லியிருக்க வேண்டும். நீங்களே அவருடன் வாதம் புரிந்திருப்பீர்கள்.

''இது மாதிரி எத்தனை கதை கேட்டிருக்கிறேன் தெரியுமா? இப்போது நீங்கள் இந்த புத்தர் கதையைச் சொல்கிறீர்கள்.'' என்று இளக்காரமாகச் சொல்லியிருப்பீர்கள்.

''எனக்கே இன்னும் ஞானம் வராத போது யாரோ ஒரு புத்தனுக்கு எப்படி ஞானம் வந்திருக்கும்? என்னைவிட சிறந்தவர்கள் இருக்கிறார்களா என்ன?'' என்று நீங்கள் நினைத்திருக்கலாம்.

நீங்கள் என்ன சொல்லியிருப்பீர்கள்? ''நான் பகுத்தறிவு வாதி. எதையும் தக்க சான்று இல்லாமல் நம்பமாட்டேன். சந்தேகம் என்று வந்துவிட்டால் அதை முதலில் தீர்த்துக்கொண்டுதான் மறுவேலை பார்ப்பேன். அதுவரை எதையும் நம்ப மாட்டேன்.''

பல நூற்றாண்டுகள் ஆனாலும் உங்கள் சந்தேகம் தீராது. அந்தச் சந்தேகத்தோடு கூடவே இதில் குதிக்க வேண்டும். முதலில் சந்தேகம் தீரட்டும் அதன்பின் இதில் குதிக்கிறேன் என்று சொன்னால் உங்கள் சந்தேகமும் தீராது. நீங்கள் குதிக்கவும் மாட்டீர்கள். காரணம் இந்தச் சந்தேகம் என்பது தானாகப் பெருகும் ஒரு நிகழ்வு. ஒரு சந்தேகம் மற்றொன்றை உருவாக்கும். அது இன்னொரு சந்தேகத்தை உருவாக்கும். நம்பிக்கையும் அப்படித்தான் ஒரு நம்பிக்கை மற்றொன்றை உருவாக்கும். நம்பிக்கையோ சந்தேகமோ சங்கிலித் தொடர் போல் பெருகிக்கொண்டே போகும். தொடங்கும் போது அரை மனதுடன் இருப்பீர்கள். யாராலும் முழு நம்பிக்கையுடன் தொடங்க முடியாது. அது தேவையும் இல்லை. சந்தேகத்துடன் தொடங்குவது நல்லது. ஆனால் சந்தேகத்தின் மேல் அதிகமாகக் கவனம் செலுத்தாதீர்கள். நம்பிக்கையின் மேல் கவனம் செலுத்துங்கள். அப்படிச் செய்யும் போது உங்கள் சக்தி நம்பிக்கையில் பாயும். அந்த நம்பிக்கை ஒரு சங்கிலித்தொடராகப் பெருகும். சந்தேகத்தில் இருக்கும் சக்தியை நம்பிக்கையில் இருக்கும் சக்தி உறிஞ்சிக் கொள்ளும்.

முதலில் விதைகளை விதைக்க வேண்டும். 'இந்த விதைகள் முளைக்குமா முளைக்காதா என்று என் மனதில் பெரிய சந்தேகம் இருக்கிறது. அந்தச் சந்தேகம் தீர்ந்தவுடன் விதைக்கிறேன் என்று சொன்னால் சத்தியமாக நீங்கள் விதைகளை விதைக்கவே மாட்டீர்கள்.

புத்தர் வாழ்ந்த காலத்தில் நீங்களும் வாழ்ந்திருக்கலாம். கௌதமர் ஞானம் பெற்றார் என்று யாரோ உங்களுக்குச் சொல்லியிருப்பார்கள். நீங்கள் அதைக் கேட்டுப் பெரிதாகச் சிரித்திருப்பீர்கள். ''எனக்குத் தெரிந்து யாரும் ஞானம் பெற்றதில்லை. கௌதமர் ஞானம் பெற்றார் என்பது யாரோ உருவாக்கிய கட்டுக்கதை.. எனக்கு கௌதமரைத் தெரியும். அவர் தந்தையையும் தெரியும்.. அவர் குடும்பத்தையே தெரியும். நான் ஒரு அறிவாளி. பகுத்தறிவுவாதி. அதனால் இந்த ''ஞானம் பெறுதல்'' கதையை நம்பமாட்டேன். என்னை பொறுத்தமட்டில் காரண-காரிய அறிவு இல்லாமல் ஒரு அடி கூட எடுத்து வைக்க மாட்டேன்.''

புத்தர் என்றில்லை; ஏசு நாதர் இருந்த போதும் நீங்கள் இருந்தீர்கள். ஷுவாங் ட்சு வாழ்ந்த போதும் நீங்கள் இருந்தீர்கள். நீங்கள் இல்லாத காலகட்டமே இல்லை. என்றாலும் பல சந்தர்ப்பங்களில் அந்த ஞானிகளை தவறவிட்டுவிட்டீர்கள். ஏன்? எல்லாக் காலகட்டங்களிலும் ஒரே ஒரு காரணம் தான். உங்களால் நம்ப முடியவில்லை. ஞானத்தீயில் குதிக்குமாறு அந்த ஞானிகள் எல்லாரும் உங்களிடம் சொன்னார்கள். குதிப்பதற்கு எதிரான வாதங்களைத் தேடிக் கொண்டே இருந்தீர்கள். அதற்கு ஆயிரம், லட்சம் காரணங்களும் வாதங்களும் உங்களுக்குக் கிடைக்கும். முதலில் கொஞ்சம் சந்தேகம் இருந்தால் பின் புற்று நோயைப் போல் அது ராட்சச வேகத்துடன் வளரத் தொடங்கும். அது தன்னைத்தானே பெருக்கிக்கொள்ளும்.

''என் மனதில் சந்தேகம் இல்லாத போது நான் நம்புவேன்'' என்று சொல்லாதீர்கள். அந்த நேரம் வரவே வராது. வரவும் வாய்ப்பில்லை. சந்தேகம் இருக்கும் போதே ஒரு ஓரமாக லேசாக நம்பவும் தொடங்க வேண்டும். நம்பிக்கையின் அழகைப்

பாருங்கள். சந்தேகம் ஒரு பக்கம் வலுவாக இருக்கும்போதே மறுபக்கம் மலரும் நம்பிக்கையின் அழகைப் பாருங்கள். இதுதான் மனித மனத்தின் இயல்பு. மனம் பலவீனமானது. பிரிவினைகளுக்கு இடையே மாட்டிக் கொண்டு தவிக்கிறது. சந்தேகம் இருக்கும் போதே நம்பிக்கையும் வந்துவிட வேண்டும். சந்தேகம் இருக்கும் போது நம்பிக்கை வந்தால் நீங்கள் நம்பிக்கையின் மேல்தான் அதிகமாகக் கவனம் செலுத்துவீர்கள். சந்தேகத்தின் மேல் அல்ல. சந்தேகம் ஒரு பக்கம் இருந்துவிட்டுப் போகட்டும் என்று அதனை உதாசீனப்படுத்திவிட்டு நம்பிக்கையின் பக்கம் உங்கள் கவ்னத்தைத் திருப்புவீர்கள். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அந்த சந்தேகம் மறைந்துவிடும். அதைக் கவனிக்கவில்லயென்றால் அதற்கு உணவு கிடைக்காது. சந்தேகத்திற்கு நீங்கள் செலுத்தும் கவனம்தான் ஆதார உணவு. அதற்குத் தேவையான உணவைக் கொடுக்காவிட்டால் அது அந்தச் சங்கிலித் தொடரில் நிலைத்து இருக்க முடியாது.

புத்தர் போன்றவர்களை நம்பாமல் இருக்க உங்களுக்கு ஆயிரம் ஆயிரம் காரணங்கள் இருக்கும். ''சரணடையாதே. உன்னை இழந்துவிடாதே! என்ன செய்கிறாய் நீ? இதைச் செய்தால் நீ தொலைந்து போய்விடுவாய்'' என்று உங்கள் அகந்தை உங்களை எச்சரிக்கும். நீங்கள் ஏற்கனவே தொலைந்து போய்விட்டீர்கள் என்பது உங்களுக்கே தெரியாது. தெரியாமல் தான் கேட்கிறேன். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?

சில கார்ப் பைத்தியங்களைப் பார்த்திருப்பீர்கள். அவர்களுக்கு கார் ஓட்டுவது மிகவும் பிடிக்கும். நாம் எல்லாம் நம் வேலைக்காகக் காரை ஓட்டுகிறோம் என்றால் அவர்களுக்குக் கார் ஓட்டுவது ஒன்றுதான் வேலையே. மும்பையிலிருந்து டில்லிக்கு வழியில் நிற்காமல் காரில் செல்வார்கள்.

டெல்லியை அடைந்தவுடன் அவர்கள் சொல்லும் முதல் வார்த்தை. ''இருபத்தி நான்கு மணி நேரத்தில் வந்து சேர்ந்து விட்டேனாக்கும்.'' என்பதுதான்.

ஒருமுறை அப்படித்தான் ஒரு கார்ப் பைத்தியத்துடன் அவனுடைய காரில் போய்க் கொண்டிருந்தேன். நெடுஞ்சாலை

யில் கிறுக்குத்தனமான வேகத்தில் வண்டி போய்க் கொண் டிருந்தது. நாங்கள் ஒரு குறிப்பிட்ட கிராமத்திற்குப் போக வேண்டியிருந்தது. நெடுநேரம் ஆகியும் நாங்கள் எங்கள் இலக்கை அடையவில்லை. மதியமே அங்கே போய் சேர்ந்திருக்க வேண்டிய நாங்கள் இருட்டிய பிறகும் போய்ச் சேரவில்லை. நான் வரைபடத்தைப் பார்த்துவிட்டு அவனிடம் சொன்னேன் ''நீங்கள் தவறான வழியில் சென்று கொண்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்.''

அவன் சொன்னான். ''வரைபடத்தைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். அது ஒரு பொருட்டில்லை. நமது பயணம் எவ்வளவு சுகமாக இருக்கிறது பாருங்கள். எப்படி ஜிவ்வென்று வேகமாகப் போகிறோம் பாருங்கள்.''

அப்போதுகூட அவன் வரைபடத்தைப் பார்க்கவில்லை. அப்படிச் சிலர் இருக்கிறார்கள். அவர்க்ள லட்சியம் எல்லாம் வேகமாகப் போய்க் கொண்டேயிருக்க வேண்டும். எங்கே போகிறோம் என்பது முக்கியமில்லை.

நமது பயணத்தைவிட பயணம் செய்கின்ற திசை முக்கியமானது. வேகமாக ஓடுவதன் மூலம் இலக்கை அடைந்து விட முடியாது. ஒரே வட்டத்தில் நீங்கள் ஓடிக் கொண்டிருக்கலாம். அப்போது நீங்கள் எங்கும் சென்றடைய மாட்டீர்கள். நீங்கள் இழக்க என்ன இருக்கிறது? ஒன்றும் இல்லை.. பின் ஏன் இந்த பயம்? இழக்க ஒன்றும் இல்லை என்ற பயமா?

என்னிடம் வரும் பலர் ''தியாகம் செய்யக் கஷ்டமாக இருக்கிறது'' என்று சொல்வார்கள். அவர்களைக் கூர்ந்து கவனிப்பேன். அவர்கள் சொல்வது எனக்குச் சத்தியமாகப் புரியாது. அவர்களிடம் தியாகம் செய்ய என்ன இருக்கிறது? இழப்பதற்கு அவர்களிடம் கைப்பொருள் இல்லையே! எதையாவது அடைந்திருந்தால்தான் கொஞ்சமாவது சம்பாதித் திருந்தால்தான் தியாகம் செய்ய ஏதாவது பொருள் இருக்கும். நீங்கள் வெறும் குப்பையைக் குவித்து வைத்துக் கொண்டு 'தியாகம் செய்யக் கஷ்டமாக இருக்கிறது' என்று சொன்னால் எனக்குச் சிரிப்பதா அழுவதா என்றே தெரியவில்லை.

உங்களிடம் என்ன இருக்கிறது என்பதைப் பார்க்கக்கூட உங்களுக்கு விருப்பம் இல்லை. பார்த்தால் உங்களுக்குப் பயமாக இருக்கிறது. உங்கள் காலடியில் இருக்கும் பூமி நழுவிச் செல்வது போல் தோன்றுகிறது. உங்களிடம் ஒன்றும் இல்லை. என்னிடம் நிறைய இருக்கிறது என்ற நம்பிக்கையிலேயே காலத்தை ஓட்டு கிறீர்கள். ஞானத்தைத் தவிர வெளியில் சொல்லிக்கொள்ளும் படியாக என்னிடம் எதுவும் இல்லை. விழிப்புள்ள உணர்வுநிலை, உள்ளே இருக்கும் சாவா நெருப்பு தவிர வேறு செல்வங்கள் எதுவும் என்னிடம் இல்லை. இருக்கவும் முடியாது.

***ஃபியன் என்ற வண்டிச்சக்கரம் செய்பவன் அருகே அமர்ந்து சக்கரங்கள் செய்து கொண்டிருந்தான். ஃபியன் தனது உளியையும் சுத்தியலையும் தள்ளி வைத்துவிட்டுப் படியேறி ஹ்வான் பிரபுவிடம் போனான்.***

***''மகா பிரபு நீங்கள் என்ன படிக்கிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?''***

***''வல்லுனர்கள், ஆளுமைகள் தத்துவ மேதைகளின் கூற்றை படித்துக் கொண்டிருக்கிறேன்.''***

நீண்ட மரபு இருந்தால்தான் ஒருவன் வல்லுனன் ஆக முடியும். நீண்டகாலம் கழிந்தபிறகுதான், மக்கள் ஒருவனை வழிபடத் தொடங்கிய பிறகுதான் அவன் ஒரு ஆளுமையாக ஏற்றுக் கொள்ளப்படுவான். ஏசு நாதரை யாருமே வழிபட வில்லையென்றால் அவர் ஒரு வல்லுனராகவோ ஆளுமை யாகவோ ஆகியிருக்க முடியுமா? அவரது சீடர்களைப் பாருங்கள். சீடர்கள் அதிகமாக அதிகமாக அவர் பெரிய ஆளுமையாகக் கருதப்படுவார்.

டில்லியில் ஒரு மிட்டாய்க்கடையில் ஒரு வாசகத்தை எழுதி வைத்திருக்கிறார்கள்.

''இங்கே கிடைக்கும் இனிப்புகளைச் சாப்பிடுங்கள். பத்து லட்சம் ஈக்கள் தவறாக இருக்க முடியாது.''

இப்படித்தான் நீங்களும் நினைக்கிறீர்கள். பத்துலட்சம் பேர் ஒரு குருவைப் பின்பற்றினால் நீங்களும் பின்பற்றுகிறீர்கள். பத்துலட்சம் பேர் தவறாக இருக்க முடியாது அல்லவா? பத்து லட்சம் பேர் பின் தொடர்ந்தால் அவர் ஒரு ஆளுமைதான்.

புத்தரை எத்தனை பேர் பின் தொடர்கிறார்கள்? ஏசு நாதரை எத்தனை பேர் பின் தொடர்கிறார்கள்? நீங்கள் எண்ணிக்கையைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறீர்கள். பின் தொடர்பவர்களின் எண்ணிக்கையை வைத்துக் குருவை எடை போடுகிறீர்கள். மதம் அரசியல் அல்ல. ஒரு ஆள் கூட புத்தர் பின்னால் செல்லா விட்டாலும் புத்தர் புத்தர்தான். மொத்த உலகமும் புத்தர் பின்னால் சென்றாலும் அவர் அதே புத்தர் தான். காரணம் பெரும் பான்மையான மக்கள் தவறான காரணங்களுக்காகப் பின் தொடர்கிறார்கள். பின் தொடர்பவர்களைப் பார்க்காதீர்கள்.

***''வல்லுனர்கள், ஆளுமைகள் தத்துவ மேதை களின் கூற்றை படித்துக் கொண்டிருக்கிறேன்.''***

***''அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லை இறந்துவிட்டார்களா?''***

அந்த ஃபியன் ஒரு மேதையாக இருக்க வேண்டும். வாழும் ஆளுமையை மட்டும் நம்பும் நபர்களைப் பார்ப்பது மிகவும் அரிது. வாழும் மனிதன் எப்படி ஆளுமையாக முடியும்? அதற்கு நேரம் ஆகுமே! நீண்ட காலம் ஆகுமே! அதற்குப் பிறகுதன ஒருவன் ஆளுமையாக முடியும்.

ஒரு முறை நான் ஒரு புத்த விஹாரத்திற்குச் சென்றிருந்தேன். அங்கிருந்த துறவிகள் என்னைச் சூழ்ந்து கொண்டு புத்தரைப் பற்றிச் சொல்லுமாறு கேட்டார்கள். நான் சொன்னேன். நான் சொல்லும் போது கவனித்தேன். தலைமைத் துறவி நெளிந்து கொண்டிருந்தார். நான் பேசி முடித்ததும் என்னிடம் சொன்னார்:

''நீங்கள் சொன்ன கதையை நான் எந்த நூலிலும் படித்ததில்லை. புத்தர் சொன்னதை எல்லாம் படித்திருக்கிறேன். நீங்கள் சொன்னதைப் படித்ததில்லை. அதை யாருமே மேற்கோள்

காட்டியதில்லையே! இப்போதுதான் முதல்முறையாக அந்தக் கதையைக் கேட்கிறேன். அதை எங்கேயிருந்து எடுத்தீர்கள்?''

நான் சொன்னேன்:

''நான் கதைகளை உருவாக்குகிறேன். அது உங்கள் புனித நூல்களில் இல்லையென்றால் சேர்த்துக் கொள்ளுங்கள். எனக்கு நான் தான் ஆளுமை. அது சரி, புனித நூல்கள் எப்படி உருவாக்கப்படுகின்றன என்று உங்களுக்குத் தெரியுமா? யாரோ ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் அதை எழுதினார்கள். இன்று அவர் ஆளுமை ஆனால் நான் இன்று அதில் ஒரு கதையைச் சேர்க்க முடியாது. ஏனென்றால் நான் ஒரு ஆளுமை இல்லை ஏன்? ஒரே காரணம் கால வித்தியாசம். புத்தர் இறந்து ஐநூறு வருடங்களுக்குப் பிறகுதான் புத்தர் கதைகள் எழுதப்பட்டன. புத்தர் வாழ்ந்த காலத்தில் ஒரு கதை கூட எழுதப்படவில்லை. ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு கதைகள் எழுதலாம் என்றால் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்குப் பின் எழுதக்கூடாதா?''

நானா அப்படிப் பேசுகிறேன் என்று அந்த தலைமைத் துறவியால் நம்பவே முடியவில்லை.

இந்த ஃபினன் ஒரு மேதையாக இருந்திருக்க வேண்டும். 'அந்த ஆளுமைகள் உயிருடன் இருக்கிறார்களா இல்லை இறந்து விட்டார்களா?' என்று கேட்டான். ஆளுமைகள் பெரும்பாலும் இறந்தவர்களாகவே இருப்பார்கள். உயிருடன் இருக்கும் ஒரு ஆளுமையை உங்களால் நம்ப முடிந்ததென்றால் நீங்கள் மாறிவிடுவீர்கள். இறந்தவர்களைச் சுமந்து கொண்டு திரிந்தால் நீங்களும் இறந்தவராகிவிடுவீர்கள். அப்படித்தான் நீங்கள் சுரத்திழந்து உணர்ச்சியில்லாமல் இருக்கிறீர்கள். உயிருடன் இருப்பவர்களோடு இருங்கள் நீங்கள் துடிப்புடன் வாழ்வீர்கள். நீங்கள் செய்வது எல்லாம் உங்களை மாற்றியமைக்கும். இறந்தவர்களை நம்புவது வாழ்வை விட்டுவிட்டு சாவை நம்புவதற்குச் சமம்.

***''அவர்கள் இறந்து பலகாலம் ஆகிவிட்டது.''***

உண்மையிலேயே ஒவ்வொரு மதமும் தங்கள் ஆளுமைகள் மிகவும் பழமை வாய்ந்தவர்கள் புராதன காலத்தைச் சேர்ந்தவர்கள் என்று பீற்றிக் கொள்கின்றன. இந்துக்களைக் கேளுங்கள் ''எங்கள் சனாதன தர்மம் அனாதியானது. அது எப்போது தொடங்கியது என்று யாராலும் அறுதியிட்டுக் கூறமுடியாது.'' என்று அவர்கள் மார்தட்டுவார்கள். அவர்கள் சூழ்ச்சிக்காரர்கள். தங்கள் மதம் அனாதியானது என்று சொல்லிவிட்டால் உங்கள் மதம் அதைவிடப் பழமையானது என்று உங்களால் சொல்ல முடியாதே அவர்கள் கச்சிதமாக முடித்துவிட்டார்கள். அவர்கள் மதம் அனாதியானது.. இருப்பதிலேயே மிகவும் புராதனமானது வேதங்கள்தான் என்று சொல்கிறார்கள். வேதங்கள் தான் இருப்பதிலேயே மிகவும் புனிதமானது என்று நிரூபித்துவிட்டால் வேதங்களே எல்லாம் வல்ல ஆளுமைகள் என்று ஆகிவிடுகிறது அல்லவா?

இந்த மனம் உண்மையை மதுவைப் போல் நினைத்துக் கொண்டிருக்கிறது. மதுவிற்கு எப்படி பழமை சுவையைச் சேர்க்குமோ அதே போல் உண்மைக்கும் பழமை மதிப்பு சேர்க்கும் என்று நினைக்கிறது. உண்மைக்கு இவர்கள் சொல்லும் புதிய அர்த்தங்கள் அனைத்துமே பழைய கள்ளைப் புதிய மொந்தையில் அடைப்பது போலத்தான். உண்மை மதுவைப் போன்றதல்ல. அதற்கு நேர் எதிரானது. புதுமையாய் இருக்க் இருக்க இன்னும் அழுத்தமாக இருக்கும். புதியதாக இருக்க இருக்க இளமையாய், அதிகத் துடிப்புடன் அதிக ஆழம் உடையதாக இருக்கும். செத்த உண்மைகள் கடந்த காலத்தின் மலம்.

ஆனால் இந்துக்கள் வேதங்கள் மிகவும் பழமையானது என்று சதா சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வேதங்கள் உருவான காலத்தை இன்னும் பின்னால் தள்ளிக்கொண்டே போகிறார்கள். யாராவது வேதங்கள் அவ்வளவு பனழமையானவை அல்ல என்று சொன்னால் அவர்களுக்குக் கோபம் வருகிறது. நீங்கள் அப்படிச் சொன்னால் உங்களுக்குச் சமய உணர்வே இல்லை, உங்களுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது என்று நினைத்துக்

கொண்டிருக்கிறார்கள். அது சரி, சமணர்களைக் கேளுங்கள். அவர்கள் தங்களுடைய தீர்ந்தங்கரர்கள் வேதங்களைவிடப் புராதானமானவர்கள் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் அதற்குச் சான்றும் தருகிறார்கள். அவர்களுடைய முதல் தீர்த்தங்கரர் இந்துக்களின் ஆதி வேதமான ரிக் வேதத்தில் குறிப்பிடப்படுகிறார். அப்படி என்றால் ரிக் வேதம் தோன்றிய போது அந்த தீர்த்தங்கரர் இறந்து பல ஆண்டுகள் ஆகியிருக்க வேண்டும் என்பது புரிகிறது.. ரிக் வேதம் தோன்றிய காலத்தில் அவர் வாழ்ந்து கொண்டிருந்தால் அவருக்கு அந்த அளவிற்கு மரியாதை கொடுத்திருக்க மாட்டார்களே!

ரிக் வேதம் அவரைச் சாதாரணமாகச் சொல்லவில்லை. கடவுளர்களில் ஒருவராக அந்த சமண மதத்து தீர்த்தங்கரர் சொல்லப்படுகிறார். வேதம் தோன்றிய போது அவர் தோன்றி ஐந்தாயிரம் வருடங்கள் ஆகியிருக்க வேண்டும். இல்லை யென்றால் கடவுள் என்று சொல்ல மாட்டார்களே! இப்போது சமணர்கள் தங்கள் மதம்தான் இருப்பதிலேயே புராதனமான மதம் என்று சொல்கிறார்கள். இப்படித்தான் எல்லா மதங்களும் இந்தப் பழமை விளையாட்டில் ஈடுபட்டிருக்கின்றன.

ஏன் ஒவ்வொரு மதமும் தங்கள் பழைமையை நிலைநாட்டு வதில் ஆர்வம் காட்டுகின்றன? நமது மனம் மரணத்தை நம்புகிறது. கடந்த காலத்தை நம்புகிறது. மனம் என்பதே கடந்த காலம் தான். உங்கள் ஆளுமை பழையதாக இருந்தால், உங்களுக்கு ஒரு தொன்மையான நீண்ட மரபு இருந்தால் உங்கள் மனம் சஞ்சரிக்க அதிக இடம் கிடைக்கிறது. அப்படிக் கிடைக்கும் போது உங்கள் மனம் மகத்தானது என்று நீங்கள் நினைக்கத் தொடங்குகிறீர்கள்.

மனம் நகரக் காலம் வேண்டும். மனம் என்பதே சேகரிக்கப் பட்ட கடந்த காலம் தானே. உங்கள் கடந்த காலம் பெரிதாக இருந்தால் உங்கள் மனமும் அந்த அளவிற்குப் பெரிதாக இருக்கும் அல்லவா? கடந்தகாலம் குறுகியதாக. இருந்தால் உங்கள் மனம் சஞ்சரிக்கும் இடம் சிறியதாக இருக்கும். அதனால் தான் எல்லா நாடுகளும், மரபுகளும், இனங்களும் அமெரிக்கர்

களைக் குழந்தைகளாகப் பார்க்கின்றன. அமெரிக்காவிற்குக் கடந்த காலம் இல்லை. அமெரிக்காவின் வரலாறு வெறும் முந்நூறு வருடங்கள் மட்டும்தான். அது ஒரு கடந்த காலமா? அது வெத்து வேட்டு என்று கரித்துக் கொட்டுகிறார்க்ள்.

நீங்கள் பின்பற்றும் குரு தனக்கு ஐநூறு வயதாகிவிட்டது என்று சொன்னால் அவருக்கு நிறையச் சீடர்கள் கிடைப்பார்கள்.

திபெத் நாட்டில் இருக்கும் ஒரு லாமாவிற்கு ஆயிரம் வயது ஆகிவிட்டது என்ற வதந்தி உலவியது. அவரைப் பார்க்க ஒரு ஆங்கிலேயர் வந்தார். 'அது எப்படி ஒரு மனிதன் ஆயிரம் வருடங்கள் உயிர்வாழ முடியும்?' என்பதைக் கண்டறிய லண்டனிலிருந்து திபெத்துக்கு வந்தார். லாமாவைப் பார்த்தார். அவருக்கு நம்பிக்கை வரவில்லை. அவரைப் பார்த்தால் ஐம்பது வயதுக்கு மேல் சொல்ல முடியாது என்று தோன்றியது. அதனால் அந்த லாமாவின் தலைமைச் சீடரிடம் கேட்டார்:

''உங்கள் குருவிற்கு ஆயிரம் வயதாகிவிட்டதா என்ன?''

''அது எனக்குத் தெரியாது. நான் அவரிடம் கடந்த 300 வருடங்களாகத்தான் சீடனாக இருக்கிறேன்.''

பழமை அதிகமாக அதிகமாக ஆளுமை இன்னும் வலுக்கிறது. 'என் குருவிற்கு 150 வயதாகிவிட்டது' என்ரு யாராவது சொன்னால் உங்கள் மனதில் ஒரு மதிப்பு தோன்று கிறது.. வயதும் முதுமையுமே மதிப்பைக் கொடுக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். உங்களுக்கு 150 வயது ஆகலாம். அதனால் ஞானம் வந்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. நீங்கள் 150 வயதுடைய முட்டாளாக இருக்கலாம். வயது மட்டும் ஞானத்தைக் கொடுக்காது. வயதிற்கும் ஞானத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. மாறாக குழந்தைகள் அதிக அறிவுடையவர்களாக இருக்க வாய்ப்பு இருக்கிறது. அவர்கள் அப்படித்தான் இருக்க வேண்டும். இருப்புநிலை தவறாக இருக்காது. இருப்புநிலை முதியவர்களைக் கொன்று அவர்கள் இடத்தில் குழந்தைகளைக் கொண்டு வந்து சேர்க்கிறது. இருப்புநிலை முதியவர்களைவிட குழந்தைகளைத்தான் அதிகம்

நம்புகிறது என்பதுதான் இதற்குப் பொருள். வயதானவர்களுக்குப் பயன் இல்லை. அவர்களைத் தூர எறிந்துவிடுங்கள் என்று சொல்கிறது இருப்புநிலை. இருப்புநிலை புதுமையை நம்புகிறது. மனிதன் பழமையை நம்புகிறான். இருப்புநிலை புதிய இலையை விரும்புகிறது. அதனால்தான் அது பழைய இலைகளைக் கடாசிவிடுகிறது. பழைய இலைக்குப் பதிலாக புதிய இளம் தளிர்களைக் கொண்டு வந்து சேர்க்கிறது.

இருப்புநிலை எப்போதும் இளமையாக இருக்கிறது மதமும் அப்படித்தான். ஆனால் இந்த ஆளுமைகள்..

உங்கள் பிரச்சினை என்ன? உங்களால் இருப்புநிலையின் ஆளுமையை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. உங்களைச் சுற்றி நிகழும் படைப்பைப் பாருங்கள். முதலில் அது கொஞ்சம் கிறுக்குத்தனமாகவே தோன்றும். ஒரு மனிதன் முதிர்ந்து புத்தி சாலியாகிவிட்டால் இருப்புநிலை அவனைக் கொன்றுவிடுகிறது. உங்களுக்கு 90 வயது ஆகிவிட்டது. வாழ்க்கையின் எல்லாப் பருவங்களையும் நீங்கள் பார்த்துவிட்டீர்கள். நிறைய அறிவைச் சேகரித்து விட்டீர்கள். அனுபவத்தைச் சம்பாதித்து விட்டீர்கள். அந்த நிலையில் இருப்புநிலை உங்களிடம் வந்து ''வாழ்ந்தது போதும். வெளியேறு'' என்று கட்டளை இடுகிறது. உங்களுக்குப் பதிலாக ஒரு குழந்தையைப் படைக்கிற்து.. உங்கள் இடத்தில் ஒன்றும் தெரியாத ஒரு குழந்தையை வைக்கிறது இருப்புநிலை.

இருப்புநிலை அறிவைவிட வெகுளித்தனத்தையே அதிகமாக நேசிக்கிறது. பழைய நிறம் போன இலைகளைவிட பச்சைப் பசும் தளிர்களையே அதிகமாக நேசிக்கிறது. அப்படித்தான் இருக்க வேண்டும். வாழ்க்கை இளமையாகத்தான் இருக்க வேண்டும். இருப்புநிலை நிரந்தரமாக இருக்க வேண்டுமென்றால் அது நிரந்தரமான இளமையுடன் இருக்க வேண்டும்.

அதனால்தான் இந்துக்கள் ராமரையோ கண்ணனையோ வயதானவர்களாகக் காட்டுவதில்லை. அவர்கள் எப்போதுமே இளைஞர்களாகவே இருக்கிறார்கள்.. கோலை ஊன்றி கூனுடன் நின்று கொண்டிருக்கும் ராமரையோ கிருஷ்ணரையோ

இந்துக்களின் படங்களில் பார்த்திருக்கிறீர்களா? கிருஷ்ணர் எண்பது வயது வரை வாழ்ந்தார் என்று புராணம் சொல்கிறது. என்றாலும் வயதான கிருஷ்ணரை நீங்கள் எங்கும் காணமுடியாது. காரணம் இருப்புநிலை என்றும் இளமையானது. அன்றலர்ந்த மலர் போல, வெகுளியான குழந்தை போல, காலையில் தோன்றும் பனித்துளி போல், இரவில் தோன்றும் முதல் விண்மீனைப் போல் மதமும் புத்தாக்கம் கொண்டது.

ஆனால் இருப்புநிலை ஆளுமையாக இருக்க முடியாது. ஆளுமையாக இருப்பதற்குக் கடந்தகாலத்தின் கனம் வேண்டும்.

> ***''அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லை இறந்துவிட்டார்களா?''***
>
> ***''அவர்கள் இறந்து பலகாலம் ஆகிவிட்டது.''***
>
> ***''அப்படியென்றால் இறந்தவர்கள் விட்டுச் சென்ற அழுக்கைப் படித்துக் கொண்டிருக் கிறீர்கள்.''***

எங்கெல்லாம் கடந்தகாலத்தைக் கொண்டாடுகிறீர்களோ அங்கெல்லாம் அழுக்கைப் பூஜை செய்கிறீர்கள். கல்லறைகளைக் கோவில்களாக நினைத்து வழிபடுகிறீர்கள். நீங்கள் கல்லறை தோண்டுபவர். நீங்கல் கல்லறையில் இருப்பவர்.

> ***''உனக்கு என்ன தெரியும் இதைப்பற்றி? நீயோ சக்கரங்கள் செய்யும் ஒரு சாதாரணத் தொழிலாளி. உன் கூற்றுக்குச் சரியான விளக்கம் கொடுக்க வில்லையென்றால் உனக்கு மரணம் நிச்சயம்.''***

அந்தப் பிரபுவால் நம்பமுடியவில்லை. ஒரு சாதாரண சக்கரம் செய்யும் தொழிலாளி தனக்கு பெரிய விஷயங்களைக் கற்றுத்தருவதா? பாடம் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் உடையவர்கள் எங்கு வேண்டுமானாலும் படிப்பார்கள். ஆனால் இந்த பிரபுவோ செத்த ஆளுமைகளிடம் பாடம் படிப்பதையே விரும்புகிறான். உயிருள்ள சக்கரம் செய்யும் தொழிலாளியிட மிருந்து பாடம் படிப்பதை விரும்பவில்லை.

நான் சொல்கிறேன். செத்த சக்கரவர்த்தியைவிட உயிருள்ள சக்கரம் செய்யும் தொழிலாளி எவ்வளவோ மேல். காரணம் அவன் உயிருடன் இருக்கிறான். அந்தத் தொழிலாளியை யாரும் வழிபட மாட்டார்கள். ஆனால் இருப்புநிலை அவனை நம்பு கிறதே. அதற்கு ஒரே காரணம் அவன் உயிருடன் இருக்கிறான் என்பதே!

***உன் கூற்றுக்குச் சரியான விளக்கம் கொடுக்க வில்லையென்றால் உனக்கு மரணம் நிச்சயம்.''***

***அப்போது அந்தத் தொழிலாளி சொன்னான்.***

***''இந்த விஷயத்தை என் கோணத்திலிருந்து பார்ப்போம். நான் செய்யும் சக்கரங்கள் மிகவும் தளர்வாக இருந்தால் நிற்காமல் விழுந்துவிடும். மிகவும் இறுக்கமாக இருந்தால் வண்டியில் பொருந்தாது. மிகவும் தளர்வாகவும் இல்லாமல் மிகவும் இறுக்கமாகவும் இல்லாமல் செய்தால் தான் சரியாக இருக்கும். அப்போதுதான் என் மனதிற்குப் பிடித்தமாதிரி அமையும்.***

***''இதை வார்த்தையில் சொல்ல முடியாது. இது எப்படி என்று நீங்களே தெரிந்து கொள்ள வேண்டும்.***

நீங்கள் எந்த முனைக்குச் சென்றாலும் சக்கரம் சரியாக வராது. மிகவும் மென்மையாகவும் இல்லாமல் மிகவும் கடுமையாகவும் இல்லாமல் நடுவில் உள்ள பாதையில் செல்ல வேண்டும். அதை எப்படி வார்த்தையில் விளக்க முடியும்? மிக உயரத்தில் கயிறைக் கட்டி அதன் மேல் ஏறி நடப்பவனிடம் கேளுங்கள். அவனும் அதையேதான் சொல்வான். இரண்டு மலைகள். நடுவே மிகவும் ஆழமான பள்ளத்தாக்கு. இரண்டு மலை உச்சிகளையும் இணைத்து இறுக்கமாக ஒரு வலுவான கயிறைக்கட்டியிருக் கிறார்கள். அந்தக் கயிற்றில் நடந்து செல்ல வேண்டும். கால்-தவறி விழுந்தால் மரணம்தான். கரணம் தப்பினால் மரணம் என்ற சூழ்நிலை. அவன் எப்படி நடப்பான்? சரி அதை எப்படி வார்த்தையில் சொல்வான்?

''நான் வலது பக்கம் அதிகமாகச் சாய்ந்தால் சமநிலை போய்விடும். அதை மீட்க இடது பக்கம் சாய வேண்டும். இடது பக்கம் அதிகமாகச் சாய்ந்தாலும் சமநிலை போய்விடும். மீண்டும் அதை மீட்க வலது பக்கம் சாய வேண்டும்..''

இதை எழுதிவிடலாம். ஆனால் இதைப் படித்துவிட்டு கயிறில் நடக்க நினைக்காதீர்கள். திரும்பி வர மாட்டீர்கள். ஏனென்றால் இது உங்கள் அறிவால் அறியப்படும் விஷயம் அல்ல. உணரப்பட வேண்டிய விஷயம். எந்த அளவிற்குச் சாய வேண்டும்? எந்த அளவிற்குச் சாயக்கூடாது என்பதற்குச் சூத்திரம் எல்லாம் கிடையாது. இதில் ஒவ்வொருவரும் ஒவ்வொருமாதிரி. எவ்வளவு தூரம் சாய வேண்டும். என்பது அந்த ஆளைப் பொறுத்தது. அவரது உயரம், எடை, சூழ்நிலை, காற்றின் வேகம் இவை எல்லாவற்றையும் பொறுத்தது. அவரது மனநிலையையும் பொறுத்தது. அதை உள்ளுணர்வால் உணர வேண்டும். இதற்கு ஒரு நிலையான சூத்திரம் கிடையாது. இதை ஒரு குருதேவரிடம் கற்க வேண்டும். இதைக் கல்லூரியில் கூடக் கற்க முடியாது.

நீங்கள் கல்லூரியில் தத்துவம் கற்கலாம், கணக்குப் பாடம் கற்கலாம் விஞ்ஞானம் கற்கலாம். ஆனால் எந்தத் திறமையையும் கற்க முடியாது. ஒரு திறமையை அந்தத் துறையில் வல்லுனராக இருக்கும் ஒருவர் மூலம்தான் கற்க முடியும். அவரைக் கவனிக்க வேண்டும். அவரை உணர்ந்து கொள்ள வேண்டும். அவர் மேல் உங்கள் நம்பிக்கை முழுமையாக இருக்கும் போது அவர் வலது பக்கம் சாய்ந்தால் உங்கள் உள் இருக்கும் இருப்பும் வலது பக்கம் சாயும். அவர் இடது பக்கம் சாயப் போகிறார் என்பதை உங்களால் உணர முடியும். நீங்களும் அப்படியே சாயத் தொடங்குவீர்கள். முதலில் அவருடைய நிழலாக இருப்பீர்கள். போகப் போக நீங்கள் தனியாகச் செயல்படத் தொடங்குவீர்கள்.

**அப்போது அந்தத் தொழிலாளி சொன்னான்.**

**''இந்த விஷயத்தை என் கோணத்திலிருந்து பார்ப்போம். நான் செய்யும் சக்கரங்கள் மிகவும் தளர்வாக இருந்தால் நிற்காமல் விழுந்துவிடும்.**

**மிகவும் இறுக்கமாக இருந்தால் வண்டியில் பொருந்தாது. மிகவும் தளர்வாகவும் இல்லாமல் மிகவும் இறுக்கமாகவும் இல்லாமல் செய்தால் தான் சரியாக இருக்கும். அப்போதுதான் என் மனதிற்குப் பிடித்தமாதிரி அமையும்.**

**''இதை வார்த்தையில் சொல்ல முடியாது. இது எப்படி என்று நீங்களே தெரிந்து கொள்ள வேண்டும். என்னால் என் மகனுக்குக்கூட இந்த பதத்தைச் சொல்லித் தர முடியவில்லை. அதனால் தான் இந்த எழுபது வயதிலும் நான் சக்கரங்கள் செய்து கொண்டிருக்கிறேன்.**

அவன் என்ன சொல்கிறான்? மிகவும் ஆழமான ஒரு உண்மையை எளிய வார்த்தைகளில் சொல்கிறான். சில விஷயங்களை உங்களுடைய முழுமையான ஈடுபாட்டின் மூலம் தான் கற்க முடியும். உங்கள் உடல் பொருள் ஆவி எல்லாமே அந்தக் கற்றலில் ஈடுபட்டால்தான் காரியம் நடக்கும். அறிவு மட்டும் போதாது. ஒரு சூத்திரத்தை உருவாக்கலாம். ஆனால் அதில் தவற வாய்ப்பிருக்கிறது. கையில் ஒரு சூத்திரம் இருந்தால் அதை எல்லாச் சூழ்நிலையிலும் கடைப்பிடிப்பீர்கள் மாறிவரும் சூழ்நிலையில் செத்துப் போன சூத்திரங்கள் காரியத்துக்கு ஆகாது. ஒவ்வொரு சூழ்நிலையிலும் ஒவ்வொரு மாதிரி நடந்து கொள்ள வேண்டும். அதைச் சில சூத்திரங்களில் அடக்கி வைக்க முடியாது. உணர்வுதான் நம்மைக் காக்கும். அறிவல்ல. உங்களுக்குள் நீங்கள் ஒளியைக் கொண்டு செல்ல வேண்டும். அப்போதுதான் ஒவ்வொரு சூழ்நிலையையும் நீங்கள் உணர்ந்து செயலாற்ற முடியும். சூழ்நிலையை சூத்திரத்தில் அடக்க முடியாது. மாறாக ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஒரு புதிய சூத்திரத்தை நீங்கள்தான் உருவாக்க வேண்டும்.

வாழ்க்கை நகர்ந்து கொண்டேயிருக்கிறது. வாழ்க்கை என்ற திரைப்படத்தில் ஒரே காட்சி இரண்டு முறை வராது. ஒரு காட்சி மீண்டும் வருவது போல் தோன்றும்;. ஆனால் கூர்மையாகக் கவனித்தால் ஏதாவது நுணுக்கமான வேறுபாடு இருக்கும்.

வாழ்க்கை ஒரே மாதிரி இருப்பதாக உங்களுக்குத் தோன்றினால் பிரச்சினை உங்களிடம் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். வாழ்க்கை என்ற திரைப்படத்தில் ஒரே காட்சி பலமுறை வருவதாகத் தோன்றினால் உங்களிடம் உயிர்ப்பு இல்லை என்று புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் இன்று காலையில் வானத்தில் பார்த்த மேகம் மீண்டும் தோன்ற வாய்ப்பேயில்லை. இன்று காலை உதித்த சூரியன் மீண்டும் உதிக்காது. நாளைக் காலை பிரபஞ்சமே ஒட்டு மொத்தமாக மாறியிருக்கும். பிரபஞ்சம் பிரம்மாண்டமானது. சதா மாறிக்கொண்டேயிருக்கும்.

எல்லாம் மாறிக்கொண்டேயிருக்கிறது. மனித மனத்தைத் தவிர எதுவுமே பழையது இல்லை. உலகத்தின் ஒரே பழைய பொருள் மனித மனம் தான். உலகத்தின் ஒரே அருங்காட்சியகம் அதுதான். புதைபடிவங்களின் புகலிடம் மனித மனம். மனித மனம் ஒரு கல்லறை.

மனதை விட்டுவிட்டுப் பாருங்கள் எல்லாமே புதியவை தான். எங்காவது பழையதைப் பார்க்க முடிகிறதா பாருங்கள், எல்லாமே மாறிக்கொண்டிருக்கிறது. இமய மலை கூட மாறிக் கொண்டிருக்கிறது. இமயம் வருடத்திற்கு ஒரு அடி வளர்ந்து கொண்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். கடல் மாறுகிறது. பூமி மாறுகிறது. கண்டங்கள் நகர்கின்றன.

ஒரு காலத்தில் ஆப்பிரிக்கா இந்தியாவோடு சேர்ந்து இருந்தது.. கண்டங்கள் காலப் போக்கில் மிகவும் நகர்ந்து போய் விட்டதாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஒருகாலத்தில் இலங்கை இந்தியாவிற்கு மிக அருகில் இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அனுமனால் இங்கிருந்து அங்கே குதித்திருக்க முடியாது. இந்தியாவிற்கும் இலங்கைக்கும் நடுவே ஒரு சிறிய ஆறு இல்லை ஒரு நீரோடைதான் இருந்திருக்க வேண்டும். கண்டங்கள் நகர்கின்றன. கண்டங்கள் மாறுகின்றன என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது.. எதுவும் நிலையாக இருப்பதில்லை.

எடிங்டன் என்ற விஞ்ஞானி மனிதர்கள் பயன்படுத்தும் ஒரு சொல் மகா தப்பு என்று சொல்கிறார். அது ''ஓய்வு'' என்னும்

சொல். எல்லாமே நகர்ந்து கொண்டிருக்கிறது. எதுவுமே ஓய்வு நிலையில் இல்லை. இருக்கவும் முடியாது. வாழ்க்கை என்பது நிரந்தர மாற்றம்தான். அப்படி இருக்கும் போது சொல்லால் எதைப் புரிய வைக்க முடியும்? அந்தச் சக்கரம் செய்யும் தொழிலாளி சொன்னது நிஜம்தான். ஒவ்வொரு சக்கரமும் ஒவ்வொரு மாதிரியானது. மரம் வேறு. வண்டி வேறு. சூழ்நிலை வேறு. வண்டி போகும் சாலை வேறு. அதை உணர்ந்துதான் வேலை செய்ய வேண்டும்.

**''இதை வார்த்தையில் சொல்ல முடியாது. இது எப்படி என்று நீங்களே தெரிந்து கொள்ள வேண்டும். என்னால் என் மகனுக்குக்கூட இந்த பதத்தைச் சொல்லித் தர முடியவில்லை.**

உங்கள் மகனுக்கும் உங்களால் அதைச் சொல்லித்தர முடியாது. புத்தர் தன் மகனுக்குச் சொல்லிக் கொடுத்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஷுவாங் ட்சுவின் மகனுக்கு என்ன நடந்ததென்று உங்களுக்குத் தெரியுமா? இல்லை லாவோ ட்சுவின் மகன் என்ன ஆனான் என்பதாவது உங்களுக்குத் தெரியுமா?

ஒரு தந்தையால் தன் மகனுக்குச் சொல்லித் தர முடியாது. அவர்களுடைய அகந்தைகள் ஒன்றுக்கு ஒன்று எதிராகவே இருக்கும். காரணம் மகன் எப்போதும் தந்தையுடன் சண்டை போட்டுக் கொண்டிருப்பான். எதையாவது நிரூபிக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பான். தன் தந்தையைவிடத் தான் உயர்ந்தவன் என்பதை நிரூபிக்கப் படாத பாடு பட்டுக் கொண்டிருப்பான். தன் தந்தை ஒரு வயதான முட்டாள் என்பதுதான் அவனுடைய எண்ணமாக இருக்கும். தன் மகன் உருப்படியாக ஏதாவது கற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கை தந்தைக்கும் இருக்காது. மகனுக்கு எழுபது வயதானாலும் தந்தைக்கு தொன்னூறு வயது ஆனாலும் தந்தைக்கு மகன் குழந்தைதான். அவர்களிடையே ஒரு பாலம் அமைப்பது மிகவும் கடினம்.

அந்தத் தொழிலாளி சொல்வதன் தாத்பரியத்தைப் புரிந்து கொள்ளுங்க்ள். ''என் அருகில் இருக்கும் என் மகனுக்கே என்

தொழிலைச் சொல்லித் தர முடியவில்லை. நான் என்ன நினைக்கிறேன் என்று எனக்குச் சொல்லத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் இந்த எழுபது வயதில் இன்னமும் நான் சக்கரங்கள் செய்து கொண்டிருக்கிறேன். ''

அவன் என்ன சொல்கிறான்:

''நான் ஓய்வு பெறும் வயது வந்துவிட்டது. எனக்கு வயதாகிவிட்டது. உடல் நலம் சரியில்லை. என்னால் இனிமேல் வேலை செய்ய முடியாது. ஆனால் என்ன செய்வது? வண்டிக்குச் சக்கரங்கள் செய்யும் கலையை யாராலும் கற்க முடியவில்லையே! அதனால்தான் இந்தவயதிலும் நான் இன்னும் சக்கரங்கள் செய்து கொண்டிருக்கிறேன். ''

இந்தக் கதையைச் சூஃபிகள்தான் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். அவர்கள்தான் கைத்தொழில் மூலம் உண்மையை உபதேசித்தார்கள். தொழில் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். மரத்தச்சரின் தொழிலாக இருக்கலாம். செருப்புச் செய்பவன் தொழிலாக இருக்கலாம். வண்டிச் சக்கரம் செய்பவனாக இருக்கலாம். சூஃபிக்கள் கைத்தொழில் மூலமாகத்தான் ஆன்மிகத்தைக் கற்றுத் தருவார்கள். முதலில் குருவிடமிருந்து கைத்தொழிலைக் கற்க வேண்டும். அதன்பின் அந்தக் கைத் தொழில் மூலமாக உள்ளார்ந்த உண்மைகளைப் போதிப்பார் குரு.

ஏன்? அந்தக் காரணம் கொஞ்சம் அபத்தமாக இருக்கலாம். கொஞ்சம் சிந்தித்துப் பாருங்களேன். முதலில் அந்தச் சீடர் காலணிகள் செய்வது எப்படி என்று கற்றுக் கொள்கிறார். பின் பத்து பனிரெண்டு வருடங்கள் கழித்து, சில சமயம் இருபது வருடங்கள் கூட ஆகிவிடும் - சீடர் காலணிகள் செய்வதில் விற்பன்னரானபின் குரு ஆன்மிகத்தைப் போதிப்பார். ஏன் இப்படிக் காலத்தை விரயம் செய்கிறார்கள் என்று எண்ணத் தோன்றும். ஆனால் உண்மை அதுவல்ல.

சூஃபிக்கள் என்ன சொல்கிறார்கள்? நீங்கள் என்ன கற்கிறீர்கள் என்பது முக்கியமல்ல. எப்படிக் கற்கிறீர்கள் என்பதுதான் முக்கியம்.

எப்படிக் கற்க வேண்டும் என்பதில் நீங்கள் தேர்ந்துவிட்டால் அதன்பின் உள்ளார்ந்த ரகசியத்தின் சாவிகளை உங்களிடம் உடனே கொடுத்துவிடலாம். இருபது வருடங்கள் அந்தக் குருவுடன் வசித்து காலணிகள் செய்வது எப்படி என்று கற்றுக் கொள்ளும் சீடன் அந்த கற்றலை உள்வாங்கிக்கொள்கிறான். அந்த உள்வாங்குதல் அதிகமாக அதிகமாக அவன் மிகத் திறமையான காலணி செய்பவனாக மலர்கிறான். ஆன்மிகத்தைப் பற்றி யாருமே பேச மாட்டார்கள். உள்வாங்கும் திறமை மட்டுமே அலசி ஆராயப்படும்.

அந்தக் கற்றல் எந்தத் துறையில் வேண்டுமானாலும் இருக்கலாம். எந்தத் துறையில் குருவிற்கு நல்ல தேர்ச்சி இருக்கிறதோ அதையே சீடனுக்கும் சொல்லிக் கொடுப்பார். அடுத்தவரின் திறமையை உள்வாங்கிக்கொள்ளும் திறமை உங்களுக்கு வந்துவிட்டால் அவர் ஆன்மிகத்தைக் கற்றுக் கொடுப்பார்

அதன்பின் அவர் உங்களை ஆலயத்தின் வாசலுக்கு அழைத்துச் சென்று ஆலயத்தின் சாவிகளை உங்கள் கையில் கொடுப்பார். உங்களுக்குச் செருப்பு செய்வதையே கற்றுக் கொள்ள முடியவில்லையென்றால் ஆன்மிகத்தை எப்படிக் கற்றுக் கொள்வீர்களாம்?

### *அதனால்தான் இந்த எழுபது வயதிலும் நான் சக்கரங்கள் செய்து கொண்டிருக்கிறேன்*

நான் உயிருடன் இருக்கும்போதே யாரும் என்னிடமிருந்து என் தொழிலைக் கற்றுக் கொள்ள முடியவில்லை. நீங்கள் எப்படி செத்தவர்களிடமிருந்து தெய்விகத்தை மனிதனுக்குக் கொண்டு வரும் உன்னதமான கலையைக் கற்பீர்கள்.?

***''அந்தக்காலத்தில் வாழ்ந்தவர்கள் தங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் தங்களுடன் கல்லறைக்குக் கொண்டு சென்று விட்டார்கள். அதனால், மகாபிரபு, நீங்கள் படித்துக் கொண்டிருப்பது அவர்கள் விட்டுச் சென்ற அழுக்கைத்தான்.***

இதை நன்றாக நினைவில் கொள்ள வேண்டும்.

**"அந்தக்காலத்தில் வாழ்ந்தவர்கள் தங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் தங்களுடன் கல்லறைக்குக் கொண்டு சென்று விட்டார்கள்.**

ஒரு புத்தர் இறந்துவிட்டால் அவர் ஞானம் அவருடன் இறந்துவிடுகிறது. அதுதான் விதி. அப்படித்தான் இருக்க வேண்டும். நாம் அதை விரும்பாமல் இருக்கலாம். ஆனால் இங்கே நமது விருப்பம் கேள்வியல்ல.

மகாவீரருக்குத் தெரிந்ததெல்லாம் அவர் இறந்தவுடன் இந்த உலகத்திலிருந்து மறைந்துவிடும். அதைப் புனித நூல்களில் தேக்கி வைக்க முடியாது. பூசாரிகளோ மேதைகளோ அதை மனதில் வைத்துக் கொண்டு மற்றவர்களுக்குச் சொல்ல முடியாது. வார்த்தைகள் மனனம் செய்யப்படலாம். இயந்திரத்தனமாக ஒப்பிக்கப்படலாம். மீண்டும் மீண்டும் சொல்லப்படலாம். அந்த வார்த்தைகளே வணங்கப்படலாம். ஆனால் வார்த்தைகள் என்பவை என்ன? அழுக்கு. கழிவுகள். செத்த பாம்புகள். தூசி படிந்த கல்லறைகள். அதைச் சுற்றி அழகான கோயில்களை உருவாக்கி அதில் நீங்கள் தொடர்ந்து வழிபட்டுக் கொண்டு இருக்கலாம். ஆனால் ஒரு புத்தரின் ஞானம் அவருடன் மறைந்துவிடும். ஏனென்றால் அந்த ஞானத்தைப் புத்தரிலிருந்து பிரித்து எடுக்க முடியாது. அந்த ஞானம் தான் அவருடைய இருப்பு. அது அவருடன் ஒருங்கிணைந்தது. அதுதான் அவர். அவர்தான் அந்த ஞானம்.

புத்தர் மறைந்தவுடன் அவருடைய உணர்வுநிலை முடிவற்ற வெளியில் கலந்துவிடுகிறது. ஆறு கடலுடன் கலந்துவிட்டது. அந்த ஆற்றுப்படுகையை நீங்கள் வழிபடலாம். அந்த அறு ஓடின தடத்தை வழிபடலாம். ஆனால் அந்த ஆறு அங்கு இல்லை. நீங்கள் அங்கே கோவில்கள் கட்டலாம். அந்த இடத்திற்குத் தீர்த்த யாத்திரை போகலாம். அதனால் எந்தப் பயனில்லை.

அந்தச் சக்கரம் செய்யும் தொழிலாளி என்ன சொல்கிறான்? எப்போதும் வாழும் குருவையே நாடு என்று சொல்கிறான்.

வாழ்ந்து கொண்டிருக்கும் குருவே இங்கே இருக்கிறார். வாழ்க்கைதான் ஜடப் பொருளை ஊடுருவிச் செல்கிறது. புத்தர் மறையும் போது அவருடைய ஞானமும் அவருடனே மறைந்துவிடுகிறது. அதனால்தான் புத்தர்கள் தங்கள் ஞானத்தை நம்முடன் பகிர்ந்து கொள்ள அவசரப்படுகிறார்கள். தகுந்த சீடர்களைத் தேடுவதில் அவசரம் காட்டுகிறார்கள். ஏனென்றால் அவர்களுடன் அவர்கள் கற்றதெல்லாம் போய்விடுமே!

அந்த ஞானத்தை மீண்டும் மீண்டும் கண்டுபிடிக்க வேண்டும். அது விஞ்ஞானத்தைப் போன்றதல்ல விஞ்ஞானம் என்பது ஒரு மரபு. ஆனால் மதமும் சமயமும் தனி மனிதன் சம்பந்தப்பட்டது.

நியூட்டன் என்ற விஞ்ஞானி புவியீர்ப்பு விதிகளைக் கண்டுபிடித்தால் அது எல்லாருக்கும் சொந்தம். எல்லாருக்காகவும் அங்கே இருக்கும். நூலகத்தில் இருக்கும் புத்தகங்களில் நியூட்டனின் கண்டுப்பிடிப்புகள் எழுதப்பட்டிருக்கும். பின்னால் வரும் ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகளுக்கு அது பயன்படும். நியூட்டன் இல்லாமல் ஐன்ஸ்டீன் உருவாகியிருக்க முடியாது. 'நான் நியூட்டனைவிட உயரமாகத் தெரிவதற்குக் காரணம் நான் அவருடைய தோள்களின் மேல் நின்று கொண்டிருக்கிறேன்.' என்று ஐன்ஸ்டீனே சொல்லியிருக்கிறார். சில இடங்களில் அவர் நியூட்டனின் கண்டுபிடிப்புகளோடு வேறுபடலாம். நியூட்டனின் கருத்துகளோடு முரண்படலாம். ஆனால் அவர் நியூட்டனின் மேல் நின்று கொண்டிருக்கிறார் என்பதில் இரண்டாம் கருத்துக்கே இடம் இல்லை. ஐன்ஸ்டீனின் விஞ்ஞானத்திற்கு நியூட்டன்தான் அடிப்படை.

ஐன்ஸ்டீன் கண்டுபிடித்தது மனிதகுலத்தின் ஒரு பகுதி யாகவே இருக்கும். என்றென்றும். அதனால்தான் விஞ்ஞானம் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. நாளாக ஆக வளர்ச்சி இன்னும் வேகமாகத்தான் இருக்கிறது.

ஆனால் மதம் என்பது அதைக் கண்டுபிடித்தவரோடு மறைந்துவிடும். ஐன்ஸ்டீன் நியூட்டனின் தோளின் மேல் ஏறி நிற்கலாம். ஆனால் நீங்கள் புத்தரின் தோள்கள் மேல் ஏறி நிற்க

முடியாது. அதற்கான சாத்தியக்கூறுகளே இல்லை. நீங்கள் உங்கள் கால்களிலேயே நிற்க வேண்டும். மதத்தை மீண்டும் மீண்டும் கண்டுபிடித்தாக வேண்டும். அது ஒரு தனிமனித கண்டுபிடிப்பு. விஞ்ஞானம் போல் அதை ஒரு மரபாக வைத்திருக்க முடியாது. இதுதான் மதத்தில் உள்ள பெரிய கஷ்டம். ஆனால் இதுதான் மதத்தில் உள்ள அழகும் கூட. ஏனென்றால் மதத்தின் கண்டு பிடிப்புகளைக் கடன் வாங்க முடியாது. ஒவ்வொரு முறையும் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுவதால் உண்மையான மதம் என்பது எப்போதுமே இளமையுடனும் புதுமையுடனும் விளங்கும்.

ஒரு விதத்தில் மதம் என்பது காதல் போல. லைலா - மஜ்னு காதல் கதைகளைப் படித்திருக்கிறோம். ஷிரின் - ஃபரிஹாத், ரோமியோ - ஜூலியட் காதல் சரித்திரம் பிரபலமானதுதான். ஆனால் நீங்கள் அவர்கள் தோள்களின் மேல் ஏறி நின்று கொண்டு அவர்களை விட அதிகமாகக் காதலிக்க முடியாது. அவர்களுடைய காதல் அனுபவங்களை உங்களுடையதாக்கிக் கொள்ள முடியாது. விஞ்ஞானத்தில் அறிவைத் திரட்டுவது போல் மற்றவர்களுடைய காதல் அனுபவங்களைத் திரட்டி நம் காதலை வளர்க்க முடியாது. நீங்கள் காதலில் விழுந்தால் மீண்டும் அந்தக் காதல் கண்டுபிடிக்கப்பட வேண்டும். உங்களுக்கு முன் இந்த உலகத்தில் யாருமே காதலிக்கவில்லை என்னும் அடிப்படையில் தான் நீங்கள் உங்கள் காதலை அணுக வேண்டும். உங்களுக்கு முன்னால் யாராவது காதலில் விழுந்தார்களா இல்லையா என்பது கேள்வியல்ல. அது எந்த வகையிலும் உங்கள் காதலைப் பாதிக்காது. உங்கள் காதல் புதியது. இதுவரை இல்லாதது. அதன் பரிமாணங்களை நீங்கள்தான் புதிதாகக் கண்டுபிடிக்க வேண்டும். அந்தக் கண்டுபிடிப்புக்கு லைலா - மஜ்னு காதல் உங்களுக்கு எந்த விதத்திலும் உதவி செய்யாது. காதல் என்னும் கோவிலில் ஒவ்வொரு காதலனும் காதலியும் புதிதாக நுழைகிறார்கள். பழைய காதல்களின் வழித்தடங்கள் அங்கு இல்லை. லைலா - மஜ்னுவின் காதல் அவர்களோடு செத்துவிட்டது. அப்படி இருப்பதுதான் நல்லது. இல்லாவிட்டால் காதலும் ஒரு மரபாகி யிருக்கும் - விஞ்ஞானத்தைப் போல. வரைபடங்கள் வழிகாட்டிகள் நிறைந்த பாதையாகியிருக்கும். அந்தக் காதல்

பாதையில் நடப்பதில் எந்த சுகமும் இல்லை. அது ஒரு சந்தைச் சரக்காகிவிடும். அது கோவிலாக இருக்காது. நெடுஞ்சாலையாகவே இருக்கும்

நீங்கள் காதலிக்கும் போது முதன் முறையாக அதைச் செய்கிறீர்கள். மற்றவர்களுடைய காதல் அனுபவத்தை நீங்கள் பின்பற்றுவதில்லை. உங்கள் காதல் உங்களுடையது. இருப்பு நிலை உங்கள் மூலம் முதன் முறையாகக் காதலிக்கிறது. இதுதான் இங்கிருக்கும் முரண். காதல் என்னும் புதிரின் விளக்கம் உங்கள் மூலம் உங்களுக்காக வெளிப்படுத்தப்படுகிறது.. ஒவ்வொருவர் காதலிக்கும் போதும் இதுதான் நிகழ்கிறது.

காதலைப் போலத்தான் மதமும் அதைப் போலத்தான் தியானமும் வழிபாட்டுணர்வும். இறந்தவர்களைப் பின் தொடர முடியாது. வாழ்பவர்கள் முன்னிலையில்தான் அந்த அனுபவத்தைப் பெற முடியும்.. அதை உணர்வுகள் மூலம் உள்வாங்கிக் கொள்ள வேண்டும்.

நீங்கள் சமயம் என்னும் அனுபவத்திற்குள் நுழையும் போது உங்களுக்கு அதுதான் முதல் முறை. ஒரு வகையில் பார்த்தால் புத்தரோடு அஃவர் உணர்ந்ததெல்லாம் மறைந்தது நல்லது என்றுதான் தோன்றுகிறது. அவர் கண்டுபிடித்த பாதை அவருக்கு மட்டும்தான் என்ற விதி தேவையே என்று தோன்றுகிறது. நீங்கள் உங்கள் பாதையைக் கண்டுபிடிக்க வேண்டும்.. இது நிரந்தரமாக நடந்து கொண்டிருக்கும் கண்ணாமூச்சி விளையாட்டு. கடவுள் மீண்டும் ஒளிந்து கொள்கிறார். அவரை நீங்கள் மீண்டும் கண்டுபிடிக்க வேண்டும்.

புத்தர் கடவுளைக் கண்டுபிடித்துவிட்டால் ''இதோ இங்கேதான் கடவுள் இருக்கிறார்'' என்று பலகையை எழுதி வைத்துவிடுட்டு எல்லாம் முடிந்துவிட்டது என்று நாம் சும்மா இருக்க முடியாது. அந்த இடத்திற்குப் போய் யார் வேண்டுமானாலும் கடவுள்ளைப் பார்க்கலாம் என்று விட்டுவிட முடியாது.

புத்தர் கண்டுபிடித்த கடவுள் புத்தர் போனவுடன் மீண்டும் ஒளிந்து கொண்டுவிடுவார். இந்த விளையாட்டில் மிகவும் தேர்ச்சி

பெற்றவர் கடவுள். சத்தியமாகப் புத்தர் கண்டுபிடித்த அதே இடத்தில் இருக்கமாட்டார். வேறு எங்காவது ஒளிந்து கொண்டிருப்பார்.

அதனால்தான் பழைய உத்திகள் பயனற்றுப் போய்விடுகின்றன. புதிய உத்திகளை மீண்டும் மீண்டும் கண்டுபிடிக்க வேண்டும். காரணம் கடவுள் ஒவ்வொரு முறையும் ஒரு புதிய இடத்தில் ஒளிந்து கொள்கிறார்.

புதிய குகைகளைக் கண்டுபிடித்து அங்கே போய் ஒளிந்து கொள்கிறார். பழைய குகைகளிலிருந்து வெளியேறிவிடுகிறார்.

''இந்தக் குகையில் என் ஆட்டம் முடிந்தது. இங்கே வழிபடுபவர்கள் வழிபடட்டும். ஆனால் நான் இங்கு இருக்க மாட்டேன்.'' என்று சொல்வது போல் இருக்கிறது அவர் செய்கை.

இன்று இவ்வளவு போதும்.

**மீன்கள் நீரில் பிறக்கின்றன. மனிதன் தாவோவில் பிறக்கிறான். நீரில் பிறந்த மீன்கள் குளத்தின் நீரோடைகளின் ஆழமான நிழல்களைத் தேடும் போது அவற்றின் தேவைகள் நிறைவு பெறுகின்றன. தாவோவில் பிறந்த மனிதன் செயலற்ற நிலையின் ஆழமான நிழலில் மூழ்கி, கவலையையும் வன்முறையையும் மறக்கும் போது அவனுக்கு எந்தக் குறையும் இருக்காது. அவன் வாழ்வு பாதுகாப்பானதாக இருக்கும்.**

தேவைகளைப் பூர்த்தி செய்யலாம். ஆனால் ஆசைகளைப் பூர்த்தி செய்ய முடியாது. தேவை வெறியாக மாறும் போது ஆசையாகிறது. தேவைகள் எளிமையானவை. அவை இயற்கையிலிருந்து வருகின்றன. ஆசைகள் சிக்கலானவை அவை இயற்கையிலிருந்து வருவதில்லை. ஆசைகள் மனதினால் உருவாக்கப்படுகின்றன. தேவை என்பது அவ்வப்போது தோன்றுபவை. வாழ்க்கையே அந்தத் தேவைகளை உருவாக்குகின்றன.

ஆசைகள் அவ்வப்போது தோன்றுபவை அல்ல. அவை வருங்காலத்திற்கானவை. அவற்றை வாழ்க்கை உருவாக்குவதில்லை. மனம் தான் உருவாக்குகிறது. ஆசைகள் மனத்தின் வெளிப்பாடுகள். ஆசைகள் தேவைகள் அல்ல. இது தான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய முதல் விஷயம். இதை எந்த அளவிற்கு ஆழமாகப் புரிந்து கொள்கிறோமோ அந்த அளவிற்கு நல்லது. இப்போது இன்னும் சற்று விரிவாகப் பார்ப்போம்.

ஆசை என்பது என்ன? மனம் வருங்காலத்திற்குள் நகர்வதுதான் ஆசை. தேவை என்பது இந்தக் கணத்திற்குச் சொந்தமானது. உதாரணமாக உங்களுக்குப் பசி எடுக்கிறது. அது ஒரு தேவை. அதை உடனே பூர்த்தி செய்ய வேண்டும். பூர்த்தி செய்யலாம். அதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. நீங்கள் தாகமாக இருக்கிறீர்கள். அது இப்போது இங்கே இந்தக் கணத்தில் உருவானது. நீங்கள் தண்ணீரைத் தேடுகிறீர்கள். தாகம் என்னும் தேவையை நீங்கள் நிறைவு செய்ய வேண்டும். அது ஒரு அடிப்படைத்தேவை.

ஆனால் ஆசை அப்படியில்லை. நீங்கள் இந்த நாட்டின் தலைவராக வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள் அது தேவை இல்லை. பேராசை. பேரார்வம். உங்கள் வருங்காலத்தைப் பற்றி உங்கள் அகந்தையின் கருத்துரு. சொர்க்கம் வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள். அதுவும் வருங்காலத்தில் உள்ளதுதான். அதுபோல்தான் இறைவன் மேல் உள்ள ஆசையும்.. தேவைகள் எல்லாம் இந்தக் கணத்தை நிகழ்காலத்தைச் சேர்ந்தவை. அவை இருப்புநிலை சார்ந்தவை. ஆசைகள் இல்லாத வருங்காலத்தைச் சார்ந்தவை. ஆசைகள் எல்லாமே மனதின் விகாரங்களே. ஆசைகளை முழுவதுமாக நிறைவு செய்ய முடியாது. ஒரு ஆசையை நிறைவு செய்யும் தருணத்தில் அதை ஒட்டி அதைவிடப் பெரிதாக இன்னொரு ஆசை தோன்றும். ஆசைகள் வருங்காலத்தில் நகர்ந்து கொண்டே இருப்பவை.

ஆசைகள் தொடுவானம் போன்றவை. நமக்கு மிக அருகில் ஒரு இடத்தில் பூமியும் வானமும் சந்திப்பது போன்ற ஒரு தோற்றம் தெரியும். அது மிகத் தெளிவாகத் தெரியும். பத்தடி நடந்தால் அதைப் பார்த்துவிடலாம் என்று தோன்றும். ஆனால் நீங்கள் நடக்கத் தொடங்கினால் அது இன்னும் பின்னால் நகர்ந்து போய்க்கொண்டேயிருக்கும். உங்களுக்கும் தொடுவானத்திற்கும் இடையே உள்ள தூரம் குறையவே குறையாது. ஆனால் எந்த ஒரு இடத்திலும் சற்றுத் தள்ளி பூமியும் வானமும் தொடுவது போல் தோன்றும். ஆனால் வானமும் பூமியும் சந்திக்கும் இடத்தை நீங்கள் அடையவே முடியாது. வானமும் பூமியும் சந்திக்கவே

சந்திக்காது. அது ஒரு தோற்றம் மட்டுமே. இதைத்தான் இந்துக்கள் மாயை என்கிறார்கள்.

கொஞ்சம் தூரத்தில் இருந்து பார்க்கும் போது வானும் பூமியும் சந்திப்பது போல் தோன்றும். அது ஒரு மாயத்தோற்றமே. அருகே போகப் போக அந்தச் சந்திப்பு மாயை என்று உங்களுக்குத் தோன்றும். ஆனால் அங்கிருந்து இன்னும் சிறிது தூரத்தில் அந்தச் சந்திப்பு நிகழ்வது போல் தோன்றும். உங்களுக்கும் தொடுவானத்துக்கும் உள்ள தொலைவு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.

அதே போல் உங்களுக்கும் உங்கள் ஆசைகளுக்கும் உள்ள தொலைவு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். வானமும் பூமியும் எங்குமே சந்திப்பதில்லை. அது போல் உங்கள் ஆசைகள் என்றுமே நிறைவேறாது.

நீங்கள் பத்தாயிரம் ரூபாய் வேண்டும் என்று ஆசைப்படு கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். ஒரு நாள் உங்களுக்கு அந்தப் பணம் கிடைக்கலாம். ஆனால் அது கிடைக்கும் போது உங்கள் ஆசை இன்னும் பத்து மடங்கு அதிகமாகியிருக்கும்.

உங்கள் கையில் ஆயிரம் ரூபாய் இருக்கும்போது உங்கள் மனம் பத்தாயிரம் ரூபாய் வேண்டுமென்று ஆசைப்படும். இப்போது உங்கள் கையில் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது. ஆனால் உங்கள் மனம் இப்போது ஒரு லட்சம் ரூபாய் வேண்டும் என்று ஆசைப்படும். கையில் ஒரு லட்சம் ரூபாய் கிடைக்கும்போதும் இதே நிலைதான். ஆக உங்களுக்கும் உங்கள் ஆசைக்கும் உள்ள தூரம் என்றும் குறையாது. நீங்கள் எவ்வளவு வேகமாக ஓடினாலும் உங்களுக்கும் தொடுவானத்திற்கும் உள்ள தூரம் குறையாது.

தேவைகள் எளிமையானவை. அவற்றைச் சுலபமாக நிறைவேற்றிக் கொள்ளலாம். உங்களுக்குப் பசிக்கிறது. நீங்கல் உண்கிறீர்கள். உங்களுக்குத் தாகமாக இருக்கிறது. நீங்கள் தண்ணீர் குடிக்கிறீர்கள். உங்களுக்குத் தூக்கம் வருகிறது. நீங்கள் தூங்கச் செல்கிறீர்கள்.

ஆனால் ஆசைகள் அப்படியில்லை. அவை சூழ்ச்சிகள் நிறைந்ததாயும் சிக்கல்கள் நிறைந்ததாயும் இருக்கின்றன. ஆசைகள் நிறைவேறாவிட்டால் நீங்கள் விரக்தியடைகிறீர்கள். அது மட்டுமல்ல. உங்கள் சக்தியெல்லாம் ஆசைகளுக்கே செலவானால் உங்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள சக்தி இருக்காது..

உங்கள் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளத் துடிக்கும் போது நீங்கள் வருங்காலத்தைப் பற்றி நினைக்கிறீர்கள். உங்கள் மனம் கனவு கண்டு கொண்டிருக்கிறது. உங்கள் சாதாரண தேவைகளை நிறைவு செய்ய யார் இருக்கிறார்கள்?

பசியோடு இருந்தாலாவது பரவாயில்லை எப்படியும் தொடுவானத்தைத் தொட்டுவிடுவது என்று கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள். தேவைகளைத் தள்ளிப்போட்டாவது ஆசைகள் பக்கம் உங்கள் சக்தியைத் திசைதிருப்பிவிடுகிறீர்கள். கடைசியில் என்ன ஆகிறது? உங்கள் ஆசையும் நிறைவேற வில்லை. தொடுவானத்தைத்தான் தொட முடியாதே! உங்கள் ஆசைகளுக்காக உங்கள் அடிப்படைத் தேவைகளைக்கூடப் புறக்கணித்ததால் நீங்கள் பாழாகி நிற்கிறீர்கள். அதில் தொலைத்த நேரத்தை மீண்டும் பெற முடியாது. உங்களால் காலத்தில் பின்னோக்கிச் செல்ல முடியாது.

மென்சியஸ் என்று ஒருவர் இருந்தார். அவர் சீன அறிஞர் கன்ஃபூசியஸின் சீடர். அவருக்கு மிகவும் வயதாகி மரணப் படுக்கையில் இருந்த போது யாரோ அவரிடம் கேட்டார்கள்: ''உங்கள் வாழ்க்கையை மீண்டும் முதலிலிருந்து தொடங்கும் வாய்ப்புக் கொடுக்கப்பட்டால் என்ன செய்வீர்கள்?''

மென்சியஸ் சொன்னார்: ''இந்த முறை நான் என் தேவைகள் மேல்தான் கவனத்தைச் செலுத்துவேன். ஆசைகளின் மேல் அல்ல.''

இந்த ஞானம் உங்களுக்கும் வரலாம். ஆனால் இது எப்போதுமே காலதாமதமாகத்தான் வரும். வாழ்க்கை உங்கள் கையைவிட்டு நழுவிப்போனபிறகுதான் இந்த ஞானம் வரும்.

தேவைகள் அழகானவை. ஆசைகள் அசிங்கமானவை. தேவைகள் உடல் சம்பந்தப்பட்டவை. ஆசைகள் மனம் சம்பந்தப்பட்டவை. உங்கள் புனிதர்களையும் துறவிகளையும் பாருங்கள். அவர்கள் உங்கள் தேவைகளைக் கண்டிக்கிறார்கள். ஆசைகளைப் போற்றுகிறார்கள். அவர்கள் சொல்வதைக் கொஞ்சம் கவனியுங்களேன்.

''நீ ஏன் உன் வாழ்க்கையை இப்படி வீணடித்துக் கொண்டிருக்கிறாய்? சாப்பிடுவதும் தூங்குவதும்தான் வாழ்க்கையா? சொர்க்கத்துக்குப் போக வேண்டாமா?''

சொர்க்கம்தான் உச்சகட்ட ஆசை.

''சொர்க்கம் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் சாதாரணச் செயல்களில் உங்கள் பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கிறீர்கள். காலம் விரயமாகிக் கொண்டிருக்கிறது. எழுந்து ஓடுங்கள் போய் சொர்க்கத்தின் கதவைத் தட்டுங்கள் இறைவனைச் சென்றடையுங்கள். இங்கே சும்மா நிற்காதீர்கள்.''

தேவைகளைக் கண்டித்து ஆசைக்குத் தூபம் போடும் இவர்கள் அணுகுமுறையால்தான் நம் உலகம் இவ்வளவு அசிங்கமாகிவிட்டது. அனைவரின் மனதிலும் நிறைவேறாத ஆசைகள் நிறைய இருக்கின்றன. ஆசைகளின் மேலேயே கவனம் செலுத்துவதால் நிறைவேறாத தேவைகளும் நிறைய இருக்கின்றன. எதை நிறைவேற்றிக் கொள்ள முடியுமோ அதை உதாசீனப்படுத்துகிறார்கள். எதை நிறைவேற்றவே முடியாதோ அதன் மேல் கவனம் செலுத்துகிறார்கள். மனிதனின் வேதனையே அதுதான்.

ஷுவாங் ட்சு தேவைகளைக் கவனி என்று சொல்கிறார். ஆசைகளைப் பற்றிக் கவலைபடாமல் நம் தேவைகளை நிறைவேற்றுவதற்கு என்ன வழி என்று பார்க்கச் சொல்கிறார். ஆசைகளை விட்டுவிடுங்கள். ஏனென்றால் அவை வருங்காலம் சம்பந்தப்பட்டவை. வருங்காலம் என்ற ஒன்றே கிடையாது. நிகழ்காலம் ஒன்று மட்டும்தான் இருக்கிறது. அந்த நிகழ்காலம் தான் எதந்துணை அழகாக இருக்கிறது! பசி எடுக்கும் போது

சாப்பிடுகிறீர்கள். அந்த சமயத்தில் நீங்கள் உண்பதிலேயே மூழ்கியிருக்கிறீர்கள். வருங்காலம் என்ற ஒன்று சுத்தமாக இல்லை. சாப்பிடுவதே சொர்க்கம் ஆகிறது.

இதைத்தான் ஏசுநாதர் வேறு மாதிரி சொன்னார். ''நாளைய தினம் பற்றிக் கவலை வேண்டாம். வயலில் பூத்திருக்கும் லில்லி மலர்களைப் பாருங்கள். அவை வருங்காலத்திற்காகச் சேகரிப்ப தில்லை. வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படுவதும் இல்லை. இன்று இங்கே இப்போது அவை மலர்கின்றன. இன்று இங்கு இந்தத் தருணத்தில் வாழுங்கள். இந்தக் கணம் போதும். அதற்கு மேல் ஆசைப்படாதீர்கள்.''

எனக்கு இந்தக் கணம் மட்டும் போதும் என்று எவன் நினைக்கிறானோ அவன் தான் உண்மையான துறவி. அவன் எப்போதும் நிறைவுடன் இருப்பான். அவனுக்குத் தனியாகச் சொர்க்கம் தேவையில்லை. அவனுக்கு அவன்தான் சொர்க்கம். அவனுக்குக் கடவுளும் தேவையில்லை. அவனே தெய்விக மானவன். இதை ஏற்றுக் கொள்வது கொஞ்சம் கடினம் தான். ஏனென்றால் நான் சொல்வது பல நூற்றாண்டுகளாக உங்க ளுக்குச் சொல்லித்தரப்பட்டிருக்கும் கருத்துகளுக்கு எதிர் மாறானது. பல நூற்றாண்டுகளாக உங்களுக்குள் ஏற்றப்பட் டிருக்கும் விஷத்தை முறியடிக்கும் வல்லமை கொண்டது.

பசி எடுக்கும் போது சாப்பிடுங்கள். அந்தக் க்ணத்தில் உணவைக் கொண்டாடுங்கள். நீங்கள் உண்பதை விழாவாகக் கொண்டாடுங்கள். யார் கண்டது, அடுத்த முறை சாப்பிட நீங்கள் இருக்கிறீர்களோ இல்லையோ! அடுத்த முறை பசி இல்லாமல் இருக்கலாம். இப்போது சாப்பிட்ட சுவையான ரொட்டி கிடைக்காமல் போகலாம். இல்லை பசியையும் உணவையும் அனுபவிக்க நீங்கள் இல்லாமல் போகலாம். உங்கள் தாகம் இல்லாமல் இருக்கலாம். அந்தத் தாகத்தைத் தணிக்கும் ஆறு வறண்டு போகலாம். அதனால் இப்பொழுதே தண்ணீரை அனுபவித்துக் குடியுங்கள். செய்கின்ற வேலையில் முழு முனைப்புடன் இருக்கும் போது காலம் அப்படியே நின்று போய்விடுகிறது. காரணம் நகர்வது காலம் அல்ல. உங்கள் மனம்

தான். நீங்கள் இந்தக் கணத்தில் முழுமையாக இருந்தால் காலம் நின்றுவிடும். காலம் நகராவிட்டால் தொடுவானமும் இல்லை. அதைத் தேடிக் கொண்டு போகும் ஓடுதலும் இல்லை. இன்று எல்லாருமே தொடுவானத்தைத் தொட ஓடிக்கொண்டு இருக் கிறார்கள்.

முல்லா ஒரு முறை அறுவை சிகிச்சைக்காக ஒரு மருத்துவமனைக்குச் சென்றிருந்தார். அவருக்கு அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவர் மிகவும் பரபரப்பாகக் காணப்பட்டார்.

''இங்கே பாருங்கள் முல்லா! நாங்கள் வேகத்தை நம்புகிறோம். ஒரு நொடிப் பொழுதைக்கூட வீணாக்க மாட்டோம். அறுவை சிகிச்சை முடிந்த அடுத்த நாளே நீங்கள் உங்கள் அறையில் ஐந்து நிமிடங்க்ள் நடக்க வேண்டும்.. அடுத்த நாள் மருத்துவமனைக்கு வெளியே அரை மணி நேரம் நடக்க வேண்டும். மூன்றாவது நாள் ஒரு மணி நேரம் தெருவில் நடைப்பயிற்சி செய்ய வேண்டும் இங்கே நேரம் தான் பணம். நமக்கு இருப்பதோ குறுகிய வாழ்நாள். அதனால் பணத்தையும் நேரத்தையும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மிச்சப்படுத்த வேண்டும். என்ன புரிந்ததா? ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?''

''ஒரே ஒரு சந்தேகம் டாக்டர். அறுவை சிகிச்சை செய்யும் போதாவது நான் படுத்துக் கொள்ளலாம் அல்லவா?''

எல்லாருமே அவசரத்தில் இருக்கிறார்கள். ஏன் இந்த அவசரம்? எல்லாரும் ஏன் காலில் வென்னீரைக் கொட்டிக் கொண்டு அலைய வேண்டும்? யாராவது எங்கேயாவது சென்றடைந்து நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?

வேகம், பொறுமையின்மை, பதற்றம் அவசரம் இவற்றின் மூலம் யாராவது எங்காவது சென்று அடைந்திருக்கிறார்களா? நிறுத்திவைப்பதன் மூலம் இலக்கை அடைந்த சிலரைப் பற்றி நமக்குத் தெரியும்.. நிறுத்தி நிதானமாக வாழ்ந்து இலக்கை அடைந்தவர்கள் புத்தரும் ஏசுநாதரும். ஷுவாங் ட்சுவும் லாவோ ட்சுவும் அப்படித்தான். இலக்கு உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் வெளியே சென்றடைய வேண்டிய இடம் எதுவும் இல்லை.

ஆனால் நமது ஆசை தொலைதூரத்தில் இருக்கும் இடத்திற்கு நம்மை அழைத்துச் செல்லுவும். தொலைவான வருங்காலத்தில் இருக்கும் நிகழ்வுகளுக்கு அழைத்துச் செல்லும். ஆசை அதிகமாக அதிகமாக அவசரமும் அதிகமாகும். அதன் பின் நீங்கள் உங்களையே தவற விடுவீர்கள். தொடர்ந்து அவசரகதியில் வாழ்ந்தால் சலிப்படைந்து விரக்தியடைந்து பாழடைந்து சாவீர்கள்.

அந்தப் பாழ் நிலையிலும் உங்கள் ஆசை இன்னும் அப்படியே இருக்கிறது. ஆசை எப்படி அலைக்கழிக்கும் என்பதற்குச் சான்றாக உங்களுக்கு ஒரு வாழ்நாள் அனுபவம் இருக்கிறது. ஆனாலும் உங்கள் மனம் என்ன சொல்கிறது: ''நீ வேண்டிய முயற்சி எடுக்காததால்தான் தோல்வியடைந்தாய். அடுத்தவர்களைப் பார். அவர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள். நீ வேகமாக ஓடாததால் தான் உன்னால் வெற்றி பெற முடியவில்லை. கோப்பையை வாங்க முடியவில்லை. அடுத்த முறை தயாராக இரு''

இந்தக் குணம் உங்கள் விதையிலே சேகரிக்கப்படுகிறது. நீங்கள் மீண்டும் பிறக்கிறீர்கள். அந்தத் தீய சுழல் மீண்டும் தொடங்குகிறது. எங்கே போகிறீர்கள்? போக வேறு இடம் இருக்கிறதா என்ன? எங்கே போனாலும் அதே நீங்கள்தானே இருக்கப் போகிறீர்கள். சரி உங்களை இந்த நாட்டின் தலைவராக்கி விட்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். சரி, அமெரிக்க ஜனாதிபதியாகவே ஆக்கிவிட்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். உங்களுக்குள் ஏதாவது மாறப்போகிறதா என்ன? நீங்கள் அப்படியேதான் இருப்பீர்கள். அதே விரக்தியுடம் அதே அளவு பேராசையுடன், வேதனையுடன் பதற்றத்துடன் அதே அளவு பயங்கரமான கெட்ட கனவுகளுடன் வாழ்வீர்கள்.

முல்லா ஒரு முறை ஒரு மனவியல் வல்லுனரின் வீட்டுக் கதவைத் தட்டினார்.

''என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏன் இப்படி வியர்த்திருக்கிறது?''

''ஐயா நீங்கள்தான் எனக்கு உதவி செய்ய வேண்டும். எனக்குத் தினமும் இரவு ஒரு பயங்கரமான கெட்ட கனவு

வருகிறது. அது என்னைப் பாடாய்ப்படுத்துகிறது. நீங்கள் எதையாவது செய்தேயாக வேண்டும். என்னால் இனிமேல் தாங்க முடியாது.''

மனவியல் வல்லுனர் முல்லாவைப் பார்த்தார்.

முல்லாவின் கண்கள் சிவந்திருந்தன. பல நாட்களாகத் தூக்கத்தை இழந்திருக்கிறார் என்று தெளிவாகத் தெரிந்தது. வல்லுனருக்குக் கவலையாகிவிட்டது.

''சரி அந்தக் கெட்ட கனவைப் பற்றிக் கொஞ்சம் விளக்க மாகச் சொல்லுங்களேன்.''

''அது தினமும் வருகிறது. மிகவும் பயங்கரமான கனவு.''

''என்ன கனவு என்று சொல்லித் தொலையுங்கள்.''

''ஒரு தீவு. அதில் பனிரெண்டு மிக அழகான பெண்களுடன் தனியாக மாட்டிக் கொண்டிருக்கிறேன்.''

''அதில் என்னய்யா பிரச்சினை? அது நல்ல கனவுதானே! அவன் அவன் இந்த மாதிரி கனவு வராதான்னு தவம் கெடக்கறான்? இதைப்போய் கெட்ட கனவுன்னுக்கிட்டு.. ''

''ஏன் டாக்டர் நீங்க எப்பவாவது வரிசையா வர 12 பொண்ணுங்ககிட்ட காதல் பண்ணிப் பாத்திருக்கீங்களா?''

முல்லாவாவது 12 பெண்களுடன் மாட்டிக் கொண்டார். நீங்கள் 12000 பெண்களுடன் மாட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நான் உங்கள் ஆசைகளைச் சொல்கிறேன். ஒவ்வொரு ஆசையும் ஒரு பெண் தான். அதனால்தான் உங்கள் மொத்த வாழ்க்கையும் ஒரு கெட்ட கனவாகவே போய்விட்டது. - எத்தனை ஆசைகள் எத்தனை தொடுவானங்கள், அடைய வேண்டிய இலக்குகள்தான் எத்தனை! அதனால் தான் நீங்கள் பதற்றத்துடன் இருக்கிறீர்கள். உங்களால் எந்த இடத்திலும் இருக்க முடியவில்லை. ஓடி ஓடிக் கடைசியில் மரணத்தில் பிடியில் மாட்டிக் கொள்கிறீர்கள். அதுவரை உங்கள் முயற்சி நிற்பதேயில்லை.

இதை நினைவில் கொள்ளுங்கள். முதல் விஷயம் - தேவைகள் அழகானவை. இதுதான் ஷுவாங் ட்சுவிற்கும் தங்களை ஞானிகள் என்று சொல்லிக்கொள்ளும் மற்றவர் களுக்கும் உள்ள வித்தியாசம். தேவைகள் அழகானவை. ஆசைகள் அசிங்கமானவை. ஏன் இந்த வித்தியாசம்? தேவைகள் உடலில் இருந்து தோன்றுகின்றன. ஆசைகள் மனதிலிருந்து. விலங்குகளும், மரங்களும் பறவைகளும் மகிழ்ச்சியாக இருக் கின்றன. காரணம் அவற்றுக்கு ஆசைப்படும் மனம் இல்லை. அவை இருக்கும் நிலையிலேயே சந்தோஷமாக இருக்கின்றன. அவையும் வாழ்கின்றன, சாகின்றன. ஆனால் அவற்றிடம் கவலை இல்லை. மன அழுத்தம் இல்லை.

தேவைக்கும ஆசைக்கும் இடையேயான இந்த வேறு பாட்டை நன்கு உணர வேண்டும். தேவைகளை ஏற்றுக் கொள் ளுங்கள். அதில் தவறில்லை. ஆசைகளை விட்டுவிடுங்கள். ஆசைகள் தப்பானவை. ஏனென்றால் அவை நம்மை நிகழ் காலத்தில் வாழ விடாது. ஆனால் நிகழ்காலத்தில் மட்டும்தான் வாழ முடியும். வேறு எந்தக் காலத்திலும் வாழமுடியாது. வயலில் இருக்கும் லில்லி மலர்களைப் போல் மலருங்கள். மரத்தில் இருக்கும் பறவைகளைப் போல் பாடுங்கள். காட்டில் இருக்கும் விலங்குகளைப் போல் எதற்கும் கட்டுப்படாமல் வாழுங்கள்.

உங்களுக்கு விஷம் வைக்க வந்தவர்கள் சொல்வதைக் காதுகொடுத்துக் கேட்காதீர்கள். உங்கள் உடலின் தேவைகளைப் போற்றுங்கள். அது சரி அப்படி என்ன உங்கள் தேவைகள்? கொஞ்சம் உணவு, கொஞ்சம் தண்ணீர், கொஞ்சம் நிழல், இதயத்தின் ஓரத்தில் கொஞ்சம் அன்பு. அவ்வளவுதான். இதே அளவில் மனிதனின் ஆசைகளும் இருக்குமேயானால் இந்த உலகம் இந்தக் கணமே சொர்க்கமாகியிருக்கும். ஆசைகளின் காரணமாக நம்மால் நம் எளிய தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்துகொள்ள முடியவில்லை. விலங்குகள் கூட தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்கின்றன. மனிதனால் மட்டும் அது முடியவில்லை. மனிதன் ஏன் ஏழையாக இருக்கிறான்? இந்த பூமியில் வறுமையில்லை. மனிதனுக்குக் கிறுக்குப்

பிடித்துவிட்டது. அவன் தன் சக்திகளையெல்லாம் ஆசைகளின் மேல் செலுத்துகிறான். சந்திரனைத் தொடுவது ஒரு ஏழைக்கு உணவளிப்பதை விட முக்கியமான வேலையாகப் போய் விட்டது. சந்திரனைத் தொட்டுவிட்டு வந்ததால் அப்படி என்ன பெரிதாகக் கிழித்துவிட்டோம்?

இதுதான் மனித மனத்தின் போக்கு. சந்திரனைச் சென்றடைய அமெரிக்கா செலவு செய்த தொகையை வைத்து ஆசியாவில் நிலவும் பட்டினியை நிரந்தரமாகப் போக்கியிருக்கலாம். பின்தங்கிய நாடுகளை முன்னேற்றியிருக்கலாம். சந்திரனைச் சென்றடைந்ததால் என்ன பயன்? அமெரிக்காவின் கொடி அங்கே இருக்கிறது. அதுதான் ஒரே லாபம். அதைப் பார்க்கக்கூட யாரும் இல்லை. இப்போது மற்ற கிரகங்களை ஆராய ஆரம்பித்திருக் கிறார்கள். சந்திரனை வென்றாகிவிட்டது. இனிமேல் மற்ற கிரகங்களை வென்றாக வேண்டும். இது என்ன பைத்தியக்காரத் தனம்?

சந்திரனை அடைந்தபின் சாந்தியடைந்தோமா? இல்லையே! இப்போது நமது இலக்கு மற்ற கிரகங்கள். தொடுவானம் இன்னும் பின்னால் நகர்ந்துவிட்டது. அடுத்தது செவ்வாய்க் கிரகம். அப்பறம் வேறு கிரகங்கள். ஏன் நம் நேரத்தையும், பணத்தையும் சக்தியையும் வீணடித்துக் கொண்டிருக்கிறோம்?

மதங்கள் உங்கள் தேவைகளைக் கண்டனம் செய்து கொண்டேயிருக்கின்றன. வாழ்க்கையை அனுபவிக்காமல் இருப்பதுதான் ஆன்மிகம் என்று எல்லா மதங்களும் பிரசாரம் செய்கின்றன. ''உண்கிறான், குடிக்கிறான் குஷியாக இருக் கிறான்'' என்று மதங்கள் மனிதர்களைக் கேலி செய்கின்றன. ஆனால் ஷுவாங் ட்சு ''சாப்பிடு. குடி. சந்தோஷமாக இரு'' என்று அறிவுரை சொல்கிறார்.

உண்பதிலும் குடிப்பதிலும் முழுமையாக ஈடுபட்டால் நீங்கள் தாவோவை அடைந்துவிட்டீர்கள் என்று பொருள். எளிமையாக வாழுங்கள். இயற்கையை அதன் போக்கிற்கு விடுங்கள். இயற்கையைத் திசை திருப்பாதீர்கள். வாழ்க்கையுடன் சண்டை போடும் சிப்பாயாக இருக்காதீர்கள். மாறாக வாழ்க்கை

யிடம் சரணடையுங்கள். வாழ்க்கை வாழட்டும். உங்கள் மூலம் வாழட்டும். இதுதான் முதல் விஷயம்.

அடுத்தது: எல்லாரும் பாதுகாப்பைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அது ஆகாத காரியம். ஆகாத காரியத்தைச் செய்ய நினைத்தால் விரக்திதான் மிஞ்சும். இயற்கை எதற்கும் பாதுகாப்புக் கொடுப்பதில்லை. பாதுகாப்பின்மைதான் வாழ்வின் ஆன்மா. அதுதான் வாழ்வின் சுவாரசியம். வாழ்வின் ருசியே பாதுகாப்பின்மைதான். கடல்தண்ணீரை எங்கு சுவைத்தாலும் கரிக்கும். வாழ்வை எங்கு தொட்டாலும் பாதுகாப்பின்மை தான் கையில் படும். மரணம்தான் பாதுகாப்பானது. வாழ்க்கை பாதுகாப்பற்றதாகத்தான் இருக்க வேண்டும். அதுதான் வாழ்க்கையின் தன்மை. அது ஏன்?

வாழும் எந்த ஜீவனும் சதா மாறிக்கொண்டேயிருக்கிறது. செத்ததுதான் மாறாமல் அப்படியே இருக்கும். மாற்றத்தோடு கூடவே பாதுகாப்பின்மையும் வந்துவிடும். மாற்றம் என்பது என்ன? தெரிந்ததிலிருந்து தெரியாததற்குப் போவது. அதுதான் பாதுகாப்பின்மையின் அஸ்திவாரம். நீங்கள் தெரிந்ததைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைக் கிறீர்கள்.

இந்தக் கோணத்திலிருந்து பாருங்கள்: ஒரு குழந்தை தாயின் கருவில் இருக்கிறது. அது பாதுகாப்பாக இருக்க வேண்டு மென்றால் கருவறையை விட்டு வெளியே வரவே கூடாது. தாயின் கருவறையைவிட பாதுகாப்பான அமைப்பை உங்களால் ஒரு குழந்தைக்குத் தர முடியுமா என்ன? குழந்தைக்கு எந்தப் பொறுப்பும் இல்லை. எந்தக் கவலையும் இல்லை. அலுவலகத் திற்குப் போக வேண்டாம். எந்தப் பிரச்சினையிலும் மாட்டிக் கொள்ள வேண்டாம். வரும் பிரச்சினை எல்லாம் தானாகவே தீர்ந்துவிடும். குழந்தை தானாகச் சுவாசிக்கக்கூட வேண்டாம். தாயே அதைச் செய்துவிடுவாள். குழந்தையின் இதயம் கூட தாயின் இதயம் வழியாகத்தான் துடிக்கும். தாயின் ரத்தம் குழந்தைக்கு உணவளிக்கும். குழந்தை பூரணமான சொர்க்கத்தில் வாழ்கிறது. தாயின் கருவறையைவிடச் சிறந்த சொர்க்கத்தைக்

காட்ட முடியுமா? அங்கே அது வசதியாக இருக்கிறது. நன்றாகத் தூங்குகிறது. அதுவும் கனவில்லாத ஆழ்ந்த உறக்கம்.

அதன்பின் குழந்தை இந்த மண்ணில் பிறக்கிறது. மனவியல் வல்லுனர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? தாயின் வயிற்றிலிருந்து வெளியே வருவதுதான் குழந்தைக்கு மிகவும் மன அழுத்தம் கூடிய மாற்றம் என்று சொல்கிறார்கள். ஏனென்றால் குழந்தை தூக்கி எறியப்படுகிறது. ஒரு பாதுகாப்பான சொர்க்கத்திலிருந்து வலுக்கட்டாயமாக வெளியேற்றப்படுகிறது. தாயின் கருவறைக்கு ஒப்பான ஒரு இல்லத்தை நம்மால் சத்தியமாக அந்தக் குழந்தைக்குத் தர முடியாது. தாயின் கருவறையில் எந்தச் சத்தமும் புகுவதில்லை. இந்த உலகமே அங்கு இல்லை. குழந்தை எந்தத் தெரிவையும் செய்ய வேண்டாம். பயிற்சி வேண்டாம். மனக்கட்டுத்திட்டங்கள் வேண்டாம். அதன் உலகினில் அதுதான் நடுநாயகமாக இருக்கிறது.

அதன்பின் திடீரென்று குழந்தை பிறக்கிறது. அதற்குப் பெரிய அதிர்ச்சி. பாதுகாப்பின்மையை முதன் முதலாக ருசி பார்க்கிறது குழந்தை. இப்போது அது தானாகச் சுவாசிக்க வேண்டும். பசி எடுத்தால் அழ வேண்டும். தாகம் இருந்தால் அழ வேண்டும். ஏதேனும் வசதியாக இல்லையென்றாலும் அழ வேண்டும். தன் ஏற்பாடுகளைத் தானே கவனித்துக் கொள்ள வேண்டும். கவலை பிறக்கிறது. அருகில் தாய் இல்லையென்றால் குழந்தை கவலைப் படுகிறது. உடல் ஈரமாகிவிட்டால் அழுது கொண்டேயிருக்கிறது. அதை யாருமே சரியாகக் கவனிப்பதில்லை.

இப்போது அழுத்தமும் பாதுகாப்பின்மையும் உள்ளே வந்துவிட்டது. தாய் தன்னை விட்டுவிட்டுப் போய்விடுவாளோ என்ற பயம் ஏற்படுகிறது. தாயும் அடிக்கடி மிரட்டுகிறாள். ''நான் சொல்வதைக் கேட்காவிட்டால் உன்னை விட்டுவிட்டுப் போய்விடுவேன்: என்று சொல்கிறாள். ''ஏதேனும் தப்பாகச் செய்தால் நான் செத்துவிடுவேன்'' என்று தாய் மிரட்டுகிறாள். இது பெரிய மிரட்டல். குழந்தை ஆதியோடு அந்தம் பயத்தில் நடுங்குகிறது. இப்போது தாய் சொல்வதைக் கேட்டேயாக

வேண்டும். பொய் உள்ளே நுழைகிறது. குழந்தை முகமூடி அணியத் தொடங்குகிறது. நடிக்கத் தொடங்குகிறது. அம்மா வந்தால் சிரிக்கிறது. அதற்குச் சிரிக்க வேண்டும் என்று தோன்றாவிட்டாலும் எதற்கு வம்பு என்று சிரித்து வைக்கிறது. அரசியல்வாதியாகவே மாறிவிட்டது. தன்னைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை உன்னிப்பாகப் பார்க்கத் தொடங்குகிறது.

கருவறையில் இருந்த பாதுகாப்பு இனிமேல் இருக்காது. என்ன செய்வது? அதனால் கருவறையைப் பிடித்துத் தொங்கிக்கொண்டேயிருக்க முடியுமா? சில குழந்தைகள் அப்படியும் செய்கின்றன. குழந்தையை வெளியே இழுத்துப் போட மருத்துவரின் உதவி தேவைப்படுகிறது. அதனைக் குழந்தை எதிர்க்கிறது. அதன் மொத்த இருப்பும் இன்னும் தாயின் கருவறையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறது. அது அங்கேயே தெரிந்த இடத்திலேயே இருக்க வேண்டும் என்று நினைக்கிறது.

அந்தக் குழந்தையின் கோணத்திலிருந்து பாருங்கள். தாயின் கருவறையில் சுகமாக வாழ்ந்து கொண்டிருந்த குழந்தைக்கு இந்த உலகைவிட அன்னியமான பாதுகாப்பற்ற ஒரு இடம் இருக்க முடியுமா? குழந்தை கண்களைத் திறக்கிறது. அது பார்ப்பது எல்லாமே விசித்திரமாக இருக்கிறது. கேட்கும் சத்தங்கள் விபரீதமாகவே இருக்கின்றன. குழந்தை அஞ்சுகிறது. குழந்தை வளரும் போது பாதுகாப்பின்மையும் வளர்கிறது. உரியகாலத்தில் அந்தக் குழந்தையப் பள்ளிக்கு அனுப்பி வைப்பார்கள். இப்போது அந்தக் குழந்தைக்கு வீடு கூட இல்லாமல் போய்விடுகிறது. அதனால்தான் ஒவ்வொருக் குழந்தையும் பள்ளிக்குப் போவதை எதிர்க்கிறது. சந்தோஷமாகப் பள்ளிக்குப் போகும் எந்தக் குழந்தையையாவது பார்த்திருக்கிறீர்களா? வீடு நரகமாக இருந்தால் மட்டுமே குழந்தை சந்தோஷமாகப் பள்ளிக்குப் போகும். இல்லாவிட்டால் பள்ளிக்குச் செல்ல மாட்டேன் என்று அடம்பிடிக்கும். தாயைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும். வீட்டை விட்டு வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கும். அந்தக் குழந்தையை வலுக்கட்டாயமாக பள்ளிக்கு

அழைத்துச் செல்வார்கள். இது குழந்ததக்கு இன்னும் ஒரு பிறப்பு. முதல் பிறப்பில் தாயின் கருவறையிலிருந்து வெளியே தூக்கி எறியப்பட்டது. இப்போது வீட்டிலிருந்து வெளியே எறியப் பட்டது. சில நாட்களில் பள்ளிக்கூடம் பிடித்துப் போய் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும்.

ஒரு கல்லூரிக்குப் போய்ப் பாருங்கள். அங்கிருக்கும் மாணவ-மாணவியரிடம் பேசிப் பாருங்கள். யாருக்குமே கல்லூரி வாழ்க்கையைவிட்டு வெளியே வரப் பிடிக்காது. சிலர் வேண்டு மென்றே தேர்வுகளை சரியாக எழுதாமல் தவறிவிடுவார்கள். காலம் முழுவதும் மாணவனாக இருப்பதையே விரும்புவார்கள். மாணவ வாழ்க்கையில் பிரச்சினை அவ்வளவாக இல்லை. தந்தை பணம் கொடுக்கிறார். சம்பாதிக்க வேண்டிய அவசியம் இல்லை. மாணவன் இளவரசனைப் போல் வாழ்க்கை நடத்துகிறான். இன்னும் அந்த மாணவனுக்குள் உலகம் முழுமையாக நுழையவில்லை.

ஆனால் உலகம் அவனை பாதுகாப்பின்மைக்குள் இழுத்துக் கொண்டிருக்கிறது. விரைவில் உங்களைக் கல்லூரியிலிருந்து தூக்கி வெளி உலகத்தில் எறிந்து விடுவார்கள். படித்த கல்லூரியைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லின் அர்த்தம் தாய் வீடு (ச்டூட்ச் ட்ச்ணுனுணு) அது தற்செயலாக வந்த சொல் அல்ல. அர்த்தமுள்ள சொல். படிக்கும் போதும் நீங்கள் குழந்தையாகவே இருக்கிறீர்கள். உங்கள் கல்லூரி உங்களை ஒரு தாயைப் போல் பார்த்துக் கொள்கிறது.

இப்படியாக ஒவ்வொரு கட்டத்திலும் பாதுகாப்பின்மை அதிகமாகிக் கொண்டே போகிறது.

உங்கள் முதல் பாதுகாப்பு உங்கள் தாயின் அன்புதான். நீங்கள் அவளை நேசிக்காவிட்டாலும் அவள் உங்களை நேசிப்பாள். அது மிகவும் இயல்பான அன்பு. அடுத்ததாக நீங்கள் உங்கள் வாழ்க்கைத்துணையைத் தேடுகிறீர்கள். அவள் உங்களை இயல்பாக நேசிக்க மாட்டாள். நீங்கள் அவளைப் பதிலுக்கு நேசிக்க வேண்டும் உங்களுக்கு அன்பு வேண்டுமென்றால் பதிலுக்கு நீங்கள் அன்பு கொடுக்க வேண்டும். தாய் விஷயம்

வேறு. நீங்கள் என்ன செய்தாலும் செய்யாவிட்டாலும் தாய்ப்பாசம் உங்களுக்குக் கிடைத்துவிடும். ஆனால் மற்றொரு பெண்ணிடம் அந்தமாதிரியான அன்பு கிடைக்காது. அவளுடைய அன்பை நீங்கள் சம்பாதிக்க வேண்டும். அதனால் தான் கணவன் - மனவி உறவில் எப்போதும் சண்டையும் போட்டியும் இருக்கிறது. ஒவ்வொரு ஆணும் தன் மனைவி தனக்கு ஒரு தாயாக இருக்க வேண்டுமென்றே விரும்புகிறான். அவள் ஏன் அவனுக்குத் தாயாக இருக்க வேண்டும்? அவள் தாய் இல்லை. மனைவி. அவளும் அதே சூழ்நிலையில்தான் இருக்கிறாள். தன் கணவன் தனக்கு ஒரு தந்தையாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறாள்.

இதன் பொருள் என்ன? தாயின் அன்பிற்கு எந்தத் தகுதியும் நிபந்தனையும் கிடையாது. அது உங்களுக்கு வாரி வழங்கப் படுகிறது. தந்தையின் அன்பும் ஏறக்குறைய அப்படித்தான். நீங்கள் குழந்தையாக இருப்பதால் அதுவும் அவருடைய குழந்தையாக இருப்பதால் அவர் உங்களை நேசிக்கிறார். தந்தையின் அன்பை நீங்கள் சம்பாதிக்க வேண்டிய அவசியம் இல்லை.

தாயையும் தந்தையையும் விட்டுவிட்டு இந்த உலகத்திற்குள் நீங்கள் நுழைந்தால் ஒரு கணவனின் அன்பையோ, மனைவியின் அன்பையோ நீங்கள் சம்பாதிக்க வேண்டும். நீங்கள் உங்கள் மனைவியின் மேல் நேசம் காட்டாவிட்டால் அவள் உங்களை நேசிக்க மாட்டாள். உங்கள் கணவனை நீங்கள் நேசிக்காவிட்டால் அவன் உங்களை நேசிக்க மாட்டான். எந்த சமயத்திலும் உங்கள் கணவன் அல்லது மனைவியின் அன்பு இல்லாமல் போகலாம். ஒரு ஆண் - பெண் உறவில் பயம், பாதுகாப்பின்மை நிறையவே இருக்கிறது.. அதனால்தான் திருமணம் என்ற அமைப்பு வந்தது. காதலர்களாகவே இருந்துவிட்டால் எந்தப் பாதுகாப்பும் இருக்காது. அந்த உறவை திருமணம் என்ற அமைப்பிற்குள் கொண்டுவந்துவிட்டால் சட்டத்தின் முழு பாதுகாப்பு உங்களுக்குக் கிடைக்கும். அரசாங்கமும் இந்த சமூகமும் உங்களுக்குப் பாதுகாப்புத் தரும்.

இல்லாவிட்டால் கல்யாணம் தேவையே இல்லை. உங்கள் காதல் உண்மையாக இருந்தால் நீங்கள் திருமணம் செய்து கொள்ளவே வேண்டாம். பின் திருமணம் எதற்கு? காதல் இன்று இருக்கும். நாளை இருக்காது காதல் போய்விட்டால் என்ன செய்வீர்கள்? அந்த சமயத்தில் உங்களுக்கு ஒரு பாதுகாப்பு வளையம் வேண்டாமா? சட்டம், நீதிமன்றம் அரசாங்கள் இவை யெல்லாம்தான் உங்கள் பாதுகாப்பு. நீங்கள் நீதிமன்றத்துக்குப் போகலாம். என் மனைவி என்னை நேசித்தேயாக வேண்டும் என்று வழக்குத் தொடரலாம்

எந்தச் சமுதாயத்திலும் திருமணம் செய்து கொள்வது மிகவும் எளிது. விவாகரத்து வாங்குவது கடினம். என்னைப் பொறுத்தமட்டில் இது அபத்தமானது. திருமணத்தை இன்னும் கடினமாக்க வேண்டும். .இருவர் காதலித்தால் அவர்களை லேசில் திருமணம் செய்ய அனுமதிக்கக் கூடாது. மண வாழ்க்கை என்ற தெரியாத உலகில் காதலர்கள் நுழையப் போகிறார்கள். அதற்கு முன் கொஞ்சம் யோசிக்கட்டுமே, காத்திருக்கட்டுமே! அந்த வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்று திட்டமிடட்டுமே! தியானிக்கட்டுமே

காதலர்களுக்குக் இன்னும் கொஞ்சம் காலம் கொடுங்கள். எல்லாத் திருமணங்களும் நீதிமன்ற உத்தரவின் பேரில்தான் நடக்க வேண்டும். திருமணத்தை அனுமதிக்கும் முன் மூன்று வருட அவகாசம் அளிக்கப்பட வேண்டும். அதுதான் என்னுடைய கருத்து. அப்படிச் செய்தால் யாருமே திருமணத்தில் விருப்பம் காட்டமாட்டார்கள். மூன்று வருடங்க.ள்.. சேர்ந்து வாழ்வது.. தேனிலவு முடிந்தவுடன் எல்லாமே முடிந்துவிடும். அதன் பின்னும் திருமண உறவு தொடருவதற்கான ஒரே காரணம் - அதன் பின் முறிவு ஏற்பட்டால் சட்டச் சிக்கல்களும் நடைமுறைச் சிக்கல்களும் வரும் என்ற பயம்தான். குழந்தைகள் வந்துவிடும். திருமணம் என்பது இப்போது ஒரு பொறுப்பாகிவிட்டது. ஒரு சுமையாகிவிட்டது. அதில் எந்த ஆனந்தமும் பரவசமும் இல்லை.

நீங்கள் பரவச நிலையில் இல்லாவிட்டால் கவலைப்பட்டுக் கொண்டே இருந்தால் இந்தச் சமுதாயம் சந்தோஷமாக இருக்கும்.

காரணம், பரவச நிலையில் இருக்கும் ஒருவரைச் சுரண்ட முடியாது. கவலையில் வாடிக் கொண்டிருப்பவனைத்தான் சுரண்ட முடியும். அவனைத்தான் அடிமையாக்க முடியும். ஆனந்த பரவசத்தில் இருக்கும் ஒருவனை அடிமை கொள்ள முடியாது. அவன் ஆபத்தானவன். அவன் ஒரு புரட்சிக்காரன். அவனுக்கு இந்தச் சமுதாயம் தேவையில்லை. பரவச நிலை என்பதன் பொருள் அதுதான். அவனுக்கு அவனைத் தவிர வேறு எதுவுமே தேவையில்லை.

அவனுக்கு இந்த சமுதாயம் தேவையில்லை என்றால் இந்தச் சமுதாயம் அவனை எந்த வழியிலும் வற்புறுத்த முடியாது.

நீங்கள் கவலையில் வாடவேண்டும் என்று சமூதாயம் விரும்புகிறது. அப்போதுதான் நீங்கள் சமுதாயத்தைச் சார்ந்து இருப்பீர்கள். அப்போதுதான் நீதிமன்றத்துக்குச் செல்வீர்கள். நீதிபதியை ஒரு கடவுளைப் போல் பார்ப்பீர்கள். அரசு, அரசாங்கம், காவல்துறை எல்லாமே முக்கியமாகத் தோன்றும். காரணம் உங்கள் மனதில் இருக்கும் கவலை.

காதலர்கள் காவல் துறையை நாடமாட்டார்கள். ஆனால் திருமணமானவர்கள் அப்படி இல்லை. காதலர்களுக்கு அவர்கள் காதலே போதும். ஆனால் திருமணமானவர்கள் தங்கள் காதலைத் தொலைத்துவிட்டால் சேர்ந்து இருக்க காவல்துறையை நாடுவார்கள். கணவனோ மனைவியோ பிரிந்து செல்லத் துணிந்தால் போலீஸ்காரர் அவர்களைக் கண்டிப்பார். அச்சுறுத்துவார். பிரச்சினை ஏற்படுத்துவார். அந்தப் பிரச்சினைகுப் பயந்தே பலர் கணவன் - மனைவியாகச் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

வாழ்க்கை ஆபத்தானது. ஆனால் அதன் அழகே அந்த ஆபத்துத்தான். வாழ்க்கை பாதுகாப்பற்றது. அதுவே அதன் தன்மை. பாதுகாப்பில்லாமல் இருப்பதுதன் உயிர்த்துடிப்புடன் இருக்கும். நீங்கள் கல்லறையில் இருக்கும் போது முழு பாதுகாப்பு இருக்கும்? அந்த நிலையில் நீங்கள் இழக்க என்ன இருக்கிறது? ஒன்றும் இல்லை. இறந்து போனபின் உங்களை யாரும் காயப்படுத்த முடியாது. நீங்கள் உயிருடன் இருக்கும்

வரை உங்களை யார் வேண்டுமானாலும் காயப்படுத்தலாம். ஆனால் அதுதான் வாழ்க்கை.

காலையில் மலரும் மலருக்கு அன்று மாலையே தன் வாழ்க்கை முடிந்துவிடும் என்று தெரியாது., அதுதான் மலருக்கு அந்த அழகைக் கொடுக்கிறது. காலையில் மலர்ந்தவுடன் அது அழகாக ஒரு சக்கரவர்த்திக்கே உரிய கம்பீரத்துடன் ஜொலிக்கிறது. ஆனால் அன்று மாலையே அது மடிந்துவிடுகிறது. பிளாஸ்ட்டிக் கினால் ஆன மலரை நினைத்து பாருங்கள். செயற்கை மலர்கள் அப்படியே இருக்கும். வாடாது. வதங்காது. எது வாடவே வாடாதோ அது மலரவே இல்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். திருமணம் என்பது ஒரு பிளாஸ்டிக் பூதான்.

காதல் என்பது உண்மையான மலர்.. காலையில் மலரும். மாலையில் வாடிவிடும். திருமணம் தொடரும். அதில் ஒரு நிரந்தரத்தன்மை இருக்கும். நிரந்தரமில்லத உலகில் எதுதான் நிரந்தரமாக இருக்கும் சொல்லுங்கள்.

உண்மையாக இருக்கும் எதுவுமே அந்த அந்தக் கணத்தில் வாழ வேண்டும். பாதுகாப்பின்மை இருக்கவே இருக்கிறது. எந்த நேரத்திலும் அது மறையலாம். மலர்ந்த மலர்கள் வாடிவிடலாம். உதித்த சூரியன் அஸ்தமித்து விடலாம். எல்லாமே மாறிவிடும். பாதுகாப்பின்மையைக் கண்டு பயந்து அதற்கு மாற்றாக நீங்கள் சில ஏற்பாடுகளைச் செய்வீர்கள். அந்த ஏற்பாடுகள் உயிர்ப் புள்ள அனைத்தையும் கொன்றுவிடும்.

மனைவி ஒரு செத்த காதலி. கணவன் கொலையுண்ட காதலன். இப்போது எந்தப் பிரச்சினயும் இல்லை. மொத்த வாழ்க்கையும் சலிப்புடன் நம்மை இழுத்துக் கொண்டு நகர்கிறது.

அன்பு நிரந்தரமாக இருக்க முடியாது என்று நான் சொல்ல வில்லை. ஆனால் அதன் தன்மையே பாதுகாப்பின்மைதான். அதை உங்களால் நிரந்தரமாக்க முடியாது. அதைப் பற்றிக் கவலைப்படாமல் ஒவ்வொரு கணத்தையும் முழுமையாக வாழுங்கள். அன்பு வாடினால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். அது தொடர்ந்து மலர்ந்து கொண்டே இருந்தால் அதனை அனுபவியுங்கள்.

அன்பின் விஷயத்தில் யாருமே உத்தரவாதம் கொடுக்க முடியாது. அன்பு இருக்கட்டும். நாளை நீங்கள் உயிருடன் இருப்பீர்களா மாட்டீர்களா என்பதற்கு உங்களால் உத்தரவாதம் கொடுக்க முடியுமா? உங்கள் உயிரே பாதுகாப்பில்லாமல் இருக்கும் போது உங்கள் அன்பு மட்டும் எப்படி பாதுகாப்பாக இருக்க முடியும்?

ஆனால் நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று தெரியாமல் உறுதி மொழிகளை அள்ளிவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு மனிதனிடம் அன்பு காட்டும் போது அந்த அன்பு நிரந்தரமாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள். அன்பு என்பது இந்த நிமிடத்தில் உங்களுக்குத் தோன்றும் உணர்வு. அதைவைத்து எதையும் சத்தியம் செய்து கொடுக்காதீர்கள்.

''இந்தக் கணத்தில் காலம் உள்ளவரை உன்னைக் காதலிப்பேன் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் அடுத்த கணத்தில் என்ன நிகழப் போகிறது, என் உணர்வுகள் எப்படி இருக்கப் போகிறது என்று சத்தியமாக எனக்குத் தெரியாது.'' என்று சொல்லுங்கள்.

அடுத்த கணத்தைப் பற்றி யாரும் எதுவும் சொல்ல முடியாது. யாராலும் சத்தியம் செய்ய முடியாது. நீங்க்ள் சத்தியம் செய்து அதைக் கடைப்பிடித்தால் ஒரு செயற்கையான உலகத்தில் இருப்பீர்கள்.

இதுதான் அன்பின் நேர்மை. அன்பு உறுதிமொழி கொடுக்காது. ஆனால் அனைவரும் பாதுகாப்பைத் தேடுகிறார்கள். அதனால் உறுதிமொழியை எதிர்பார்க்கிறார்கள். உங்கள் பயம் அதிகமாக இருந்தால் உங்களுக்கு இன்னும் வலுவான சத்தியம் தேவைப்படும். அதனால்தான் பெண்கள் இந்த மாதிரியான சத்தியத்தை அதிகமாக எதிர்பார்க்கிறார்கள். இயல்பாகவே அவர்களுக்குப் பயம் அதிகம். பாதுகாப்பின்மையை இன்னும் அதிகமாக உணர்கிறார்கள். எல்லாமே அதிநிச்சயமாகத் தெரிந்தால்தான் அடுத்த அடியையே எடுத்து வைப்பார்கள்.

அதனால் நீங்கள் பொய் சத்தியங்களை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள். அவற்றை உங்களால் நிறைவேற்ற

முடியாது. ஒவ்வொரு சத்தியமும் மீறப்படுகிறது. அப்போது உங்கள் இதயம் வெடிக்கிறது. இன்னொரு இதயமும் வெடிக்கிறது. இப்படி ஒவ்வொரு சத்தியமாக மீறப்பட்டால் வாழ்க்கையே அர்த்தமில்லாமல் போய்விடுகிறது. கவிதையைத் தொலைத்துவிட்டு உணர்ச்சியில்லாத உரைநடையாக, ஒரு சட்டதிட்டங்களுக்குப் பயந்து குறைந்த பட்ச வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறோம்.

உங்கள் மனைவியோடு உறவு கொள்கிறீர்கள். அது ஒரு சட்டபூர்வமான கடமை. அப்படியே காதல் பொங்கிவழிந்து அதனால் நீங்கள் உங்கள் மனைவியுடன் உறவு கொள்ளவில்லை. அந்த உறவு ஆர்வத்தாலோ அதீத அன்பாலோ ஏற்படவில்லை. கடமை உணர்ச்சியின் விளைவாக உறவு கொள்கிறீர்கள். உங்கள் குழந்தைக்கு முத்தம் கொடுக்கிறீர்கள். அதையும் ஒரு கடமையாகவே செய்கிறீர்கள். அது கடமை என்று வந்துவிட்டால் அசிங்கமான செயலாகிவிடுகிறது. அன்புதான் இருப்பதிலேயே அழகானது. கடமைதான் இருப்பதிலேயே அசிங்கமானது.

அன்பு தெரியாத நிகழ்வு. அதனை உங்கள் இஷ்டம் போல் திரிக்க முடியாது. கடமை என்பது சமூகத்தின் விளைவு. உங்கள் மனைவி உங்களிடம் உரிமையுடன் கேட்கலாம் ''நீங்கள் என்னிடம் உறவு கொண்டேயாக வேண்டும். அது உங்கள் கடமை. அதைச் செய்வதாக சத்தியம் செய்திருக்கிறீர்கள்.''

ஆமாம் நீங்கள் சத்தியம் செய்து கொடுத்தீர்கள். அது உங்களுக்கும் தெரியும். நீங்கள் என்ன செய்ய முடியும்? உங்கள் மனதில் காதல் இல்லையென்றால், அல்லது அந்த சமயத்தில் உறவு கொள்ளும் மனநிலை உங்களுக்கு இல்லை என்றால், அன்று இரவு உடல் உறவு வேண்டாம் என்று நீங்கள் நினைத்தால் என்ன செய்வீர்கள்?

ஏற்கனவே செய்து கொடுத்த சத்தியத்தைக் காப்பாற்ற போலியாக உறவு கொள்வீர்கள். நடிப்பீர்கள். ''ஆமாம். நான் சத்தியம் செய்து கொடுத்தது உண்மைதான். இதோ வந்து விட்டேன்.'' என்று சொல்வீர்களா? நினைத்த மாத்திரத்தில் உங்கள்

மனதில் அன்பை உற்பத்தி செய்ய முடியுமா? அது சாத்தியமா? அப்படி எப்போதாவது நிகழ்ந்திருக்கிறதா?

உங்களால் அன்பை உற்பத்தி செய்ய முடியாது. ஆனால் பாசாங்கு செய்யலாம். பின் நாளாக ஆக அந்தப் பாசாங்கே நிலைத்துவிடும். இயல்பான உறவு என்பதே இல்லாமல் போய்விடும். இப்போது எல்லாருமே வஞ்சிக்கப்பட்டுவிட்டதாக நினைக்கிறார்கள். பாசாங்கு செய்யப்படும் அன்பு உண்மையான அன்பைப் போல் நிறைவினைத் தராது. அது பாசாங்கு என்று உங்களுக்கும் தெரியும் உங்கள் மனைவிக்கும் தெரியும். உங்களால் அதனை ஊடுருவிப் பார்க்க முடியும். இரு உடல்கள் உறவு கொள்வதற்கான அசைவுகளைத் தப்பில்லாமல் செய்வீர்கள். ஆனால் அந்த உறவில் அன்பு இருக்காது. அது யோகாசனப் பயிற்சியைப் போல் இருக்கும். அசைவுகளும் சைகைகளும் இருக்கும். ஆனால் அங்கே இதயம் இருக்காது. அது வேறு எங்கேயோ இருக்கும்....

அந்த சத்தியம் மிகச் சரியானதாக இருக்கலாம். ஆனால் அது அந்தக் கணத்துக்கு மட்டும்தான். நீங்கள் நாளை இருப்பீர்களா என்பதையே சத்தியமாகச் சொல்ல முடியாது. நாளை உங்கள் மனதில் அன்பு இருக்குமா என்று சத்தியம் செய்ய முடியுமா? நீங்கள் எப்படிச் சொல்ல வேண்டும்?

''நான் உன்னைக் காலம் முழுவதும் காதலிப்பேன். ஆனால் இந்தக் காதல் என்பதே இந்தக் கணத்தில் எழும் உணர்வுதான். அடுத்த கணம் இது மறைந்துவிடலாம். நான் என்ன செய்வேன்.?''

எந்த உறவிலும் இல்லாத ஒரு பாதுகாப்பைத் தேடும் மனோபாவம்தான் நம் பெரிய பிரச்சினை. எல்லாவற்றிலும் பாதுகாப்பைத் தேடுவதால்தான் எல்லாமே போலியாகிவிட்டது.

வாழ்க்கை பாதுகாப்பற்றது. இந்த உண்மை உங்களுக்குள் ஆழமாக இறங்கட்டும். உங்கள் இதயத்தில் விதைக்கப்பட்ட விதையாக மாறட்டும். பாதுகாப்பின்மையே வாழ்க்கையின் தன்மை என்பதை உணருங்கள். அதற்கு எந்தப் பரிகாரமும் இல்லை என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். அந்த உண்மைக்கு

மாற்று தேடினால் அதுவே உங்கள் வாழ்க்கைக்கு நஞ்சாகிவிடும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்களால் கொல்லத்தான் முடியும். பாதுகாப்பைக் கொடுக்க முடியாது. பாதுகாப்பு உணர்வு அதிகமாக அதிகமாக உங்களிடம் உள்ள உயிர்ப்பு குறையும். உச்சகட்ட பாதுகாப்பு மரணம் தான். அதற்கடுத்த நிலை நடைபிண்மாக வாழ்வது.

மிகவும் பாதுகாப்பாக வாழ்பவர்களைப் பாருங்கள். கௌரவம், செல்வம், அரண்மனைகள் என்று தங்களைச் சுற்றி வேலிகளை எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் நடைபிணங்களாகவே வாழ்கிறார்கள். அவர்கள் முகங்களைப் பாருங்கள். அவர்கள் கண்கள் கல்லில் செய்துவைத்ததைப் போல் உணர்ச்சியற்று இருக்கின்றன. அவர்கள் முகங்கள் முகமூடிகளைப் போல் இருக்கின்றன. அவர்கள் செய்கைகளும் சைகைகளும் இயந்திரத்தனமாக இருக்கின்றன. எந்த ஈடுபாடும் இல்லாமல் செய்கிறார்கள். அவர்கள் கூண்டில் அடைபட்ட பறவைகளாக இருக்கிறார்கள். அவர்கள் ஆறு ஒரு இடத்தில் உறைந்துவிட்டது. அதில் இயல்பான நீரோட்டம் இல்லை. ஆறுகளைப் போல் அவர்கள் இயல்பாக நடனமாடிக் கொண்டே கடலுக்குச் செல்லவில்லை. அவர்கள் நீர் தேங்கிய குட்டைகளாக இருக்கிறார்கள். எந்த இயக்கமும் இல்லாமல் இருக்கிறார்கள்.

ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் அதுவரை பார்க்காததைப் பார்க்க வேண்டும். அதுவே பாதுகாப்பின்மையின் அறிகுறி. கடந்த காலம் இனி இருக்காது. வருங்காலம் இன்னும் வரவில்லை. வருங்காலத்தை யாராலும் கணிக்க முடியாது. ஒவ்வொரு கணத்திலும் கணிக்கவே முடியாத வருங்காலத்தின் கதவருகில் நீங்கள் நிற்கிறீர்கள். இதை வரவேற்க வேண்டும்.. இதுவரை நமக்குத் தெரியாததுதான் நம் விருந்தாளி.

இந்தியாவில் விருந்தாளியைக் குறிக்க ஒரு அழகான வார்த்தை இருக்கிறது. வேறு எந்த மொழியிலும் அத்தகைய வார்த்தையில்லை. அந்த வார்த்தை அதிதி. அதிதி என்பவன் யார்? தான் வரும் விவரத்தைத் தெரிவிக்காமல் திடுதிப்பென்று வந்து நிற்பவன் தான் அதிதி. வரும் தேதியைச் சொல்லாமல் வருபவன் தான் அதிதி. சம்ஸ்க்ருதத்தில் திதி என்றால் தேதி

என்று பொருள். தேதி கொடுக்காமல் திடீரென்று வருபவனே அதிதி. திடுதிப்பென்று வந்து கதவைத் தட்டுகிறான். ஆனால் மேலை நாடுகளில் நாம் நமது பாதுகாப்பைப் பற்றி அளவிற்கு அதிகமாகக் கவலைப்படுகிறோம். அதனால் யாராவது திடீரென்று வந்துவிட்டால் நமது பாதுகாப்பிற்காக அவரைக் கொல்லவும் தயங்க மாட்டோம்.

நம் வீட்டிற்கு ஒரு விருந்தினர் வர வேண்டுமென்றால் அவர் முதலிலேயே இன்ன தேதியில் இன்ன நேரத்தில் வருகிறேன் என்று முன்னறிவிப்பு கொடுக்க வேண்டும். அப்போதுதான் நீங்கள் அவருக்குப் போதுமான சாப்பாடு இட வசதிகள் செய்துதர முடியும். யாரும் திடுதிப்பென்று உங்கள் வீட்டிற்கு வந்துவிடமுடியாது.

விருந்தினர் வருகை என்பது மேலைநாடுகளில் அறவே நின்றுவிட்டது. அப்படியே விருந்தினர் வந்தாலும் அவர் விடுதியில்தான் தங்குகிறார். விருந்தினர் என்ற இனமே மேலை நாடுகளில் அழிந்துவிட்டது. காரணம் அவர்களுக்குப் பாதுகாப்பு என்பது பெரிய கவலையாகப் போய்விட்டது. ஆனால் ஒருவகையில் பாதுகாப்பு பெரிய கவலையாக, ஒரு வெறியாகவே போனதால்தான் அவர்களால் அவ்வளவு செல்வம் ஈட்ட முடிந்தது. ரொக்கம் வைத்திருக்க முடிந்தது. அங்கே அனைத் திற்கும் காப்பீடு இருக்கிறது. ஆனால் மனிதன் இறந்துவிட்டான். மனிதம் இறந்துவிட்டது. இன்று அங்கே அதிதி கிடையாது. அன்னியர்கள் யாரும் வந்து உங்கள் கதவைத் தட்ட மாட்டார்கள். நீங்கள் அறியாதது உங்களைத் தேடி வராது. எல்லாமே தெரிந்ததாகப் பேரய்விட்டது. தெரிந்தது என்ற தீச் சுழலில்தான் அவர்கள் வாழ்க்கை நகர்ந்து கொண்டிருக்கிறது. ஒரு தெரிந்த விஷயத்திலிருந்து இன்னொரு தெரிந்த விஷயத்திற்குப் போகிறார்கள். அதன்பின் அதிலிருந்து இன்னொரு தெரிந்த விஷயத்திற்கு. கடைசியில் ஒரே ஒரு கேள்விதான் மிஞ்சும் ''ஏன் வாழ்க்கைக்கு அர்த்தமே இல்லாமல் போய்விட்டது.?''

வாழ்க்கையின் அர்த்தம் உங்களுக்குத் தெரியாத விஷயங்களிலிருந்து வருகிறது; திடீரென்று உங்கள் வீடு தேடி

வரும் அன்னியனிடமிருந்து வருகிறது. எதிர்பாராதது உங்கள் கதவைத் தட்டும் போது, நீங்கள் எதிர்பாராத சமயத்தில் ஒரு மலர் மலரும் போது, நீங்கள் எதிர்பாராத சமயத்தில் எதேச்சையாக தெருவில் உங்கள் பழைய நண்பரைச் சந்திக்கும் போது, நீங்கள் கொஞ்சம் கூட எதிர்பார்க்காத சமயத்தில் உங்கள் மனதில் மலரும் அந்தக் காதலில், நீங்கள் கனவில் கூட பார்த்திராத அந்தப் புதிய உறவில், அதில் விளையும் அன்பில்தான் உங்கள் வார்த்தையின் அர்த்தங்கள் பொதிந்து இருக்கின்றன. அப்போதுதான் வாழ்க்கை ஒரு நடனமாக இருக்கும். அதில் நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் உங்கள் மகிழ்ச்சியின் வெளிப்பாடாக இருக்கும். காரணம் நீங்கள் நடனமாடும்போது எடுத்து வைக்கும் அடிகள் கடமையுணர்ச்சியில் உருவானவை அல்ல. அந்த ஒவ்வொரு அடியும் உங்களைத் தெரியாததற்கு அழைத்துச் செல்கிறது.. இப்படியாக ஒரு ஆறு தன் வீடான கடலை நோக்கிச் செல்கிறது.

தாவோவின் தன்மையே பாதுகாப்பின்மைதான். எதிலும் பாதுகாப்பைத் தேடாதீர்கள். அப்படித் தேடினால் தாவோவி லிருந்தும், இயற்கையிலிருந்தும் நீங்கள் விலகி வெளியே வந்துவிடுவீர்கள். தாவோவுடனான தொடர்பை அறுத்துக் கொண்டுவிடுவீர்கள். உங்கள் பாதுகாப்பு அதிகமாக அதிகமாக நீங்கள் இயற்கையிலிருந்து இன்னும் அதிக தூரம் வந்துவிடுவீர்கள். தெரியாததற்குள் செல்லுங்கள். அது தன் வழியில் செல்லட்டும். அதனை எந்த வகையிலும் வற்புறுத்தா தீர்கள். ஆறு அதன் போக்கில் ஓடட்டும். அதனைத் திசை திருப்பாதீர்கள். யாருக்கும் ரோஜாத் தோட்டம் தருவதாக வாக்குறுதி தராதீர்கள்

காதலிக்கும் போது உங்கள் காதலனிடம், காதலியிடம் உண்மையாக இருங்கள். ''இந்தக் கணத்தில் உன்னை நான் உயிருக்கு உயிராகக் காதலிக்கிறேன். .அடுத்த கணத்தில் எப்படி என்பதை அப்போது சொல்கிறேன்'' என்று சொல்லுங்கள். உங்கள் மொத்த வாழ்க்கையும் இந்தக் கணத்தில் அடங்கியிருப்பது போன்று வாழுங்கள். இந்தக் கணத்தில் நீங்கள் காதலில் திளைத்திருந்தால் அடுத்த கணத்திலும் அப்படியேதான்

இருப்பீர்கள். இந்தக் கணத்தில் இருந்துதானே அடுத்த கணம் பிறக்கிறது. ஆனால் அது வாக்குறுதியோ காப்பீடோ அல்ல. இந்தக் கணத்தில் முழுமையாகக் காதலித்தால் அடுத்த கணத்தில் அந்த முழுமையின் செறிவு இன்னும் அதிகமாகவே இருக்கும். அசப்பில் பார்க்க இது அபத்தமாகத் தோன்றும். முழுமை எப்படி இன்னும் செறிவாக முடியும்? ஆனால் அப்படித்தான் நடக்கிறது.

வாழ்க்கையே அபத்தம்தான். இந்தக் கணத்தில் நீங்கள் முழுமையாக வாழ்ந்து மலர்ந்துவிட்டால் அடுத்த கணத்தைப் பார்த்து ஏன் பயப்பட வேண்டும்? அடுத்த கணத்திலும் இதே போல் மலர்வீர்கள். இந்த மலர் வாடலாம். ஆனால் இதன் இடத்தில் இன்னொரு மலர் வரும். இந்த மலரைப் பாதுகாக்க வேண்டுமே என்று கவலைப்படாதீர்கள். வாழ்க்கை இந்த மலரில் இப்போது மலரும். பின் அந்த மலரில் மலரும். இந்த மரத்தில் மலரும். சமயத்தில் அந்த மரத்தில் மலரும். வாழ்க்கை முடிவில்லாமல் தொடர்ந்து கொண்டேயிருக்கும். இந்த மலர் வாடும். அந்த மலர் வாடும். வாழ்க்கை என்று வாடாத மலராகவே இருக்கும். உருவங்கள் வாடும். ஆனால் உருவ - அருவங் களுக்கு அப்பாற்பட்டது வாடவே வாடாது. நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? ஒரே ஒரு காரணம் தான். நீங்கள் இந்தக் கணத்தைத் தவறவிட்டுவிட்டீர்கள். அதனால்தான் அடுத்த கணத்திற்குக் கவலைப்படுகிறீர்கள். இந்தக் கணத்தில் நீங்கள் அன்பு காட்டவில்லை. காதலிக்கவில்லை. அதனால்தான் அடுத்த கணத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைக்கிறீர்கள் இந்தக் கணத்தில் நீங்கள் வாழவில்லை. அதனால்தான் அடுத்த கணம் உங்களைப் பயமுறுத்துகிறது. அடுத்த கணத்திற்கான பாதுகாப்பு ஏற்பாடுகளில் ஈடுபடுகிறீர்கள். இது ஒரு தீமைச் சுழல். நீங்கள் அடுத்த கணத்திற்குச் செல்வீர்கள். உங்கள் பழக்கங்களுடன், செத்த அட்டவணைகளுடன், சலிப்பூட்டும் வழிமுறைகளோடும் அடுத்த கணத்திற்குச் செல்வீர்கள். இந்தக் கணத்தைக் கொன்றதைப் போலவே அடுத்த கணத்தையும் கொல்வீர்கள்.

வருங்காலத்தை மறந்துவிடுங்கள். நிகழ்காலத்தில் முழுமையாக வாழுங்கள். அந்த முழுமையிலிருந்து வரும்

எதுவுமே உங்களுக்கு ஒரு பிரசாதமாகத்தான் இருக்கும். வருவது எதுவாக இருந்தாலும் சரி அது வரப்பிரசாதம்தான்.

இந்தக் கணத்தின் மலர் வாடினால் அதுவும் ஒரு அழகுதான். ஒரு மலர் வாடுவதைப் பார்த்திருக்கிறீர்களா? அது ஒரு தனியழகு. அதில் ஒரு சோகம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் சோகம் அழகில்லை என்று உங்களுக்கு யார் சொன்னது.? சிரிப்பு மட்டும்தான் அழகு என்று உங்களுக்கு யார் சொன்னது? சிரிப்பில் கொஞ்சம் சோகம் இல்லாவிட்டால் அதில் ஆழம் இருக்காது. சோகத்தில் கொஞ்சம் புன்னகை இல்லாவிட்டால் அதில் உயிர் இருக்காது. சோகமும் சிரிப்பும் ஒன்றுக்கு ஒன்று எதிரானவை அல்ல. ஒன்றை மற்றொன்று வளப்படுத்துகிறது.

சோகம் லேசாக இழையூட நீங்கள் சிரிக்கும் போது அதில் ஆழம் இருக்கிறது. உங்கள் சோகம் புன்னகைக்கும் போது அதில் ஒரு பரவசம் இருக்கிறது. வாழ்க்கையைப் பெட்டி பெட்டியாகப் பிரித்து வைத்துப் பார்க்க முடியாது. வாழ்க்கை அத்தகைய பெட்டிப் பிரிவினைகளை வெறுக்கிறது. உங்கள் மனம்தான் காற்றுப் புகாத பெட்டிகளை உருவாக்குவதில் ஆர்வம் காட்டு கிறது. வாழ்க்கை நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது. மரணத் திற்கும் ஜனனத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு வாழ்க் கைக்குத் தெரியாது. மலர்தலுக்கும் வாடுதலுக்கும் உண்டான வேறுபாடு வாழ்க்கைக்குத் தெரியாது. சூரிய உதயத்திற்கும் சூரிய அஸ்தமனத்திற்கும் இடையே இருக்கும் வித்தியாசம் வாழ்க்கைக்குத் தெரியாது.

இரண்டு துருவங்களுக்கு இடையே வாழ்க்கை தன் போக்கில் நகர்ந்து கொண்டிருக்கிறது. மலர்தலும் வாடுதலும் ஆற்றின் இரு கரைகள். இவற்றுக்கு இடையே வாழ்க்கை என்னும் ஜீவ நதி ஓடிக்கொண்டிருக்கிறது.

வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். இந்தக் கணத்தை முழுமையாக வாழுங்கள். இதிலிருந்து பிறக்கும் அடுத்த கணமும் பொற்கணமாகப் பிறக்கும். அதைப் பற்றியும் கவலை வேண்டாம். அதுவே தன்னை நன்றாகக் கவனித்துக் கொள்ளும். இதைத்தான் ஏசுநாதர் சொல்கிறார் ''நாளைய

தினத்தைப்பற்றிக் கவலை வேண்டாம். அது தன்னைக் கவனித்துக் கொள்ளும். உங்களுக்கு ஏன் வீண் கவலை?''

வாழ்க்கையில் எந்த உத்தரவாதமும் இல்லை. எந்தப் பாதுகாப்பும் இல்லை. பாதுகாப்பின்மைதான் ஒரே பாதுகாப்பு. பாதுகாப்பின்மையில் வாழ்பவன் தான் மகிழ்ச்சியாக இருக்கிறான். ஏனெனில் வாழ்க்கையின் கரங்களில் அவன் பாதுகாப்பாக இருக்கிறான். அவனுடைய பாதுகாப்பு மனித முயற்சியால் உருவானதல்ல. அவன் பாதுகாப்பு தாவோவி லிருந்து வருகிறது. இயற்கையிலிருந்து வருகிறது.

வாழ்க்கை உங்களை நன்றாகப் பார்த்துக் கொள்ளும். நீங்கள் ஏன் உங்களைப் பற்றி வீணாகக் கவலைப்பட்டுக் கொண் டிருக்கிறீர்கள்? வாழ்க்கை என்ற செடியிலிருந்து கிளையாகிய உங்களை ஏன் வெட்டிக் கொள்கிறீர்கள்? வாழ்க்கை என்ற நிலத்தில் முளைத்த செடி நீங்கள். செடியை ஏன் நிலத்திலிருந்து வேருடன் பிடுங்கப் பார்க்கிறீர்கள்? வாழ்க்கை உங்களுக்கு உணவும் போஷாக்கும் அளிக்கிறது. வாழ்க்கை உங்களுக்குள் சுவாசிக்கிறது. உங்களில் வாழ்கிறது. பின் நீங்கள் ஏன் உங்களைப் பற்றி அதிகம் கவலைப்படுகிறீர்கள்? தன்னைப்பற்றி அதிகம் கவலைப்படுபவன் சம்சாரி. தன்னைப் பற்றிய கவலையே இல்லாதவன் சந்நியாசி. ''நான் வாழ்க்கையின் மடியில் படுத்திருக்கிறேன். வாழ்க்கை என்னைப் பார்த்துக் கொள்ளும்'' என்று சொல்பவனே உண்மையான சந்நியாசி. இதுதான் துறவுக்கு நான் கொடுக்கும் அர்த்தம். துறவு என்பது வாழ்க்கையைத் துறத்தல் அல்ல. அகந்தையின் கவலைகளைத் துறத்தலே உண்மையான துறவு. கவலை, பற்று, ஆசை, பதற்றம், ஓடும் ஆறினை அதன் போக்குக்கு விடாமல் அதனைப் பிடித்துத் தள்ளும் போக்கு - இவற்றைத் துறத்தலே துறவு. ஆறு தானாக ஓடும். அதை ஏன் பிடித்துத் தள்ள வேண்டும்? அந்த ஆறுதான் உங்களை இந்த நேரத்தில் இந்தக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. இன்னும் பல கரைகளுக்கு உங்களை அது அழைத்துச் செல்லும். ஏன் கவலைப்பட வேண்டும்.?

பறவைகள் கவலைப்படுவதில்லை. மரங்கள் கவலைப் படுவதில்லை. இருப்பதிலேயே விழிப்புணர்வு அதிகம் உள்ள

இனம் மனித இனம்தன். பின் மனிதன் ஏன் கவலைப்பட வேண்டும்? தாவோ ஆறுகளையும், பாறைகளையும், மரங்களையும் பார்த்துக் கொள்ளும் போது உங்களை மட்டும் ஏன் கைவிடப் போகிறது என்று நினைக்கிறீர்கள்? இந்தக்கணத்தில் வாழக்கையின், உச்சகட்ட மலர்ச்சி நீங்கள்தான். மற்றவற்றைவிட உங்கள்மேல்தான் வாழ்க்கை அதிகமாகக் கவனம் செலுத்தும். உங்கள் மேல் வாழ்க்கை அதிகமாக கவனம் காட்டுகிறது. ஏனெனில் உங்கள் மேல் வாழ்க்கை அதிகமாக முதலீடு செய்திருக்கிறது. வாழ்க்கைக்கு நீங்கள் ஒரு சவால். உங்கள் மூலம்தான் வாழ்க்கை உணர்வு நிலைக்கு வர வேண்டும். உங்கள் மூலம் ஒரு சிகரத்தைத் தொட வேண்டும் என்று வாழ்க்கை துடித்துக் கொண்டிருக்கிறது வாழ்க்கை எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளும். வாழ்க்கையை அதன் போக்கில் அனுமதிப்பதும் உங்கள் அகந்தையைப் பற்றிக் கவலைப்படாமல் இருப்பதும்தான் உண்மையான துறவு..

நான் சொல்லும் துறவு முற்றிலும் வேறுபட்டது. அது பழைய துறவு அல்ல. பழைய துறவில் வாழ்க்கையைத் துறக்க வேண்டும் என்ரு சொன்னார்கள். பழைய துறவு துறவே அல்ல. துறவுக்கு நேர் எதிரான ஒரு நிலை. அதில் உங்களைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டும் என்று சொன்னார்கள். உங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும். உங்கள் யோகப்பயிற்சி, தியானம், உங்கள் சாதனை ஆகியவற்றைக் கவனித்துக் கொண்டேயிருக்க வேண்டும். மற்றவர்கள் கடவுளைச் சென்றடையும் முன் நீங்கள் சென்றுவிட்டீர்களா என்பதில் கவனமாக இருக்க வேண்டும்.

நான் சொல்லும் துறவு இதற்கு நேர் எதிரானது. கவலைப்படாதீர்கள் என்பதுதான் என் கொள்கை. நீங்கள் நிச்சயமாக இலக்கை அடைவீர்கள். ஆனால் சத்தியமாகக் கவலைப்படுவதன் மூலம் அடைய மாட்டீர்கள். நீங்கள் எந்த முயற்சியும் எடுக்க வேண்டாம். எதுவுமே செய்ய வேண்டாம். மொத்த வாழ்க்கையையும் அதன் போக்கில் விட்டுவிட்டு 'தேமே' என்று இருங்கள் நிச்சயமாகச் சென்றடைவீர்கள். வாழ்க்கை உங்களைப் பார்த்துக்கொள்ளும். வாழ்க்கையை உங்கள் கையில்

எடுத்துக் கொள்வது பெரிய அபாயம். வாழ்க்கையைத் தாவோவின் கைகளில் விட்டுவிடுங்கள். அன்னையின் மடியில் இருப்பது போல் அது பாதுகாப்பானது. தாவோதான் தன்னிகரற்ற தாய்.

இப்போது வார்த்தைகளைப் பாருங்கள்.

***மீன்கள் நீரில் பிறக்கின்றன. மனிதன் தாவோவில் பிறக்கிறான்.***

ஷுவாங் ட்சு என்ன சொல்கிறார்? மீன்கள் தண்ணீரில் பிறப்பதைப் போல் மனிதன் தாவோவில் பிறக்கிறான். தண்ணீர் மீன்களின் நலனைப் பார்த்துக் கொள்கிறது. தாவோ உங்கள் நலனைப் பார்த்துக் கொள்கிறது. நீங்கள் தாவோ என்னும் நீரில் நீந்தும் மீன்கள். இந்தத் தாவோதான் இயற்கை. அல்லது கடவுள் என்றும் சொல்லலாம். ஷுவாங் ட்சு கடவுள் என்ற வார்த்தையைப் பயன்படுத்தவேயில்லை. அந்த விஷயத்தில் அவர் மிகவும் கவனமாக இருக்கிறார். கடவுள் என்ற சொல்லைப் பல மதங்களும் பல இயக்கங்களும் பலவாறாகப் பயன்படுத்தி ஒரு அபத்தமான அர்த்தத்தைக் கொடுத்துவிட்டன. அதனால்தான் அவர் தாவோ என்ற நடுநிலையான வார்த்தையைப் பயன்படுத்துகிறார். நம் வேதங்கள் ரித் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றன. ரித் அல்லது தாவோ - இரண்டுக்கும் ஒரே பொருள்தான். இயற்கை அல்லது இயல்பு என்று கொள்ளலாம். மனிதன் தாவோவில்தான் பிறக்கிறான். அதனால்தான் நம்மால் தாவோவை உணர முடியவில்லை. மீன்களால் தண்ணீரை உணர முடியாது. தண்ணீரைப் பற்றி மீன்களுக்கு மிகவும் நன்றாகத் தெரியும். அவை நீரில்தான் பிறந்தன. நீரில்தான் வாழ்கின்றன. நீரைவிட்டுப் பிரிந்து அவற்றால் வாழவே முடியாது. ஆனாலும் மீன்களுக்குத் தண்ணீர் என்றால் என்னவென்றே தெரியாது. ஆனால் அவை அதில்தான் நகர்கின்றன. அதில்தான் வாழ்கின்றன. நீரில் தோன்றி நீரிலேயே மறைகின்றன. ஆனால் நீரென்றால் என்னவென்று மீன்களுக்குத் தெரியாது.

ஒரு முறை ஒரு மீன் குஞ்சிற்கு ஒரு சந்தேகம் வந்தது. அது கடலைப் பற்றி பலவாறாகக் கேள்விப்பட்டிருந்தது. கடல் எப்படி

இருக்கும் என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆவல் அதனுள் எழுந்தது.

ஒவ்வொரு புத்திசாலி மீனிடமும் சென்று கடல் என்றால் என்னவென்று கேட்டது. ஒரு குருவைத் தேடிக்கொண்டு போனது.. பல குருக்கள் கிடைத்தார்கள். மீன் வர்க்கத்திலும் பல குருக்களும் சாமியார்களும் இருக்கிறார்களே! அவர்கள் பலவிஷயங்களைச் சொன்னார்கள். ஒரு குருவிடம் போய் ஏதாவது கேட்டால் அவருக்குப் பதில் தெரிகிறதோ இல்லையோ தொடர்ந்து எதையாவது அவர் பேசிக்கொண்டேயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அந்த குருபதவி பறிபோய்விடும்.

அவர்கள் கடலைப்பற்றிப் பல விஷயங்களைச் சொன்னார்கள். ஆனால் மீன் குஞ்சிற்குத் திருப்தியில்லை. கடலை நேரில் பார்க்க வேண்டும். முடிந்தால் சுவைத்தும் பார்க்க வேண்டும் என்று நினைத்தது.

ஒரு குரு - மீன் பயங்கரமாக எச்சரித்தது.

''கடல் என்பது தொலைதூரத்தில் இருக்கிறது. அதை நீ சென்றடையவே முடியாது. எப்போதாவது அபூர்வமாகத்தான் சிலர் கடலை அடையமுடியும். முட்டாள்தனமாகக் கேள்வி கேட்காதே. கடலை அடைய வேண்டுமென்றால் பல லட்சம் ஆயுட்காலங்களுக்கு உன்னை நீயே தயார் செய்து கொள்ள வேண்டும். அது சாதாரண விஷயமில்லை. முதலில் உன்னை நீயே தூய்மைப்படுத்திக் கொள். பிறகு நான் சொல்லித்தரும் யோகாசனங்களைத் தொடர்ந்து செய்ய வேண்டும்.'' பதஞ்சலி யோக சூத்திரத்திலிருந்து மேற்கோள் காட்டிப் பேசியது அந்த குரு - மீன்.

இன்னொரு குரு - மீன் புத்த மதத்தைச் சேர்ந்தது. அது சொன்னது. ''இதெல்லாம் உதவாது. புத்தரின் பாதையில் செல். புத்தர் சொன்ன அந்த எட்டுக் கட்டுப்பாடுகளைக் கடைப்பிடி. முதலில் உன்னிடம் இருக்கும் அழுக்கைக் களைந்தெறி. அதன் பிறகுதான் உனக்குக் கடலைப் பார்க்க அனுமதி கிடைக்கும்..''

இன்னொரு மீன் சொன்னது ''இந்தக் கலியுகத்தில் இந்தக் காலத்தில் ராமனின் பெயரைச் சொல்வதுதான் உதவி செய்யும். ராமா ராமா என்று சொல்லிக்கொண்டே இரு ராமனின் அருளால் கடலை அடையலாம்.''

இந்த உரையாடல் இந்த நிகழ்வுகள் எல்லாமே அந்த மீன் குஞ்சும் அந்த குரு -மீன்களும் காலம் காலமாக வாழ்ந்து கொண்டிருந்த கடலில்தான் நடந்தன.

இது தெரியாத அந்த மீன் குஞ்சு கடலை நான்கு திசைகளிலும் தேடியது. பல புனித நூல்களைப் படித்தது. பல கொள்கைக ளையும் கோட்பாடுகளையும் அலசி ஆராய்ந்தது. பல துறவிகளையும் புனிதர்களையும் சந்தித்தது. ஆனால் எந்தப் பயனும் இல்லை. கடல் எங்கே? அந்தக் கேள்விக்கு விடை கண்டுபிடிப்பதில் வெறியாக இருந்தது மீன் குஞ்சு.

ஒருநாள் அது ஒரு சாதாரண மீனைப் பார்த்தது. அந்த மீன் நம் ஷுவாங் ட்சுவைப் போல் சாதாரணமாக இருந்திருக்க வேண்டும். அந்த மீன் சாதாரண மீன் வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தது. எப்படி இந்த சாதாரண மீன் குருவாக இருக்க முடியும் என்று மீன்குஞ்சிற்கு முதலிலேயே சந்தேகம். அந்த மீன் இயல்பான குரலில் மென்மையாகச் சொன்னது.

:''வெறிபிடித்து அலையாதே. முட்டாள்தனமாக இருக்காதே! நீ இருப்பதே கடல்தான். நீ பார்ப்பதெல்லாம் கடலன்றி வேறில்லை. கடல் தொலை தூரத்தில் இல்லை. இங்கேயே மிக அருகில் இருக்கிறது. உனக்குள்ளும் இருக்கிறது. எனக்குள்ளும் இருக்கிறது. அதற்குள்தான் நாம் இருக்கிறோம். அது அவ்வளவு அருகில் இருப்பதால் அதை நம்மால் பார்க்க முடியவில்லை. ஒரு பொருளைப் பார்க்க அதிலிருந்து கொஞ்சமாவது விலகியிருக்க வேண்டும். கடலிற்குள் இருந்து கொண்டு கடலைப் பார்க்க முடியாது. ''அது உனக்கு மிக அருகில் இருப்பதால் உன்னால் அதைப் பார்க்க முடியாது. அது உனக்கு வெளியே இருக்கிறது. உள்ளே இருக்கிறது. நீ அந்தக் கடலில் தோன்றும் சிறு அலையைப் போன்றவன். நீ கடலின் பகுதி. கடலின் சக்தியின் ஒருவிதமான வெளிப்பாடு.

ஆனால் மீன் குஞ்சு அதை நம்பவில்லை "உனக்குத் தான் பைத்தியம் பிடித்திருக்கிறது. நான் பல குருக்களைச் சந்தித்திருக்கிறேன். அவர்கள் அனைவரும் கடல் வெகு தொலைவில் இருக்கிறது என்றுதான் சொல்கிறார்கள். கடலைப் பார்க்க முதலில் என்னை நான் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். யோகப்பயிற்சி செய்ய வேண்டும். ஒழுக்க விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். தியானம் பிராணாயாமம் முதலிய பயிற்சிகளைச் செய்ய வேண்டும். சில சடங்குகளையும் செய்ய வேண்டும். இப்படியே பல லட்சம் வாழ்நாட்கள் செய்தால் ஒரு நாள் நான் கடலை அடையலாம். அப்போதும் கடவுள் அருள் இருந்தால்தான் அடையலாம்.

ஆனால் ஷுவாங் ட்சு சொல்வதுதான் சத்தியம். உங்களைச் சுற்றி இருப்பது கடலன்றி வேறில்லை. நீங்கள் கடலில் தான் இருக்கிறீர்கள். வேறு எப்படியும் இருக்க முடியாது. கடவுள் உங்கள் மூலம் சுவாசிக்கவில்லையென்றால் நீங்கள் எப்படி உயிர்வாழ்வீர்களாம்?

உங்களுக்குள் இருந்து கொண்டு சுவாசிப்பது யார்.? உங்கள் ரத்தத்தை உங்கள் உடல் முழுவதும் ஒரு சீராக ஓடவைப்பது யார்? நீங்கள் உண்ணும் உணவை ஜீரணிப்பது யார்? உங்களுக்குள் இருந்து கொண்டு கனவு காண்பது யார்? உங்களுக்குள் கவிதையையும் அன்பையும் ஜனிக்க வைப்பது யார்? உங்கள் இதயத்தைத் துடிக்க வைப்பது யார்? உங்கள் வாழ்வின் இசையாக இருப்பது யார்? கடவுள் நம்மை விட்டு விலகித் தொலைதூரத்தில் இருந்தால் நம்மால் வாழ முடியுமா? கடவுள் அங்கே எங்கேயோ இருந்தால் நம்மால் இங்கே இருக்க முடியுமா? கடவுள் உங்களைவிட்டு விலகி இருக்க முடியுமா? அப்படி இருந்தால் உங்களால் உயிருடன் இருக்க முடியுமா? அது சாத்தியம் இல்லை. கடவுள்தான் உயிர். அந்த உயிரின் வடிவம்தான் நீங்கள்.

நீங்கள்தான் கடவுள். கடவுளின் ஒரு சிறு உருவாக இருக்கலாஅம். ஆனால் நீங்கள்தான் கடவுள். எதிர்காலத்தில் என்றோ ஒரு நாள் நீங்கள் கடவுளைப் போல் இருப்பீர்கள் என்று நான் சொல்லவில்லை. இங்கே இப்போது இந்தக் கணத்தில்

நீங்கள்தான் கடவுள் என்று சொல்கிரேன். அது உங்களுக்குத் தெரியுமா தெரியாதா என்பதல்ல கேள்வி. நீங்கள்தான் கடவுள். வேறு எப்படியும் இருக்க வாய்ப்பில்லை. இதை உணர பல லட்சம் வாழ்நாட்கள் ஆகலாம். அதற்குக் காரணம் உங்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தூரம் அல்ல. உங்கள் மனதில் இருக்கும் முட்டாள்தனத்தின் ஆழம். விழிப்புணர்வைத் தவிர வேறு ஒழுக்க விதிகள் தேவையில்லை. அருகே நெருங்கி இருப்பதைக் குறித்த விழிப்புணர்வு வேண்டும். உங்கள் சருமத்தை ஏற்கனவே தொட்டுக் கொண்டிருப்பதைக் குறித்த விழிப்புணர்வு வேண்டும். உங்கள் இதயத்தில் எது துடித்து கொண்டிருக்கிறதோ எது உங்கள் ரத்தமாக ஓடிக் கொண்டிருக்கிறதோ அது குறித்த விழிப்புணர்வு வேண்டும்.

அதை உணர்ந்து கொள்ள நீங்கள் இந்தக் கணத்தில் வாழ வேண்டும். வருங்காலத்திற்குள் நீங்கள் புகுந்துவிட்டால் அதனின்றும் விலகிச் சென்று விடுவீர்கள். அதன் பின் நீங்கள் நெடுந்தூரம் பயணிக்க வேண்டும். தெய்வத்தன்மை இங்கேயே இருக்கிறது. அதைக் கவனிக்காமல் அதைத் தேடிக்கொண்டு நீண்ட பயணத்தைத் தொடங்கிவிட்டீர்கள்.

ஷுவாங் ட்சு சொல்கிறார்.

> ***மீன்கள் நீரில் பிறக்கின்றன. மனிதன் தாவோவில் பிறக்கிறான். நீரில் பிறந்த மீன்கள் குளத்தின் நீரோடைகளின் ஆழமான நிழல்களைத் தேடும் போது அவற்றின் தேவைகள் நிறைவு பெறுகின்றன.***

தேவைகள் - சரி. ஆசைகள் - அறவே கூடாது. மீன்கள் அரசியல்வாதிகள் ஆகக் கூடாது. ஆனால் அரசியல்வாதிகளாகும் அளவிற்கு மீன்கள் முட்டாள்கள் இல்லை. மீன்கள் மனிதன் அளவிற்கு முட்டாள்கள் இல்லை. அவைகள் எளிமையாக வாழ்கின்றன. வாழ்க்கையை அனுபவிக்கின்றன. உண்கின்றன. அருந்துகின்றன. மகிழ்ச்சியாக இருக்கின்றன. நடனம் ஆடு கின்றன. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறிய வாழ்நாளுக்காக அவை ஆனந்தக் கூத்தாடுகின்றன. குளத்தில் இருக்கும்

மீன்களைப் பாருங்கள். அங்கும் இங்கும் ஓடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருக்கின்றன. அவற்றுக்கு எந்த லட்சியமும் இல்லை. எந்த இலக்கும் இல்லை. எந்தப் பேராசையும் இல்லை. அவற்றின் தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்து கொள்கின்றன. மீன்கள் களைத்துவிட்டால் குளத்தின் நிழலான பகுதிக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள்கின்றன.

சக்தி மீண்டும் கிடைத்ததும் துள்ளி ஆடப் புறப்படுகின்றன. மீண்டும் களைத்துவிட்டால் மீண்டும் ஓய்வு. மீன்களின் வாழ்க்கையே ஆட்டம் ஓய்வு என்ற ஆதார சுருதிக்குள் இசைவாக நிகழ்கிறது. அந்த இசைவைத் தொலைத்துவிட்டான் மனிதன். நீங்கள் செயல்படுகிறீர்கள். ஆனால் உங்களுக்கு ஓய்வு இல்லை. நீங்கள் கடைக்குப் போகிறீர்கள். ஆனால் மீண்டும் வீட்டுக்குத் திரும்புவதில்லை. அப்படியே திரும்பினாலும் கடை உங்கள் மனதிலேயே இருக்கிறது. உங்களுடன் அதுவும் வீட்டுக்கு வந்துவிடுகிறது. மீனைப் போல் நிழலான பகுதிக்குச் சென்று ஓய்வு எடுப்பதில்லை. அப்படி ஓய்வு எடுப்பதற்குப் பெயர்தான் தியானம். குளத்தின் நிழலான பகுதியைத் தேடுவதுதான் தியானம். அதுதான் வழிபாட்டுணர்வு. செயலிலிருந்து செயலற்ற நிலைக்குப் போவது. அது தான் சமய உணர்வு.

கொஞ்சம் அதிகமாகவே செயலில் ஈடுபட்டுவிட்டீர்கள். அதனால் உங்கள் சமச்சீர் நிலையை இழந்து விட்டீர்கள். இப்போது சிறிது நேரம் செயலற்று இருங்கள். சமச்சீர் நிலையை மீண்டும் பெறலாம். செயலாற்றுங்கள் வேண்டாம் என்று சொல்லவில்லை. செயலற்ற நிலையும் முக்கியமானது என்பதை மறக்காதீர்கள். செயல் என்பது உலகிற்குள் இயங்குவது செயலற்ற நிலை என்பது உங்களுக்குள் இயங்குவது. அது ஒரு இசைவு. பகலில் விழித்திருக்கிறீர்கள். இரவில் தூங்குகிறீர்கள். அது ஒரு இசைவு. பகலில் உணர்வுநிலையில் இருக்கிறீர்கள். இரவில் உணர்வின்மை நிலையில்.

சாப்பிடுகிறீர்கள். அதன் பின் சில மணி நேரங்கள் உண்ணா விரதம் இருக்கிறீர்கள். மீண்டும் பசி வருகிறது. சாப்பிடுகிறீர்கள். பின் மீண்டும் உண்ணா நிலை. சாப்பிட்டுக் கொண்டே இருந்தால்

உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். சாப்பிடாமலேயே இருந்தால் நீங்கள் செத்துவிடுவீர்கள். உண்பதிலும் உண்ணாமல் இருப்பதிலும் ஒரு இசைவு ஒரு ஒருமைப்பாடு வேண்டும். இரண்டு எதிர்மறை நிகழ்வுகளுக்கு இடையே இருக்கும் இசைவே வாழ்க்கையின் முக்கியமான ரகசியம். இதில் எதிர்மறை என்பது மிகவும் முக்கியமான சொல்.

ஆனால் உங்கள் மனம் என்ன சொல்கிறது? ''எதிர்மறை ஏன்? முரண் ஏன்? விழித்துக் கொண்டிருக்க முடிந்தால் விழித்துக் கொண்டிரு. ஏன் தூங்க வேண்டும்?'' மனிதனுக்குத் தூக்கமே தேவையில்லை என்ற நிலையைக் கொண்டுவந்து விட்டால் அவன் வாழ்க்கையை இன்னும் அதிகம் அனுபவிக்கலாமே என்பது சில விஞ்ஞானிகளின் கருத்து. ''நீங்கள் தொன்னூறு வருடங்கள் வாழ்வதாக வைத்துக் கொள்வோம். அதில் முப்பது வருடங்கள் தூக்கத்திலேயே விரயமாகிவிடும். அது கொஞ்சம் அதிகம் அல்லவா? அதை எப்படி குறைப்பது அல்லது அறவே அகற்றுவது என்று பார்த்தால் என்ன?''

தாவோவைவிட இந்த விஞ்ஞானிகள் மேதாவிகளாக இருப்பார்கள் போலிருக்கிறதே! விஞ்ஞானிகள் சொல்வதைக் கேட்டு உங்கள் மனம் என்ன சொல்லும்? ''தூக்கத்தை ஒழித்து விட்டால் இன்னும் முப்பது வருடங்கள் அதிகமாக வாழ்க்கையை அனுபவிக்கலாமே! வாழ்க்கையை அனுபவிக்கலாமே!

நான் சொல்கிறேன். அப்படிச்செய்தால் கிறுக்குப் பிடித்து அலைவீர்கள். முப்பது வருடத் தூக்கத்தை ஒழித்துவிட்டால் 90 வருட வாழ்க்கையை முழுதாக அனுபவிக்கலாம். ஆனால் நீங்கள் வெறியர்களாக அலைவீர்கள். 90 வருடங்களில் ஒரு மணி நேரம் கூடத் தூங்காதவனைப் பற்றி யோசித்துப் பாருங்கள். இந்த உலகம் ஒரு நரகமாகத் தோன்றும். அத்தகைய மனிதனுடன் வாழவே முடியாது. ஓய்வு நிலையில் இயல்பாக இருப்பது என்றால் என்னவென்றே அவனுக்குத் தெரியாது. எந்த நேரமும் அதீதமான மன அழுத்தத்துடன் இருப்பான். இந்த உலகமே ஒரு பெரிய பைத்தியக்கார ஆஸ்பத்திரியைப் போல் இருக்கும். இப்போதுகூட அப்படித்தான் இருக்கிறது.

ஒரு இசைவு வேண்டும். நீங்கள் விழித்திருக்கவும் வேண்டும். தூங்கவும் வேண்டும். தூக்கம் வாழ்க்கைக்கு எதிரானது அல்ல. தர்க்கத்தில் வேண்டுமானால் தூக்கம் வாழ்க்கைக்கு எதிரானதாக இருக்கலாம். நடைமுறையில் அல்ல. நீங்கள் சில மணி நேரங்கள் ஆழமாகத் தூங்கும் போது அடுத்த நாள் காலை உங்களால் அதிகமான விழிப்புணர்வுடன் இன்னும் அதிகமாகச் செயலாற்ற முடிகிறது. முந்தைய இரவு நீங்கள் அழகாக, ஆழமாகத் தூங்கினீர்கள் என்றால் அதில் நீங்கள் உங்களையே மறக்கிறீர்கள். முழு ஓய்வு பெறுகிறீர்கள். காலை எழுந்திருக்கும் போது புதிதாகப் பிறந்ததாக உணர்கிறீர்கள். அடுத்த நாளைச் சந்திக்க துடிப்புடன் செயலாற்ற அபரிமிதமான சக்தி கிடைக்கிறது. அது போல் நாள் முழுவதும் அந்த அபரிமிதமான சக்தியுடன் செயல்பட்டால் அதிக ஆற்றலுடன் நீங்கள் செய்ய வேண்டியதைச் செய்தால் இரவு தூக்கம் தானாகவே வரும். முழுமையான செயல் ஓய்விற்கு வழி வகுக்கும். முழுமையான ஓய்வு செயலாற்றலுக்கு வழிவகுக்கும்.

எதிர்மறைகளால்தான் வாழ்க்கை வளம் பெறுகிறது. ஆனால் எதிர்மறைகள் ஒன்றை ஒன்று சந்திக்கவே சந்திக்காது, சந்தித்தாலும் அதில் இசைவு இருக்காது என்பதுதான் தர்க்க சாஸ்திரத்தின் தாத்பரியம். இந்தத் தர்க்க சாஸ்திரத்தைக் கண்மூடித்தனமாக நம்பியதால்தான் மேலைநாடுகள் இன்று தங்கள் சமச்சீர் நிலையை இழந்துவிட்டன. கொஞ்சம் கொஞ்சமாக எதிர்மறையை வெட்டிக்கொண்டே வாருங்கள் என்று அவை சொல்கின்றன. ''நீங்கள் விழித்திருக்கும் போதுதான் வாழ்க்கையை அனுபவிக்க முடியும். தூக்கத்தில் வாழ்க்கையை அனுபவிக்க முடியாது. எனவே முடிந்த அளவு தூக்கத்தைத் தள்ளிப் போடுங்கள்.'' என்பதுதான் மேலை நாடுகளின் கொள்கை.

இரவு உணவு, நண்பர்களுடன் சந்திப்பு, விவாதங்கள், வாதங்கள், வம்பு, கிளப்புகளில் பார்ப்பது, இரவு நடனம், சினிமா என்று எல்லாவற்றையும் முடித்துவிட்டு அவர்கள் தூங்கச் செல்லும் போது பாதி இரவு கழிந்திருக்கும்.

முடிந்த அளவு தூக்கத்தைத் தள்ளிப் போடுகிறார்கள். அதிக நேரம் விழித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று ஒரு வெறியுடன் செயல்படுகிறார்கள். கடைசியாக தூங்கச் செல்லும் போதும் அரைமனதுடன் தான் செல்கிறார்கள். தூங்காமலேயே இருந்தால் இன்னும் அதிகமாக அனுபவிக்கலாமே என்பதுதான் அவர்கள் எண்ணம். இன்னும் கொஞ்சம் நடனம் ஆடியிருக் கலாமே இன்னும் ஒரு சினிமா பார்த்திருக்கலாமே நண்பர்களுடன் இன்னும் கொஞ்ச நேரம் இருந்திருக்கலாமே, இன்னும் கொஞ்சம் பணம் சம்பாதித்திருக்கலாமே இன்னும் கொஞ்சம் சூதாடி யிருக்கலாமே என்று அவர்கள் நினைக்கிறார்கள்.

அரைமனதுடன் தூங்கச் சென்றுவிட்டு ''நான் தூக்கமின்மை வியாதியால் அவதிப்படுகிறேன்.'' என்று பெருமையாகச் சொல்கிறார்கள். தூங்க விருப்பமில்லை என்பதுதான் உண்மை.

தூக்கமின்மை வியாதியில் தவிக்கும் யாருக்குமே தூக்கத்தில் விருப்பம் இல்லை. அவர்கள் விரும்பினால் தூங்கலாம். தூக்கம் அங்கேயேதான் இருக்கிறது. ஆனால் அவர்களுக்கு விருப்பம் இல்லை. கொஞ்சம் கூட ஓய்வில்லாத துடிப்பான வாழ்க் கையைத்தான் விரும்புகிறார்கள். ஓய்வு நிலையில் இருக்கும் போது பணம் சம்பாதிக்க முடியாது. ஓய்வு நிலையில் தேர்தல்களில் வெற்றிபெற முடியாது. ஓய்வு நிலையில் இருக்கும் போது உங்கள் கடையைப் பெரிதாக்க முடியாது.

ஓய்வில் நீங்கள் என்ன சாதிப்பீர்கள், சொல்லுங்கள். ஓய்வு உங்கள் பேராசையை நிறைவேற்றாது. ஆசைகளை நிறைவேற்ற செயல் வேண்டும். அரசியல், பணம் என்று இவை அனைத்திற்கும் செயலாற்றல் வேண்டும். அந்தக் கோணத்தில் பார்த்தால் தூக்கம் என்பது வெறும் கால விரயமே. உங்கள் மனம் ஆசைகளின் பிடியில் இருந்தால் நீங்கள் அரைமனதுடன் தான் தூங்கச் செல்வீர்கள். அதுவும் தூங்கித் தொலைக்க வேண்டுமே கடனெழவே என்றுதான் தூங்கச் செல்வீர்கள். அதன்பின் தூங்கமுடியவில்லையே என்று கவலைப்படுவீர்கள். நீங்கள் ஆசையின்பால் செயலாற்றலின்பால் மிகவும் அதிகமாகச் சாய்ந்துவிட்டீர்கள். அவை இன்னும் உங்கள் மனதில் தொடர்ந்து

இருக்கின்றன. அதனால்தான் உங்களால் தூங்கமுடியவில்லை. அரைமனதுடன் தூங்கச்செல்வதால் நீங்கள் மறைமுகமாகத் தூக்கத்தை எதிர்க்கிறீர்கள். உங்கள் உடல் தூங்க வேண்டும் என்று விரும்புகிறது. ஆனால் மனம் இன்னும் துடிப்புடன் இருக்கிறது.

அன்று ஒருவர் என்னைத் தேடி வந்தார்

''நான் தியானம் செய்யும் போதும் எண்ணங்கள் தொடர்ந்து வருகின்றன. எண்ணங்களை எப்படி நிறுத்துவது என்று சொல்லித் தாருங்களேன்.''

சொல்லிக்கொடுத்தேன். அதைக் கேட்டுவிட்டு அவர் சொன்னார்.

''ஆனால் எனக்குத் தியானம் செய்யும் போது சிந்திக்கப் பிடிக்கிறதே!''

பின் ஏனய்யா அதை நிறுத்த வேண்டும் என்று சொல்கிறீர்?

''எண்ணங்கள் வந்தால் என்னால் தூங்க முடியவில்லை. தூக்கம் இல்லயென்றால் எனக்கு ஓய்வே கிடைப்பதில்லை. ஆனால் எனக்குச் சிந்திக்கப் பிடிக்கிறது.''

இதுதான் பிரச்சினை. உங்களுக்குச் சிந்திக்கப் பிடித்திருக் கிறது. காரணம் சிந்திப்பதால்தான் உங்களால் உங்கள் ஆசை களை நிறைவேற்றிக் கொள்ள முடியும்.. சிந்தனை இருந்தால் பெரிய சிந்தனையாளராகலாம். பெரிய தலைவராகலாம். தூக்கத்தினால் யாராவது தலைவர்கள் ஆனார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

எல்லாருமே தூக்கத்தைக் கண்டிக்கிறார்கள். சோம்பேறித் தனத்தைக் கண்டிக்கிறார்கள். வேலை எதுவும் செய்யாமல் வாழ்க்கையின் சுகபோகங்களை அனுபவிப்பவர்களை எல்லாருமே கண்டிக்கிறார்கள். 'நீ சோம்பேறியாக இருக்கிறாய். உன்னால் இந்தச் சமுதாயத்திற்கு என்ன லாபம்?' என்று அவர்களைக் கண்டிக்கிறோம். ஆனால் உங்களுக்கு ஒன்று தெரியுமா? சோம்பேறிகளாலும் சுகவாசிகளாலும் இந்த உலகத்திற்கு எப்போதுமே கெடுதல் நிகழ்ந்ததில்லை.

எந்தச் சோம்பேறியாலும் ஹிட்லராக முடியாது. எந்த சுகவாசியும் நிக்சன் ஆகமாட்டான். மா சே துங்குகளும், நெப்போலியன்களும், ஜெங்கிஸ் கான்களும் சோம்பேறிகள் இனத்திலிருந்து தோன்ற முடியாது. அப்படித் தோன்றியதும் கிடையாது. சோம்பேறிகளிடம் செயலாற்றல் இருக்காது. செயலாற்றல்தான் சண்டைகளுக்கும் அழிவுகளுக்கும் மூல காரணம். மனிதனின் செயலாற்றல்தான் இருப்பதிலேயே ஆபத்தான அழிவு ஆயுதம். ஆனால் நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம்? யாரும் சோம்பேறியாக இருக்காதீர்கள். எல்லாரும் செயலாற்றுங்கள். என்று எல்லாருக்கும் சகட்டு மேனிக்கு அறிவுரை கூறிக்கொண்டு இருக்கிறோம். காரணம் நம் அனைவரிடமும் பேராசை இருக்கிறது.

பேராசையை விட்டுவிட்டால் செயலாற்றலும் சோம்பேறித் தனமும் ஒரு அளவோடு இருக்கும். அப்போது உங்கள் வாழ்வில் ஒரு இசைவு இருக்கும். இந்த ஓரத்திற்கு வந்துவிட்டுப் பின் அந்த ஓரத்துக்குச் செல்வீர்கள். நடுவில் உங்களை சமநிலைப்படுத்திக் கொள்வீர்கள். காலையில் செயலாற்றலுடன் இருங்கள். இரவில் தூங்குங்கள். செயலும் தியானமும் ஒரே சமயத்தில் செய்ய வேண்டும். அதனால்தான் நான் யாரையும் உலகத்தைத் துறந்து விட்டு இமயமலைக்குச் செல்லுங்கள் என்று சொல்வதில்லை. அப்படிச் செய்தால் நீங்கள் முழுச்சோம்பேறியாகிவிடுவீர்கள்: மீண்டும் சமநிலை கெட்டுவிடும்.

இந்த உலகத்தில் இருங்கள். ஆனால் வீட்டுக்குத் திரும்பும் போது முழுமையாகத் திரும்புங்கள். அலுவலகத்தை அங்கேயே விட்டுவிட்டு வாருங்கள். அலுவலகக் கோப்புக்களைக் கையில் சுமந்து கொண்டு வராதீர்கள். அதைவிட முக்கியம் கோப்புகளை மனதில் சுமந்து கொண்டு வராதீர்கள்.

வேலையில்லாமல் சும்மா இருக்கும்போது அதையும் அனுபவியுங்கள். வேலை செய்யும் போது வேலையை அனுபவித்துச் செய்யுங்கள். உங்கள் உடல் தாவோவின் வழியில் நடக்கட்டும். உங்கள் மனதின் வழியில் அல்ல.

**நீரில் பிறந்த மீன்கள் குளத்தின் நீரோடைகளின் ஆழமான நிழல்களைத் தேடும்போது அவற்றின் தேவைகள் நிறைவு பெறுகின்றன. தாவோவில் பிறந்த மனிதன் செயலற்ற நிலையின் ஆழமான நிழலில் மூழ்கி, கவலையையும் வன்முறையையும் மறக்கும் போது அவனுக்கு எந்தக் குறையும் இருக்காது. அவன் வாழ்வு பாதுகாப்பானதாக இருக்கும்.**

உங்களுக்குள்ளே ஆழத்தில் உங்கள் வேர்கள் இருக்கின்றன. நீங்கள் மரத்தைப் போல் இருக்கிறீர்கள். வெளியே பாதிமரம்தான் தெரிகிறது. பாதிமரம் மண்ணின் ஆழத்தில், இருட்டில் மறைந்து கிடக்கிறது. வேர்கள் அங்கேதான் இருக்கின்றன. மலர்கள் மலர்கின்றன. மல்ர்களை நீங்கள் பார்க்கலாம். வேர்கள் இருப்தால்தான் மலர்கள் மலர்கின்றன. வேர்கள் மறைந்து இருக்கின்றன. மலர்கள் வெளியில் தெரிகின்றன.

உங்கள் செயல்கள் மலர்களாக இருக்கட்டும். உங்கள் செயலற்ற நிலை உங்கள் வேர்களாக இருக்கட்டும். வேர்களுக்கும் மலர்களுக்கும் இடையே ஒரு சமநிலை இருக்கட்டும். மரம் வானில் அதிக உயரம் நீண்டு வளர வேண்டுமானால் வேர்கள் மண்ணில் அதிக ஆழம் ஊடுருவிச் செல்ல வேண்டும். சின்ன மரங்களுக்கு சிறிய வேர்கள் இருக்கலாம். பிரம்மாண்டமான மரங்களுக்குப் பெரிய வேர்கள் தேவை. அதில் ஒரு விகிதாசாரம் இருக்கத்தான் செய்கிறது. மரம் மண்ணிற்கு மேல் ஐம்பதடி வளர வேண்டுமென்றால் அதன் வேர்கள் மண்ணிற்குக் கீழே ஐம்பதடி செல்ல வேண்டும்.. அப்போதுதான் அந்த உயர்ந்த மரம் கீழே விழாமல் நிற்க முடியும்.

அதே விதிதான் உங்களுக்கும். எந்த அளவிற்குச் செயலாற்றலில் உயரமாகச் செல்கிறீர்களோ அதே அளவிற்குச் செயலற்ற நிலையில் ஆழமாகச் செல்ல வேண்டும். அதில் ஒரு இசைவு இருக்கடும். ஒரு ஒருமைப்பாடு இருக்கட்டும்.

**தாவோவில் பிறந்த மனிதன் செயலற்ற நிலையின் ஆழமான நிழலில் மூழ்கி, கவலையையும்**

**வன்முறையையும் மறக்கும் போது அவனுக்கு எந்தக் குறையும் இருக்காது. அவன் வாழ்வு பாதுகாப்பானதாக இருக்கும்.**

செயலற்ற நிலையில் நீங்கள் வாழ்க்கை என்னும் கடலில் கரைகிறீர்கள்.. அந்த நிலையில் மீனே கடலாகிவிடுகிறது. தூக்கத்தில் நீங்கள் யார்? தூக்க நிலையில் உங்கள் அகந்தை இருக்காது. மீனின் தனித்தன்மை கரைந்துவிட்டது. ஆழ்ந்த தூக்கத்தில் நீங்கள் எங்கே இருக்கிறீர்கள். அந்த நிலையில் நீங்கள் எந்த இடத்திலும் இருப்பதில்லை. இருப்புநிலையோடு ஒன்றிவிடுகிறீர்கள். ஆழ்ந்த தியானத்திலும் அதுதான் ஏற்படுகிறது. .

ஆழ்ந்த உறக்கமும் ஆழ்ந்த தியானமும் ஒன்றுதான் என்பது இந்துக்களின் கருத்து. இரண்டிற்கும் உள்ள ஒரே வேறுபாடு - தியானத்தில் நீங்கள் விழிப்புநிலையில் இருக்கிறீர்கள் என்பதுதான். ஆழ்ந்த தியானத்தில் நீங்கள் ஓடையின் ஓரமாக இருக்கும் குளிர்ந்த நிழலைத் தேடிச் செல்கிறீர்கள். அதீத விழிப்புணர்வுடன் உணர்வுநிலையில் செயலில்லாமல் இருப்பதே உண்மையான தியானம். மரத்திலிருந்து ஒரு இலை கீழே உதிர்கிறது. மெதுவாக பூமியை நோக்கி நகர்கிறது. சிறிது தூரம் காற்றில் மிதந்து கொண்டு வருகிறது. பின் பூமியில் அமர்ந்து கொள்கிறது. பின் ஆழ்ந்த துயிலில் மூழ்குகிறது. உங்கள் தியானமும் அப்படித்தான் இருக்க வேண்டும்.

செயல் நிறைந்த உலகிலிருந்து தியான உலகிற்குச் செல்லும் போது மரத்திலிருந்து உதிரும் இலை போலவும் பறவையிலிருந்து விழும் சிறகு போலவும் இருக்க வேண்டும். லேசான ஆட்டம் இருக்கலாம். தென்றல் உங்களை லேசாக அலைக்கழிக்கலாம். கொஞ்சம் அங்கே இங்கே நகரலாம். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் ஆழமான இடத்திற்குச் செல்வீர்கள். பின் ஓரிடத்தில் விழுந்து சலனமில்லாமல் இருப்பீர்கள். நீங்கள் உங்கள் வேரை அடைந்து விட்டீர்கள். அங்கே எந்த நடுக்கமும் ஆட்டமும் இருக்காது. அங்கே கவலை இல்லை.. சிந்தனை இல்லை. உலகம் இல்லை. நீங்களே இல்லை. 'அது; மட்டுமே இருக்கும். அதுதான் தாவோ. நீங்கள் வளம்

பெற்று புத்துணர்வு பெற்று மீண்டும் இந்த உலகத்திற்குள் நுழைவீர்கள். இதே இசைவுடன் இந்த வருதலும் போதலும் நடந்தால் அலுவலகத்திலிருந்து வீட்டிற்கு வந்து செல்வது போல் இயல்பாக தியானநிலைக்குள் சென்று திரும்புவீர்கள்.

நீங்கள் செயலாற்ற விரும்பினால் அந்தச் செயல் உங்கள் உடல் தேவையை ஒற்றி இருக்க வேண்டும். மனதின் ஆசையை ஒற்றி இருக்கக் கூடாது. உங்களுக்குள் சக்தி பாய்ந்தோடிக் கொண்டிருக்கும்போது உங்கள் செயல்திறனைக் காட்டுங்கள். சக்தியைப் பயன்படுத்த வேண்டும். செயலின் மூலமாகத்தான் சக்தி தன் நிறைவைப் பெறும். செய்வதற்கு ஒன்றும் வேலை யில்லாவிட்டால் நன்றாக நடனம் ஆடுங்கள். சக்திக்குச் செயல் வேண்டும். அந்தச் சக்தியை அடக்கி வைத்தால் உங்களுக்கு முரட்டுத்தனம் வந்துவிடும். சக்தியை அடக்கிவைக்காதீர்கள். இன்றைய மனிதனின் புரையோடிப்போன புண்ணும் பிரச்சனையும் இதுதான்.

ஆதிகால மனிதனுக்கு அன்றாட வாழ்க்கைக்கே மிக அதிகமான சக்தி தேவைப்பட்டது. வேட்டைக்குப் போக அபரிமிதமான சக்தி வேண்டும். எட்டு மணி நேரம் அடர்ந்த காட்டில் விலங்குகளுக்குப் பின்னால் ஓட வேண்டும் என்றால் சும்மாவா? அப்படி ஓடிக் களைத்தபின் மாலைப்பொழுதில் கொஞ்சம் உணவு கிடைக்கலாம். அதுவும் நிச்சயம் இல்லை.

அன்றாட வாழ்க்கைக்கே மிகவும் அதிகமான சக்தி தேவைப்பட்டது.

இப்போது அனைத்திற்கும் இயந்திரங்கள் வந்துவிட்டன. தொழில்நுட்பம் நமது வேலையை பாதிக்கு மேல் குறைத்து விட்டது. இப்போது செய்வதற்கு ஒன்றும் இல்லை. சக்தியைச் செலவழிக்க வழியில்லை. அதனால்தான் உங்களுக்குக் கோபம், முரட்டுத்தனம் வன்முறை எல்லாமே மிகவும் அதிகமாக இருக் கிறது. .எதற்கெடுத்தாலும் சண்டை போடுகிறீர்கள். காரண மில்லாமல் கோபம் வருகிறது. ஆத்திரத்தில் துடிக்கிறீர்கள். பெரிதாகக் கத்துகிறீர்கள். அது முட்டாள்தனம் என்று எல்லாருக்கும் தெரியும். உங்கள் மனம் சாந்தியடைந்தபின்

உங்களுக்கே நீங்கள் கோபத்தைக் காட்டியது முட்டாள்தனம் என்று தெரியும். பின் ஏன் கோபப்பட்டீர்கள்? கோபத்திற்குப் போதுமான காரணம் இல்லை. உங்கள் கோபத்தின் உண்மையான காரணம் என்ன தெரியுமா? உங்களிடம் அபரிமிதமான சக்தி இருக்கிறது. உங்கள் காரில் பெட்ரோல் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது. அது எந்த நேரத்திலும் வெடிக்கலாம். தீப்பற்றி எரியலாம். அதனால்தான் கோபத்தைக் காட்டியபின் உங்கள் மனம் சமனப்படுகிறது. சக்தி குறைந்துவிட்டதால் நலமுடன் இருக்கிறீர்கள்.

இந்தக் கால மனிதனின் நிலைமை இதுதான். அதனால்தான் நான் அமைதியான தியானங்களைவிட இயக்கநிலை தியானங்களை ஊக்குவிக்கிறேன். அந்தத் தியானம் செய்வதற்குச் செயலாற்றல் வேண்டும். உங்கள் சக்தி வெளியே போக ஒரு வடிகால் வேண்டும் என்பதற்காகத்தான் இந்த மாற்று ஏற்பாடு - இயக்கநிலை தியானம்.

உங்களிடம் சக்தி இருக்கும் அளவிற்கு அதற்கு ஈடான செயல் இல்லை. நல்ல போஷாக்கான உணவு கிடைக்கிறது. அந்த உணவு உங்கள் சக்தியை இன்னும் அதிகமாக்குகிறது. நல்ல உணவு ஒரு எரிபொருள். வரலாற்றிலேயே இந்தக் காலகட்டத்தில்தான் மனிதன் நன்றாக வயிறாரச் சாப்பிடுகிறான். சுவையான உணவை மிகவும் அதிகமாகச் சாப்பிடுவது இந்தக் காலகட்டத்தில்தான். உடல் உழைப்பு மிகவும் குறைவாக இருப்பதும் இந்தக் காலகட்டத்தில்தான். உங்கள் கடைக்கோ, அலுவலகத்துக்கோ போய் வேலை பார்க்கிறீர்கள். அதுகூட மனதிற்கான வேலைதான். உடல் உழைப்பு இல்லை. மனதிற்கு வேலை கொடுத்தால் மட்டும் போதாது. மனிதனின் பாரம்பரியம் வேட்டையாடுவது. அவன் சுகமாக ஓய்வு எடுக்க வேண்டு மென்றால் கடுமையாக உழைக்க வேண்டும்.

அதனால் உங்கள் தெரிவுகள் உங்களின் உடல் தேவை களைப் பொறுத்து இருக்கட்டும். எந்த வற்புறுத்தலும் முரட்டுத் தனமும் வேண்டாம். உங்கள் உடலுக்கு என்ன தேவை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்கள் உடலிற்குச் செயல்

தேவைப்பட்டால் ஓடுங்கள். நீச்சல் அடியுங்கள். நீண்ட தூரம் நடைப்பயிற்சி செய்யுங்கள் இவை எதுவும் முடியவில்லை யென்றால் நடனம் ஆடுங்கள். இல்லாவிட்டால் இயக்கநிலை தியானம் செய்யுங்கள். உங்கள் சக்தி நீரோட்டம் போல் ஓடட்டும். செயலின் மூலமாக இருப்புநிலைக்குள் உருகுங்கள். சக்தி உங்களை விட்டுப் போனவுடன் அமைதியாக ஓய்வுநிலையில் இருங்கள். ஓடையின் நிழலான பகுதிக்குச் சென்று ஓய் வெடுங்கள்.

உங்கள் செயலும் உங்களைத் தாவோவிற்கு அழைத்துச் செல்லும். செயலற்ற நிலையும் தாவோவிற்கு அழைத்துச் செல்லும்.. ஏனென்றால் தாவோவைத் தவிர வேறு எதுவும் இல்லையே. செயல் மூலம் உங்களுக்கு விழிப்புணர்வு ஏற்பட்டால் நீங்கள் தாவோவைச் சந்திப்பீர்கள். செயல் என்பது தாவோவிற்குள் உங்கள் சக்தியை ஊற்றுவது. செயலற்ற நிலை என்பது தாவோ அதே சக்தியை உங்களுக்குள் ஊற்றுவது.

ஆறு கடலிற்குள் பாய்கிறது. அது தன்னையே கடலினுள் ஊற்றுகிறது. இது செயல்நிலை. கடலில் இருக்கும் நீர் சூரியனின் வெப்பத்தால் ஆவியாகி கருமேகமாகி இமயமலை பக்கம் போய் மழையாகப் பொழிந்து ஆறுகளை நிரப்புகிறது. . ஆற்றைப் பொறுத்தவரை இது செயலற்ற நிலை.

இப்போது ஆறு எதுவும் செய்யவில்லை. கடல்தான் செய்கிறது. செயலின் போது நீங்கள் கொடுக்கிறீர்கள். செயலற்ற நிலையில் நீங்கள் பெறுகிறீர்கள். இந்தத் தருதலுக்கும் பெறுதலுக்கும் இடையே ஒரு சமநிலை தேவைப்படுகிறது. நீங்கள் அதிகமாகக் கொடுத்தால் அதிகமாகப் பெறுவீர்கள். நீங்கள் அதிகமாகக் கொடுக்கக் கொடுக்க உங்களிடம் காலியிடம் அதிகமாக இருக்கும். அதை இயற்கை உடனே அதே சக்தியால் இட்டு நிரப்பிவிடும்.

ஒரு சிறிய ஆறுக்குக் கொஞ்சம்தான் நீர் கிடைக்கும். பெரிய ஆறுக்கு அதன் அளவிற்குத் தகுந்தாற்போல் கிடைக்கும். கங்கை தன் நீரையெல்லாம் கொண்டுவந்து கடலில் கொட்டும் போது அதே அளவு நீரை அது பெறவேண்டும் அல்லவா? இது

இப்படியே தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. செயலில் நீங்கள் பகிர்ந்து கொடுக்கிறீர்கள். நிரம்பி வழிகிறீர்கள். கொடுக்கும்போது மகிழ்ச்சியாக இருங்கள். ஆனந்தக் கூத்தாடுங்கள். செயலற்ற நிலையில் தாவோ உங்களுக்கு அள்ளி அள்ளித் தருகிறது.

கொடுக்கும் போது நீங்கள் ஆனந்தக் கூத்தாடினால் தாவோவும் உங்களுக்குத் தரும்போது ஆனந்தக் கூத்தாடும். நீங்கள் எப்படி கடவுளிடம் செல்கிறீர்களோ அப்படியே கடவுளும் உங்களைத் தேடி வருகிறார். அமைதியாக அமர்ந் திருக்கும் போது நீங்கள் சோகமாக இருந்தால் செயலாற்றும் போதும் அதே சோகம் உங்களிடம் இருந்தது என்று கொள்ளலாம். நீங்கள் கொடுத்தீர்கள். ஆனால் திருப்தியில்லாமல் முணு முணுத்துக்கொண்டே கொடுத்தீர்கள்.

உண்மையிலேயே மகிழ்ச்சியுடன் கொடுத்திருந்தால் தனியாக அமைதியாக அமர்ந்திருக்கும் போது ஒரு பரவச நிலையில் இருப்பீர்கள். அது செயலாற்றும் போது உங்களுக்கு இருந்த மனநிலையைப் பொறுத்தது.

என்னிடம் வருபவர்கள் சொல்கிறார்கள் ''நாங்கள் அமைதியாக அமர்ந்திருந்தால் எல்லாமே சோகமாக இருக்கிறது. அதனால் எங்களுக்கு மன அழுத்தம் அதிகமாகிறது.''

நீங்கள் கொடுக்கும் போது இதயபூர்வமாகக் கொடுக்க வில்லை என்பதையே இது காட்டுகிறது. நீங்கள் எப்படிக் கடவுளிடம் போனீர்களோ அதே பாணியில்தான் அவர் உங்களிடம் வருவார். நீங்கள் கடவுளுக்குச் செய்ததை அவர் உங்களுக்குத் திருப்பிச் செய்கிறார். அவரிடம் நடனமாடிக் கொண்டு சந்தோஷமாகப் போனால் அவரும் நடனமாடிக் கொண்டு சந்தோஷமாக உங்களிடம் வருவார். நீங்கள் கொடுக்கும்போது தியாகி வேஷம் போட்டால் ,, நீங்கள் பணிக்குச் செல்லும் போது ''என்ன செய்வது கடமை என்று ஒன்று இருக்கிறதே! என் மனைவியும் குழந்தைகளும் இருக்கிறார்களே! எப்போது பணி ஓய்வு பெறுவேன் என்று காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று சொன்னால்.. கடவுளும் அதே

பாதையில்தான் உங்களிடம் வருவார். கடனெழவே என்றுதான் உங்கள் கதவைத் தட்டுவார். 'செய்ய வேண்டுமே' என்று அலுப்புடன் வருவார். சிலுவையில் அறைந்த மாதிரியான மனோபாவத்துடன் வருவார். நீங்கள் அவரிடம் செல்லும்போது நடனமாடிக்கொண்டே போனால் அவர் உங்களிடம் வரும்போது குழலூதிக்கொண்டு வருவார்.

இதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள். இருப்புநிலை என்பது ஒரு மறுகூற்று. உங்கள் இருப்பின் உண்மைப் பிரதிபலிப்பு. மலையுச்சியில் நின்றுகொண்டு கத்தினால் அதன் எதிரொலி கேட்கும். இருப்புநிலை உங்கள் சொல்லையும் செயலையும் எண்ணங்களையும் அப்படியே எதிரொலிக்கும். நீங்கள் செய்தது உங்களுக்கே திருப்பித் தரப்படும். இதுதான் கர்மவிதி.

நீங்கள் யாரையாவது அவமானப்படுத்தினால் அதே மனிதர் பதிலுக்கு உங்களை அதேபோல் அவமானப்படுத்துவார் என்று நினைக்காதீர்கள். அதுவல்ல கர்மவிதி. அப்படியெல்லாம் இயற்கையில் நடக்கும் என்று முட்டாள்தனமாக நினைக்காதீர்கள்.

ஆனால் கர்மவிதி துல்லியமாகச் செயல்படுகிறது. கர்மவிதியின் தாத்பரியம் இதுதான். ''நீ எதைக் கொடுத்தாயோ அதையே பெறுவாய். எதை விதைத்தாயோ அதையே அறுவடை செய்வாய். நீங்கள் எந்தப் பாதையில் இருப்புநிலை நோக்கிச் சென்றீர்களோ அதே பாதையில்தான் அது உங்களை நோக்கி வரும்..''

**இன்று இவ்வளவு போதும்.**